2535

# ஐம்பொறி அகராதி

## DICTIONARY OF PHRASES AND COLLOCATIONS WITH THE WORDS FOR THE "FIVE SENSES" IN TAMIL


தொகுப்பு :

பன்மொழிப் புலவர், பேராசிரியர்

**ழ. சு. சிவம்,** எம்.ஏ., எம்,லிட்.,

டிப். மொழியியல், பிரெஞ்சு, செருமன், இந்தி, வடமொழி.

அணிந்துரை :

பேராசிரியர், டாக்டர் **ச. வை. சண்முகம்**

எம்.ஏ., எம்.லிட்.. பி.எச்.டி.,



கிடைக்குமிடங்கள் :

1. **மீரா நிலையம்,**
   35, பாப்பாத்தி காடு. ஈரோடு-4.

2. **மணிவாசகர் நூலகம்,**
   மேலச் சந்நிதி, சிதம்பரம்.
   
   இலிங்கிச்செட்டித் தெரு, சென்னை-1.

முதற்பதிப்பு: நவம்பர் 1980



விலை: ரு. 20-00.

AIMPORI AKARAADI

அழகு அச்சகம், சிதம்பரம்.

# அணிந்துரை

பேராசிரியர், டாக்டர் செ, வை. சண்முகம்,
எம்.ஏ., எம்.லிட்., பி.எச்டி.,
மொழியியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அகராதி பொதுவாக ஒரு மொழியின் சொல் வளத்தைக் காட்டுவது. மொழியைப் புதிதாகக் கற்பவர் சந்திக்கும் புதிய சொற்களின் பொருளை அறிவதற்கும், மொழியை அறிந்தவர் இணையான சொற்களிடையே உள்ள பொருள் வேறுபாட்டையும் பயிற்சியையும் அறிந்து கொள்வதற்கும் சொல்லெழுத்தைத் (Spelling) தெரிந்து கொள்வதற்கும் பயன்படுவது. இதனால் தான் படித்தவர்கள் எல்லோருக்கும் அகராதி தேவையான ஒன்ருக அமைந்து விட்டது.

இப்படிப்பட்ட அகராதி இன்று பல வகை உடையதாக, பொதுவாக மொழிபற்றி ஒன்றும், தனித்தனித்துறையினர்க்கும் பயன்படும் தொழில் நுட்பம் பற்றிப் பலவும் ஆக வளர்ந்துள்ளது பல மொழிகளில்.

தமிழில் அகராதிக்கலையும் பழமை உடையது தான். என்ருலும் இன்று நாம் அகராதி என்று கருதும் பொருளில் அமைந்த நூல் சமீப காலமாகவே தோன்றி வளர்ந்துள்ளது. அது கடந்த இருபத்து ஐந்து ஆண்டுகளாக இன்னும் சிறப்பாக-பல்முக வளர்ச்சி உடையதாக ஆகிவருவதைத் தமிழ் அகராதிக் கலை வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். இந்த வளர்ச்சியால் இந்த நூலாசிரியர் திரு. சதாசிவம் ஒரு சிறந்த இடத்தை வகிக்கிருர்.

திரு. சதாசிவத்தின் அகராதித் தொண்டு காலத்தால் நீண்டது. வகையால் பலதரப்பட்டது. எண்ணிக்கையால் உயர்ந்தது. இருபது ஆண்டுகளாக உழைத்துப் பற்பல அகராதி நூல்களை வெளியிட்டுள்ளார். அந்த அகராதிகள்

எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று வகையாக அடங்குகின்றன. ஒலிக்குறிப்பு அகராதியும் அடுக்குமொழி அகராதியும் ஒலி அடிப்படையில் அமைந்து எழுத்துக்கு முக்கியத்துவம் தருபவை. திருமகள் அருட்செல்வம், வீநாயகர் செல்வம் போன்றவை பொருள் அடிப்படையில் அமைந்தவை. எதிர்ப்பத அகராதியோ ஒரு சொல்லை எடுத்து அதன் எதிர்ப்பதம் சுட்டுவதால் சொல்லும் பொருளும் இணைந்து நிற்பது. ஐம்பொறி அகராதியான இந்த நூலோ உடல் உறுப்புக்களைக் குறிக்கும் பலவேறு சொற்களிலிருந்தும் உண்டான ஆயிரக்கணக்கான தொடர்களை (கிட்டத்தட்ட 10000 தொடர்களை)த் திரட்டித் தருவதால் சொல் அடிப்படையில் அமைந்தது. ஆயினும் அந்தத் தொடர்களுக்குரிய பொருளும் கொடுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இலக்கிய வழக்கிலும் பேச்சு வழக்கிலும் உள்ள பல சொற்களும் தொடர்களும் இவருடைய நூல்களின் மூலம் முதன் முதலாக அகராதியில் நுழைந்துள்ளன.

இன்றைய தமிழ் பலதுறை மொழியாய் வளர்ந்து வரும் இந்த நாளில் இப்படிப்பட்ட நூல்கள் மொழிவளர்ச்சிக்கு நேரடியாகப் பயன்படுகின்றன. ஒருமொழியில் புதிதாகத் தனிச்சொல் ஒன்றும் உண்டாவது இல்லை, முன்னர் உள்ள சொற்களின் மூலமே புதிய கருத்துகளுக்கு வேண்டிய சொற்களைப் படைத்துக்கொள்ள முடியும் என்பது மொழி ஆராய்ச்சி தரும் பாடம். எனவே இந்த அகராதி நூல்கள் குறிப்பிட்ட துறையினருக்கு மட்டுமின்றிப் பலதுறையினரும் போற்றிப் பயன்படுத்திக் கொள்ளத்தக்கவை. அந்த முறையில் அமைய இந்த அகராதகளை ஒட்டிய பல ஆராய்ச்சிகள் வெளிவர வேண்டும். எனவே திரு சதாசிவம் அவர்களின் நூல்கள் மொழிவளத்தை, சொல்வளத்தைக் காட்டுவதோடு மொழி ஆராய்ச்சியாளருக்கு ஆய்வுப்பொருளாயும் அமைந்து நிற்கின்றன.

இன்றைய தமிழுக்குத் தேவையான நல்ல தொண்டைப் புரிந்துவரும் திரு சதாசிவம் தமிழ் மக்களின் பாராட்டுதலுக்கும் நன்றிக்கும் உரியவர். இருவருடைய பணிகளை ஆதரித்து இவர் இந்தத்துறையில் இன்னும் பல நூல்களை வெளியிட ஊக்கமும் ஆக்கமும் தமிழ் கூறு நல் உலகம் தரும் என்று நம்புகிறேன்.

———

# முன்னுரை

உலகத்திலேயே ஒப்புயர்வற்ற சொல்வளங்கொண்டது தமிழ்மொழி என்பதை நிறுவுவதற்காகவே கடந்த இருபதாண்டுகளாக அரும்பாடுபட்டு ஆயிரக்கணக்கான நூல்களைப் படித்து நூற்றுமுப்பது அகராதிகளைத் தொகுத்துள்ளேன். இதுவரை பதினைந்து சிறப்பகராதிகளை வெளியிட்டுள்ளேன். மீதமுள்ள அகராதிகள் வெளிவரவுள்ளன.

ஏற்கனவே வெளியிடப் பெற்றுள்ள 'அடுக்கு மொழி அகராதி, ஒலிக்குறிப்பகராதி, எதிர்ப்பத அகராதி, பெண்ணின் பெயர்கள் ஆகியவை தமிழ்மொழியின் சொல்வளத்துக்கு எடுத்துக்காட்டுக்களாய்த் திகழ்வதைப் போலவே இப்போது வெளியிடப்பெறும் ஐம்பொறி அகராதியும் செந்தமிழ் மொழியின ஏற்றத்திற்கு ஏற்றதொரு சான்ருகத் திகழ்கிறது. மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளுக்குரிய பெயர்களைக் கொண்டு படைக்கப்பெற்ற பதினாயிரம் தொடர்கள், மரபுத்தொடர்கள், சொற்ருெடர்கள் ஆகியவை அவ்வப் பெயர்களின் கீழ் அகரவரிசைப்படுத்திக் கொடுக்கப்பெற்றுள்ளன. உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் சொல்வளத்தைப் பெருக்கிக் கொள்ளும் பருவத்தினராதலின் அவர்கள் புரிந்துகொள்ளுவதற்காக ஒவ்வொரு தொடருக்கும் பொருள்கள் தரப்பெற்றுள்ளன. எல்லாத் தொடர்களுக்கும் பொருள் தரும் கொள்கையினுல் மிக எளிய தொடர்களுக்கும் பொருள்கள் தரப்பெற்றுள்ளன.

ஐம்பொறிகளுக்குரிய பெயர்களுடன் இத்துணை ஆயிரம் சொற்ருெடர்கள் அமைந்திருப்பது சொல்லாராய்ச்சியாளர்க்குப் பெருவியப்புத்தருவதாகும். மாணவர்களுக்குச் சொல்வளத்தைப் பெருக்கித் தரும் கருவூலமாக அமைந்துள்ள இந்நூல் மேனுட்டினர் தமிழ்ச்சொல்வளத்தினை வியந்து பாராட்டுதற்கு எடுத்துக்காட்டாயும் அமைந்துள்ளது. இதுபோலவே அடுத்து வெளிவர இருக்கும் 'மன அகராதி'யில் 'மனம்' என்ற சொல்லுடன் கூடிய தொடர்களும், சொற்கோவைகளும் பத்தாயிரத்திற்கும் மேற்பட்டவை தொகுக்கப் பெற்றுள்ளன. ஐம்பொறிகளையும் மனத்தையும் அடித்தளமாகக் கொண்டு

இருபதினாயிரத்துக்கும் மேற்பட்ட சொற்றொடர்களை அமைத்துக் காட்டிய தமிழர்தம் சால்பினைப் பிற மொழியினர் வியந்து போற்றுமலிரார்.

தமிழில் வெளியிடப்பெற்றுள்ள அடுக்குமொழி அகராதி, ஒலிக்குறிப்பகராதி, பெண்ணின் பெயர்கள் போன்ற அகராதிகள் உலகத்துப் பிறமொழிகள் எவற்றிலும் இதுகாறும் வெளியிடப்பெறவில்லை. பெண்ணைக் குறிக்க ஆங்கிலத்தில் ஒரு சில சொற்களே உள்ளன. தமிழில் ஆயிரத்துக்கு மேற்பட்ட சொற்களைத் தொகுத்துப் 'பெண்ணின் பெயர்கள்' என்ற தலைப்பில் வெளியிட்டுள்ளேன். செக் நாட்டுத் தமிழறிஞர் திரு கமில் சுவலபில், உருசிய நாட்டுத் தமிழறிஞர் திரு மகரெங்கோவ் முதலியவர்கள் என் அகராதித் தொகுப்புக்களை யெல்லாம் பார்த்துப் பாராட்டியுள்ளனர். ஆனால் எந்தமிழ் நாட்டினர் இந் நூல்களின் அருமைப்பாடுகளை உணர்ந்து போற்ற இன்னுந் தலைப்பட்டிலர்! இந்த அகராதி நூல்களை யெல்லாம் அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய மேலை நாட்டு நூலகங்கள் உடனே வாங்கிப் போற்றி வைத்துக் கொள் கின்றன! ஆனால் நம் நூலகங்கள் இவற்றை வாங்குவதில் இன்னும் கருத்தைச் செலுத்தவில்லை.

இக்காலத்தில் சித்தலைச் சாத்தனார்கள் இன்மையின் பிழைத்தமிழே எங்கும் வளர்ந்து வருகிறது. அகராதிகளைப் பார்க்கும் பழக்கம் தமிழ்நாட்டு மாணவர்களிடை இன்மை யின் ரகர றகரங்கள், லகர, ளகர, ழகரங்கள் இவை பொருள் வேறுபாட்டைத் தருபவை என்பது உணரப்படாமல் ஒன்றுக்கொன்று மாறாகப், பிழையாக எழுதப்படுகின்றன. நாட்டில் நல்ல தமிழ் வளர வேண்டுமானால் உயர் பள்ளிகளிலேயே மாணவர்கள் தமிழ் அகராதிகளை அடிக்கடி பார்த்துப் பயன் பெறும் பழக்கத்தை மேற் கொள்ள வேண்டும். அகராதிகளைப் பயின்று சொல்வளம் பெறாத காரணத்தால்தான் இளைஞர்கள் எழுதும் கட்டுரைகள் பிழை மலிந்தும் கருத்துவளமின்றியும் படிப்போர்க்கு இடையறாச் சலிப்பையும் சோர்வையும் நல்கிவருகின்றன.

ஐம்பொறிகளையும் அடக்காதவர்கள் அல்லல் உறுவதைப் போலவே இவ்வைம்பொறியகராதியும் பல்லாண்டுகளாக அச்சுப் பொறிக்குள் அகப்பட்டு அலமந்து நின்றது. 'ஆகுநாளன்றி

எடுத்த கருமங்கள் ஆகா' என்பதை மூடநம்பிக்கை என்று ஒதுக்கிவிட முடியுமா? முதற்காரணம் பொருளின்மை. இரண்டாவது, அச்சகம் சிதம்பரத்தில் இருந்ததால் ஒவ்வொரு கோடை விடுமுறையிலும் சென்று கொஞ்சங் கொஞ்சமாக அச்சிட நேர்ந்தது. அதற்குள் இரண்டுமுறை கையெழுத்துப் படியினை அச்சகத்தினர் கைநழுவவிட்டுவிட்டனர். புதியதாய் மீண்டும் எழுதிக்கொடுக்க நேர்ந்தது. கடைசியில் ஐநூறுக்கு மேற்பட்ட நூல்களைக் கறையான்கள் அரித்துவிட்டன! இந் நூலின்கண் ஆயிரத்துக்குமேற்பட்ட நூல்களிலிருந்து மேற் கோள்கள் காட்டப்பெற்று உள்ளன. பல நூல்களின் முழுப் பெயர்கள் சுருக்காமல் அப்படியே தரப்பெற்றுள்ளன.

இந்நூலுக்கு அரியதோர் அணிந்துரை வழங்கிய என் பெரு மதிப்புக்கும் பேரன்புக்குமுரிய வகுப்புத் தோழர் பேராசிரியர் டாக்டர் செ. வை. சண்முகம் அவர்கள் அண்மையில் இரண்டு ஆண்டுக்காலம் இந்தோனேசியா சென்று தமிழ் பரப்பி வந்தவர். 'எழுத்துச் சீர்திருத்தம்' என்ற அரியதோர் ஆராய்ச்சி நூலை அண்மையில் வெளியிட்டுள்ளார். எத்தனையோ வேலை தலைக்கு மேலிருந்தும் இந்நூலைப் படித்து அணிந்துரை வழங்கி யமைக்காக அவருக்கு என் அன்புகலந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை நீண்ட காலமாக அச்சிட்ட திரு ப. இராதா கிருஷ்ணன் எம். ஏ. அவர்களும் என் அன்புக்குரிய வகுப்புத் தோழரே. அச்சிட்ட தாள்களைப் பல ஆண்டுகளாகக் காப்பாற்றி யதற்குத் தமிழ் உலகம் அவருக்குக் கடப்பாடுடையது. அவருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ்நாட்டு அறிவுச் செல்வர்கள் இந்நூலை விலைக்கு வாங்க மனம் வைப்பார்களாக! அடுத்து 'மனம்' என்ற சொல்லோடு கூடிய பல்லாயிரந் தொடர்களைக் கொண்ட 'மன அகராதி' வெளிவருவதற்கும் துணை செய்வார்களாக!

———

# காணிக்கை

தமிழை மூச்சாக உடையவரும்,
வாழ்நாள் முழுவதும் தமிழின் ஆக்கத்துக்
காகவே பாடுபட்டுவருபவரும், என்
அகராதித் தொகுப்புகளுக் கெல்லாம்
ஊக்குணர்வு அளித்து வருபவரும்,
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்
திட்டத்தின் தலைவருமான 'மொழி ஞாயிறு'
உயர்திரு ஞா. **தேவநேயப் பாவாணர்**
அவர்களுக்கு இந்நூலைப் படைக்கின்றேன்.

# ஐம்பொறி அகராதி

## 1. மெய்

அங்கக்கிரியை—மெய்யாற் செய்யுந் தொழில் (சிலப் 3–12 உரை)

அங்ககீனம்—உறுப்புக்குறை

அங்கசேட்டை—கால்கைகள் குறும்பு செய்தல்; கைகால்களை வறிதேயாட்டல் (திருவேங் சத 63)

அங்கதலம்—உடம்பில் உள்ள அடையாளம் (திருப்பு 1172)

அங்க நியாசம்—மந்திரத்தோடு உறுப்புக்களைத் தொடுதல் (காளத் பு 5-39)

அங்கப்பிரதக்கணம்—அங்கப்பிரதட்சிணம் (சீகாழித் தலவி 14)

அங்கப் பிரதட்சிணம்--உடலால் புரண்டு கோயில் முதலிய இடங்களை வலம் வரல்

அங்கப்பிராயச்சித்தம்—உடல் சுத்திக்காகச் செய்யும் ஒரு பிராயச்சித்தம்

அங்கபங்கம்—சரீர உறுப்புச் சேதம்

அங்கமாலை—அவயவங்களை வருணிக்கும் வெண்பா; வெளி விருத்தநூல்; சிவனின் எலும்புமாலை (தே 295–7)

அங்கராகம்—உடம்பிற் பூசும் பரிமளத் திரவியங்கள் (பாரத மணி 109; கோ 194; திருப்பு 1257)

அங்கவஸ்திரம்—மேலாடை

அங்கவினன்—உறுப்புக் குறையுள்ளவன்

அங்கலும் மேனி—(மகளிரின்)அழகு ஒழுகும் உடல்

அச்சுறை—உடல்

அசரீரம்—உடம்பின்மை; பிரமஞானம் கைவந்து அஞ்ஞானமும் அதன் காரியமாகிய உடம்பும் கெடுதல்

அசரீரன்—உடம்பில்லாதவன்; காமன்

அசரீரி—உடம்பில்லாதது; ஆகாயவாணி

அட்டமெய்ப்பரிசம்—கீழ்க்கண்ட செயல்களால் ஏற்படும் உடம்பின் எட்டுவித உணர்ச்சிகள்: ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், பற்றல், வெட்டல், தீண்டல்

அதிகாயன்—பருத்த உடம்புடையோன்

அர்த்தாங்கம்—பாதியுடம்பு

அருவுடம்பு—நுண்ணுடம்பு, சூக்கும உடல்

அரையுடம்பு—பாதியுடம்பு; இளைத்த உடம்பு

அரோகதிடகாத்திரம்—சுகமும் வலிமையுமுள்ள உடல் (தாயு பாயப் 59)

அழகு ஒழுகு மேனி—அழகு மிக்க உடல்

அழுக்குடம்பு—அழுக்கடைந்த உடம்பு

அழுத்தமில்லா உடம்பு—பழக்கத்தில் அடிபடாத தேகம்

ஆகம் கறுத்தல்—உடல் கறுத்தல் (அரி 9-42)

ஆகவலி—உடல் வலி (பி. த. கொத்து 1-8)

ஆணுடம்பு—ஆண்குறி, இலிங்கம்

இரட்டை நாடியுடம்பு—பருத்த உடல்

இலிங்கசரீரம்—சூக்கும தேகம்

இலிங்க தேகம்—சூக்கும உடம்பு

இளந்தேகம்—இளமைப் பருவத்து உடம்பு; பிள்ளைபெற்ற பெண்ணின் உடம்பு

உடப்புச் சட்டகம்—உடம்பின் வடிவு (பெ 2-19-41)

உடம்பறியாமற்போதல்—மூர்ச்சித்துப்போதல்; உணர்ச்சியற்றுப்போதல்; மெய்மறத்தல்

உடம்பறியாமை—தன்னை மறத்தல்

உடம்பில் உணவு ஒட்டாதிருத்தல்—உடல் தேருமலிருத்தல்

உடம்பில் உயிர் இருக்குமளவும்—சாகும்வரை

உடம்பில் ஒரு சொட்டு இரத்தம் இருக்கும் வரையில்—சாகும் வரையில்

உடம்பில் சதை பிடித்தல்—உடல் பருத்தல்

உடம்பில் மயிர்க்கூச்சல் எடுத்தல்—மயிர்க்கூச்செறிதல்

உடம்பிலே தெம்பு—உடலிலே புத்துணர்ச்சி

உடம்பிறுகல்—உடம்பு உறுதிப்படல், உடம்பு வலுவடைதல்

உடம்பின் கூறு—உடற்கூறு

உடம்பு அசௌகரியமாயிருத்தல்—உடம்பு நோய்வாய்ப் பட்டிருத்தல்

உடம்பு அதிகமாதல்—உடல் பருத்தல்

உடம்பு அதிர்தல்—அச்சத்தால் உடல் அதிர்ச்சியடைதல்

உடம்பு அலுத்தல்—உடம்பு தளர்ச்சியுறல்

உடம்பு ஆராட்டமாயிருத்தல்—உடம்பு சுரத்தினுல் துன்புறல்

உடம்பு இளைத்தல்—உடல் பலங்குறைதல்

உடம்பு ஊதிப்போதல்—உடம்பு பருத்தல்

உடம்பு ஒடுங்குதல்—நோய் முதலியவற்ருல் உடல் இளைத்தல்

உடம்பு ஒரு மாதிரியாக இருத்தல்—உடல் நலம் குன்றி யிருத்தல்

உடம்புக்கட்டு—உடம்பினுறுப்புக்கள் தளராதிருத்தல்

உடம்புக் கதகதப்பு—சுரத்திற்கு முன்னதாக எழும் கொதிப்பு

உடம்புக் கனகனப்பு—சுரங்காய்வதாலான உடற் கொதிப்பு

உடம்புக் கனப்பு—உடம்புக் கனகனப்பு

உடம்புக்கீடு—கவசம் (சிந் 3074 நச்)

உடம்புக்கு என்ன—உடம்புக்கு வந்த நோய் என்ன?
உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது—(உணவு முதலியன)· உடலியல்புக்குப் பொருந்தாதிருத்தல்
உடம்புக்கு ஒன்றும் இல்லை—உடல் நலமாக இருக்கிறது
உடம்புக்கு முடியவில்லை—நோய்வாய்ப்பட்டிருத்தல்
உடம்புக் கோளாறு—உடல்நலக் குறைவு
உடம்பு கட்டுவிடல்—உடம்பு தளர்தல்
உடம்பு கணகணத்தல்—உடம்பு சூடுறுதல்
உடம்பு கணகணவென்று காய்தல்—உடம்பு கணகணத்தல்
உடம்பு கறுத்தல்—(வெய்யிலில் அலைவதால்) மெய் கறுத்துப் போதல்
உடம்பு காந்தல்—உடம்பு வெப்பங் கொள்ளல்
உடம்பு குணமாதல்—நோயினின்று உடல் குணமுறுதல்
உடம்பு கெட்டுப்போதல்—உடல்நிலை இயல்பு நிலையினின்று திரிதல்
உடம்பு கேவலமாகிக் கொண்டிருத்தல்—உடல்நிலை மோசமாகிக் கொண்டிருத்தல்
உடம்பு கொஞ்சம் அதிகம்—உடம்பு சிறிது மிகுதியாகப் பருத்திருத்தல்
உடம்பு கொதித்தல்—காய்ச்சலால் உடல் சூடாயிருத்தல்
உடம்பு கொள்ளவில்லை—உடலில் நிறைய நகை அணிந்திருத்தற் குறிப்பு
உடம்பு சரிப்படவில்லை—உடம்பு நலமில்லை
உடம்பு சரியாதல், சரியாய்ப் போதல்—உடம்பு நோயினின்று குணமாதல்
உடம்பு சரியாயில்லை, சரியில்லை—உடல் நலமில்லை
உடம்பு சில்லிட்டுப்போதல்—(நோய், குளிர்) முதலியவற்றால் உடல் குளிர்ந்திருத்தல்

உடம்பு சில்லிடுதல்—குளிரினால் உடல் குளிர்தல்; புல்லரித்தல்

உடம்பு சொஸ்தமாகிவிடல்—உடல் நலமடைதல்

உடம்புத் தளர்ச்சி—உடற்றளர்ச்சி, உடல்நிலை தளர்வுறல்

உடம்பு தள்ளவில்லை—நோயால் உடம்பு தளர்வுற்றிருத்தல்

உடம்பு துரும்பாய் இளைத்தல்—உடம்பு மிகவும் இளைத்துப் போயிருத்தல் (சிங் சத 85)

உடம்பு தேற்றுதல்—தேகத்தைப் பலப்படுத்துதல்

உடம்பு தேறுதல்—நோயால் குன்றிய உடம்பு வலுவடைதல்; உடம்பு குணப்படுதல்

உடம்பு நடுக்கம்—நோய், பயம், கோபம் முதலியவை களினால் உடம்பில் ஏற்படும் ஒருவித அசைவு; குளிரினால் உடம்பு உதறுதல்

உடம்பு நன்றாயிருத்தல்—உடம்பு நலமாயிருத்தல்

உடம்பு நீட்டித்து நிற்றல்—நீண்டநாள் உயிரோடிருத்தல்

உடம்பு நொய்தாயிருத்தல்—உடல் மெலிந்தும், மிருதுவாயு மிருத்தல்

உடம்பு நோகப் புடைத்தல்—உடலுக்கு வலியுண்டாக அடித்தல்

உடம்புப்பொடி—உடம்பின் அழுக்குத் தேய்க்கப் பயன் படுத்தும் பொடி

உடம்பு பதறுதல்—கைகால் முதலியன பதறுதல், நடுங்குதல்

உடம்பு பழுத்தல்—முதுமை எய்தல் (பாக 993; திருப்பு 245)

உடம்பு பிடித்தல்—உடம்பிற் சதை பெருகுதல்; உடம்பைக் கையாற் பிடித்து அமுக்குதல்

உடம்பு புரட்டுதல்—உடம்பழுக்குத் தேய்த்தல்

உடம்பு புல்லரித்தல்—புளகாங்கிதத்தால் உடம்பு மயிர்க் கூச்செறிதல்

உடம்பு பூரண குணமாதல்—உடல்நிலை முற்றிலும் நலமுறுதல்

உடம்பு மெலிதல்—உடம்பு இளைத்தல்

உடம்பு வலியெடுத்தல்—உடலில் வலி தோன்றுதல்

உடம்பு வளைந்து வேலை செய்—உடலுழைப்புச் செய்

உடம்பு வறட்சி—உடம்பின் மேற்றோல் உலர்ந்து காணல்

உடம்பு விடவிடென்று நடுங்கல்—உடல் வெடவெட என்று நடுங்குதல்

உடம்பு விறைத்துப்போதல்—உயிர் நீங்கிய உடல் விறைத்து விடல்

உடம்பெடுத்தல்-பிறத்தல்; சதை பிடித்தல்; உடம்பு தேறுதல்

உடம்பெரிச்சல்—உடலில் உண்டாகும் எரிச்சல்

உடம்பெரிதல்—உடலில் எரிச்சல் உண்டாதல்; பொறாமை உண்டாதல்

உடம்பெரிப்பு—உடம்பெரிவு; உடம்பெரிச்சல்

உடம்பெரிவு—உடம்பின் எரிச்சல்

உடம்பெல்லாம் ஊருதல்—உடலின் பலவிடங்களிலும் தினவெடுத்தல்; சொறிதற்குறிப்பு ஏற்படுதல்

உடம்பெல்லாம் பற்றி எரிதல்—உடல் முழுவதிலும் தீப்பற்றி எரிதல்; கோபத்தால் உடலில் சூடுண்டாதல்

உடம்பை அலட்டிக் கொள்ளல்—வீணாக ஒரு செயலில் உடலுழைப்பை மேற்கொள்ளல்

உடம்பை அழுத்தித் தேய்த்தல்—உடலுறுப்புக்களை நன்றாய் அமுக்கித் தேய்த்தல்

உடம்பை இளைக்கடித்துக் கொண்டிருத்தல்—உடம்பு இளைக்கும்படி வேலை செய்துகொண்டிருத்தல் (வாழ்க் சக் 40)

உடம்பை உருக்கும் நோய்—உடலுருக்கி நோய்; உடம்பை இளைக்கவைக்கும் நோய்

உடம்பை என்ன செய்கிறது—உடம்புக்கென்ன?

உடம்பை ஒடுக்குதல்—உடலை இளைக்கும்படி செய்தல்

உடம்பை ஒறுத்தல்—பட்டினியிருந்து உடலுறுப்புக்களுக்குத் தீங்கு செய்தல்

உடம்பைக் காயப்போடல்—சாப்பிடாமல் வயிற்றைக் காயப் போடல்

உடம்பைக் கெடுத்துக் கொள்ளல்—உடலுக்குப் பொருந்தாத உணவை உண்டு உடல் நலத்தைக் கெடுத்துக் கொள்ளல்

உடம்பைக் கொழுக்கவைத்தல்—உடல் பருக்கும்படி செய்தல்

உடம்பைத் துவட்டுதல்—குளித்தவுடன் துவாலையால் உடலிலுள்ள நீரைப் போக்குதல்

உடம்பைத் தேற்றல்—நோயால் இளைத்த உடம்பை மருந்து கொடுத்துத் தேற்றுதல்; இளைத்த உடலுக்குத்தக்க ஊட்டங் கொடுத்தல்; உடம்பை வலுவடையச் செய்தல்

உடம்பை நிதானத்தில் வைக்கும் உடற் பயிற்சி—உடல் மிகுதியாகப் பருக்கவிடாமல் சாதாரண நிலையில் வைக்க உதவும் உடற்பயிற்சி

உடம்பை நெளித்தல்—உடம்பை வளைத்தல்

உடம்பை நெறித்தல்—சோம்பல் முறித்தல்

உடம்பைப் பத்திரமாகப் பார்த்துக் கொளல்—தூக்கமின்மை, பொருந்தா உணவு கொள்ளல் முதலியவற்றால் உடம்பு கெடாமல் கவனமாகப் பார்த்துக் கொள்ளல்

உடம்பைப் பரிசோதித்துப் பார்த்தல்—நோயாளியின் உடல் நிலையை மருத்துவர் அறிதல்

உடம்பைப்பற்றிக் கவனித்தல்—உடல் நிலையைக் குறித்து அக்கறை எடுத்துக் கொள்ளல்

உடம்பைப் பார்த்துக் கொள்ளல்—உடல்நிலை கெடாமல் பார்த்துக் கொள்ளல்; உடலைப் பேணுதல்

உடம்பைப் பிடித்துவிடல்—கை, கால் முதலிய பல உறுப்புக்களையும் தைவந்து வலி போக்குதல்

உடம்பை வளர்த்தல்—உடல் (பருத்து) வளரும்படி செய்தல்

உடம்பை வளைத்து வேலை செய்தல்—உடலுழைப்பை மேற்கொண்டு வேலை செய்தல்

உடம்பொடுக்கி வணங்குதல்—உடலுறுப்புக்களைக் குறுக்கி வணங்குதல்

உடம்போடு குளித்தல்—தலையில் நீர்படாமல் குளித்தல்

உடல் அலுத்தல்—உடல் சலிப்புறுதல்

உடல் அழுக்கு—உடலின் கணுள்ள அழுக்கு (குசே 729)

உடல் அனல் பிழம்பாய்த் தகித்தல்—காய்ச்சலால் உடல் மிகவும் கொதித்தல்

உடல் இலான்—காமன்

உடல் உபாதை—உடல் நோய்

உடல் உப்பல்—உடல் பருத்தல்

உடல் ஊட்டம்—உடல் பருத்தற்கு அளிக்கும் சத்துணவு

உடல் ஊதல்—உடல் பருத்தல்

உடல் எடுத்தல்—பிறத்தல்

உடல் ஒன்றுதல்—புணர்தல்

உடல் ஓம்புதல்—உடலைப் பேணுதல்

உடல் கட்டுவிடுதல்—உடல் பலவீனப்படுதல்; உடலின் பொருத்து விடுதல்

உடல் கலத்தல்—புணர்தல்

உடல் களைப்புத் தீருதல்—உடலுக்கு ஏற்பட்ட சோர்வினைப் போக்குதல்

உடல் கறுத்தல்—வெய்யில் மிகுதியால் உடல் நிறம் கருமை யடைதல்

உடல் கனத்தல்—உடம்பு பருத்தல்

உடல் காய்தல்—சுரமடித்தல், காய்ச்சலடித்தல்

உடல் குலுங்க நகைத்தல்—வயிறு முதலிய உறுப்புக்கள் குலுங்க நகைத்தல்

உடல் குலுங்குதல் –(கட்டை வண்டியில் செல்லும்போது) உடம்பு அசைவுறுதல்

உடல் குன்றுதல்—உடல் சுருங்குதல்; முதுமை, நோய் இவற்ருல் உடல்நலங் குன்றுதல்

உடல் கூசுதல்—உடம்பில் நாணத்தை உணருதல்

உடல் சலித்தல்—உடல் வருந்துதல்

உடல் சிலிர்த்தல்—மயிர்க்கூச்செறிதல்

உடல் சுருங்குதல்—முதுமை, நோய் முதலியவற்ருல் உடல் குன்றுதல்

உடல் சோம்பியிருத்தல்-உடலுழைப்பைச் செய்யாமலிருத்தல்

உடல் சோர்தல்—உடல் களைத்திருத்தல்; உடல் தளர்ச்சி யுறல்

உடல் தடித்தல்—உடம்பு பூரித்தல் (க 6–1655)

உடல் தடிதல்—உடல் துணித்தல் (ஞானு 24; நைட 257)

உடல் தளர்ச்சி—உடல் தளர்ந்து போதல்; வலிமை குன்றிப் போதல்

உடல் தளிர் காணல்—மெலிந்த தேகம் மறுபடியும் சதை பற்றல்

உடல் திடமுடைய—திடகாத்திரமான

உடல் துடித்தல்—உடல் பதறுதல்

உடல் துவண்டு போதல்—உடலுறுப்புக்கள் வளமை குன்றிப் போதல்

உடல் துளிர்த்தல்—உடம்பில் புத்துணர்ச்சி ஏற்படல்
உடல் தேய்தல்—உடல் மெலிதல்
உடல் தேறி வருதல்—உடல் நோய் நீங்கிக் குணமடைந்து வருதல்; உடல்நிலை முன்னேற்றமடைந்து வருதல்
உடல் தொய்தல்—உடல் இளைத்தல்
உடல் தோற்றம்—உடலின் வடிவு, உடற்காட்சி
உடல் நசை—உடற்பற்று (பிரபு 13-33)
உடல் நடுக்கம்—உடல் நடுங்குதல்
உடல் நடுங்குதல்—குளிர் அல்லது சுரத்தால் உடல் நடுக்கம் எய்தல்
உடல்நலக் குறைவு—நோயுற்றிருத்தல்
உடல் நலத்திற்குரிய—சுகாதாரத்திற்குரிய
உடல் நலத்துக்கொவ்வாத—உடல் நலத்துக்குப் பொருந்தாத (உணவு)
உடல் நலம்—உடல் நோயின்றியிருத்தல்
உடல் நலம் குன்றல்—உடல் நோயுறுதல்
உடல் நலம் கெடுதல்—உடல் நோயுறுதல்
உடல் நலம் தொலைதல்—உடல் நலம் கெடுதல்
உடல் நலம் விசாரித்தல்—'சௌக்கியமா?' என்று கேட்டல்
உடல் நல மருந்து—உடலுக்கு நலம்தரும் மருந்து
உடல் நலிதல்—உடல் நோயினால் மெலிதல்
உடல் நாறுதல்—உருக்குலைந்து கெடுதல் (திருப்பு 241)
உடல் நிலை—உடலின் நலம், உடலின் தட்ப வெப்ப நிலை
உடல்நிலை கவலைக்கிடம்—சாப்படுக்கையிலிருத்தல்
உடல்நிலை கெடுதல்—உடல் நலம் கெடுதல்
உடல்நிலை சரியில்லை—உடல் நோயுற்றிருத்தல்
உடல்நிலை தளர்தல்—உடல் தளச்சியுறல், சோர்வுறுதல்

உடல்நிலை பரவாயில்லை, தேவலாம்—உடல் ஓரளவு குணமாகியிருக்கிறது
உடல் நிலைமை—உடல் நிலை
உடல் நிலையாமை—யாக்கை நிலையாமை
உடல் நிழல்—உடலின் நிழல்
உடல் நிறம்—உடலின் வர்ணம்
உடல்நிறை—எடை
உடல் நிறைய நகையணிதல்—உடலின் பல உறுப்புக்களி லும் நிறைய நகைகளை அணிதல்
உடல் நீங்களவும்—இறக்கும் வரையிலும் (குமர 458–35)
உடல் நீத்தல்—உயிர் துறத்தல்
உடல் நெட்டு—திமிர் (திருப்பு 182)
உடல் நெருப்பாகக் கொதித்தல்—காய்ச்சலால் உடல் மிகவும் சூடாயிருத்தல்
உடல் நோய்க்கூறு—உடம்பைப் பற்றிய நோய்களின் இயல்பு
உடல் நோய்(வாய்)ப் பட்டிருத்தல்—உடம்பு நோயுற்றிருத்தல்
உடல் பதறல்—உடலுறுப்புக்கள் பதறுதல்
உடல் பதைத்தல்—உடல் பதறல்
உடல் பருத்தல்—உடம்பு ஊதிப்போதல்
உடல் பலப்படுதல்—உடல் வலிமையடைதல்
உடல் பலமில்லாதவன்(ள்)—வலிவற்ற உடலுள்ளவன்(ள்); நோஞ்சான்
உடல் பாரம்—உடற்சுமை
உடல் பாரிப்பு—உடற்பருமன்
உடல் புல்லரித்தல்—உடம்பு மயிர்க்கூச்செறிதல்; உடல் புளகித்தல்

உடல் புல்லுதல்—உடல் தழுவுதல்

உடல் புளகம் மூடல்—உடல் புளகித்தல் (அருட் 9-14-17)

உடல் புளகித்தல்—உடல் புளகம் எய்தல் (வில்லி 11-246)

உடல் பூதாகாரமாகப் பெருத்துவிடல்—உடல் விகாரமாகப் பருத்துவிடல்

உடல் பூரித்தல்—உடல் பருத்தல்

உடல் பெருத்தல்—உடல் பருத்தல்

உடல் போடுதல்—சாதல் (சிதம் வெ 12)

உடல் மானம்—உடற்பற்று (பிரபு 17-11)

உடல் மானி—உடல் பற்றுள்ளவன் (பிரபு 19-31)

உடல் மெலிதல்—உடல் இளைத்தல்

உடல் மெலிவு—உடல் தளர்ச்சி

உடல் வருந்துதல்—உடல் துன்புறுதல் (சேது பு 28-37)

உடல் வலிமை—உடலின் பலம்

உடல் வலிவுடைமை—உடல் வலிமையுடனிருத்தல்

உடல் வலுவூட்டுகின்ற—உடலுக்கு வலிமை தருகிற(மருந்து)

உடல் வளர்த்தல்—உடலுக்கு ஊட்டங்கொடுத்துச் செழிக்கச் செய்தல்

உடல் வற்றியிருத்தல்—உடல் வாடியிருத்தல்

உடல்வாகு—உடற்கூறு, உடலின் இயல்புப்போக்கு

உடல் வாடுதல்—உடல் மெலிதல்

உடல் விம்முதல்—உடல் பூரித்தல்

உடல் விறைத்தல்-மரணத்தால் உடல் சில்லிட்டு விறைத்துப் போதல்

உடல் விக்கம்—உடம்பின்கண் ஏற்பட்ட விக்கம்; உடம்பு பருத்திருத்தல்

உடல் வெதுப்பு—உடலின் சூடு

உடல் வெதும்பல்—உடம்பு சூடுறுதல்

உடல் வெந்துபோகும் உஷ்ணம்—உடம்பு பொறுக்க முடியாத சூடு

உடல் வெலவெலத்துப்போதல்—பயத்தால் உடம்பு பதறுதல்

உடல் வெள்ளை—உடம்பில் சிலவுறுப்புக்களில் மாத்திரம் காணும் மேற்றோல் வெளுப்பு

உடல்வெறி—காம இச்சை

உடல்வேலை—பருவேலை; பரும்படியான வேலை

உடலக் கண்ணன்—உடல் எங்கும் கண்களையுடையோன்; இந்திரன் (கல்லா 1-2)

உடலடங்கப் பூரித்தல்—உடல் முழுதும் புளகித்தல் (உபதே 5-79)

உடலதிர்ச்சி—காயம் அல்லது மனத்துயரத்தினால் நரம்புக்கு உண்டாகும் அதிர்ச்சி

உடலந்தம்—உடம்பழிவு, மரணம்

உடலமைப்பு—சரீர அமைப்பு, உடற்கூறு

உடலனல்—உடம்பில் நிற்கும் சூடு

உடலிரண்டு உயிரொன்றாயிருப்பவர்—உயிர் நண்பர்

உடலிருந்தவீடு—சீவன்முத்தி, சரீரமுத்தி (ஞானவா ஞானவின் 36)

உடலில் இரத்தக் கொதிப்பு ஏறுதல்—உடம்பில் இரத்தக் கொதிப்பு ஏற்படுதல்

உடலில் உயிர் ஒட்டிக்கொண்டிருத்தல்—உடம்பு மிக மெலிந்து இருந்தாலும் உயிர் போகாமலிருத்தல்

உடலில் உயிருள்ளளவும்—சாகும் வரையிலும் (சுந் 21-8)

உடலில் சோம்பல் ஏறுதல்—உடலில் சோம்பலுண்டாதல்

உடலிலான்—மன்மதன்

உடலிளைப்பு—உடல் இளைத்திருத்தல்

2535



உடலிறந்த வீடு—விதேக முத்தி, தேகவிமோசனம் (ஞானவா ஞானவின் 36)

உடலின்பந்துய்த்தல்—புணர்ச்சியின்பந்துய்த்தல்

உடலுக்கு ஒத்துக்கொள்ளவில்லை—உணவு முதலியன உடலுக்கு ஏற்றதாயில்லை

உடலுரம்—உடல்வன்மை

உடலுருக்கி—பொதுவாக உடம்பை உலரச் செய்யும் நோய்; கணைச்சூடு

உடலுருகல்—(இரக்கத்தால்) மெய்யுருகல்

உடலுழைப்பு—உடலால் உழைத்தல்

உடலுற்பத்தி—கருக்குழியில் பிண்டம் உற்பத்தியாதல்

உடலுறவு—புணர்ச்சி

உடலூதல்—உடம்பு பருத்தல் அல்லது வீங்குதல்

உடலூனம்—உடற்குறை

உடலெடுத்தல்—உடம்பெடுத்தல்; உடல்கொழுத்தல்; பிறத்தல்

உடலெரிவு—உடம்பெரிவு

உடலெழுத்து—மெய்யெழுத்து; ஒற்றெழுத்து

உடலை அடக்கம் செய்தல்—பிணத்தைப் புதைத்தல்

உடலை ஈர்த்தல்—(அம்பு) உடலைத் துளைத்தல் (அரி 4-183)

உடலை உருக்குதல்—காதல் அல்லது காமம் உடலை உருகச் செய்தல் (மங். காதல் 23)

உடலை ஒட்டிய ஆடை—சிக்காடை; உடம்பைச் சிக்கெனப்பிடித்துக்கொண்டிருக்கும் ஆடை.

உடலைக்குறைத்தல்—உடலின் பருமனைக்குறைத்தல்

உடலைத் துண்டுதுண்டாக வெட்டுதல்—உடலைப் பலபாகங் களாகத் துணித்தல்

உடலைத்தேற்றுதல்—நோயுற்ற உடலை ஓம்புதல்; உடலுக்குப் பலமுண்டாக்கல்

உடலைத் தைவருதல்—வருடுதல்

உடலை நெளித்தல்—உடலை வளைத்தல்

உடலைப்பிளத்தல்—உடலை வெட்டுதல்

உடலை மூடத் துணி—உடம்பைப் போர்த்துக்கொள்ள உதவும் துணி

உடலை வளைத்தாடுதல்—உடம்பை வளைத்து (நடனம்) ஆடுதல்

உடலை வாடகைக்கு விடுதல்—பரத்தையர் பணம் பெற்றுக் காம இன்பம் தருதல்

உடலை விற்பவள்—பரத்தை, வேசி

உடலோடு உயிர் ஒட்டிக்கொண்டிருத்தல்—உடலில் உயிர் ஒட்டிக் கொண்டிருத்தல்

உடலோம்புதல்—உடல் நலம் பேணல்

உடற்கட்டு—கட்டான உடல்

உடற்கட்டு மந்திரம்—துர்த்தேவதைகள் (ஒருவரின்)உடலைத் தாக்காமலிருக்க உச்சரிக்கும் மந்திரம்

உடற்கடுப்பு—உடம்பினிலேற்பட்ட எரிவு; உடல் வெதுப்பு; உடம்பின் குத்தல்

உடற்கண்ணன்—இந்திரன் (திருமலை பி த 35)

உடற் கரித்தல்—மற்போரில் தோள் தட்டுதல் (சிலப் 6–49 உரை)

உடற்கருவி—கவசம், உடற்காப்பு, சட்டை

உடற்கவசம்—மெய்க்கவசம், உடலில் அணியும் கவசம்

உடற்கழிவு—உடம்பினின்று கழியும் மலமூத்திராதிகள்

உடற் காப்பாளர்—மெய்க்காப்பாளர் (சௌமியன் 44)

உடற்காப்பு—கவசம்

உடற்காய்ப்பு—உடல் தடிப்பு; உடல் தழும்பு

உடற்காயம்—உடம்பிலேற்பட்ட காயம்

உடற்காவல்—மெய்ப்பை, கவசம் (க 6–1951)

உடற்குடம்பை—உடம்பாகிய கூடு (திருப்பு 203)

உடற்குற்றம்—உடம்புக்கு ஏற்பட்ட பசி, தாகம், பயம், நோய் முதலிய பல குற்றங்கள்

உடற்குறை—கவந்தம், முண்டம் (குமர 388); உறுப்புக்குறைவு

உடற்கூச்சம்—உடம்பில் சில இடங்களில் தொட்டால் உண்டாகும் கூச்சம்

உடற்கூற்றிலக்கணம்—உடம்பின் உறுப்புக்களின் தொழில்களையும் அவைகளின் தன்மையையும் பற்றிக் கூறுதல்; கூறும் ஓர் நூல்

உடற்கூற்றுத் தத்துவம்–சரீரத்தினியல்பைப் பற்றிய தத்துவம்

உடற்கூற்று வண்ணம்—உடம்பின் தத்துவங்களைப் பற்றிப் பட்டினத்தார் பாடிய நூல்

உடற்கூறு—சரீரக்கூறு; உடலிலக்கணம்

உடற்கொழுப்பு—உடம்பினுள் பல உறுப்புக்களிற் காணும் கொழுப்பு; உடல் தடிப்பு; குடற்கொழுப்பு; தேகக் கொழுப்பு

உடற் கொள்ளுதல்—உடம்பில் தங்குதல்; உடம்பில் ஏற்றுக் கொள்ளுதல்

உடற்சக்கரம்—உடம்பினுள் அமைந்துள்ள ஓர் தத்துவம் (வினா அகவல்)

உடற் சம்பந்தம்—புணர்ச்சி

உடற் சாயல்—உடலமைப்பு

உடற்சுமை—உடலாகிய சுமை (அருட் 9–23–6)

உடற் சேர்க்கை—புணர்ச்சி

உடற் சோம்பல்—உடம்பில் ஏற்பட்டிருக்கும் மதமதப்பு; சோம்பலுணர்ச்சி

உடற் பயிற்சி—தேகப் பயிற்சி

உடற்பரு—உடலிற் காணும் பரு

உடற்பிணி—பிறவியாகிய பிணி (போரூர் சந் 129)

உடற்பிறப்பு—சகோதரன் (புகழே 5-4-55)

உடற் புண்ணீர்—சீழ் (கூர்ம 2-13-2)

உடற் புணர்ச்சி—உடற் சேர்க்கை

உடற்பொருள்—விலங்குகளினுடம்பில் உண்டாகும் கஸ்தூரி, கோரோசனை, புனுகு, அம்பர் முதலிய பொருள்கள்

உடற்பொறை—உடற்பாரம் (சி 26-206; க 3-203)

உடற்பொறை நீங்கல்—இறத்தல் (குமர 337-4)

உடற்றத்துவம்—உடம்பினியற்கை; உடம்பினிலமைந்துள்ள 96 தத்துவங்கள்

உடற்றழும்பு—உடலிலுண்டாகும் மச்சம், பரு, காயம் முதலியவைகளினுல் ஏற்பட்ட அடையாளம்

உடற்றிரை—உடலில் விழும் சுருக்கம்

உடற்றுளிர்ப்பு—நோயால் மெலிந்த உடல் மறுபடியும் வளர்தல்

உடற்றெழில்—உடம்பினுள் உண்டாகும் இரத்தோட்டம், சீரணம், சுவாசம் முதலிய தொழில்கள்

உணங்கிய உடம்பு—வாடிய் உடல் (க 3-876)

உயிர்மெய்—உயிருள்ள உடம்பு

உருக்குலைந்த மேனி—மெலிந்த உடல்

உருமேனி—சிவன் உயிர்கள் காணும் பொருட்டு எடுக்கும் சகள வடிவம் (சி சி 1-55)

உருவுடம்பு—தூல உடம்பு; பருமனுன உடம்பு; அங்க லட்சணமுடைய உடம்பு

உருவுடல்—தூலவுடல் (தனிகா பு 272)
உருவொடுங்கிய உடல்—இளைத்த உடல்
ஊத்தைச் சரீரம்—நாற்ற உடம்பு
ஊதல் ஆக்கை—தூல சரீரம், பருத்த உடல் (ச 236-8)
ஊர்த்துவ காயம்—உடம்பின் மேற்புறம்; மானிட உடல்
ஊழலுடம்பு—நாற்ற உடம்பு; அழுக்கு நிறைந்த உடம்பு
ஊழற்சரீரம்—பருத்துத் தளர்ந்த உடம்பு; நாற்ற உடம்பு
ஊளைச் சரீரம்—ஊழற் சரீரம்
ஊன் அமர் ஆக்கை—ஊனால் அமைந்த உடம்பு (ச 361-4)
ஊனுடம்பு—தசையினாலாய உடம்பு
எடுத்தவுடற்பயன்—பிறந்த பிறவியின் பயன்(தனி பதிற் 96)
எண்சாணுடம்பு—மானிட உடல்
எழில் மேனி—அழகிய உடல்
எழுந்தருள் திருமேனி—உற்சவமூர்த்தி (சாச)
என்ன உடம்புக்கு—உடம்புக்கு என்ன நோய்?
ஒடுங்குமேனி—இளைக்கும் உடம்பு
ஒளிவிளங்கு மேனி—ஒரு பாஷாணம்
ஒற்றை நாடியுடல்—ஒல்லியான உடல்
கட்டமைந்த உடலமைப்பு—கட்டான தேக அமைப்பு
கட்டான உடல்—கட்டான மேனி, கட்டுடல், கட்டுக் குட்டான உடல்
கட்டிளமை வாய்ந்த உடல்—இளமை மெருகு வாய்ந்த கட்டுடல்
கட்டுக்குட்டான உடல்—கட்டுள்ள உடல்
கட்டுக்குலைந்த உடல்—கட்டுவிட்ட உடல், தளர்ந்த உடல்
கட்டுடல்—கட்டான உடல்
கட்டுமஸ்தான உடல்—திண்ணிய உடல்

கட்டு வாய்ந்த தேகம்—கட்டுள்ள உடல்

கட்டுவிடாத உடம்பு—கட்டுக்குலேயாத, திடமான உடம்பு

கதகத என்றிருக்கும் உடம்பு-சுரத்தினுல் வெப்பமுற்றிருக்கும் உடல்

கருமேனி—தூலஉடல் (சி சி 1–55 ஞானப்)

கற்சரீரம்—வலிய உடல்

கறந்த மேனியானது—அப்போது கறந்த (சுத்தமான) பால்; கலப்பிடமில்லாத பால்

கறுத்த உடல்—கருமை வாய்ந்த உடல்

கறையுடல்—கரிய உடல் (திருவி 25–42)

கன்னங் கறுத்த மேனி—மிகவும் கறுத்த உடல்

கனக காத்திரம்—பொன்மேனி (இரட்ச 21–270)

கனகமேனி—தங்கநிற உடல்; சிவந்த உடல்

காயக்கரணம்—உறுப்பினுல் செய்யும் அபிநயம்; விறல், மெய்ப்பாடு

காயக்கிலேசம்—உடலே வருத்தியெடுத்தல்

காயகம்—உடல்

காயகற்பம்—உடலேப் பலப்பிக்கும் மருந்து

காயசலம்—சிறுநீர், மூத்திரம், சின்னீர்

காயசன்—மன்மதன்

காயசித்தி—மருந்துகளினுல் உடல் பலமுறுதல்

காயசித்தியானேன்-மருந்தினுல் உடல் நிலேக்கப் பெற்றேன்

காயநூல்—உடல்நூல்

காயமாயம்—உடம்பு நிலேயின்மை

காயவுழைப்பு—உடல் முயற்சி (திருமந் 644)

காயவேகம்—உடம்பில் விஷமேறும் வேகம்

காயாகாயம்—உடல் தழும்பு

காயாபுரி—சரீரம், உடல்
காயி—சரீரி, ஜீவன்
கூன் உடல்—வளைந்த உடல் (காந் பி த 69)
கூனிக் குறுகிப்போன உடல்—வளைந்து தளர்ந்துபோன (மூப்படைந்த) உடல்
கொச்சையுள மேனி—இளைத்த மேனி (தின 476)
கொழுந்தளிர் மேனி—(மகளிரின்) கொழுவிய தளிர் போன்ற மேனி
கொழுமேனி—கொழுத்த உடல் (திருப்பு 872)
சகளத்திருமேனி—சிவனது உருவ வடிவம்
சடமுடை—நாற்ற உடம்பு (அ 29-4-62)
சடலந்தளர்தல்—உடல் தளர்தல் (திருப்பு 1167)
சடவுடல்—அறிவில் பொருளாம் உடல் (திருப்பு 1007)
சதேக முத்தி—சிவன் முத்தி
சரீரக் கட்டு—இறுகிய சரீரம், கட்டான உடல், உடற்கட்டு
சரீரக் கனப்பு—சரீரக் கொழுப்பு; திமிர்க்குணம்
சரீரக் கூறு(பாடு)—சரீர இயல்பு, தேக இயற்கை, அவயவக் கூறு
சரீரகுணம்—உடலியல்பு
சரீர கோடணம்—மெலிவு, சரீர பலவீனம்
சரீர சகாயம்—உடலால் உழைத்துச் செய்யும் உதவி
சரீர சஞ்சலம்—சரீராபலம், உடல்நலக் குறைவு
சரீர சம்பந்தம்—புணர்ச்சி, கலவி
சரீர சம்ரட்சணை—உடலைப் பேணிக் காத்தல்
சரீரசரீரிபாவம்—சரீரத்துக்கும், சரீரமுடையவனுக்கும் உள்ள ஒற்றுமை
சரீர சவுக்கியம்—உடல் நலம்
சரீர சுகம்—உடல் நலம், தேக சௌக்கியம்

சரீரி சுத்தி—உடல் தூய்மை

சரீர சௌக்கியம்—உடல் நலம் (பிரதாப 42)

சரீரத்திரயம்—முத்தேகம்: அவை தூலம், சூக்குமம், காரணம் என்பன

சரீரத் துன்பம்—உடல் துன்பம் (பிரதாப 39)

சரீர தண்டனை—தண்டனையாக உடலை வருத்துதல்

சரீர திடம்—உடல் வலிமை

சரீரப் போக்கு—உடல்நிலை, உடற்கூறுபாடு

சரீர பதனம்—சாவு, மரணம்

சரீர புஷ்டி—உடல் திடம்

சரீரம் பாரித்தல்—உடல் படுத்தல்

சரீர மரணம்—உடல் மரணமடைதல்

சரீர வதை—உடலை வருத்துதல்

சரீர வா(க்)கு—உடம்பின் போக்கு; உடம்பின் தன்மை; உடலின் இயற்கை

சரீரவுறவு—உடலுறவு

சரீரஸ்மரணை—சரீர உணர்ச்சி

சரீராவரணம்—தேகத்தை மூடியிருக்கும் தோல்

சரீராதி—சரீர சம்பந்தமுள்ளது, ஆன்மா

சரீரி—சரீரத்தையுடையது; ஆன்மா, உயிர், சீவன்மா

சாகாச் சரீரம்—சூக்கும சரீரம்

சாவாவுடம்பு—சூக்கும உடல்

சாவா வுடம்பெய்தல்—பூத உடலை நீத்துச் சூக்கும உடலில் வாழ்தல்

சிக்குஞ் சிரங்குமாய் உள்ள உடம்பு—சொரி சிரங்குள்ள உடல்

சித்திரகாயம்—புலி, வரிப்புலி

சிலேட்டும சரீரம்—சிலேட்டுமம் அதிகப் பட்டிருக்கும் சரீரம்
சிலேயுடம்பு—புண்கட்டிகள் அடிக்கடி புறப்படுதற்குரிய சரீரக் கூறு
சுகசரீரம்—நோயற்ற உடல்
சுகசரீரி—உடல் நலமுடையவன்; சுகசீவி
சுடர்விடும்மேனி—ஒளி வீசும் உடல்
சூக்கும காயம்—சூக்கும சரீரம்
சூக்கும சரீரம்—நுண்ணுடல்
சூக்கும தேகம்—சூக்கும உடல்
சூட்சும சரீரம்—சூக்கும சரீரம்
செக்கோல மேனி—சிவந்த மேனி (தனிப் 1–316)
செடிய உடல்—நாற்றமுள்ள உடம்பு (திருவி 67–51)
செப்புத் திருமேனி—செம்பினலான விக்கிரகம் (சாச)
செம்மேனி—அழகிய, சிவந்த மேனி
சோற்றுடல்—மிகுதியாகச் சோறுண்டு கொழுத்த உடல்
தங்கத்திருமேனி—தங்கம் போன்ற அழகிய உடல் (மின்னெளி கு)
தங்கநிற மேனி—தங்க நிறம் போன்ற சிவந்த அழகிய உடல்
தளிர் உடல்—தளிர் போன்ற உடல்
தளிர் புரையும் மேனி—தளிர் போன்ற (மகளிரின்) உடல்
தளிர் மருட்டும் மேனி—தளிர் போன்ற (மகளிரின்) உடல்
திடகாத்திரம்—கட்டுள்ள தேகம்; வலிவுள்ளவுடம்பு
திரிதேகம்—காரணவுடல்; சூக்குமவுடல், தூலவுடல் என்ற மூன்று உடல்
திரிதேகி—சீவான்மா
திருமெய்காப்பான், திருமெய்காப்பு—கோவில் மெய்காவல்; கோயில் காப்பான் (சாச)

திருமெய்ப்பூச்சு—கோயில் மூர்த்திகளின் (விக்கிரகங்களின்) மேற்பூசும் பூச்சு

திருமேனி—கடவுள் முனிவர் முதலியோரது திவ்விய சரீரம்; பெண்கள் காதணி; அழகிய உடல்

திருமேனி காவல்—கோயில் காவல் (சாச)

திருமேனிக்கீடு—கவசம் (திருவாலவா 28-90); மேற்சட்டை

திருமேனியழகர்—திருமயேந்திரப்பள்ளியில் கோயில் கொண்டிருக்கும் சுவாமி

திருவுடம்பு—திவ்ய சரீரம் (க சூர்ப்ப 18) விக்கிரகம்; கல்

திவ்வியகாயன்—கந்தருவன்

துவிதேகன்—விநாயகர்

தூயவுடம்புடைமை—கடவுளின் எண்குணத்துள் ஒன்று

தூல காயம்—தூலதேகம்

தூல சரீரம்—சூட்சும சரீரத்தைப் போர்த்திருக்கும் பஞ்ச பூத பரிணமத்தாலுண்டான சரீரம் (சைவ வி.7); பருத்தவுடல்

தூலதனு—தூல சரீரம்

தூல தேகம்—தூல சரீரம்

தூலவுடல்—பருத்த உடல்

தூலித்த சரீரம்—பருத்த உடல்

தேகக்கட்டு—பொலிவுற்ற உடலமைப்பு

தேகக்கூறு—உடலின் இயல்பான நிலை

தேககாங்கை—உடற்சூடு

தேககாந்தி—சரீரஒளி, உடல் வனப்பு

தேக கோசம்—தோல், சருமம்

தேகங் கடத்தல்—பிறவி நீக்கம் (திவ் சி வெ 5)

தேக சம்பந்தம்—இரத்த உறவு; புணர்ச்சி

தேக சாரம்—மூளை
தேக சிரமம்—உடலுழைப்பு (மங் காதல்)
தேக சுகம்—உடல் நலம்; ஆரோக்கியம்
தேகசுத்தி—உடற்சுத்தம்; சரீரசுத்தி
தேக சௌக்கியம்—உடல் நலம் (பிரதாப 9)
தேகத்தடிப்பு—கரப்பான் வகை
தேகத்தியாகம்—உயிரைக் கொடுத்தல்; சரீரப்பற்றுவிடல், மரணம்
தேகதத்துவம்—தேகக்கூறு
தேகதாரகம்—எலும்பு
தேகதிடம்—உடல்வலி
தேக நலன்—உடல் நலம்
தேகநாசம்—சரீர அழிவு; சாக்காடு
தேகப்பயிற்சி—உடற்பயிற்சி
தேகப் பிரயாசம்—உடலுழைப்பு (பிரதாப 43)
தேகபந்தம்—உடல் தொடர்பு
தேக பலம்—உடல் வன்மை (பிரதாப 2; 38)
தேகபீடை—உடல் துன்பம்
தேக போஷணை—உடற் பாதுகாப்பு (பிரதாப 20)
தேகம் உலரல்—உடல் வற்றுதல்
தேகம் ஒடுங்குதல்—உடல் சோர்தல், தளர்தல்
தேகம் கொதித்தல்—சூடு, சுரம் அல்லது கோபத்தால் உடல் கொதித்தல் (பார்வதி 134)
தேக மெலிவு —உடல் மெலிவு (அருட் 8–74–1)
தேக யாத்திரை—சரீர போஷணை (ஸ்ரீவசன); மரணம்
தேகரசம்—வியர்வை
தேகவலு—உடல் வலிமை (புருஷர்களுக்கு 74)

தேக வனப்பு—உடலழகு
தேகவாசி—தேகக்கூறு
தேகவியோகம்—சாவு
தேகவியோகமாதல்—சாதல் (பிரதாப 6)
தேகஸ்மரணை—உடல் நினைவு (பிரதாப 37)
தேகாத்துமவாதி—சாருவாகமதஸ்தன்
தேகாந்தம்—உடலினிறுதி; சாவு, தேகவியோகம்
தேகாபரணம்—உடை, அணி
தேகாபிமானம்—உடலில் வைக்கும் பற்று
தேகான்மவாதி—தேகாத்துமவாதக் கொள்கையினன்
தேகி—சீவாத்துமா (திருமந் 1785);
தேகத்தை உடையவன்-ள்-து (கைவல் 1-22)
தேமாமேனி—(மகளிரின்) தேமாந்தளிர் போன்ற மேனி
தேவசரீரம்—பொன்னுடம்பு
தொள்ளற் சரீரம்—பலவீனமான உடல்
நலங்கிளர்மேனி—அழகுமிக்க மேனி (சூளா 1759)
நலிந்த உடல்—நோயால் மிகவும் மெலிந்த உடல்
நறுமேனி—நன்மணம் வீசும் உடல்
நிகாயன்—உடலுருவமற்றவன்; கடவுள்
நிணம்படும் உடல்—நிணம் பொருந்திய உடல் (சுந் 140)
நீரினில் எழு மொக்குளின் அழியுடம்பு—நீர்க்குமிழிபோல் விரைவில் அழியும் உடம்பு (சோணசைல 14)
நீரெழுத்துக்கொத்த உடல்—நிலையாமையுடைய உடல் (குமர 601)
நீலமேனியன்—கண்ணன், திருமால்
நோஞ்ச் சரீரம்—வலி தாங்காத உடல்
நோஞ்ச் சரீரன்—நோயாளி

பச்சுடம்பு—பிள்ளைப் பேற்றால் மெலிந்த உடல்; பச்சையுடம்பு (கடம்ப உலா 203); குழந்தையின் இளஞ் சரீரம்; அம்மைப் புண் காயாத உடம்பு

பச்சையுடம்பு—பச்சுடம்பு

பச்சையுடல்—புண்ணுடல், மெலிந்த உடல்

பசந்த மேனி—பசப்புற்ற மகளிரின் உடல்

பசலை மேனி—பசப்புற்ற உடல் (அக 398)

பரகாய சரிதர்—பரகாயப் பிரவேசம் செய்ய வல்லவர் (வில்லி நிரைமீட்சி 141)

பரகாயப் பிரவேசம்—தன் உடலை விட்டு மற்றொரு உடலில் புகும் வித்தை (குசே 320)

பருத்த சரிரிகள்—பருத்த உடம்பினர் (புதுமைப்)

பாரமேனி—பெரிய உடம்பு (அரி 11–102)

பாவம் செறிந்த உடம்பு—பாவம் மிகுந்த உடல் (நாலடி 380)

பாழுடம்பு—பாழாகும் உடம்பு (திருப்பு 1264)

பிறந்தமேனியாயிருத்தல்—ஆடையின்றியிருத்தல்

புகழுடம்பு—புகழுடல்

புகழுடல்—உடல் மறைந்தபின்னும் நிற்கும் புகழ்

புண்ணிய சரீரம்—பரிசுத்தமுடையவன்(ள்); பரிசுத்த உடல்

புண்ணிய தேகம்—புண்ணிய சரீரம்

புண்ணுடம்பு—பச்சையுடம்பு; பிரசவித்த உடம்பு

புரியட்டகம்—சூக்கும தேகம் (உப 1666)

புரியட்டகாயம்—சூக்கும சரீரம்

புலாலுடம்பு, புலாலுடல்—புலையுடம்பு

புலைய உடல்—புலாலுடம்பு (அருட் 9-23-6)

புலையுடம்பு—புலால் நாற்றம் (வேர்வை நாற்றம்) வீசும் உடம்பு (குமர 549)

புலையுடல்—புலாலுடல் (திருப்பு 1208)

புழுதி படிந்த உடல்—புழுதியுற்ற உடல்
புழுதிமேனி—புழுதி படிந்த உடல்
புன்புலை உடம்பு—அசுத்தமாகிய ஊன்செறி உடம்பு
(காஞ்சிப் 5-42)
பூஞ்சையுடம்பு—மெலிந்த உடம்பு (அசையா விளக்கு 73)
பூதக்காயம்—ஐம்பூதங்களாலாய உடல் (திருப்பு 1119)
பூதசரீரம்—தூலவுடல்; பூதவுடம்பு
பூதசார சரீரம்—தேவ சரீரம்
பூததேகி—பருத்த உடலுடையவன்(ள்)
பூதவுடம்பு—பூதவுடல்
பூதவுடல்—பருவுடல்; ஐம்பூதங்களாலாகிய உடல்
பூதனு சரீரம்—தூலசரீரம் (சி சி 2-36)
பூந்தளிர்மேனி—(மகளிரின்) அழகிய தளிர்போன்ற உடல்
பெண்ணுடம்பு—பெண்குறி
பெரிய சரீரி—பருத்த உடலுடைய ஆள் (புதிய 92)
பொய்க்காயம்—உடல் (திருப்பு 108)
பொய்யுடல்—நிலையற்ற, அநித்திய தேகம் (க 6-3950;
குமர 467-28)
பொலமேனி—பொன்னுடல்
பொன்போலு மேனி—பொன் போன்ற உடல்
பொன்மேனி—பொன்னுடல்
பொன்னுகம்—பொன்னுடல்
பொன்னுடம்பு—மேலான சரீரம், தேவ சரீரம்
பொன்னுடல்—பொன்மேனி (பாரதி 1-3)
பொன்னுடலம்—பொன் போன்ற உடல்
பொன்னுறழ் மேனி—பொன் போன்ற உடல்
பொன்னுறு மேனி—பொன் போலும் மேனி (சி 19-40)

பௌதிக சரீரம்—பூதவுடம்பு

மணங்கமழ் மேனி—மணம் விசும் உடல்

மணியெழில் மேனி—நீலமணிபோன்ற அழகிய உடல் (திணை ஐம் 47)

மகாகாயம்—யானை

மலவுடல்—மானிடவுடல்

மாந்தளிர்மேனி—மாந்தளிர் போன்ற உடல்

மாந்தழை மேனி—மாந்தழை போன்ற (மகளிரின்) மேனி

மாமேனி—மாநிற உடல்

மாயாதேகம்—நிலையற்றதாகிய உடல்

மின்போல் மேனி—(மகளிரின்) மின்னல் போன்ற உடல்

முடலையாக்கை—வலிமை பொருந்திய உடல்

முத்துடம்பு—முதிய உடம்பு (கிதை வெ 2-22)

முரணில்யாக்கை—வலிவுற்ற உடல் (க 3-889)

முழுவுடல்—நிர்வாண உடல் (பெரிய 1304)

முறி எழில் மேனி—தளிர் போன்ற அழகிய உடல் (திணை மொழி ஐம்)

முறிகொள் மேனி—தளிர் போன்ற மேனி

முறி புரை மேனி—தளிர்போன்ற மேனி (நாலடி 317)

முறிமேனி—தளிர்போன்ற உடல்

முறுக்கான உடல்—கட்டுடல்

மெய்க்கண்ணன்—இந்திரன் (திருப்பு 675)

மெய்க்கலவை—மெய்யிற் பூசுங் கலவைச் சாந்து (பரி 7-20)

மெய்க்கவசம்—உடலில் இடும் காப்புச்சட்டை, மெய்புறை

மெய்க்காட்டு—நேரில் வந்து தோற்றுகை (ஈடு 3-6-4; சாச) சேனையைப் பார்வையிடுகை (திருவிளை)

மெய்க்காட்டுதல்—நேரில் வந்து தோற்றுதல் (அஷ்டாதச ப 62)

மெய்க்காட்டு வேலை-குத்தகைக்கு விடாமல் நேரில் நடத்தும் வேலை

மெய்க்குற்றம்—கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு, சாண்கிடை, நட்டுவிழல் என்பனவாகிய உடலில் உண்டாம் ஐவகைக் குற்றங்கள்

மெய்க்கூத்து—அபிநயக்கூத்து வகை

மெய்க் கோயில்—உடம்பாகிய கோயில்

மெய்க்கோள் மள்ளர்—மெய்க்காப்பாளர் (பெ 1-57-71)

மெய்கழுவல்—நீராடல் (தனிப் 1-298)

மெய்காவல்-பாதுகாப்பாளன்[சாச]; ஒருவனைப் பாதுகாத்தல்

மெய்குளிர்தல்—உடல் குளிர்தல்; மகிழ்ச்சி மிகுதல்

மெய் குறைத்தல்—உடம்பை வெட்டுதல் (அரி 8-59)

மெய்ச்சங்கம்—மெய்யுறு புணர்ச்சி (கோடீச் கோ 285)

மெய்ச்சுவை—உடலின்பம் (திருப்பு 125)

மெய் சிலிர்க்க வைத்தல்—(இன்ப மிகுதியால்) உடல் சிலிர்க்க வைத்தல்

மெய் சிலிர்த்தல்—உடல் புளகித்தல், மயிர்க்குச் செறிதல் (திவ் இயற் சிறிய ம 2)

மெய்த்து—மெய்யில் பூசப்படும் சந்தனம் (ச 371-4)

மெய்த்துயரம்—உடம்பினாலாகிய துயரம்; பிறவிப்பிணி (குமர 549)

மெய் தளர்தல்—முதுமையால் உடல் தளர்தல்.

மெய் தளர்வுறல்—உடம்பு தளர்ச்சியுறல் (நைட 310)

மெய்தாங்கி—ஆசனம் (சாச)

மெய் தீண்டுதல்-அன்போடு ஒருவன் சரீரத்தைத் தொடுதல்; கற்பைக் கெடுத்தல்

மெய் தொட்டுப் பயிறல்—தலைவியின் மனக்குறிப்பை அறிதற் பொருட்டுத் தலைவன் அவளைத் தொட்டுப் பழகுவதைக் கூறும் அகத்துறை (தொல் பொ 102)

மெய் தொட்டு விளையாடல்—உடலைத் தொட்டு விளையாடுதல்

மெய் தொடல்—உடலுறுப்புக்களைத் தீண்டுதல்

மெய்தோய் முயக்கம்—உடற்புணர்ச்சி (நற் 199)

மெய்ந்நலம்—உடம்பினழகு; வன்மை; உடல்நலம் (சோற் பு 7–3)

மெய்ந்நவை—மெய்க்குற்றம்

மெய்நிறை வடு—உடல் முழுவதும் நிறைந்த வாட்புண்

மெய் நடுங்கல்—உடல் நடுங்கல் (அரி 9–58)

மெய் நடுநடுங்கல்—உடம்பு மிக நடுங்கல் (அரி 9–43)

மெய்ப்படாம்—உடலை மூடும் போர்வை; நிலையங்கி

மெய்ப்பணி—மேனியிலணிந்த ஆபரணம் (கந்த சு 69)

மெய்ப்பரிசம்—ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல் என்ற எண்வகைப்பட்ட உடலுணர்ச்சிக் காரணங்கள்

மெய்ப்பாடு—நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என எண்வகைப்பட்டதும், புறத்தார்க்குப் புலப்படுத்துவதோராற்றான் மெய்யில் வெளிப்படுவதுமான உள்ள நிகழ்ச்சிகள்

மெய்ப்பாவம்—உடம்பினால் செய்த பாவம் (ச 285–11)

மெய்ப்பிணி—உடலுக்குவரும் நோய் (நீல 109)

மெய்ப்பிரபை—தேக ஒளி (திருப்பு 675)

மெய்ப்புளகம்—உடற்புளகம், உடல் பூரித்தல் (அருட் 8–59–4; சிதம் பு 1–12; பிரபு 22–59)

மெய்ப்புளகம் மூடல்—உடம்பு மகிழ்ச்சியினால் புளகங் கொள்ளல் (அரி 12–6)

மெய்ப்பூச்சு—உடலின் மேற்பூசும் கலவைச்சாந்து முதலியன (பெரிய திருக்குறிப்பு 60)

மெய்ப்பை—சட்டை (முல்லைப் 60)

மெய்ப்பொறி—சரீர லட்சணம் (சிந் 1949; உரை)

மெய்ப்போர்—உடலிற்செய்யும் போர் (நில 104)

மெய் பசப்பூர்தல்—மகளிரின் உடல் பசப்புநிறமடைதல் (குறுந் 371)

மெய்பதறுதல்—உடல் பதறுதல்

மெய்பனி கூரல்—உடம்பு நடுங்குதல் (பதிற் 71–22)

மெய் பனித்தல்—உடல் நடுங்குதல் (சி 4–6)

மெய் பாரித்தல்—உடல் பெருத்தல் (தனிப் 3–871)

மெய்புகுகருவி—கவசம் (பு 13 உரை)

மெய்புகு கவசம்—மெய்க்கவசம் (சி 14–169)

மெய்புகுவன்ன கைகவர் முயக்கம்—உடம்போடு உடம்பு புகுந்தது போன்ற அரவணைப்பு (அக 305)

மெய்புதையரணம்—மெய்புகு கருவி (பதிற் 52–6)

மெய் புளகம் எய்தல்—மயிர்க்கூச்செறிதல் (வில்லி 1–45)

மெய் புளகுறல்—மயிர்கூச்செறிதல் (நைட 99)

மெய் பொடித்தல்—உடம்பு புளகாங்கிதங் கொள்ளல் (அரி 12–26)

மெய் போர்த்தல்—உடலில் போர்த்தல்; உடலைப் போர்த்துதல்

மெய்ம்மயக்கம்—ஒற்றெழுத்துக்கள் தம்முள் இணைந்துவரல்

மெய்ம் மயிர்—உடல் மயிர் (செந்.பு 1–5; பெரிய 1600)

மெய்ம்மலம்—மெய் மாசு

மெய்ம்மலியுவகை—உடல் பூரிக்கச் செய்யும் ஆனந்தம் [புறம் 45]

மெய்ம்மறத்தல்—தன்னை மறத்தல்

மெய்ம்மறந்த நிலை—தன்வசமிழந்த நிலை

மெய்ம்மறந்து தூங்குதல்—கட்டைபோல் தூங்குதல்; ஆழ்ந்து உறங்குதல்

மெய்மறந்து நிற்றல்—வியப்பு, ஆனந்தம் இவற்றால் தன்னை மறந்து இருத்தல்; தன்னை மறந்து ஈடுபட்டிருத்தல்

மெய்ம் மறந்து பரவசமாதல்—தன்னை மறந்திருத்தல்

மெய்ம் மறை—மெய்புகு கருவி [பதிற் 14-12]

மெய்ம் முயக்கம்—புணர்ச்சி

மெய்ம் மெலிவு—உடல் மெலிவு [அரி 4-81]

மெய்ம்மை—உடல் வலிமை [திரிசி அ 68]

மெய்மலிதல்—உடல் பூரிக்கப்பெறல் [அக 262]

மெய்மறதி—தன்னை மறத்தல்

மெய்மாசு—உடலழுக்கு

மெய் மேலாதனம்—இரு கையையும் ஊன்றி உடலை உயர்த்தி நிறுத்தும் ஆசன வகை [தத்துவப் 109 உரை]

மெய் மேனிற்றல்—மெய் மேலாதனம் [தத்துவப் 109]

மெய்யரும்பிய வேர்வை—உடலில் துளித்த வேர்வை [உபதே 6-168]

மெய்யவத்தை—மெய்க்குற்றம்

மெய்யாப்பு—சட்டை [பரி 24-19]

மெய்யாத மெய்—மெய்யாகாத உடம்பு [குமர 122]

மெய்யின் மாசு—உடலழுக்கு [ச 146-10]

மெய்யுருத் தோற்றல்—[பிறர்காண] வெளிப்படுதல் [தணி பு 10-242]

மெய்யுற்றுப் புணர்தல்—உடற் புணர்ச்சி

மெய்யுறல்—தழுவுதல், புணர்தல் [கந்த 3-8-41]

மெய்யுறவு—புணர்ச்சி

மெய்யுறுஇன்பம்—உடற்புணர்ச்சியால் வருமின்பம்

மெய்யுறு புணர்ச்சி—உடல் சம்பந்தம், உடலால் புணருங் கூட்டம் [தொல்பொ 145 உரை]

மெய்யுறை—சட்டை [கதிர் பி த 23]; மெய்க்கவசம்

மெய்யெரிவு—உடம்பெரிச்சல் [பதி 12–58]

மெய்யெல்லாம் புல்லரித்தல்—உடம்பெல்லாம் புளகித்தல் [மன்மத மலர்]

மெய்யெழில்—உடலழகு [சிறு உலா 211]

மெய்யோடு மெய்யணைத்தல்—உடலோடு உடல் தழுவுதல்

மெய்வருத்தக் கூலிதரும்—உடலுழைப்புக்கு ஏற்ற பலன் கிடைக்கச்செய்யும்

மெய்வலம்—அங்கப் பிரதக்கணம் [திருவி 26–32]

மெய்வலி—உடல் வன்மை [க 6–2328]; உடல்வலி [இன்னிலை 14]; உடலின்பம் [பெரு 61 உரை]

மெய்வனப்பு—வடிவழகு [பாக பு 10–35–22]

மெய்வழி நீர்—வியர்வை

மெய்விடாய்—உடற் களைப்பு [இரட்ச 21—89]

மெய்விடுதல்—சாதல் [சி 27–97]

மெய் விதிர்த்தல்—உடலசைதல் [பிரபு 19–54]

மெய் வெயர்த்தல்—உடலில் வியர்வை தோன்றுதல்

மெய் வைத்தல்—சாதல் [மணி 6–131]

மெலிந்த உடம்பு—இளைத்த உடல்

மேக தேகம்—மேக நோய் கொண்ட உடம்பு

மேல் வலி—உடம்பு வலி

மேனு மினுக்கி—மேனி மினுக்கி

மேனிக்கசிவு—வியர்வை [கந்த சு 207]

மேனி கரப்போர்—அசுரர்
மேனி கருகுதல்—உடல் கருகுதல்
மேனி குலைதல்—உருக்குலைதல்; அழகு குன்றுதல்; உருவங் கெடுதல்
மேனிநிறம்—உடலின் வண்ணம், உடல் நிறம்
மேனி பசத்தல்—மேனி பசப்புநிறமடைதல்; காதலனைப் பிரிந்த மகளிர் எய்தும் நிறவேறுபாடு
மேனி புளகித்தல்—மெய் சிலிர்த்தல் [பணது 317]
மேனி மினுக்கி—எப்பொழுதும் அலங்காரம் செய்துகொண்டு திரிபவன்(ள்)
மேனி மினுக்குதல்—உடலை அலங்கரித்துக்கொள்ளல்
மையில் மேனி—குற்றமற்ற உடல்
யாக்கை இளைத்தல்—உடல் இளைத்தல் [அ 3-8-63]
யாக்கைக் கண்ணினன்—இந்திரன் [திருவி 36-3]
யாக்கைக் குற்றம்—மெய்க்குற்றம்
யாக்கை தேம்புதல்—உடல் வாடுதல், தளர்தல் [க 3-973]
யாக்கை நோக்கினன்—உடலில் கண் உடையவன், இந்திரன் [வள்ளி 3-9; திருவி 1-11]
யாதனு சரீரம்—நரகானுபவத்துக்குரிய உடல்
வச்சிர உடல்—வலிமை மிக்க உடல்
வச்சிரகாயம்—வலிமை மிக்க உடல் [இரத் குரு 33]
வச்சிர சரீரம்—திட சரீரம்
வச்சிர தேகம்—வச்சிர சரீரம்
வச்சிர யாக்கை—வச்சிர உடல்
வஞ்சனையின்றி வளர்ந்த உடல்-நெடிது வளர்ந்த உடல்[பே]
வளைந்த மெய்—கூனுடல் [திருவி 61-10]
வற்கென்ற உடம்பு—வலிமையுற்ற உடல் [கலி 3 உரை]

வற்றிய உடல்—இளைத்த உடல்

வாட்ட சாட்டமான உடல்—கட்டான உடல், கட்டுக் குட்டான உடல்

வாத சரீரம்—பருத்த சரீரம்

வாத தேகி—வாதக் கூறுமிக்க சரீரமுள்ளவன்

வாளிப்பான உடல்[அமைப்பு]—கட்டான, அழகிய உடல் [அமைப்பு]

வெற்றுடல்—வெறிதாய உடம்பு; பிணம் [சிந் 1969]

ஸ்தூல தேகம்—பருவுடல்

ஸ்தூலித்த சரீரம்—பருத்த உடல்

---

# உ. தலை.

அஞ்சல் தலை—தபால் தலை

அடிதலை தடுமாற்றம்—குழப்பம்

அரைத்தலை நோவு—தலையின் ஒரு பக்கத்து வலி

அலறுதலை—விரிந்த தலை [சி 11-75]

அழிதலை—இறந்தவரின் தலையோடு

அறந்தலை நிற்றல்—அறத்தில் ஈடுபட்டிருத்தல் [குமர 458-14]

இடைத்தலைவலி—விட்டுவிட்டு வரும் தலைநோய்

இரட்டைத் தலைவலி—இரண்டு பக்கமும் வலியை உண்டாக்கும் தலைவலி

இருதலை—இருமுனை [நாலடி 114]; முன்னும் பின்னும் [மதுரைக் 402]; இருபக்கம், இரண்டுதலை, ஈரிடம்

இருதலைக்கபடம்—நீட்டமான விலாங்கு மீன்

இருதலைக்கொள்ளி—இரண்டு தலையுந் தீப்பற்றி எரியுங் கொள்ளி; இருதலையுள்ள ஒரு பாம்பு

இருதலை நோய்—தலைவலி வகை; இருபக்கத் தலைவலி

இருதலைப்பகரம்—[ ] என்ற குறி; பிறையடைப்பு

இருதலைப்பட்சி—இருதலைப் பறவை

இருதலைப்பாம்பு—மண்ணுண்ணிப்பாம்பு

இருதலைப்புடையன்—இரண்டு பக்கம் தலைகளையுடைய ஒருவகைப் பாம்பு; மண்ணுண்ணிப்பாம்பு

இருதலைப்புள்—இருதலையுள்ள பறவை [சிந் 1631 உரை]

இருதலைப்பூச்சி—இருதலையுடைய பூச்சி; இருதலை மணியன் (பாம்பு); நண்பன் போல் நடித்து இருவருட் கலகம் விளைக்குந் தொழிலுடையவன்

இருதலைப்போகம்—இம்மை மறுமையின்பம் [ச 116-10]

இருதலை மணியம்—நண்பன்போல் நடித்து இருவருட் கலகம் விளைக்குந் தொழில்

இருதலை மணியன்—பாம்பு வகை; குறளை சொல்வோன்; பகை, நட்பு, ஆகிய ஈரிடத்தும் சென்று இருவர்க்கும் நல்லவனாக நடிப்பவன்

இருதலை மாணிக்கம்—முத்தி பஞ்சாட்சர மந்திரம்

இருதலையும்—இரு பக்கத்திலும்

இருதலை விரியன்—விரியன் பாம்பு வகை; குறளை சொல்பவன்

இளந்தலை—இளமையாளன்

இளந்தலைமுறை—இளைஞர் சமுதாயம்

இறங்கு சென்னி—கவிழ்ந்த தலை [இரட்ச 14-106]

ஈர்த்தலை—ஈருடைய தலை

உச்சந்தலை—தலையின் உச்சி, உச்சித் தலை

உச்சந்தலை குளிர்தல்—மனம்மிக மகிழ்தல்

உச்சந்தலைமுதல் உள்ளங்கால் வரை—முடிமுதல் அடிவரை

உச்சிச்சிரசு—உச்சந்தலை

உணங்கல் தலை—உலர்ந்த தலையோடு [சுந் 9-5]

உணரத்தலைப்படல்—உணரத் தொடங்குதல்

எதற்கெடுத்தாலும் தலையை ஆட்டுபவன்—எது கேட்பினும் சரி அல்லது ஆமாம் என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டுபவன்

ஒருத்தலை—ஒரு பக்கம் [க 2-61-66]

ஒருத்தலை நோவு—ஒருத்தலைவலி

ஒருத்தலையிடி—ஒருத்தலைவலி

ஒருத்தலைவலி—ஒருத்தலை நோவு

ஒருதலை—ஒரு சார்பு; ஒரு பட்சம் [திருவிளை 3-12] உறுதி; ஒரு பக்கம்

ஒருதலைக்காமம்—ஆண் பெண் இருவரில் ஒருவர் மட்டும் காதலிக்கும் காமம்

ஒருதலைச் சாயல்—தலை ஒரு புறமாகச் சாய்ந்திருத்தல்

ஒருதலை துணிதல்—உத்தியின் ஒன்று

ஒருதலை நியாயம்—வழக்கு, வழக்கோரம்

ஒருதலை நோய்—ஒற்றைத் தலைநோய்

ஒருதலைப் பட்சமாயிருத்தல்—பாரபட்சமாயிருத்தல்

ஒருதலைப்பாரம்—தலையின் ஒரு பக்கம் மட்டும் உணரப்படும் பாரம்

ஒருதலையன்—கொக்கு

ஒருதலைவழக்கு—ஒருதலைச் சார்பான வழக்கு

ஒற்றைத் தலைநோய்—ஒற்றைத் தலைவலி, நரம்புவலி

ஒற்றைத் தலைவலி—ஒருத்தலைவலி

கடுக்காய்த் தலையன்—ஒருவகைப்பாம்பு

கடுத்தலை—வாள் [குருதாச 1-21-2)

கடைத்தலை—வாயில் [பு 225]; வாயிற்படி [பி த கொத்து 1-18]; கடைவாயில் [காஞ்சிப் 11-29]

கடைத்தலைவாயில்—புறத்தலைவாயில்

கடைதலைப்பாடம்—தலைகீழ்ப்பாடம்

கடைதலைப்பூட்டு—பூட்டுவிற் பொருள்கோள்

கணக்குத் தலைப்பு—கணக்கு வகைக்குக் கொடுக்கப்படும் தலைப்பு

கருங்காற்றலையன்—ஒரு எலி வகை

கருந்தலை—போரில் இறக்கும் தலை; முடிவு; கரியதலை
[முருகு 53]

கரைதலைப்பாடம்—தலைகீழ்ப்பாடம்

கவிழ்தலை—கவிழ்ந்த தலை [காளத் பு 1-15]

கவிழ்ந்ததலை—குனிந்த தலை

கழாத்தலையர்—சங்ககாலப் புலவருள் ஒருவர் [பு 45]

கிராப்புத்தலை—ஒரு வகையாக மயிர் வெட்டப்பட்ட தலை

கீழே தலைவைத்துப் படுத்தல்—கீழே படுத்தல்

குண்டுசித்தலை—குண்டுசிக்காது

குருவித்தலை—சிறிய தலை, குறுகிய தலை

குருவித் தலைப்பாகை—சிறிய தலைக்குட்டை

குழித்தலை—குழிந்ததலை, உச்சந்தலைக்குழி

குறைத்தலை—கவந்தம் (திருவிளை 14-49, க 6-1775)

குனிந்த தலை நிமிராதிருத்தல்-குனிந்து கொண்டேயிருத்தல்

கூச்சுத்தலை—கோபுரத்தலை

கைதலை வைத்தல்—தலைமேல் கைவைத்து வணங்குதல்

கொடுந்தலை—வளைந்த தலை

கோபுரத்தலை—கூச்சுத்தலை

சட்டித்தலை—சட்டியைப் போன்ற பெரிய தலை

சட்டித் தலைப்பாகை—பெருந் தலைப்பாகை

சட்டித் தலையுள்ளான்-பெரிய தலையுடைய உள்ளான் பறவை

சமதலை—அடிச்சிலை, முன்றுனை

சரி (சரி) என்று தலையாட்டல்-'ஆமாம்' என்று தலையாட்டல்

சிக்குப்பிடித்த தலை (மயிர்)—சிக்கலுற்ற (மயிர்த்)தலை

சிகாமணி—முடிமணி [க 6-4191; திருவா 470]

சிரக்கப்பரை—தலையோடு [தனிப் 1-447]

சிரக்கம்பம்—தலையசைப்பு

சிரக்கம்பம் கரக்கம்பம் செய்தல்—தலையசைத்துக் கை தட்டுதல்

சிரகபாலம்—தலையோடு, மண்டையோடு

சிரகம்பிதம்—சிரக்கம்பம், தலையசைப்பு

சிரகர கம்பிதம்—தலையாட்டலும், கைதட்டலும் [தனிப் 1–698]

சிரச்சவரம்—தலைமயிர் வெட்டிக்கொள்ளல்

சிரச்சேதம்—தலையை வெட்டுதல்

சிரச்சேதம் செய்தல்—தலையை வெட்டிவிடல் [பிரதாப 37]

சிரசாக்கினை—கொலைத்தண்டனை, சிரச்சேதம்

சிரசா வகித்தல்—தலையால் தாங்குதல்; மரியாதையுடன் ஏற்றுக்கொள்ளல்

சிரசுவெட்டி—சிரச்சேதக் கருவி

சிரத்தானம்—தலைமையிடம் [தனிப் 3–289]

சிரத்தெழுத்து—தலையெழுத்து [தனிப் 3–444]

சிரந்துளக்கல்—தலையை ஆட்டுதல், சிரக்கம்பம் செய்தல் [தனிப் 3–274; சிதம் பு 1–43]

சிரநதி—சிவன் சிரத்தில் தாங்கிய கங்கை

சிரப்பிரதானி—தலைமைப் பிரதானி [சாச]

சிரபங்கம்—சிரச்சேதம், கொலைத்தண்டனை

சிரபுரம்—தலை நகரம் [செந் பு 3–2]

சிரம் கொய்தல்—தலையைத் துணித்தல் [க 6–1534]

சிரம் நெரித்தல்—சிரம் கொய்தல்

சிரமாலிகை—தலைமாலை [கரு ப அ 9]

சிரமாலை—கபாலமாலை, தலையில் தரிக்கும் உருத்திராக்க மாலை

சிரமித்திரன்—தலைபோன்ற நண்பன்

சிரமிலி—தலையிலி, முண்டம்

சிரமேற்கொள்ளல்—தலைமேல் தாங்குதல், உடனே கவனித்துச் செய்தல்

சிரவணக்கம்—தலை தாழ்த்து வணங்குதல்

சிராங்கம்—தலை

சிரோமணி—அரசர் முடியிலணியும் மணி

சிரோரத்னம்—முடிமணி, தலையணி [தனிப் 1–1090]; சிறந்த தன்மை [சுவாமி பித 65]

சிரோவர்த்தனை—சிவலிங்கத்தின் உச்சிப்பகுதி [சாச]

சீவிவிட்ட தலை—வாரிக்கொண்ட தலை

சுட்டித்தலையன்—ஓராபரணம்; குறும்புத்தனம்; துட்டன்

சுருட்டைத்தலை—சுருள் வாய்ந்த மயிர்த்தலை

செந்தலைப்புலி—சிவந்த தலைப்பாகையுடைய அரசாங்கச் சேவகன், போலீசுக்காரன்

செந்தலை விரியன்—ஒரு பாம்பு வகை

செம்பட்டைத்தலை—செம்மை நிறம் வாய்ந்த பரட்டைத்தலை

சென்னிதுளக்கு—தலையசை [சிதம் பு 3–2]

சென்னியைத் துளக்குதல்-தலையை அசைத்தல் [அரி 9–133]

சொட்டைத்தலை—பொடுகுத்தலை; மொட்டைத்தலை (வையாபள் 221)

தட்டைத்தலை—தட்டையான பெரிய தலை

தபால்தலை—அஞ்சல் தலை

தருமம் தலைகாக்கும்—புண்ணியம் ஆபத்திலிருந்து உயிரைக் காக்கும்

தலை இறங்குதல்—தலை கவிழ்தல்

தலை உருள்தல்—தலை வெட்டி வீழ்த்தப்படல்

தலை உளர்தல்—தலை மயிரைக் கோதுதல் [ஆசாரக் 77]

தலை எண்ணெயைக் காணுதிருத்தல்—பல நாட்கள் தலையில் எண்ணெய் தடவாதிருத்தல்

தலைக்(குக்)கட்டிக்கொள்ளல்—இழவு வீட்டில் தலைக்கு மேல் துணியைக் கட்டிக்கொள்ளல்

தலைக்கட்டு—முடிவு; கருமாதியிறுதியில் தலைப்பாகை கட்டுஞ் சடங்கு; வீட்டின் முதற்கட்டு; தலைமுறை; தலையில் கட்டப்பட்டது, முண்டாசு

தலைக்கட்டுதல்—நிறைவேறுதல், நிறைவேற்றுதல்; ஆதரவால் நடத்துதல்; காப்பாற்றுதல், ஒப்புவித்தல்

தலைக்கட்டுமாறி—ஏமாற்றுக்காரன், எத்தன்

தலைக்கட்டுவரி—குடும்பவரி, வீட்டுவரி

தலைக்கடை, தலைக்கடை வாயில்—முதற் பிரதான வாயில் முன்றில், (பெருங் 1-40-137); வாயில் (குமர 434)

தலைக்கண்ணது—தலைப்புறத்தது (நாலடி 368)

தலைக்கண்ணி—தலைமாலை (பரி 9-36)

தலைக்கணி—தலையணி, திண்டு

தலைக்கயிறு—லகான், மாட்டின் மூக்கணாங் கயிறுடன் இணைத்து மாட்டைஓட்டுபவர் கையில் பிடித்துக் கொள்ளும் கயிறு

தலைக்கர்வம்—மண்டைக்கர்வம் (பரந்த 107)

தலைக்கருவி—தலைக்கவசம்

தலைக்கரை—வயலை அடுத்துள்ள நிலம் (சாச)

தலைக்கல்—ஆட்டுக்கல்; கட்டிட வளைவின் பிரதானக்கல், எந்திரத்தின் மேற்பாகமான ஆட்டுக்கல்

தலைக்கலன்—தலையணி (குமர 529)

தலைக்கனப்பு—தலைப்பாரம்

தலைக்கனம்—தலைப்பாரம்; தலைநோவு; மண்டைக்கனம், கர்வம்

தலைக்கனம்கொண்ட—தலைக்கனம் படைத்த; கனமான

தலைக்காஞ்சி—பகைவரையழித்துப் பட்ட வீரனது தலையைப் புகழ்ந்து கூறும் புறத்துறை

தலைக்கா நாள்—முந்தின நாள்

தலைக்காபத்து—உயிருக்கு ஆபத்து

தலைக்காய்—முதலிற் காய்த்த நற்காய்

தலைக்காவல்—முக்கியகாவல், பிரதானக்காவல்

தலைக்காவிரி—காவிரியின் உற்பத்தியிடம்

தலைக்கிறுக்கு—கர்வம்

தலைக் கிறுகிறுப்பு—தலை நடுக்கம், பித்த மயக்கம்

தலைக்கீடாக—காரணமாக, சாக்காட்டி (பே)

தலைக்கீடு—தலைப்பாகை; போலிக்காரணம் (பெரியஞான 61)

தலைக்கு ஆபத்து வருதல்—உயிருக்கு ஆபத்து வருதல்

தலைக்கு ஏறுதல்—(பித்தம், கர்வம் முதலியன) தலையில் நிறைந்திருத்தல்

தலைக்கு ஒன்றுகொடு—ஆளுக்கொன்று கொடு, ஒவ்வொருவருக்கும் ஒன்று கொடு

தலைக்குக் குளித்தல்—தலையில் எண்ணெய் தேய்த்துக் குளித்தல்

தலைக்குட்டை—தலைப்பாகை; தலையில் கட்டும் சிறுதுணி

தலைக்குடி—முதற்குடி, பழங்குடி, பெருங்குடி

தலைக்குத்தலைநாயகம்—ஆளுக்காள் தலைமை கொள்ளல்

தலைக்குத்தலை பெரியதனம்—ஒவ்வொருவரும் எசமானர்கள்

தலைக்குத்து—தலையிடி, தலைநோவு, தலைவலி

தலைக்குத் தேய்த்துக் கொள்ளுதல்—தலையில் தேய்த்துக் கொள்ளுதல் (பே)

தலைக்கு முக்காடிடுதல்—தலையை முக்காட்டால் மூடுதல்

தலைக்குமேல் ஆபத்து—பேராபத்து

தலைக்குமேல் இருத்தல்—(பையன்) தக்க வயதினை அடைந்திருத்தல்; (பொருள்) தலைக்குமேலே உயரத்திலிருத்தல்

தலைக்குமேல் கடன்—தீராப் பெருங்கடன்

தலைக்குமேல் போய்விடல்—அளவுக்கு மீறிப் போய்விடல்

தலைக்குமேல் வெள்ளம் போதல்—காரியம் மிஞ்சிப் போய்விடல்

தலைக்குமேல் வேலையிருத்தல்—மிக்க வேலையிருத்தல் (அம்மனி 41)

தலைக்குமேலே—அளவுக்கு மிஞ்சி

தலைக்கு மேலேறுதல்—வரம்பு கடந்து பிறர் காரியத்தில் தலையிடல் (அம்மனி 20)

தலைக்குயர்ந்தபிள்ளை—வயது வந்தவன்

தலைக்குலை—குலையின்தலை, குலையின் நுனிப்பாகம்; முதற்குலை

தலைக்குவைத்துப் படுத்துக்கொள்ளல்—தலையணையைத் தலைக்கடியில்வைத்துப் படுத்துக்கொள்ளல்

தலைக்கு வேட்டுவைத்தல்—உயிருக்கு உலை வைத்தல்

தலைக்குழம்பு—தலைக்கு மருந்தெண்ணெய்

தலைக்குறை—கவந்தம்; சொல்லின் முதற்குறைதல்

தலைக்குனிவு—நாணம் அல்லது அவமானத்தால் தலை குனிதல்

தலைக்கூட்டு—வியாபாரத்தின் தலைமைக் கூட்டாளி; சேர்தல் (பெருங் 1–33–15)

தலைக்கூட்டுதல்—கூட்டுவித்தல், நிறைவேற்றுதல்

தலைக்கூடல்—கூடல், சேர்தல், நட்புச் செய்தல்

தலைக்கூடுதல்—ஒன்றித்தல், ஒருப்படுதல், ஒன்று சேர்தல்; நிறைவேறல்

தலைக்கூலி—தலையில் சுமந்து செல்வதற்கு வாங்குங்கூலி; தோணியில் ஆள் ஏற்றுவோர் வாங்கும் கூலி

தலைக்கேறுதல்—பித்த வேகம் தலைக்கேறுதல், செருக்கு முதிர்தல்

தலைக்கை—தலைமையானவன், முதற்கை, முதன்மை, முதலிடம், தலையிடம் (பெ 1-34-76); முதன்மையான வன் (பெ 1-47-123)

தலைக்கை தருதல்—கையால் தழுவி அன்பு காட்டல்

தலைக்கொண்டு போற்றுதல்—தலைமேல் வைத்துப் போற்றுதல்

தலைக்கொம்பு—பல்லக்கின் முன்கொம்பு, தலைமையாள், முதன்மையுள்ளவன்

தலைக்கொழுப்பு—கர்வம்

தலைக்கொள்—தலையில் ஏற்றுக்கொள் (கூர்ம பாயி 5); (இரட்ச 16-15)

தலைக்கொள்ளுதல்—அதிகப்பட்டு மேலேறுதல், ஏற்றுக் கொள்ளுதல்; மிகுதல்; இறத்தல்; மேற்கொள்ளுதல் (பெ 1-43-203); கிட்டுதல், கைப்பற்றுதல், தொடங்கு தல்; கெடுத்தல், எதிர்ப்படல் (பெ 1-45-91)

தலைக்கோட்டை—முதன்மையான மதில்

தலைக்கோடை—முதற்கோடை

தலைக்கோதை—நெற்றியில்கட்டும்மாலை; தலைமாலை

தலைக்கோல்-நாடக அரங்கில் நாடக மகளிரை ஆட்டுவித்தற் குரிய கோல் (தக்க 15)

தலைக்கோல் பட்டம்—முற்காலத்தில் கணிகையர் ஆடிப் பெறும் சிறந்த பட்டம்

தலைக்கோலம்—தலையணி, தலைப்பாகை

தலைக்கோலரிவை—கூத்தாடுபவள் (சி 14-154)

தலைக்கோலாசான்—நட்டுவனர்

தலைக்கோலி—ஆடி முதிர்ந்த கணிகை (சாச)

தலைக்கோழி—வைகறையில் முதலிற் கூவுங்கோழி

தலைக்கோள் வேட்டம்—கன்னி வேட்டை (பொருந 141)

தலைக்கோற்றனம்—நாடகவரங்கு (சி 3-3)

தலைகட்டுதல்—மயிர் முடித்தல், முற்றச்செய்தல்

தலைகத்திரிக்க ஓடுதல்—தலைதெறிக்க ஓடுதல்

தலைகலைந்து போதல்—தலைமயிர் கலைந்து போதல்

தலை கவிழ்தல்—அதோமுகமாதல், மேல்கீழாதல்; சரிந்து விழல்

தலை கவிழ்ந்து நடத்தல்—தலை குனிந்து நடத்தல்

தலைகவிழ்ந்து நிற்றல்—அவமானத்தால் தலை குனிந்து நிற்றல்

தலை கழித்தல்—கடமை முதலியவற்றைச் செய்து தீர்த்தல்; மயிர்கழித்தல்

தலை கழுத்தில் நிற்காது—கர்வ மிகுதியைக் காட்டும் தொடர்

தலை கறங்குதல்—தலை கிறுகிறுத்தல்

தலை கனத்தவன்—கர்வ முடையவன், கர்வி

(தர்மம்) தலைகாக்கும்—உயிர் காக்கும்

தலைகாட்டா திருத்தல்—தலைமறைவாயிருத்தல்

தலைகாட்டாமல் மறைதல்—தோன்றாமல் மறைதல்

தலைகாட்டுதல்—தன்னைக்காட்டுதல்; நன்னிலைமைக்கு வரத் தொடங்குதல்; பலரும் அறிய வெளிவருதல்; முளை கிளம்புதல், தோன்றல்

தலை காணுதல்—பரிபாலித்தல், முளை கிளம்புதல் தொடங்குதல் (பெ தொகை 1583)

தலை காத்தல்—உயிரைக் காப்பாற்றுதல்

தலைகால் புரியாதிருத்தல்-பெரு மகிழ்ச்சியில் திளைத்திருத்தல், அகம்பாவத்துடனிருத்தல்

தலைகால் புரியாமல் நடத்தல்—மகிழ்ச்சி மீதூர்ந்து அல்லது அகம்பாவத்துடன் நடத்தல்

தலை கிழக்காக—தலை கீழாக (திருவி 20-13)

தலை கிறுகிறுத்தல்—தலை சுழல்தல்

தலைகீழ்ப்பாடம்—கரைதலைப்பாடம்

தலைகீழ் வீழ்வு—தலைகீழாக விழுதல்

தலைகீழாக்குதல்—அழிவடைவித்தல், நிலை மாற்றுதல்

தலைகீழாகத் தொங்குதல்—(வௌவால்) தலைகீழாகத் தொங்குதல்

தலைகீழாக நின்றாலும் முடியாது—எப்படி முயன்றாலும் முடியாது

தலைகீழாகப் பிடித்தல்—ஒரு பொருளைத் தலை கீழாகப் பிடித்தல்

தலைகீழாக மாறுதல்—முற்றிலும் மாறுதல்

தலைகீழாய் நடத்தல்—தலையால் நடத்தல்; கர்வத்துடன் செய்யத் தகாததையும் செய்தல்; முறை தவறி நடத்தல்

தலைகீழாய் நிற்றல்—மிகக் கருவங் கொள்ளுதல்; பெருமுயற்சி எடுத்தல்; கேடடைதல்

தலைகுப்புற வைத்தல்—தலை கீழாக வைத்தல்

தலை குலைதல்—நிலை குலைதல்

தலை குனிதல்—தலை வணங்குதல்; தலை தாழ்த்தல்

தலைகுனிந்து வணங்கு—தலைதாழ்த்தி வணங்கு

தலைகுனியச் செய்தல்—அவமானப்படச் செய்தல்

தலைகுனிவான—அவமானப்படத்தக்க (செயல்)

தலைகெட்ட—அடியோடு கெட்ட (திருப்பு 1208)

தலைகொடுத்தல்—காரியத்திலே முன்னிற்றல்; பிறருடைய ஆபத்துக் காலங்களில் தன் உயிர், பொருள்களின் கேடுகளை நோக்காமல் உதவி புரிதல்; ஒன்றில் தலையிடல்

தலைகொண்டு புரவியாடுதல்—வல்லபம் பண்ணிப் பின்னர் வருந்துதல்

தலை கொய்தல்—தலை வாங்குதல், தலையரிதல்

தலை கொழுத்தல்—அகங்கரித்தல், செருக்குறல்

தலைகொள்ளா ஆனந்தம்—பேரானந்தம் (நல்ல மனைவி)

தலை கோதிவிடல்—தலை வாரிவிடல்

தலைச்சங்கம்—மதுரையில் முதன்முதல் நிறுவப்பட்டிருந்த தாகக் கருதப்படும் முதலாம் தமிழ்ச்சங்கம்

தலைச்சம்மாடு—தலைப்பாரம், தலைச்சும்மாடு; பொறுப்பு [சாச]

தலைச்சவரம்—தலை மழித்தல் [பெ தொகை 1572]

தலைச்சன்—முதற்பிள்ளை, தலைப்பிள்ளை

தலைச்சாத்து—தலைப்பாகை (பெருந் பு கட 9; பிரபு 5–7)

தலைச்சாமான்—தலைச்சுமை

தலைச்சாவகன்—முதல் மாணாக்கன்

தலைச்சாவி வெட்டுதல்—பயிர் கெட்டுப் போகாதபடி நுனியை வெட்டி விடுதல்

தலைச்சி—தலை மூத்த மகள்

தலைச்சிரங்கு—தலையில் வரும் புண், பொடுகு

தலைச்சிரா—தலையிலணியுங் கவசம் (இரட்ச 23–25); தலைப்பாகை

தலைச்சிலை—மேலாடை, தலைச்சாத்து, தலையிலணியுஞ் சீலை

தலைச்சுண்டு—தலைப்பொடுகு

தலைச்சும்மாடு—தலையில் பாரம் வைத்துக்கொள்ள உதவும் துணி

தலைச்சுமை—தலைப்பாரம்

தலைச்சுமைச்சரக்கு—தலையில் பாரமாயுள்ள பொருள்

தலைச்சுழல், தலைச்சுழற்சி—கிறுகிறுப்பு, ஒரு நோய்

தலைச்சுழி—தலையெழுத்து
தலைச்சுழிப்பு—தலைச்சுழி
தலைச்சுற்றல்—தலைக் கிறுகிறுப்பு; தலை சுற்றுதல்
தலைச்சுற்று—தலைச்சுற்றுநோய்; மரத்தின் அடிச்சுற்றளவு; பித்தக் கிறுகிறுப்பு நோய்
தலைச்சூல்—முதன் முதலில் கொள்ளும் கருப்பம்
தலைச்செய்தல்—பயன்படல்; வாழ்ந்து தழைத்தல்
தலைச்செல்லல், தலைச்செல்லுதல்—முடிவு போதல்; முதலிற் போதல்; முற்றுப்பெறல்; எதிர்த்துச்செல்லல்; சந்தித்தல்; சென்று கூடுதல்; மேற்செல்லல் (நாலடி 241)
தலைச்சேர்தல்—ஒன்று சேர்தல்
தலைச்சேர்வை—ஒரு விஷயத்தின் தலைப்பெயர்
தலைச்சேரி—கேரள நாட்டின் ஓரூர்; தலைநகரம்
தலைச்சோடு—தலைச்சீரா, தலைப்பாகை
தலைச்சோறு—மூளை
தலைசாய்த்து நிற்றல்—அவமானத்தால் தலை குனிந்து நிற்றல்
தலைசாய்த்தல்—நாணுதல், பணிதல்; வெட்கமடைதல், தலைதாழ்த்தல், தலை வணங்குதல் [அரி 6-23]; ஓய்வெடுக்கத் தலைசாய்த்துப் படுத்தல்
தலைசாய்தல்—கதிர்கள் தலை சாய்தல்; நிலைகுலைதல் [திருப்பு 105]
தலை சிரைத்தல்—தலையை மழித்தல்
தலைசிறத்தல்—முன்னுறல், மிகத்தலைமையாதல்
தலை சிறந்த(து)—மிகச் சிறந்த(து)
தலைசிறந்த நூல் (படைப்பு)—மிகச் சிறந்த நூல் (படைப்பு)
தலைசிறந்து வருதல்—மிக மேம்பாடுற்று வருதல்
தலைசீய்த்தல்—முற்றுந்துடைத்தல்; கவலல்

தலைசீவி முடித்தல்—தலைசீவிக் கொண்டை போட்டுக் கொள்ளல்

தலை சீவுதல்—மயிர் கோதுதல், மயிர் வாருதல்

தலை சுழல்தல்—தலை கிறுகிறுத்தல்

தலை சுற்றல், தலை சுற்றுதல்—தலை கிறுகிறுத்தல்; இறுமாப்புக் கொள்ளுதல்; செருக்குண்டாதல்; பிரமிப்பினால் தலை சுற்றுவது போன்ற உணர்ச்சி ஏற்படுதல் (புருஷர்களுக்கு 72)

தலை சுற்றியாடுதல்—இறுமாப்புக் கொள்ளுதல்

தலை சூடுதல்—தலைமை வகித்தல், தலையெடுத்தல், தலை வைத்துப் படுத்தல், தலையிலணிதல்

தலை செய்தல்—முதன்மையாக்குதல் [பெ தொகை 1238] (திசையில்) தலைவைத்துப் படுத்தல் (ஆசாரக் 30)

தலைத்தலை—மீண்டும் மீண்டும், மேன்மேலும் (மணி 3–19) இடங்கள் தோறும் (கல்)

தலைத்தாள்—(தங்கள்) சமூகம் (வலிவல 10–6)

தலைத்திருப்பு—ஒரு நோய்; தலைக் கிறுகிறுப்பு

தலைத்துணி—தலையிலணியும் துணி

தலைத்துலுக்கம்—தலையாட்டம் (சரவண பணவிடு 115)

தலைத்தூக்கம்—தலை தாழ்தல்,

தலைத்தொப்பி—தலையிலணியும் தொப்பி

தலை தகர்தல்—முனை முறிதல்; மழுங்குதல்

தலை தடவஅளத்தல்—(திரவப் பொருள்களைப்) படியின் தலைவரை அளத்தல்

தலை தடவல், தலை தடவுதல்—வஞ்சித்துக் கெடுத்தல், திருடுதல், பிறர்க்குத் தீங்கு செய்தல்

தலை தடுமாற்றம்—கலக்கம், கிறுகிறுப்பு

தலை தடுமாறல்—கலந்து மயங்குதல் [திருவா 567]

தலை தடுமாறுதல்—கலக்கமடைதல், சீர் குலைதல்

தலைதப்பியது தம்பிரான் புண்ணியம்—உயிருக்கு வந்த ஆபத்து நீங்கியது கடவுளின் அருள்

தலை தப்புதல்—உயிர் தப்புதல்

தலை தருதல்—முதன்மையளித்தல்; தலை கொடுத்தல்

தலைதல்—தலைப்படுதல்

தலை தாழ்த்தல்—வணங்கல்

தலைதாழ்த்தி வணங்கல்—தலை குனிந்து வணங்கல்

தலை தாழ்தல்—நாணுதல், வணங்கல், நிலைகெடல்

தலை தீதல்—அழிதல்

தலை தீபாவளி—புதிதாகத் திருமணமானவர்கள் கொண்டாடும் முதல் தீபாவளித் திருநாள்

தலை துண்டித்தல்—தலையை வெட்டுதல்

தலை துணித்தல்—தலையை வெட்டுதல்

தலை துமித்தல்—தலையறுத்தல் [கூர்ம 1–23–80]

தலை துலுக்கல், தலை துலுக்குதல்—உடன்பாடு, இகழ்ச்சி முதலியவற்றைக் குறிக்கத் தலையசைத்தல்

தலை துவட்டல்—குளித்த பிறகு துணியால் தலையின் ஈரம் போக்குதல்

தலை தூக்கல்—தலை நிமிர்தல்; மீண்டும் முன்னேற்றம் பெறுதல்

தலைதூக்கி நிற்றல்—உயர்வடைந்து நிற்றல்

தலைதூக்கிப் பார்த்தல்—தலை நிமிர்ந்து பார்த்தல்

தலைதூக்கி விடுதல்—உயர்வடையச் செய்தல்

தலை தெரியாமல் குதித்தல்—மகிழ்ச்சி மேலிட்டால் மிகக் குதித்தல் [பாரத நாட]

தலை தெறிக்க ஓடிவரல்—மிக வேகமாக ஓடிவரல்

தலை தெறிக்கும் வேகத்தில் ஓடுதல்—மிக வேகமாக ஓடுதல்

தலை தெறித்தாற்போல் அலைதல்—மிகவும் அலைதல் (புதுமைப்)

தலை தெறிப்பான—ஆபத்தான

தலை தொங்கப்போடல்—தலையைத் தொங்கப்போடல்

தலைதொட்ட பிதா—ஞானபிதா

தலைதொட்ட பிள்ளை—வளர்ப்புப்பிள்ளை

தலைதொட்டு ஆணையிடல்—தலையைத்தொட்டுச் சத்தியஞ் செய்தல்

தலை தொடல், தலை தொடுதல்—சத்தியஞ் செய்தல், தலையைத் தொட்டு ஆணையிடுதல்

தலை தோய்தல்—நீராடல்

தலை நகர், தலை நகரம்—நாட்டின் தலைநகரம்

தலை நடுக்கம்—தலை நடுங்குதல்

தலை நடுங்கல்—தலை நடுக்கமுறல்

தலை நரைத்தல்—தலைமயிர் வெண்மையாதல்

தலை நறுக்கு—ஓலை நறுக்கின் தலைப்பாகம்

தலைநாள்—முதல்நாள் [பு 101]; அசுவினிநாள் [சோதிடஅ]

தலைநாள் வேட்டம்—கன்னிவேட்டை [சிலப் 12–14]

தலை நிமிர்த்துதல்—தலையை நிமிரச் செய்தல்

தலை நிமிர்தல்—தலை உயர்தல்; தலையெடுத்தல்; குனிந்த தலை நிமிர்தல்; தாழ்ந்த மதிப்பு உயர்தல்

தலை நிமிர்ந்த வாழ்வு பெறல்—உயர்வுற்ற வாழ்வு பெறல்

தலை நிமிர்ந்து நடத்தல்—செருக்குடன் நடத்தல்

தலை நிமிர்ந்து நிற்றல்—பெருமிதத்துடன் இருத்தல்

தலை நிமிர்ந்து பார்த்தல்—தலை தூக்கிப் பார்த்தல்

தலை நிமிர்ந்து வாழ்தல்—பெருமிதத்துடன் வாழ்தல்

தலை நிலத்து வைத்தல்—முதன்மையிடத்தில் வைத்தல்

தலை நிவத்தல்—தலை நிமிர்தல் [பாக பு 4–3–18]

தலை நிற்றல்—நெறிக்கண் நிற்றல் [சிறு 94]; சிறந்து நிற்றல் [பெரிய 1687]; முற்பட்டு நிற்றல் [11 தி 3–9]; வழியில் ஒழுகுதல் [பழனி பு கட 25]

தலை நிறுவல்—தலையெடுத்தல் [காஞ்சிப் 1–97]

தலை நிறையப் பூச்சூடுதல்—தலையில் நிறையப் பூக்களை அணிதல்

தலை நின்றொழுகுதல்—தலைமையாக நின்று அல்லது அணுகி நின்று பணிசெய்தல்

தலை நீட்டுதல்—முன்னிடுதல்; தலைகாட்டுதல்

தலைநீர்—முதல்மடைப் பாய்ச்சல் [சாச]

தலைநோ—தலைக்குத்து, தலைவலி

தலை நோக்காடு—நோவு

தலை நோய்—தலைவலி

தலை நோவு—தலைவலி

தலைப்பக்கம்—தலைப்புறம்

தலைப்பட்டை—தலைக்கிடும் பட்டை

தலைப்படல்—தொடங்குதல் [க 6–1748]; எதிர்ப்படல் [சிந் 1592]

தலைப்படு சால்பு—தலைமையாய அமைதி (கோ 25)

தலைப்படுத்தல்—வளரச் செய்தல்; வாழ்வித்தல்

தலைப்படுதல்—கூடுதல்; எதிர்ப்படுதல்; [திருவிளை 9–3]; மேற்கொள்ளுதல்; தலைமையாதல்; தொடங்குதல் [பாக பு 10–46–33]; பயனடைதல் [ச 239–2]

தலைப்படுதானம்—உத்தம தானம் (சிலப் 2 அடி)

தலைப்பணி—தலையாபரணம் (காந் பி த 11)

தலைப்பந்தி—பந்தியின் முதலிடம்

தலைப்பனி—முன்பனி

தலைப்பா—வெண்பா (தமிழ்ப்பா 573); தலைப்பாகை

தலைப்பாகு, தலைப்பாகை—தலைப்பா

தலைப்பாடாக அடித்துக்கொள்ளல்—தலையால் அடித்துக் கொள்ளல் [பே]

தலைப்பாடு—நேர்பாடு, கூடுதல், வளர்ச்சி

தலைப்பாரம்—பொறுப்பு, தலைக்கனம், தலைச்சுமை

தலைப்பாளை—ஒரு தலையணி

தலைப்பித்து—தலைக் கிறுகிறுப்பு

தலைப்பிரட்டு—தலைப்புரட்டு

தலைப்பிரட்டை—தவளைக்குஞ்சு

தலைப்பிரிதல்—விட்டுப் பிரிதல்

தலைப்பிள்ளை—தலைச்சன்

தலைப்பிறை—சுக்கில பட்சத்துப் பிரதமை (சாச)

தலைப்பு—காரிய முடிவு, நுனி, கட்டுரைத் தலைப்பு, துணியின் முடிவு

தலைப்புக்கிள்ளுதல்—கொழுந்து கிள்ளுதல்

தலைப்புதல்வன்—தலைச்சன் [வில்லி 2–13]

தலைப்புரட்டு—ஏமாற்று; மனக்குழப்பம்

தலைப்புரளுதல்—மென்மேல் மிகுதல்

தலைப்புற்று—தலையில் ஏற்படும் புற்றுநோய்

தலைப்புறம்—தலையின் பக்கம் (மின்னொளி கு); முன்பக்கம்

தலைப்பெட்டி—தலையில் கவிழ்த்துக்கொள்ளும் ஓலையாலான பெட்டி

தலைப்பெய்தல்—கூட்டல், ஒன்றாய்க்கூடுதல்; சேர்த்தல்

தலைப்பெயர்தல்—தன்னிடத்திலிருந்து போதல்; யாண்டு கழிதல் (பு 161–12)

தலைப்பெயல்—(பொருளைச்) சேர்த்தல் [இன்னிலை 18]

தலைப்பேரணிகலம்—ஒருவகையணி [பெ 5–7–9]

தலைப்பேழை—ஏரி அல்லது வாய்க்காலின் தலைப்பு மதகு [சாச]

தலைப்பேறு—தலைச்சன் பெறுதல்

தலைப்பேன்—தலையிலுள்ள பேன்

தலைப்பொடுகு—தலையிலுள்ள பொடுகு; தலையில் மயிர் உதிர்தல்

தலைப்பொறுப்பு—தலையில் சுமந்திருக்கும் பொறுப்பு

தலைப்போகன்மையின்—முடிவு போகாமையின் (பு 223)

தலைப்போகுதல்—முடிவுவரை செல்லுதல்

தலைப்போடுதல்—கையிட்டுக் கொள்ளல்

தலைப்போர்—முதற்போர்

தலைப்போவது—செல்லுதல் (மது மும் கோ 14)

தலைபத்தோன்—இராவணன் (செந் மு சந்)

தலைபரிதல்—எல்லை கடத்தல்; நீங்கல் (பெ 1-40-252)

தலைபறித்தல்—தலைமயிரைப் பறித்தல் (பெரிய 1312)

தலை பணித்தல்—தலை நடுங்கல் (பாக 10-24-11)

தலை பாராமாயிருத்தல்—தலை கனமாயிருத்தல்

தலை பின்னுதல்—சடை பின்னுதல்

தலைபோகிற காரியம், தலைபோகும் காரியம்-மிக மிக அவசர மான காரியம்

தலை போய்விடும்—உயிருக்கு ஆபத்து வரும்

தலைபோடம்—பொடுதலை

(ஒன்றும்) தலைபோய்விடாது—பேராபத்து ஒன்றுமில்லை

தலை போனாலும் கவலைப்படாமை—எதற்கும் கவலைப் படாமை

தலைமக்கள்—மேன்மக்கள், உயர்ந்தோர்

தலைமகள்—தலைவி (வைண 2-407); மனைவி; மூத்த மகள் (சித் புத் 88)

தலைமகன்—அதிகாரி, நாயகன், பெருமையிற் சிறந்தோன், முதற்புத்திரன், மூத்தமகன்

தலைமட்டம்—மேல்மட்டம்

தலைமடக்கம்—அடக்கம்

தலைமடக்கு—ஆதிமடக்கு

தலைமடங்கல், தலைமடங்குதல்—கீழ்ப்படிதல் [பதிற்றுப் 71]; தணிதல், வளைதல்

தலைமடிதல்—குறைதல்

தலைமடுத்தல்—சேர்தல் [குமர 411–656]

தலைமடை—வாய்க்காற் றலை

தலைமண்டை—தலையோடு

தலை மண்ணில் உருள்தல்—தலை வெட்டப்பட்டு வீழ்தல்

தலைமணத்தல்—கூடுதல் [அக 133]; தலைக்கூடல் [மதுரைக் 700]; கலத்தல் [பாக பு 1–6–34]

தலைமதி—ஒருநாட் பிறை (ச 19–5)

தலைமயக்கம்—இடந்தடுமாற்றம், கலக்கம், தலைச்சுழற்சி, மதிமயக்கம்

தலைமயக்குறல்—கலந்து கிடத்தல் (நைட 27)

தலை மயங்குதல்—ஆள் நெருங்குதல், கலந்திருத்தல், தலை தடுமாற்றம்; போரில் படைகள் கைகலத்தல் (பு 19)

தலைமயிர்—தலைமுடி

தலைமயிர் சீவுதல்—தலைமயிரைச் சீப்பினல் வாருதல்

தலைமயிர் நரைத்தல்—தலையிலுள்ள மயிர் நரைத்தல்

தலைமயிர் வாருதல்—தலையைச் சீப்பினல் சீவுதல்

தலைமயிர் வெளுத்துப்போதல்—தலைமயிர் நரைத்தல்

தலைமயிரைக் கோதுதல்—தலையிரை உலர்த்தல்

தலைமயிரை விரித்தல்—பின்னப்பட்ட தலைமயிரை விரித்து விடல்

தலைமலைதல்—தலை மயங்குதல் (பு வெ 22)
தலைமறைதல்—ஆளின் தலை மறைதல்; மறைந்து போதல்
தலைமறைவாயிருத்தல்—ஒளிந்திருத்தல்
தலைமாடு—தலைப்புறம், (படுக்கையின்) தலைப்பக்கம்
தலைமாணுக்கர்—முதல் மாணுக்கர்
தலைமாலை—தலையிலணியும் மாலை
தலைமாறு—பரிவர்த்தனை [சாச]
தலைமிசைக்கொள்—தலைமேற்கொள் (நாகை பு 39–5; அரி 12–42)
தலைமுடி—கிரீடம், தலைமயிர்
தலைமுடித்தல்—சீவி முடித்தல்
தலைமுடியைக் கோதுதல்—தலைமயிரைக் கோதுதல்
தலைமுதல் கால்வரை—உச்சந்தலைமுதல் உள்ளங்கால்வரை
தலைமுழுக்கு—குளிப்பு, மகளிர் சூதகம், தலை நனைய நீரில் மூழ்குதல்
தலைமுழுக்குப் போட்டுவிடல், தலைமுழுகிவிடல்—ஒரு காரியத்தைக் கஷ்டப்பட்டுச் செய்து முடித்துவிடல், ஒருவருடன் தொடர்பறுத்துக்கொள்ளல்
தலை முழுகுதல்—குளித்தல், முழு நட்டப்படுதல்
தலைமுறை—ஒருவர் இருந்து வாழும் காலம்; தலைக்கட்டு
தலைமுறை தலைமுறையாய்—பரம்பரை பரம்பரையாய்
தலைமூத்த—முதலாவதாகப் பிறந்த
தலை மூர்ச்சனையான வேலை—மண்டையைக் குழப்பிக் கொள்ளும் வேலை
தலைமேல் அணிதல்—தலையிலணிதல்
தலைமேல் ஏறிக் கொண்டிருத்தல்—அதிகாரத்தைத் தவருகப் பயன்படுத்திப் பிறரைத் துன்புறுத்தல்
தலைமேல் குவித்தகை(யர்)—தலைமேல் வணங்கிய கை(யர்)

(பிறர்) தலைமேல் கையை வைத்தல்—பிறரை வஞ்சித்தல்
தலைமேல் கைவைத்து அழுதல்—பெருந்துன்பம் நேர்ந்த போது தலைமேல் கைவைத்து அழல்
தலைமேல் சூடல்—தலையில் அணிதல்
தலைமேல் தாங்குதல்—ஆணைக்குக் கீழ்ப்படிதல்
தலைமேல்விதி—தலைவிதி
தலைமேல் வைத்துக் கொண்டாடுதல்—மிகப் போற்றுதல்
தலைமேலே—தலைக்குமேலே
(பிறர்) தலைமேலே கல்லைப்போடல்—பிறர்க்குப் பேரிடர் விளைவித்தல்
தலைமேற்கைகுவித்தல்—தலைமேற் கைவைத்து வணங்கல்
தலைமேற் கொண்டாடல்—தலைமேல் வைத்துப் புகழ்தல் (சுந் 417)
தலைமேற் கொண்டிருத்தல்—வேலையைச் செய்ய ஏற்றுக் கொண்டிருத்தல்
தலைமேற் கொள்ளுதல்—மிகச் சிறப்பாயேற்றல், பொறுப்பேற்றல், பயபக்தியாய் ஏற்றுக்கொள்ளல்
தலைமை ஏற்றிருத்தல்—முதன்மை ஏற்றிருத்தல்
தலைமைக்காரன்—தலைவன்
தலைமையகம்—தலைமை நிலையம்
தலைமை வாக்கியம்—முக்கிய வாக்கியம்
தலை மொட்டையடித்தல்—தலையை மழுங்கச் சிரைத்தல்
தலை மொட்டையாய்விடல்—கையிலுள்ள பணம் காலியாய் விடல்
தலையங்கம்—பத்திரிகையில் ஆசிரியரின் கருத்தைக் கூறும் கட்டுரை
தலையசைத்தல்—வேண்டும் அல்லது வேண்டாம் என்பதற் கடையாளமாகத் தலையை அசைத்தல்

தலையடி—ஆதியந்தம் (திருமந் 2426)
தலையடி, தலையடி நெல்—நெற்கதிரின் முதலடி நெல்
தலையடுத்தல்—தலையணியாகக் கொள்ளல் (சிந் 1615)
தலையணி—தலையிலணியும் அணி
தலையணை—தலைக்கு வைத்துப் படுக்க உதவும் அணை
தலையணை மந்திரம்—மனைவியின் போதனை
தலையரங்கேறுதல்—தன் கல்வித் திறமையை முதன்முதல் அவையோர்க்குக் காட்டுதல்
தலையரிதல்—தலை வாங்குதல்
தலையல்—மழை பெய்தல் [ச 342–11]; முதன் மழை, புதுப்புனல் வரவு
தலையலங்கரிக்குமிடம்—தலைமுடி வெட்டுமிடம்
தலையலங்காரம்—தலையை அலங்கரித்தல்
தலையழிதல்—கெடுதல்
தலையழுக்கு-(மகளிர்) பூப்பு எய்தியிருத்தல் (மாக பு 15–144)
தலையளி—சிறந்த அன்பு (பாச பர 182)
தலையளி செய்தல்—முகமலர்ந்து இன்சொல் சொல்லுதல்; சிறந்த அன்பு செய்தல்
தலையளித்தல்—கருணை செய்தல் (திருவா 160); காத்தல்
தலையற்ற முண்டம்—கவந்தம், முண்டம்
தலையறுத்தல்—தலை வாங்குதல்
தலையன்—பெருந்தலையுடையவன் (வசைச்சொல்)
தலையன்பு—பேரன்பு (குமர 105)
தலையாகச் செய்தல்—தலைமையுடையோனகச் செய்தல்
தலையாகெதுகை—அடிகளில் முதன்மொழி முதல் எழுத்து ஒழிய மற்ற எழுத்துக்கள் ஒரு படித்தாய் வருவது
தலையாட்டல்—தலையை ஆட்டுதல்

தலையாட்டி, தலையாட்டுபவன்—ஆமாம் போடுபவன்

தலையாட்டிப்பொம்மை—ஆமாம் போடுபவன்

தலையாட்டு—தலையசை

தலையாபரணம்—தலையணி

தலையாய கடமை—இன்றியமையாத கடமை

தலையாயது, தலையானது—சிறந்தது

தலையாயார்—சிறந்தோர்

தலையாரக் கும்பிடுதல்—மிகவும் தலைதாழ்த்திக் கும்பிடுதல்

தலையார வணங்கல்—தலையாரக் கும்பிடுதல்

தலையாரி—காவற்காரன்

தலையாரிக்கம்—கிராமத் தலையாரிக் காவலுக்குச் செலுத்தும் வரி (சாச)

தலையால் அடித்துக் கொள்ளல்—வற்புறுத்திக்கூறுதல் (பே); தலையிலடித்துக் கொள்ளல்

தலையால்தருதல்—(தென்னை) காய்களைத் தன் தலைமேல் தருதல்

தலையால் நடத்தல்—செருக்குற்று நடத்தல் (திருவா 398)

தலையால் வணங்கல்—தலை தாழ்த்தி வணங்கல்

தலையால் வந்ததைக் காலால் தள்ளுதல்—முயற்சியால் வந்த சிறப்பினை எளிதாகப் புறக்கணித்தல்

தலையிடாக் கொள்கை—பிறர் காரியங்களில் குறுக்கிடாத கொள்கை

தலையிடி—தலைக்குத்து, தலைவலி; தலையிலிடித்தல் [தலையிடிக்கு முன்னே குனியவேணும் (பாரத நாட)

தலையிடித்தல்—தலை வலித்தல்

தலையிடுதல்—ஏற்படுதல், குறுக்கிடுதல்

தலையில் இடிவிழ!—வசைச்சொல், சபிக்குஞ் சொல்

தலையில் இடி விழுந்தது போலிருத்தல்—பேரிடர் நேர்ந்து விடல்

தலையில் கட்டிவிடல்-பொறுப்பை ஏற்றுக்கொள்ளச் செய்தல்

தலையில் கட்டுதல்—(பொறுப்பு, வேலை முதலியவற்றை) ஒருவரிடம் ஒப்படைத்தல்

தலையில் கல்லைத்தூக்கிப் போடல்—தலைமேலே கல்லைப் போடல்

தலையில் கல்லைப் போடுதல்—ஏமாற்றி விடுதல்; பேரிடர் விளைவித்தல்

தலையில் (குட்டுக்) குட்டல்—தலையில் குட்டு வைத்தல்

தலையில் குட்டிக்கொள்ளல்—விநாயக வணக்கம்

தலையில் கைவைத்தல்—தலையில் மிளகாயரைத்தல்

தலையில் கைவைத்துக்கொண்டு உட்காருதல்—பெருந் துக்கத்தால் தலைமீது கைவைத்துச் செயலற்று உட்கார்ந்துவிடுதல்

(அவனுக்குத்)தலையில் கொம்பா முளைத்திருக்கும்-பேராற்றல் வாய்ந்தவனா? (அலை)

தலையில் சுமத்தல்—தலைமீது சுமத்தல், தலையில் கட்டிவிடல்

தலையில் சூடுதல்—தலைமேல் சூடுதல்

தலையில் தட்டி உட்கார வைத்தல்—(கூட்டத்தில் எழுந்திருப் பவனைத்) தலையிலடித்து உட்காரும்படி செய்தல்

தலையில் தண்ணியைக் கொட்டிக்கொள்ளல்—காக்காய்க் குளிப்பு (பே)

தலையில் பொறுப்புச் சுமந்திருத்தல்—பொறுப்பை நிறைய ஏற்றுக்கொண்டிருத்தல்

தலையில் பொறுப்பு விழுதல்—தலையில் பொறுப்பு ஏற்பட்டு விடல் (ஆயிரம் 35)

தலையில் பொறுப்பைப் போடுதல்—பொறுப்பைத் தலையில் சுமத்தல்

தலையில் போட்டுவிடல்—தலையில் சுமத்திவிடல்

தலையில் போடுதல்—தலையில் சுமத்தல்

(தன்) தலையில் மண்ணை வாரிப் போட்டுக்கொள்ளல்—தனக்குக் கேடு தானே சூழ்ந்துகொள்ளல்

தலையில் மிளகாயரைத்தல்—ஏமாற்றிவிடல்

தலையில் மோதிக்கொண்டழுதல்—தலையைப் பிற பொருள் மீது மோதிக்கொண்டு அழுதல்

தலையில்லாச் சேவகன்—நண்டு

தலையில் வழுக்கைவிழல்—தலையில் வழுக்கை உண்டாதல்

தலையில் விடிதல்—(பிறர்) தலையில் பொறுப்பு ஏற்பட்டுவிடல்

தலையில் வைத்துக் கூத்தாடல்—தலைமேல் வைத்துப் போற்றுதல்

தலையில் வைத்துக் கொண்டாடுதல்—தலைமேல் வைத்துப் போற்றுதல்

தலையிலடித்துச் சத்தியம் செய்தல்—தலைமீது அடித்துச் சத்தியஞ் செய்தல்

தலையிலி—முண்டம்

தலையிலிருந்து பெரிய பாரம் நீங்கியது போலிருத்தல்—ஒரு பெரிய காரியத்தைச் செய்துமுடித்து விடுதலையுணர்வு பெறல் (அலை)

தலையிலெழுத்து—தலைவிதி

தலையிலே கல்லைத் தூக்கிப்போடல்—வாழ்க்கையில் பெருந்துன்பத்தை உண்டாக்கல் (மங் காதல் 65)

தலையிலே கைவைத்தல்—பிறரை ஏமாற்ற முற்படல்

தலையிலே தூக்கிவைத்துக் கொண்டாடுதல்—மிகுந்த மதிப்புக் கொடுத்தல் (செல்லம்)

தலையிழந்த முண்டம்—தலையற்ற முண்டம்

தலையிற் குட்டுதல்—தலைமீது குட்டு வைத்தல்

தலையிற்சீலை—தலையிற் சுற்றும் புடவை
தலையிற்பொறி—தலையில் எழுத்து (வேங் உலா 231)
தலையிறக்கம்—தலைத்தூக்கம்; அவமானம், துக்கம் இவற்றால் தலை குனிதல்
தலையிறக்கமாயிருத்தல்—வெட்கத்தால் தலை குனிந்திருத்தல்
தலையிறக்கிவிடல்—தலையைத் தொங்கப்போடல் (திருவிளை 5–125)
தலையிறங்குதல்—அவமானத்தால் தலை குனிதல்
தலையிறைஞ்சுதல்—தலை குனிதல், தலை வணங்குதல் (அக 261)
தலையினிழிதல்—தலையினின்று விழுதல்
தலையீடு-தலைப்பில் உள்ளது; ஆரம்பத்தில் இருப்பது (சாச); பிறர் காரியத்தில் தலையிடுதல்
தலையீற்று—கால்நடையின் முதற்குட்டி
தலையீற்றுக்கன்று—முதலில் ஈனப்பட்ட கன்று
தலையீற்றுப்பசு, தலையீற்றுக்கடாரி—ஒரே ஒரு தடவை கன்று போட்ட பசு
தலையுச்சி—குடுமி
தலையுடைக்கிறது—மண்டையுடைக்கிறது (பே)
தலையுடைத்தல்—தலையை வெட்டுதல், பெருந்துன்பம் எடுத்துக்கொள்ளல்
தலையுடைப்பு—மண்டையிடி
தலையும் வாலும் புரியாதிருத்தல்—ஒன்றும் புரியாதிருத்தல்
தலையுவா—அமாவாசை
தலையுற வணங்குதல்—தலையார வணங்குதல்
தலையூற்று—முதலூற்று
தலையெடுக்கும்போதே அழிக்கப்படல்—முளையிலேயே கிள்ளிவிடல்

தலையெடுத்தல்—ஆட்படுதல், தலை நிமிர்தல்; தழைத்தல்; சிறப்புறத் தொடங்குதல்

தலையெடுத்துப் பார்த்தல்—தலைதூக்கிப் பார்த்தல் (பார்வதி 179)

தலையெடுப்பு—நிமிர்ச்சி, அதிகப்படல்; ஏக்கழுத்தம்; இறுமாப்பு (குமர 793)

தலையெழுத்து—வார்த்தையின் முதலெழுத்து, விதி

தலையேறு தண்டம்—வில்லங்கம்

தலையை அலங்கரித்தல்—தலைவாரிப் பூச்சூடி அணி செய்தல்

தலையை ஆட்டுதல்—தலையை அசைத்தல்; ஆம் அல்லது இல்லை என்பதற்கடையாளமாகத் தலையை அசைத்தல்

தலையை இறங்கப்போடல்—தலையைத் தொங்கப் போடல்

தலையை உடைத்துக் கொள்ளல்—பெருந்துன்பத்தால் தலையை மோதிக்கொள்ளல்

தலையை உயர்த்தல்—தலையை நிமிர்த்தல்

தலையை உருட்டுதல்—தொந்தரவு கொடுத்தல், பணம் பிடுங்குதல் (உலகம் 82)

தலையை ஒப்படைத்தல்—(நாவிதனிடம்) தலைமயிரை வெட்டத் தலையைக் கொடுத்தல்

தலையைக் கவிழ்த்தல்—தலை குனிதல்

தலையை (ஒரே) கனமாய்க் கனத்தல்—தலை மிகவும் கனமா யிருத்தல் (அலை)

தலையைக் காட்டுதல், தலையைக் காட்டிவருதல்—(தான் வந்திருப்பதைப்) பிறர் அறியுமாறு பிறர் இருக்குமிடம் சென்று வருதல்

தலையைக் கீழே தொங்கப்போடுதல்—அவமானத்தால் தலையைத் தொங்கப்போடுதல்

தலையைக் கொடுத்தல்—காரியத்தில் தானாக ஒருவன் ஈடு படுதல்; உயிரைக் கொடுத்தல்

தலையைக் கோதிவிடல்—தலைமயிரை உளர்தல்

தலையைச் சாய்த்தல்—தலையை ஒரு பக்கமாகச் சாய்த்தல்

தலையைச் சுற்றி எறிதல்—வெறுப்புடன் தூக்கி எறிதல் (நாடகமே 163)

தலையைச் சுற்றி மூக்கைத் தொடுதல்—சுற்று வழியில் காரியத்தைச் செய்தல் (அலை)

தலையைச் சுற்றுதல்—தலை சுற்றுதல் (அலை)

தலையைச் சொறிதல்—ஏதோ யோசிப்பதுபோல் தலையைச் சொறிதல்

தலையைத் தடவுதல்—வஞ்சித்தல், ஏமாற்றிப் பொருள்பெறல்

தலையைத் தாழ்த்துதல்—தலை வணங்குதல்

தலையைத் திருகுதல்—தலையைப் பிடித்துத் திருகுதல்

தலையைத் திருப்புதல்—தலையை ஒரு புறமாகத் திருப்புதல்

தலையைத் துவட்டிக்கொள்ளல்—நீரால் நனைந்த தலையைத் துண்டினால் ஈரத்தைப் போக்கிக் கொள்ளல்

தலையைத் தூக்கிப் பார்த்தல்—தலையை உயர்த்திப் பார்த்தல்

தலையைத் தொங்கப்போடல், தலையைத் தொங்கவிடல்—அவமானத்தால் தலை குனிதல்

தலையை நிமிர்ந்து பார்த்தல்—தலையை உயர்த்திப் பார்த்தல்

தலையை நீட்டிப் பார்த்தல்—எட்டிப் பார்த்தல்

தலையைப் பின்னிக் கொளல்—தலைவாரி மயிரைப் பின்னிக் கொள்ளல்

(பிறர்) தலையைப் போட்டு உருட்டுதல்—(பிறருடைய) செய்திகளை அம்பலப்படுத்துதல் (உலகம் 152); தொந்தரவு தருதல் (குடும்ப 34)

தலையைப் போடல்—இறத்தல்

தலையை முட்டிக்கொள்ளுதல்—தலையை மோதிக் கொள்ளுதல்

தலையை முண்டித்தல்—தலையை மழுங்க மழித்துக் கொள்ளல்

தலையை மொட்டையடித்தல்—(பிறர்க்குப்) பணச்செலவு வைத்து ஓட்டாண்டியாக்குதல் (பரந்த 29)

தலையை மோதிக்கொள்ளல்—துன்பத்தால் தலையில் அடித்துக் கொள்ளல்

தலையை வலித்தல்—தலை வலித்தல்

தலையை வளர்த்தல்—தலை முடியை வளர்த்தல்

தலையை வாங்குதல்—தலையை வெட்டுதல்

தலையை வாரிக்கொள்ளுதல்—தலைமயிரை வாரிக்கொள்ளுதல்

தலையை விரித்து ஆடுதல்—தலைமயிரை விரித்துக்கொண்டு ஆடுதல்

தலையோங்குதல்—தலையெடுத்தல்

தலையோடு—தலைமண்டை (பெ தொகை 1628); திருவோடு

தலையோடு குளித்தல்—தலை நனையும்படி குளித்தல்

தலையோடு வந்தது தலைப்பாகையோடு போயிற்று—உயிர்க்கு வந்த ஆபத்துக் குறைந்த இடர் விளைவித்துவிட்டு நீங்குதல் (பழ)

தலை வணக்கம்—தலை வளைத்தல், மடக்கம், வணக்கம்

தலை வணங்கல்—ஆட்படுதல், தலைபணிந்து ஏற்றுக் கொள்ளல், பணிதல்

தலை வணங்காதவன்—பிறர்க்குக் கீழ்ப்படியாதவன்

தலை வணங்குதல்—தலை குனிந்து வழிபடுதல்

தலை வரம்பு—மேலான எல்லை, உச்ச எல்லை

தலைவரல்—முற்றல் (பெ 1-36-118)

(மானம்) தலை வருதல்—(மானம்) உண்டாதல் (நாலடி 198)

தலைவலி—தலைநோய்

தலைவலையம்—முதல் எல்லை, முதல் வகுப்பு (திருப்பு 464)

தலை வழித்தல்—தலைச்சவரம் பண்ணுதல், அளக்கும் படியின் தலையைத் தட்டுதல்; தலையை மொட்டையடித்தல் (மட்)

தலைவழுக்கை—தலையில் ஏற்படும் வழுக்கை
தலைவன்—அண்ணன், அரசன், கடவுள், குரு, கணவன், மூத்தோன்
தலை வாங்குதல்—தலையைத் துணித்தல்
தலைவாசல்—முதல்வாசல்; ஓரூர்
தலைவாய்—முதல்வாசல்; முகப்பில் உள்ள மதகு (சாச)
தலைவாய்ச்சேரி—முகப்பிலுள்ள ஊர்ப்பகுதி (சாச)
தலைவாயில்—தலைவாசல்; கதவு
தலை வாருதல்—மயிர் சீவுதல்
தலை வாழையிலை—வாழைமரத்தின் முதல் வாழையிலை
தலைவி—எப் பொருட்கும் இறைவி; மனைவி
தலைவிதி—ஊழ் (திருமந் 2973)
(நாட்டின்) தலைவிதியை நிர்ணயித்தல்—நாட்டின் போக்கை நிர்ணயித்தல்
தலைவிரிகோலம்—அலங்கோலம்
தலைவிரிகோலமாய் ஓடுதல்—தலையை விரித்துக்கொண்டு ஓடுதல்
தலைவிரிச்சான்—தலையை (வாரிக்கொள்ளாமல்) விரித்துக் கொண்டிருப்பவன்
தலை விரித்தல்—தலைமயிரை விரித்தல்
தலைவிரித்தாடுதல்—(பஞ்சம்) மிகுதியாய்ப் பரவியிருத்தல்
தலை விரியன்—மூளிவாய்ப்பெட்டி
தலை விருப்பு—தலையன்பு (ச 206-12)
தலைவிலை—முதல் விலை; அறுவடையானதும் நிர்ணயிக்கும் விலை
தலை வீச்சு—தலைச்சுழற்சி
தலை வெட்டல்—தலையை வெட்டுதல்; படியில் அளக்கும் போது தலைப்பாகத்திலுள்ளதை அகற்றுதல்

தலை வெட்டுதல்—தலைமயிர் களைதல் (மட்)
தலை வெடித்து விடுமா—உயிர் போய்விடுமா?
தலை வேதனை—தலை நோவு; பொறுத்தற்கரிய துன்பம்
தலை வைத்தல்—ஈடுபடல்
(திசையில்) தலைவைத்துப் படுத்தல்—ஒரு (திசையில்) தலையை வைத்து உறங்குதல்
தறிதலைப் பையன்—தறுதலையன் (அலை)
தறிதலையான்—அறிவற்றவன் (தனிப் 3-382)
தறுதலை—துட்டன் (புகழே 2-2-127)
தறுதலையன்—குறும்பன்
திருமுடி—கோயில் மூர்த்தியின் திருச்சிரம்
திருமுடிச் சாத்து—கோயில் மூர்த்தியின் தலைப்பாகை
துணிசிரம்—வெட்டப்பட்ட தலை (அரி 7-24)
தூறுதலை—சிலும்பலான மயிர்த்தலை, பறட்டைத்தலை
தொலைத்துத் தலை முழுகுதல்—விருப்பமில்லாத செயலைச் செய்து முடித்துவிடல்
நட்ட தலை ஏறிடாது—குனிந்த தலை நிமிராது (கயி சத)
நரித்தலைவாதம்—நரம்புப் பிடிப்பு, சந்துவிக்கம்
நரைத்(த) தலை—நரையுலாந்தலை
நரையுலாந்தலை—நரைத்த தலை (காசி ரக 4-23)
நாத்தலை மடிவிளி—சீழ்க்கை (சிந் 120)
நூல் தலைப்பு—இழையின் தொடக்கம்
பஃறலையரவு—ஆதிசேடன் (பாக பு 9-3-12)
படுதலை—அழிந்த தலை (சுந் 223)
படைத்தலைவன்—சேனாதிபதி
படுதலை—கபாலம் (ச 79-2)
பம்பைத்தலை—பறட்டைத்தலை

பருந்தலை—பெரியதலை
பருந்தலை எறும்பு—பருத்த தலைஉடைய எறும்பு
பருந்தலைக்காரன்—பெரிய தனக்காரன்
பல்தலையரவம்—ஆதிசேடன் (ஆற் பு கட 1)
பறட்டைத்தலை—தூறடர்ந்த மயிர்த்தலை
பறிதலையர்--தலைமயிரைப் பறித்து விடுஞ்சமணர் (திருவாலவா 37–7)
பாகை சுற்றிய தலை—தலைப்பாகை சுற்றிய தலை
பிடர்த்தலை—பிடரி
பிரம்மா தலையில் எழுதின எழுத்து—தலையெழுத்து (அலை)
பிறர் தலைமேல் பாரத்தைப்போடல்—பிறர்மேல் பொறுப்பைப் போடல்
பின்னந்தலை—தலையின் பின்புறம்
புன்தலையர்—குறுமயிர் பொருந்திய தலையை உடைய பூத கணங்கள் (ச 326-7)
புன்தலைச்சிருர்—சிறிய தலையை உடைய சிறுவர் (பு 322)
பெண்ணைத் தலையில் கட்டல்—பெண்ணைத் திருமணம் செய்து வைத்தல்
பெரிய தலை—பெரியவன்
பெருந்தலை–தலைமைக்காரன்;பெரியதலை;செல்வாக்குள்ளவன்
பெருந்தலைமட்டை—தென்னேலை மட்டையின் அடியிலுள்ள பெருத்த தலைப்பாகம் (மட்)
பேன் தலை—பேன் உடைய தலை
பொடு(குத்)தலை—மயிர் உதிர்ந்த தலை
பொய்த்தலை—கன்னமிடுவோர் கன்னத்துளை வழியாய் உட் செலுத்தும் போலித்தலை
மறுகால்தலை—வடிகால் மதகு (சாச)
மறைச்சென்னி—உபநிடதம் (திருவி 9–4)

முச்சிரத்துஅயில்—சூலப்படை (க 6-2268)

முடி சாய்த்தல்—வணங்குதல் (அமுதா பி த 48); (அரி 5-30); ஒரு பக்கமாகத் தலையைச் சாய்த்தல்

முடி சாய்தல்—இறத்தல்

முடித்தலம்—கிரீடம்

முடித்தலை—முடியணிந்த தலை (அரி 3-28)

முடிமயிர்—தெய்வத்துக்குக் காணிக்கையாக மழித்து இடும் தலைமயிர்

முடிமுதல் அடிவரை—தலைமுதல் கால்வரை

முடியெடுத்தல்—தலையெடுத்தோங்குதல் (கலிங் 251)

முண்டிதமான தலை—மொட்டைத்தலை

முத்தலைக்கழு—சூலம்

முத்தலைப்படை—சூலம் (மங்கள பித 8)

முத்தலைவேல்—சூலம்

முத்திரைத்தலை—அஞ்சல் தலை

முன்னந்தலை—நெற்றியிலிருந்து உச்சிவரையுள்ள தலைப் பாகம்; நெற்றி

மேற்றலை—சிரசின் மேற்பகுதி

மொட்டைத்தலை—மயிர் நீங்கிய தலை, பாகை முதலியன தரியாத தலை

மொட்டைத்தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுதல்—பொருத்த முடியாதவற்றைப் பொருத்த முயல்தல்; வீண் முயற்சி செய்தல்

மொட்டைத்தலையன்—தலையை மொட்டையடித்துக் கொண்டவன்; வழுக்கைத்தலையன்

வச்சிரத்தலைச்சி—கருவண்டு (யாழ் அக)

வணங்கித் தலை செய்தல்—வணங்கிப் பணிதல் (தனிப் 1-709)

வழுக்கைத்தலை—பொட்டலாயிருக்குந் தலை

விரித்த தலை—மயிரை விரித்த தலை

விறகு தலையன்—விறகு சுமந்து விற்போன்; விறகுவெட்டி; முட்டாள்

வெட்கித் தலை கவிழ்தல், வெட்கித் தலை குனிதல்—நாணத்தால் தலை குனிதல்

வெண்டலை—தலையோடு; நரையுடைய தலை (சுந் 7–5)

வெளியில் தலை நீட்டல்—வெளியில் வருதல், உலாவல்

வெளியே தலை காட்ட முடியாத வெய்யில்—கடுமையான, பொறுக்க முடியாத வெய்யில்

வெளியே தலை நீட்ட முடியவில்லை—வெளியே தலைகாட்ட அச்சம்

வெறுந்தலை—தலைப்பாகை அணியாத தலை

வேத(ச்)சிரம்—உபநிடதம் (குமர 73;141;364)



# 3. முகம்

அக்கினி முகம்—சேங்கொட்டை

அக்கினி முகன்—அக்கினித் தெய்வம்; பிராமணன்

அகமலர்ந்த முகம்—மன மகிழ்ச்சியுடன் கூடிய முகம்

அகமுகம்—உண்முகம், அந்தர் முகம்

அகமும் முகமும் மலர்தல்—மனமும் முகமும் மகிழ்ச்சியால் மலர்தல்

அகர்முகம்—விடியற்காலம், உதய காலம், வைகறை (தைலவ பாயி 53)

அங்குலி முகம்—விரல் நுனி

அஞ்சித முகம்—தலையைத் தோளின்மேற் சாய்த்தல்

அஞ்சு முகன்—சிவபிரான்

அட்சர முகன்—எழுத்தில் நோக்கமுடையவன்; மாணுக்கன்

அணி முகம்—அழகிய முகம்; அலங்காரவாயில் முகப்பு

அத்தி முகவன்—விநாயகர் (விநா பு 72-88)

அதைத்த முகம்—வீங்கிய முகம்

அதோ முகம்—கீழ்நோக்கிய முகம் (கந்தர் கலி 78)

அந்தர் முகம்—அகமுகம், உள்ளேநோக்கிய முகம்; யோக நிலையில் ஒன்று

அந்தாமரை முகம்—அழகிய தாமரைபோன்ற முகம்

அபி முகம்—எதிர் முகம்

அரவிந்த முகம்—தாமரைபோன்ற முகம் (சுப்ப பதம்)

அரிமுகவம்பி— சிங்கமுகஓடம்(சி 13—177)

அருவருப்பான முகம்—பார்ப்பதற்கு வெறுப்புத் தோற்றும் முகம்; குரூர முகம்

அருள் முகம்—அருள் காட்டும்முகம்; கருணைபொழியும் முகம்

அவலட்சணமுகம் அழகில்லாத முகம்

அழகு ஒழுகும் முகம்—அழகு மிக்க முகம்

அழகுகுடிகொளும் முகத்தினள்—அழகு நிறைந்த முகத்தையுடையவள்

அழகு பூத்த முகம்—அழகு ஒழுகும் முகம்(கூர்ம 1—30—17)

அழகு முகம்—அழகு நிரம்பிய முகம்

அழுது வடியும் முகம்—அழுமூஞ்சி; களையற்ற முகம்

அழு முகங் காட்டல்— அழுவதை முகக் குறிப்பால் காட்டுதல்

அழுமுகம்—அழுகை காட்டும் முகம்; சோகங் காட்டும் முகம்

அழுமூஞ்சி— அழுமுகம்; சோகமானவன்(ள்); பொலிவற்ற முகமுடையவன்(ள்)

அறிமுகம்—பழக்கம்; தெரிந்த முகம்(சேது பு.விதூம 99)

அறிமுகமானவர்—தெரிந்தவர்

அறுமுகன்—முருகக் கடவுள்

அறுவதனம்—ஆறுமுகம்(மயிலைத்திரி 71)

ஆயிரமுகத்தான்—வீரபத்திரன்

ஆர்வம் ததும்பிய முகம்—ஆர்வத்துடிப்பைக் காட்டும் முகம்

ஆறுமுகன்—முருகன்

ஆனைமுகத்தோன்—கணபதி

ஆனைமுகவோன்—விநாயகர்

இந்துமுகம்—சந்திரன் போன்ற முகம்(தி 23)

இந்து வதனம்—இந்துமுகம்

இபமுகத்தவன்—கணபதி(சர கு நாட 3—3)

இலட்சணமான முகம்—அழகான முகம்
இழைமுகத்து எறிபடை—வேல் (சிந் 275)
இளம் முகம்—இளமை ததும்பும் முகம்
இறங்கு முகம்—(வியாபாரத்தில்) முன்னேற்றமின்மை; தாழ்வுறும்நிலை; தணியும் நிலை
இன்முகம்—இனியமுகம்; மலர்ந்த முகம்
இன்னுமுகம்—கடுகடுப்பான முகம்
இனித்த முகம்—இன் முகம்
இனிய முகம்—இன்முகம்
உண்முகம்—உள் முகம்,அகமுகம்
உப்பிய முகம்—வீங்கிய முகம்
உம்மணு மூஞ்சி—ஊமணுமூஞ்சி, தாராளமாகப் பேசத் தெரியாதவன்; உற்சாக மில்லாத முகத்தினன்
உருட்சியான முகம்—உருண்டு திரண்ட முகம்
உருத்திராட்ச முகம்—உருத்திராட்சத்தின் மேற் பாகத்தின் பிரிவு
உலர்ந்த முகம்—வாடிய முகம்
உலை முகம்—கொல்லன் உலைக்களம்
உன் முகம்—மேல் நோக்கிய முகம்; ஒன்றிற் கருத்தாயிருத்தல்
ஊதுமுகம்—வீங்கிய முகம், பருத்த முகம்; உலோகங்களை உருக்கும் உலைவாயில்
ஊதுமுகரன்—உப்பிய முகமுடையவன் (வசைச் சொல்)
ஊமணு மூஞ்சி—உம்மென்றிருக்கும் முகம்; அவலட்சண முகம்; முகத்தை உம்மென்று வைத்துக் கொண்டிருப்பவன்
ஊர்த்துவ முகம்—மேல் நோக்கிய முகம்
ஊர் முகம்—படைகள் போரிடுமிடம் (பதிற் 40—1)

எண்டிசா முகம்—எட்டுத்திக்கு (கந் 6—19—7)

எதிர் முகம்—நேர் முகம்,நேரெதிர்; சந்நிதி;முன்னிலை மாறுபாடு; கண்கூடு(அப் 1—302)

எதிர் முகமாக்கிக் கூறல்—முன்னிலைப்படுத்திக் கூறல்

எதிர் முகமாக—எதிராக

எதிர் முகவேற்றுமை—விளிவேற்றுமை

எரிமுகம்—சிவந்த முகம்; கோப முகம்; தீக்கொப்பளிக்கும் முகம்(திருவி 27—16)

எழில் முகம்—அழகிய முகம்

ஏறு முகம்—வளரும் நிலை; கோபாவேச முகம்; ஊர்த்துவ முகம்

ஏறுமுகருத்திராட்சம்—உருத்திராட்ச மணிகள் முறையே முகங்கள் அதிகம் பெறக் கோக்கப்படும் மாலை

ஐந்து முகத்தோன்— சிவபிரான்

ஐம்முக வெங்கணை—பாசுபதாத்திரம் (க 6—3800)

ஐம்முகன்—கணபதி; சதாசிவன் (திருமந் 2417)

ஒரு கை முகன்—விநாயகர்

ஒருமுகப்படுத்து—ஓரினப்படுத்து; ஒருநிலையாக்கு

ஒருமுகப்பற்று—முழுப்பற்று

ஒருமுகப்பாடு—ஒருமுகமாயிருத்தல்

ஒருமுகம்—ஒற்றுமை;ஒருகட்சி; ஒருதிசை; ஒருபக்கம்

ஒருமுகமாக ஒப்புக்கொள்ளல்—பலரும் ஒரேமனதாக ஒப்புக்கொள்ளல்

ஒருமுகமாய்ப் பேசுதல்—ஏகோபித்துப் பேசுதல், பலரும் ஒரே கருத்தைத் தெரியப்படுத்துதல்; ஒரேகுரலில் பேசுதல்

ஒருமுகமானஅபிப்பிராயம்—ஒன்றுபட்ட கருத்து

ஒருமுகவாதம்—உடம்பின் அல்லது முகத்தின் ஒருபக்கத்தில் காணும் வாதம்; பாரிசவாயு

ஒருமுகவெழினி—ஒருவகைத் திரை (சி 3—109)

ஒருவர் முகமாய்த் திரும்புதல்—ஒருவர்பக்கமாய்த் திரும்புதல்

ஒலிமுகம்—புறவாயில்

ஒலிமுகவாசல் (வாயில்)—நகரம் அல்லது கோயிலின் முன் புறவாயில்

ஒளிமுகக் கமலம்—ஒளிமிக்க முகத்தாமரை (க 6—4296)

ஒளிமுகம்—ஒளியுடைய முகம்

ஒளிர்முகம்— வயிரக்கல்; அரதனக்கல்

ஓலைமுகப் பாசுரம்—கடிதத் தொடக்கத்து எழுதும் பாடல் (சி 13—87உரை)

கசமுகத்திப்பிலி—யானைத்திப்பிலி

கஞ்சமலர்முகம்—தாமரை மலர் போன்ற முகம்(தனி 4—6)

கஞ்சவதனம்—தாமரைமுகம்

கடிகாரத்தின் முகம்—கடிகாரத்தின் நேரங்காட்டும் பகுதி

கடுகடுத்த முகம்—கோபங்கொண்ட முகம்

கடுகடுப்பான முகம்— கோபமான முகம்

கடை முகம்—தலைவாயில்(சிந்1124); முன்றில்; வாயில்முகப்பு (பெ 2—2—57)

கதிர்முகம்—பிறை(அப் 1--302)

கதிரவி முகம்—சூரியகிரணம்; வெய்யில்

கமலமுகம்—தாமரை முகம்

கயமுகம்—யானைமுகம்

கயமுகன்--விநாயகர்

கயமுகாரி—கணபதி

கரமுகன்—யானைமுகன், விநாயகர்

கரிகறுத்த முகம்—மிகக் கறுத்த முகம்

கரிமுகத்துக் கற்பகம்—விநாயகர்
கரிமுகவம்பி—யானைமுக ஓடம்
கரிமுகன்—விநாயகன்
கருமுகம்—முசு; கருங்குரங்கு
கருமூஞ்சிப்பாரை—இருப்பாரைமீன்
கலங்கியமுகம்—குழப்பமடைந்த முகம்
கலாமதி முகம்—கலைகளையுடைய முழுமதி போன்ற முகம் (தி 716)
கவலை தேங்கிய முகம்—கவலை தோய்ந்த முகம்
கவலைதோய்ந்த முகம்—கவலை நிறைந்த முகம்
கவலைபாய்ந்த முகம்—கவலை நிரம்பிய முகம் (பார்வதி 148)
கவிழ்ந்த முகம்—குனிந்த முகம்; அவமானத்தால் கீழ்நோக்கிய முகம்
கழிமுகம்—ஆறு கடலுடன் கலக்கும் சங்க முகம், ஆற்று முகம்
களிற்றுமுகக்கடவுள்—கணபதி
களைஇலங்கும் முகம்—களையான முகம் (பாஞ்சாலி 190)
களைபொருந்திய முகம்—மகிழ்ச்சி அல்லது அழகு பொருந்திய முகம்
களையான முகம்—மலர்ந்த முகம்
கறுத்தமுகம்—கரியமுகம்; கருமையான முகம்
கார்முகம்—மேகம்; வில்; மழைநீர்; மூங்கில்
கார்முகன்—வில்வீரன்;வருணன்
காளாமுகம்—உட்சமயம் ஆறினுள் ஒன்று
கிழக்கு முகம்—கிழக்குப் பக்கம்
கிழ (ட்டு) முகம்—முதுமையாளனின் முகம்
கீழ்முகம்—கீழ்நோக்கிய முகம், அதோ முகம்

குகூமுகம்—குயில்(அ 29-3-63)
குதிரை முகத்தார்—கின்னரர்(ச 250-4)
குதிரை முகம்—குதிரையின் முகம்; முழந்தாள் எலும்பு
குதிரை முகவோடம்—குதிரையின் உருவமுகப்பைக் கொண்ட தோணி, பரிமுகஓடம்
குருமுகத்தால் கேட்டறிதல்—குருவிடம் கேட்டறிதல்
குருமுகம்—குருமுன்னிலே
குருமுகமாகக் கேட்டறிதல்—குருவிடம் நேரில் கேட்டுத் தெரிந்து கொள்ளுதல்
குருமூஞ்சி—அம்மை வடுவுள்ள முகம்
குரைமுகன்—நாய்
குழைமுகப்புரிசை—அந்தப்புரம்(சிந் 275; நெடுநல் 107)
குளிர்ந்த முகம்—மலர்ந்த முகம்; இன்முகம் (அறி ச மு 3-1)
குளிர்முகம்— குளிர்ந்த முகம்(அரி 4-288; துகில் தூது)
குறுகுறுவென்ற முகம்—குறுகுறுப்பான பார்வை உடைய முகம்
கூம்பு முகம்—கூம்பியமுகம், வாடிய முகம்
கூரெழில் முகம்—அழகுமிக்க முகம்
கைம்முகத்துக் கணபதி—துதிக்கையை உடைய விநாயகர்
கைம்முகம் கூம்பல்—வணங்குதற்குக் கைகூப்பல்(கோ 356)
கைம்முகன்—விநாயகர் (கணபதியந் 12)
கோணல்முகம்—வக்கிர முகம்; வெறுப்புக் காட்டும் முகம்
கோணல் மூஞ்சி—கோணல் முகம்
கோமுகம்—பசுமுகமாய் அமைந்தமடை (சாச); ஒரு வாத்தியம்
கோலமதி வதனம்—அழகிய திங்கள் முகம் (தி 119)
சக்கிர முகம்—பன்றி

சக்தி முகம்—அரசனுடைய ஆணைப்பத்திரம்

சங்கமுகம்—ஆறு, கடலுடன் கூடுமிடம் (சி 9–57உரை)

சசி முகம்—திங்கள் முகம் (தி 725)

சண்முகன்—முருகன்

சந்திர முகம்—திங்கள் போன்ற முகம்

சந்தோஷமான முகம்—மகிழ்ச்சி நிரம்பிய முகம்

சப்பை முகம்—சப்பையான முகம்,தட்டையான முகம்

சப்பை மூஞ்சி—சப்பை முகம்

சமமுகம்—தலையசையாது சும்மாவிருத்தல்; முக அபிநயம் பதினான்கனுள் தியானிப்பது போல அசையாது நேர்முகமாயிருக்கும் அபிநயம்.

சமர் முகம்—போர்முனை

சலசமுகம்—தாமரைமுகம் (தி 482)

சவுந்தரமுகம்—மலர்ந்த முகம், அழகிய முகம்

சாந்த(மான) முகம்—தண்ணென்ற முகம்; உணர்ச்சியற்ற முகம்; கலவரமற்ற முகம்

சாமுகம்—களையிழந்த முகம், களையிழந்தமுகத்தவன் (ள்)

சாமூஞ்சி—சாமுகம்(வசைச்சொல்)

சிங்கமுக பல்லக்கு—சிங்கவடிவை முகப்பிற் கொண்ட பல்லக்கு வகை

சிங்கமுகம் வைத்தல்—கோபங்கொண்டிருத்தல்

சிங்கமுகவோடம்—சிங்கத்தின் உருவைமுகப்பிற் கொண்ட தோணி

சிங்கமுகன்—சிங்கமுகமுடைய அசுரன்

சிடுசிடுப்பான முகம்—கடுகடுப்பான முகம்

சிடுமூஞ்சி—கடுகடுத்த முகம்; கடுகடுத்த முகமுடையவன் (வசைச்சொல்)

சிரித்த முகம்—மலர்ந்தமுகம்

சிரீ முகம்—பெரியோர் அனுப்பும் கடிதம், திருமுகம், ஸ்ரீமுகம் (சாச)

சிலீ முகம்—அம்பு (வேங்கட பு 18–40); வண்டு

சிவத்த முகம்—சிவந்த முகம்

சீதபங்கய முகம்—குளிர்ந்த தாமரை போன்ற முகம் (அரி 9–128)

சீமுகம்—திருமுகம் (சாச)

சீன்முகம்—சீலமுகம்; அழகிய முகம் (திருமந் 825)

சுடர் முகம்—ஒளி முகம்

சுடிச்ச முகம்—கடுரமுகம் (சுந் வி 6–1)

சுடுமூஞ்சி—சிடுமூஞ்சி, சுடுசுடுத்த முகமுடையவன்

சுந்தர முகம்—அழகிய முகம்

சுந்தரவதனம்—சுந்தர முகம்

சுமுகம்—இன்முகம்

சுமுகன்—நன்முக முள்ளவன்; வசீகரமுள்ளவன்

சுரிமுகச் சங்கு—சுரிந்தமுகமுடைய சங்கு (11தி 7–25)

சுரிமுகப் பணிலம்—சுழிந்த முகமுடைய சங்கு(குமர 455–12)

சுரிமுகம்—சங்கு (சேயூர் பி த 11); நத்தை

சுருக்கம் நிறைந்த முகம்—முதுமையால் திரைத்த முகம்

சுள்ளிமூஞ்சி—புள்ளிகள் அல்லது அம்மை வடுக்கள் உள்ள முகம்

சுளித்தமுகம்—கோபமான முகம் (மங் காதல் 52)

சூசிகா முகம்—சங்கு, வளை

சூசி முகம்—ஊசிமுனை; ஒருவகை நரகம் (சேது பு தனுக் கோ 4)

செங்கமல வதனம்—செந்தாமரை முகம் (தின 1–41)

செத்த முகமாயிருத்தல்—அவமானத்தால் முகம் களையிழந் திருத்தல்

செந்தாமரை முகம்—செந்தாமரை போன்ற அழகிய முகம்

செம்முகக்கவி—சிவந்த முகத்தையுடைய குரங்கு (அரி 4–133)

செம்முகம்—சிவந்த முகம்; செவ்விய முகம் (அரி 10–37)

செம்முகமந்தி—சிவந்தமுகத்தோடு கூடிய பெண்குரங்கு (ச 98–2); அல்குலுக்கு இடக்கரடக்கற் பெயர்.

செம்முகமாக—நேர்முகமாக, எதிரில் (பெ 5–8–73)

செருமுகம்—போர்முகம் (பு 279)

செழித்த முகம்—மகிழ்ச்சிமிக்க முகம்

சேனுமுகம்—படைமுகம்; முற்படை, கொடிப்படை

சொத்தைமூஞ்சி—சொள்ளைமுகம்

சொள்ளைமுகம்—அம்மைவடுக்கொண்ட முகம்

சோகம் படர்ந்த முகம்—கவலைமிக்க முகம்

சோர்ந்த முகம்—வாடிய முகம்

சௌந்தர முகம்—மலர்ந்த அழகிய முகம்

தசமுகநதி—கங்கை

தசமுகன்—இராவணன்

தசானனன்—தசமுகன்

தண்ணீர்முகம்—மலைநாட்டில் ஓரூர்

ததர்முகம், ததாமுகம்—தொடக்கம்

தந்தி முகன்—விநாயகர்

தயமுகன்—தசமுகன், இராவணன் (க 3–343)

தாமரை முகம்—தாமரைபோன்ற முகம்.

திங்கட்பொலி முகம்—திங்கள்போலப் பொழிந்த முகம் (வில்லைப்பு 406)

திங்கல் முகத்தாள்—திங்கள்போன்ற முகத்தினை உடையவள்

திங்கள் முகம்—திங்கள்போன்ற முகம் (வெங்கோ 337)

திசா முகம்—திசை (குமர 567)

திசைமுகக் கடவுள்—பிரமன் (உபதே 7-79)

திசை முகன்—நான்முகன்

திரங்கள் முகவன்—குரங்கு (தே1155–3)

திருமுகக்காணம்—அரசன் முதலியோரிடமிருந்து வரும் திருமுகங்களைச் சுமந்து வருவோர்க்குக் கொடுக்கும் வரி (சாச)

திருமுகத்துறை—காவிரி கடலுடன் கலக்கும் சங்கமுகத் துறை

திருமுகத்தேவை—திருமுகக்காணம்

திருமுக தரிசனம்—பெரியோரைச்சந்தித்தல் (தோத் தி 441)

திருமுகம்—ஸ்ரீமுகம், அரசனிடமிருந்து வரும் செய்தி, அரசாணை (11 தி 38-2; சாச); பெரியோர் எழுதும் கடிதம் (சி 8–57); அழகான முகம் (திவ் 1108)

திருமுகமண்டலம்—கோயில்மூர்த்தி அல்லது பெரியோரின் திருமுகம்

திருமுக விலாசம்—பெரியோரின் முகச் சிறப்பு

திருமுகமுதானம்—அரசரால் நேரில் நியமிக்கப்படும் கௌரவ உத்தியோகம்

திருவதனம்—திருமுகம் (நாடகமே 14)

திவச முகம்—உதயகாலம்

தீமுகக்கணை—அக்கினிபாணம் (கூர்ம 1–16–118)

தீமுகம்—உலைமுகம்; தீ எரியுமிடம்

துக்கமுகம்—துக்கத்தைக் காட்டும் முகம்

துதமுகம்—வேண்டாம் என்று தலையசைத்தல்

துயரமுகம்—துக்க முகம்

துயில்முகன்—தூங்குமூஞ்சி (வைண 2—36)

துவாரமுகம்—கதவுத்துளை

துறுதுறுப்புள்ள முகம்—சுறுசுறுப்பைக்காட்டும் முகம்

துறைமுகம்—கப்பல்கள்வந்துதங்கும் கடல்துறை; பொருள்களைக் கப்பலில் ஏற்றி இறக்கும் துறை

துன்பமுகம்—துயரமுகம்

துன்முகன்—தீயோன் (நீதி வெ 48); சிங்கம்

துன்முகி—தீயமுகத்தோற்றமுள்ளவன்

தூங்கு மூஞ்சி—மந்தன், சோம்பேறி (வசைச்சொல்)

தெசமுகம்—பத்து முகம் (குமர 699)

தெரிந்தமுகம்—அறிமுகமானவர்; பார்த்தமுகம்; பழக்கமானவர்

தென்முகம்—தெற்குப் பக்கம்

தேறுமுகம்—பற்றுக்கோடு (கந் தேவர்கள் போற் 4)

தொளைமுகமலை—முகத்தேதொளைபொருந்திய துதிக்கையுடைய யானை (கலிங் 396)

தொன்முகம்—அதோ முகம், கீழ்நோக்கிய முகம் (தணி பு 10–20)

தோகைமுகபூடணம்—மஞ்சள்(பெண்ணின் முகத்தை அலங்கரிப்பது) (தைலவ தைல)

தோணுமுகம்—பரா முகம்

தோளில் முகத்தை இடித்தல்—வெறுப்பைக் காட்ட மகளிர் கையாளும் நிறை

நகைமுகத்தாள்—புன்முறுவல் பொருந்திய முகத்தாள்

நகைமுகம்—சிரித்த முகம் (நீதி நெறி 39); முகப்பொலிவு (சிந் 478); ஒளிமுகம் (சிந் 1568; பு 8–30)

நரிமுகத்தில் விழித்தல்—அதிர்ஷ்டமடைதல்

நளிர்முகம்—குளிர்ந்தமுகம் (அரி 4–300)

நன்முகம்—நகைமுகம், இன்முகம், புன்முறுவல் பொழியும் முகம்; அழகான முகம் (திவ் 895)

நாக முகன்—விநாயகர் (பெரிய திருமுறை)

நாணத்தால் முகங்கவிழ்தல்—வெட்கத்தால் தலை கவிழ்தல்

நான்முகத்தோன்—பிரமன்

நிலாமுகம்—திங்கள்முகம் (மணி வெ 10)

நிறைமதிமுகம்—முழுத்திங்கள் முகம்

நீர்முகம்—முகத்துவாரம், இறங்குதுறை,
நீர்ப்பாய்ச்சல்முனை

நூறுமுகமாக—பலவகையாக
(உதயண 15; வேங் உலா 433)

நூன் முகம்—பாயிரம், முகவுரை

நேர்முகம்—எதிர்முகம், பகிரங்க முகம்

நேர்முகமாக—எதிரிடையாக

நோய்முகன்—நோயாளி, பிணியாளி; சனி (சோதிட அ)

பங்கயம் மலர்ந்த திருமுகமண்டலம்—மலர்ந்த தாமரை
போன்ற திருமுகம் (குமர 40)

பங்கயமுகம்—தாமரை முகம் (ச 333–2)

பங்கய வதனம்—தாமரை முகம் (தண் பள் 149)

பஞ்சமுகவாசம்—பஞ்சவாசம் (சிந் 2026)

பஞ்சமுகன்—சிவன், சிங்கம்

பஞ்சானனம்—சிங்கம்

படைமுகம்—சேனை முகம், படைமுனை, படைமுன்பு

பத்தானனன்—பத்துத்தலையன், இராவணன்
(சிரா கோ 256)

பதுமமுகம்—தாமரை முகம் (கலிங் 477)

பராமுகம்—அசட்டை (தி 353; கந் வள்ளி 72);
கவனிப்பின்மை; பின்னோக்கியமுகம்

பராமுகமாய் இருத்தல்—கவனிக்காமலிருத்தல்

பரிமுகம்—குதிரை

பரிமுகமாக்கள்—கின்னரர் (க சித்திர 11)
பரிமுகவம்பி, பரிமுகவோடம்—குதிரைமுகவோடம்
பலமுகம்—பலவழி, பலதிசை, பலமார்க்கம்
பலமுகமாய்த்தப்பியோடுதல்—பலவழிகளில் தப்பியோடுதல்
பழக்கமான முகம்—அறிந்தமுகம்
பழகினமுகம்—அறிந்தமுகம்
பளபளவென்றமுகம்—பளபளப்பாயுள்ள முகம்
பன்முகம்—பலவழி; பலவகை
பன்றிமுகம்—ஒருவகை நரகம் (சேது பு. தனுக் 10)
பாண்முகம்—மூக்கால் ஒலித்துப்பாடுதலையுடைய வண்டினம் (சு 362–3)
பார்த்தமுகம்—அறிந்தமுகம்
பாராமுகம்—அசட்டை (வடி சத 15)
பால்வடியும்முகம்—சிறுகுழந்தையின் முகம்; கள்ளமற்றமுகம்
பிணிமுகம்—முருகனின் வாகனமான யானை (சுவாமி பி த 74)
பிரகாசமானமுகம்—ஒளிவீசும்முகம்
பிரசன்னமுகம், பிரசன்ன வதனம்—மலர்ந்தமுகம்
பிலமுகம்—பாதாளம் (திருவா 261)
பிறர்முகம்பார்த்தல்—பிறர் தயவு வேண்டுதல்
பிறைமுகவாளி—பிறைவாய் வாளி, பிறைத்தலையம்பு
புகர்படுமுகவரை— யானை (வீர பு 4–21)
புகர்முகப்பூட்கை—யானை (க 3–537)
புகர்முகம்—யானை (உப 1289; சி 25–29)
புகர்முகவெங்கார்—யானை (பாக பு 10–35–36)
புகர்முகன்—விநாயகர் (குமர 547)

புகுமுகம்புரிதல்—ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்டவிடத்துத் தலைவன் தன்னை நோக்குதலை விரும்பும் தலைவியின் உள்ளநெகிழ்ச்சி (தொல் பொ 261)

புகுமுகவகுப்பு—பல்கலைக்கழக முதல்வகுப்பு

புதுமுகம்—புதிய முகம்;திரைப்படத்தில் முதன்முதலாக நடிக்கும் நபர்

புரிமுகம்—கோபுரம்; சங்கு; நத்தை

புலிமுகக்கடுக்கன்—புலியின் முகம் போன்ற மகளிர் காதணி

புலிமுகச் சிலந்தி—ஒருவகை நச்சுவண்டு

புலிமுகப்பணி—புலிமுகக் கடுக்கன்

புலிமுகப்புணை—புலியுருவமைந்த முகஅம்பி; தோணி

புலிமுகப்பூச்சி—புலிமுகச்சிலந்தி

புலிமுகமாடம்—புலியுருவம் தீட்டப்பட்ட மாடம்; புலியுருவத்தை முகப்பிற் செய்து வைத்துள்ள மாளிகை (பெ. இலா 9-69)

புலிமுகவாயில்—புலி உருவம் அமைந்த வாயில் (சிந் 1836 உரை)

புன்னகைபூத்த இன்முகம்—புன்முறுவல் நிரம்பிய மலர்ந்தமுகம்

புன்னகை பொங்கிய முகம்—புன்முறுவல் நிரம்பிய முகம்

புன்னகை முகம்—முறுவல்பூத்த முகம்

பூசல்முகம்—போர்முனை; போரரங்கு (க 6-2246)

பூமுகம்—பொலிந்தமுகம்

பூவின்முகம்—பூவிதழ் (வெங் கோ 339)

பேடுமூஞ்சி—பெண்முகம்

பேய்முகம்—அவலட்சணமுகம்

பேய்மூஞ்சி—பேய் முகம்; கோரமுகம்

பொய்முகம்—முகமூடி

பொல்லாமுகத்தன்—விநாயகர்

பொலிவுள்ளமுகம்—அழகுள்ளமுகம்

பொன்முகம்—பொலிவுடைய முகம் (அப் 1-809)

போர்முகம்—போர்முனை,படைமுகம்

போழ்முகம், போழ்முகி—பன்றி

மடைமுகம்—மடைத்தலைப்பு

மதமாமுகன்—கணபதி (குமர 534)

மதிநிகர்முகம்—திங்கள்போன்ற முகம் (க 6-2296)

மதிமுகம்—சந்திரன் போன்றமுகம் (சி 1-36)

மலர்ந்தமுகம்—பொலிவுற்ற முகம்

மலர்முகம்—மலர்போன்ற முகம்; மலர்ந்தமுகம்

மழைமுகங்காணுதல்—மழைபெய்து பயிர் தளிர்த்தல்

மழைமுகத்தகுஞ்சரம்—மதத்தையுடைய யானை (சிந் 276)

மறுமுகம்—அன்னியன்முகம்; வேறுபக்கம்

மறுவிராவியமுகம்—வடுக்கள்பொருந்தியமுகம் (கந் 2-5-70)

மறைமுகமாக—மறைவில்

மாசுமறுவற்றமுகம்—கள்ளங்கபடமற்றமுகம்

மார்பிலேமுகம்பதித்தல்—நெஞ்சில் முகத்தைப் பதித்து வைத்தல் (அழுதல் அல்லது பிறரை அணைத்தலின் போது)

மாரிமுகம்—கார்முகம், வில் (வன்னி பு 20-2)

மாறுமுகத்தார்—பகைவர் (இங்கி 103)

மாறுமுகம்—(அசுரர்கள்) நினைத்தவாறு மாற்றிக்கொள்ளும் முகவடிவு

முகஅடையாளம்—ஒருவரது முகத்தின் அடையாளம்
முகஒப்பனை—முக அலங்காரம்
முகக்கட்டை—மோவாய்க் கட்டை
முகக்கடுப்பு—முகத்தில் தோன்றும் கடுமைக்குறி
முகக்கண்—முகத்தில் (கலிங் 355)
முகக்கண்ணாடி—முகம்பார்க்குங் கண்ணாடி
முகக்கமலம்—முகத்தாமரை (திவ் 1183)
முகக்கயில்—உடைந்த தேங்காயின் கண்ணுள்ள மேன்முறி
முகக்கருவி—கடிவாளம் (பு 4-8 உரை)
முகக்களை—முகவழகு;முகவசிகரம் (சுந்தரவல்லி 17); முகச்செழிப்பு
முகக்காணிக்கை—கையூட்டு
முகக்கிளர்ச்சி—முகமலர்ச்சி, முகக்களை, முகப்பொலிவு
முகக்குரு— முகப்பரு (அருட் 6 ப 32)
முகக்குறி—முகச்சாடை, முகச்சாயல்; முகத்தில் தோன்றுங் குறிப்பு (சி நூல்நயம் 2)
முகக்குறிகாட்டல்—பழித்துக்காட்டல்
முகக்குறிப்பு—முகத்தோற்றம்; முகத்தில் தோன்றும் உணர்ச்சியடையாளம்
முகக்கை—தும்பிக்கை (குமர 534; கந்த சு 163)
முகக்கொம்பு—கால்நடையின் முன்வளைந்த கொம்பு
முகக்கொள்ளி—கொள்ளிவாய்ப்பேய் (ரகு குசன 22)
முகக்கோட்டம்—வெறுப்பு,துக்கம் முதலியவற்றின் குறியாக முகங் கோணுதல்; முகம் பொலிவழிவு
முகக்கோணல்—கோபங்கொள்ளும்போது முகத்தில் தோன்றும் சுருக்கம்
முககட்டணம்—கட்டடமுகப்பு (சாச)
முககமலம்—முகமாகிய தாமரை (சேக் பி த 99)

முககாந்தி—முகஒளி (அ 16-4-65)

முகங்கடுகடுத்தல்—முகத்தில் சினக்குறி காட்டல்

முகங்கடுத்தல்—முகங்கடுகடுத்தல்; சினம், வெறுப்பு முதலியவற்றின் குறியாக முகத்தில் கடுமை தோற்றுவித்தல்

முகங்கருகுதல்—சினம் முதலியவற்ருல் முகங்கன்றுதல்

முகங்கவித்தல்—முகங்குனிதல், தலைகுனிதல் (தமிழ்க்குமரி 45)

முகங்கவிழ்தல்—நாணத்தால் தலைகுனிதல் (பிரபு 5-36); அவமானத்தால் முகத்தைத் தொங்கப்போடுதல்

முகங்கழுவுதல்—முகத்தைநீரினுல் தூய்மை செய்தல்

முகங்கறுத்தல்—வெய்யில் மிகுதியால் முகம் கறுத்துப்போதல்

முகங்காட்டுதல்—காட்சிகொடுத்தல்

முகங்காண்பித்தல்—முகங்காட்டுதல்

முகங்காணுதல்—புண்ணின் கட்டிஉடைவதற்குமுன் வாய்வைத்தல்

முகங்குப்புறவிழுதல்—முகம் கீழ்ப்புறமாக விழுதல்

முகங்குப்புறுதல்—முகங்கவிழ்தல்

முகங்குருவுதல்—துன்பத்தால் முகப்பொலிவிழத்தல்

முகங்கொடுத்தல்—இசைதல்; இன்முகங் காட்டுதல்; முகங்காட்டுதல்; செவிசாய்த்தல்; செல்லங் கொடுத்தல்

முகங்கொடுத்துப்பேசல்—இன்முகத்துடன் பேசுதல்

முகங்கொண்டெழுதல்—திரண்டெழுதல் (பரங் கோ 390)

முகங்கொள்ளுதல்—முகங்காணுதல்; சிலந்தி உடைந்துபோக முனைகொள்ளுதல்; சம்மதம் பெறுதல்; சம்மதக்குறிகாட்டுதல்

முகங்கோடுதல்—முகங்கோணுதல்

முகங்கோணல், முகங்கோணுதல்—முகங்கோடுதல்; முகத்தில்வெறுப்புக்குறி காட்டுதல்

முகச்சரக்கு—பார்வைச்சரக்கு, முதற்சரக்கு, கடைமுன் பார்வைக்காக வைக்கப்படும் பண்டம்

முகச்சவரம்—முகத்தை மழித்தல், முகத்தளவில் செய்துகொள்ளும் சவரம்

முகச்சாடு—முக்காடு

முகச்சாடை—முகச்சாயல்

முகச்சாய்ப்பு—விருப்பின்மை; வருத்தம், கோபம்

முகச்சாயல்—முகத்தின் தோற்றம்

முகச்சாயை—முகச்சாடை

முகச்சிணுக்கம்—முகத்தில் சிணுங்குதலைக் காட்டுதல் (கல்கி)

முகச்சித்தி—முகவசிகரம்

முகச்சிரட்டை—கண்சிரட்டை

முகச்சின்னம்—முகக்குறி (பார்வதி 152)

முகச்சுளி—முகக்கோணல்

முகச்சுளிப்பு—முகத்தைச் சுளித்தல், சம்மதமின்மை (திவ் 1760 அரு)

முகச்சுளுக்கம்—முகச்சுளி

முகச்செவ்வி—முகஅழகு (திருவி 15—9); முகத்தோற்றம்; முகவெட்டு

முகச்செழிப்பம், முகச்செழிப்பு—முகக்களை, முகவசிகரம்; தாராளம்

முகச்சேஷ்டை—முகத்தாற் காட்டுங் காரணி; பழித்துக் காட்டல்

முகச்சோகம்—முகவாட்டம் (ப.திருவி 8-5)

முகச்சோதி—முகத்தின்ஒளி; முகக்காந்தி (திவ் 3121; கண்ணன் பாட்டு 18)

முகச்சோபை—முகவசீகரம்

முகசன்னி—முகத்திற்காணும் சன்னிவகை (இங் வை)

முகசிங்கி—ஒரு நோய்

முகசோபை—முகஅழகு (காதம் 648)

முகஞ்சாதல்—முகஞ்சுண்டுதல்

முகஞ்சாம்பல்—முகஞ்சோர்தல் (காஞ்சிப் 11-39)

முகஞ்சிரைத்தல்—முகத்தை மழித்தல்

முகஞ்சிவத்தல்—கோபத்தால் முகஞ்சிவப்பேறுதல்

முகஞ்சின்னம்போதல்—வெட்கத்தால் முகங்கருகுதல்; வெட்கப்படல்

முகஞ்சுண்டல், முகஞ்சுண்டுதல்—முகங்கருகுதல், முகங்கடுத்தல், வெட்கப்படுதல்

முகஞ்சுவறுதல்—முகஞ்சோர்தல் (கீதை வெ 1-23)

முகஞ்சுளித்தல்—முகங்கடுத்தல்; முகங்கோணுதல்

முகஞ்சூம்புதல்—முகத்தில் களைப்புத்தோன்றுதல்

முகஞ்செய்தல்—தோன்றுதல் (பெ 1-35-49); முன்னுதல் (சிந் 675); நோக்குதல்; சிலந்திகுமிழ்த்தல்; பலித்தல்

முகஞ்செழித்தல்—முகம்மலர்தல்

முகஞ்சோர்தல்—முகஞ்சுண்டுதல் (மனு முறை)

முகத்தலை—முகதலை,ஆடையின் தலைப்பு அல்லது கரை (திவ் 3763உரை)

முகத்தாட்சணியம், முகத்தாட்சிணியம்—கண்ணோட்டம்

முகத்தாட்சிண்ணியம்பார்த்தல்—கண்ணோட்டஞ் செய்தல்

முகத்தாட்சிணை—தாட்சிண்ணியம்; கண்ணோட்டம் (பே)

முகத்தாமரை—தாமரைமுகம் (தின 3502)

முகத்தாராளம்—முகமலர்ச்சி; முகப்பொலிவு

முகத்தாலடித்தல்—முகவெறுப்பை முகக்குறியால் காட்டுதல்; கோபமாகப்பார்த்தல், பேசுதல்

முகத்திடைக்காணல்—பிரத்தியட்சமாகக் காணல் (திருமந் 1637)

முகத்திரை—முகத்துக்கிடும் திரை

முகத்தில் அச்சம்கூத்தாடல்—முகத்தில் அச்சக்குறிப்பு மிகுதியாக வெளிப்படல்

முகத்தில்அசட்டுக்களை தட்டுதல்—முகத்தில் அசடுதோன்றுதல்

முகத்தில்அசடுவழிதல்—சோம்பல் அல்லது அறிவின்மையின் குறிப்புமுகத்தில் தென்படல்

முகத்தில்அடித்தல்—கன்னத்தில் அடித்தல்

முகத்தில்அடித்தாற்போல்பேசல்—மிகக்கடுமையாகப் பேசுதல்

முகத்தில்அணைத்து உச்சிமோத்தல்—அன்புமிகுதியால் முகத்தோடு அணைத்து உச்சியை மோத்தல் (கந் கலி வெ 85)

முகத்தில்அறைதல்—கன்னத்தில் அறைதல் (அரி 11-20)

முகத்தில்அறைந்தாற்போல்கேட்டல்—முன்னின்று கடுங்குரலில் கேட்டல்

முகத்தில்இடித்தல்—கன்னத்தில் இடித்தல்

முகத்தில்இரத்தந்தெறிக்கப்பேசுதல்—கோபமிகுதியால் முகத்தில் இரத்தச் சிவப்புத் தோன்றக் கடுமையாகப் பேசுதல்

முகத்தில்ஈயாடவில்லை—அவமானம் அல்லது வெட்கத்தால் முகம் வாடியிருத்தல்; கவலைகொண்ட முகங்கொண் டிருத்தல் (பே)

முகத்தில்ஊடாடியசோகம்—முகத்தில் படர்ந்துள்ள துன்பம்

முகத்தில் எண்ணெய்வழிதல்—விருப்பின்மையை முகம் காட்டுதல்

முகத்தில்எழுதியிருத்தல்—முகத்தில் தெளிவாகத் தெரிதல் (புதுமைப் 56) ; மிக வெளிப்படையாகத் தெரிதல்

முகத்தில்எள்ளும்கொள்ளும்வெடித்தல்—முகத்தில் சினக் குறிப்புக் காட்டல்

முகத்தில்ஒளிதுலங்கல்—முகத்தில் சோபை விளங்குதல்

முகத்தில்கடுமைநிலவுதல்—முகங்கடுகடுப்பாயிருத்தல்

(கணவர்) முகத்தில் கண்விழித்தல்—தூங்கிஎழுந்தவுடன் பார்த்தல்

முகத்தில்கரிக்கோடிடுதல்—முகத்தில் அரும்புதல்

முகத்தில்கரிதடவுதல்—ஏமாற்றி விடுதல்

முகத்தில்கரிபூசுதல்—அவமானப்படுத்தல்; ஏமாற்றி விடல்

முகத்தில்கலவரம்குடிகொள்ளல்—முகத்தில் பீதி காணப் படல்

முகத்தில்கவலைகொந்தளித்து நிற்றல்—முகத்தில் கவலையின் துடிப்பு மிகுதியாகக் காணப்படல்

முகத்தில்கவலைதேங்கியிருத்தல்—முகத்தில்கவலைநிரம்பி யிருத்தல்

முகத்தில்கவலைநிழலாடுதல்—முகத்தில் கவலை படர்ந் திருத்தல்

முகத்தில்காறியுமிழ்தல்—நேரில் அவமானப்படுத்துதல்

முகத்தில் கையறைந்துஅழல்—முகத்தில் கையினால் அறைந்து கொண்டு அழல் (அரி 8–122)

முகத்தில் கோபம் தாண்டவமாடுதல்—முகத்தில் சினம் பொங்கி வழிதல்

முகத்தில்சந்தோஷக்குறி தென்படல்—முகத்தில் இன்பக் குறிப்புவெளிப்படல் (படித்த 43)

முகத்தில்சாந்தம் குடிகொள்ளல்—முகத்தில் அமைதிகுடி கொண்டிருத்தல்

முகத்தில்சிரிப்புத்தவழ்தல்—முகத்தில்புன்சிரிப்புப்பரவி
யிருத்தல்

முகத்தில்சிவப்பேறப் பெறல்—கடுங்கோபங்
கொண்டிருத்தல்

முகத்தில்சுருக்கம்வரல—முதுமை எய்துதல்

முகத்தில்சுருக்கம்ஏற்படச்செய்தல்—வெறுப்புஏற்படச்
செய்தல்

முகத்தில்சோகம்தேங்குதல்—முகத்தில் கவலே
படிந்திருத்தல்

முகத்தில்தூக்கம்பொங்கிவழிதல்—முகம் தூக்கத்தை மிகுதி
யாகக் காட்டுதல்

முகத்தில்தெரிதல்—முகத்தில் காணப்படுதல்

முகத்தில்நீர்தெளித்தல்—மயக்கம்எய்திபவரின் முகத்தில்
நீரைத்தெளித்தல்

முகத்தில்பீதிதகும்புதல்—முகத்தில் காரணமறியாத பெருந்
திகிலின் குறிப்பு மிகுதியாக வெளிப்படல் (ஒற்றை)

முகத்தில் புன்னகைகுடிகொள்ளல்—முகத்தில் புன்முறுவல்
நீங்காதிருத்தல்

முகத்தில்புன்னகைமலர்தல்—முகத்தில் புன்முறுவல்
தோன்றுதல்

முகத்தில்பூரிப்புமிளிர்தல்—முகத்தில் பெருமகிழ்ச்சி
விளங்குதல்

முகத்தில்பெருமிதங்காணப்படல்—பெருமிதவுணர்வை
முகம் காட்டுதல்

முகத்தில்மகிழ்ச்சி கூத்தாடுதல்—முகத்தில் ஆனந்தக்
குறிப்புத் தென்படல்

முகத்தில்மகிழ்ச்சிதாண்டவமாடல்—முகத்தில் மகிழ்ச்சி
கூத்தாடுதல்

முகத்தில்மகிழ்ச்சிவெள்ளம்பொங்குதல்—முகத்தில் பேரானந்
தம் பெரிதும் வெளிப்படுதல்

முகத்தில்மலர்ச்சியை வரவழைத்தல்—முகத்தை மலர்ந்த முகம்போலாக்குதல்

முகத்தில்ராஜகளை சொட்டுதல்—முகத்தில் அரசருக்குரிய கம்பீரம் காணப்படுதல்

முகத்தில்லட்சுமிகளை தாண்டவமாடுதல்—முகத்தில் அருள் விளக்கமும் ஒளியும் செழிப்பும் நிறைந்திருத்தல் (பே)

முகக்தில்லட்சுமிவிலாசம் விளங்குதல்—முகத்தில் லட்சுமி களை தாண்டவமாடுதல்

முகத்தில்வருத்தம் தேங்கியிருத்தல்—முகத்தில் கவலை பரவி யிருத்தல்

முகத்தில்விசனமுத்திரை பதிந்திருத்தல்—முகத்தில் கவலைக் குறி பதிந்திருத்தல்

முகத்தில் விட்டெறிதல்—வெறுப்புடன் ஒருவர் கண்முன்னல் தூக்கியெறிதல்

முகத்தில்விழித்தல்—முகத்தைப்பார்த்தல்

முகத்திலடித்தல்—நேரே நிந்தித்தல்; கடுமுகங்காட்டிக் கண்டித்தல்

முகத்திலருப்பமிறங்குதல், முகத்திலரும்புதல்—மீசை முளைத்தல், மேலுதட்டில் மயிர்தோன்றுதல்

முகத்திலேஎழுதி ஒட்டியிருத்தல்—முகக்குறியினின்று தெற்றெனவிளங்குதல்

முகத்திலேவிட்டெறிதல்—கோபமாகஒருபொருளை ஒருவர் முன்னிலையில் வீசி எறிதல்

முகத்திலேவீசிஎறிதல்—முகத்தில்விட்டெறிதல்

முகத்திற்கரிக்கோடிடல்—மீசைமுளைத்தல்

முகத்திற்குப்பவுடர்போடுதல்—முகத்தில் வாசனைப்பொடி பூசி ஒப்பனை செய்து கொள்ளல்

முகத்திற்குமுகம்பேசுதல்—நேருக்கு நேராகப் பேசுதல்

முகத்திற்குமுன்பு, முகத்தின்முன்பு—நேரில், கண்ணெதிரில்
முகத்திற்கெதிர்ப்படல்—கண்ணிற்படுதல்; பார்வையில் படுதல்
முகத்தின்அமைதி குலேதல்—அமைதியின்மைக் குறிப்பு முகத்தில் தென்படல்
முகத்தின்அழகு—முகவழகு
முகத்தின் நிறம்மாறல்—முகம்வலியஉணர்ச்சியைப் பெற்றிருத்தல்
முகத்தின்ஜொலிப்பு—முகத்தின் தேஜசு
முகத்திடு—பிணம்போர்க்கும்புடவை பிணத்தின் முகமூடிச்சீலே
முகத்துக்கண்—புறக்கண்(கலங் வி மா 130)
முகத்துக்குமுகம்கண்ணுடி—வீட்டுக்குவீடு வாசற்படி (பழ)
முகத்துக்குமுகம்சந்தித்தல்—இருவர் நேரடியாகச் சந்தித்தல்
முகத்துக்குமுகம்நின்றுபேசல்—எதிரெதிரேநின்று பேசுதல்
முகத்துக்குமெருகேற்றல்—வாசனேச்சுண்ணம் முதலியன பூசி முகத்தை ஒப்பனேசெய்தல்
முகத்துக்கெதிரே—கண்முன்னுல்.
முகத்துதி—நேரில்புகழ்ந்துரைத்தல்
முகத்துதிசெய்தல்—முகமன்வார்த்தைகூறுதல்
முகத்துதிபண்ணல்—முகத்துதிசெய்தல்
முகத்துதிபேசல்—முகத்துதிபண்ணல்
முகத்துநாடி—முகத்தில் ஒடும் இரத்தக்குழாய்
முகத்துக்குமுன்னுலே—முகத்துக்கெதிரே
முகத்துரை—தானேநேரில் நின்று பேசுதல் (இலக் வி 563 உரை)
முகத்துரோமம்—மீசை (தனி பு 10–103)
முகத்துவாரம்—கடலும் ஆறும் பொருந்துமிடம்; முகப்பு; கழிமுகம்

முகத்துறுப்பு—முகமாகிய உறுப்பு

முகத்தூண்—முகப்புத்தூண் (பெ-உஞ்சைக்-58-54)

முகத்தெதிர்நிற்றல்—கண்முன்னுல் நிற்றல்

முகத்தெதிரே அவமதித்தல்—நேரில்அவமதித்தல்

முகத்தெழுபெருஞ்சினம்—முகத்தில்தோன்றும்கடுங்கோபம்

முகத்தெளிவு—முகப்பொலிவு, மூகக்களை

முகத்தேங்காய்—முகக்கயில்

முகத்தைஉம்மென்றுவைத்துக்கொள்ளல்—முகத்தைக் கடுமையாக (கடுகடுப்பாக) வைத்துக் கொள்ளல்

முகத்தைஉயர்த்தல்—தலையை நிமிர்த்தல்

முகத்தைஉர்ரென்றுவைத்துக்கொள்ளல்—முகத்தை உம்மென்று வைத்துக்கொள்ளல்

முகத்தைஉற்றுப்பார்த்தல்—முகத்தைக்கூர்ந்துபார்த்தல்

முகத்தை ஏறிட்டுப்பார்த்தல், (நோக்குதல்)—முகத்தை உற்றுப்பார்த்தல் (நோக்குதல்)

முகத்தை ஏறெடுத்துப்பார்த்தல்—முகத்தை ஏறிட்டுப் பார்த்தல்

முகத்தை ஒருமாதிரியாகவைத்துக்கொள்ளல்—முகத்தில் வெறுப்பு, கோபம் முதலிய உணர்ச்சிகளைக் காட்டிக் கொண்டிருத்தல்

முகத்தைக்கடுகடுத்தபடிஇருத்தல்—எப்போதும்முகத்தில் சினக்குறிப்புத் தோன்றச் செய்தல்

முகத்தைக்கடுத்துக்கொள்ளல்—முகத்தைக் கடுமையாக வைத்துக்கொள்ளல், (புருஷர்களுக்கு 87)

முகத்தைக்கடுமையாக வைத்துக்கொள்ளல்—முகத்தை உம்மென்று வைத்துக்கொள்ளல்

மூகத்தைக்காட்டல்—தோன்றுதல்; முகத்திரையை விலக்கி முகத்தைப் பிறர்க்குக் காட்டுதல்

முகத்தைக் கெடுத்தல்—முகஅழகைக் கெடுத்துக்கொள்ளல்

முகத்தைக்கைகளில்தேக்கிக்கொள்ளல்—வருத்தமிகுதியின் போது முகத்தைக் கைகளில் புதைத்துக் கொள்ளுதல்

முகத்தை (எட்டு) க்கோணலாகவைத்திருத்தல்—அதிருப்தி, வெறுப்பு, வருத்தம் (இவற்றைக் காட்ட முகத்தைச் சுருக்கிக்கொண்டிருத்தல்)

முகத்தைச்சிணுக்கிக்கொள்ளல்—சிணுங்குதலை முகத்தில் காட்டுதல்

முகத்தைச்சிரித்தபடிவைத்துக்கொண்டிருத்தல்—(நிழற் படம் எடுக்கும்போது)முகத்தில் புன்முறுவலை வரவழைத்து வைத்துக் கொண்டிருத்தல்

முகத்தைச்சுருக்குதல்—முகம் சுருங்குமாறு செய்தல்

முகத்தைச்சுளித்தல்—முகத்தைச் சுருக்குதல் (நந்திக் 45)

முகத்தைச்சுளுக்குதல்—முகத்தைச் சுளித்தல் (படித்த 31)

முகத்தைச்சோகமாகவைத்துக்கொள்ளல்—முகத்தில் துயர குறி மிகுதியும் புலப்படச் செய்தல்

முகத்தைத்திருப்புதல்—தலையைத்திருப்புதல்

முகத்தைத்திருப்பிக்கொள்ளல்—கோபமாக முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொள்ளல்

முகத்தைத்துடைத்தல்—அழுகின்ற கண்ணீரைத் துடைத்தல்; நீரினால் முகத்தைக் கழுவித்துடைத்தல்

முகத்தைத்தூக்கிக்கொண்டிருத்தல்—வருத்தமாயிருத்தல் (சந்திரிகா 55); கோபத்தைக்காட்ட முகத்தை உப்ப வைத்துக்கொண்டிருத்தல் (புருஷர்களுக்கு 106)

முகத்தைத்தூக்கிப் பார்த்தல்—தலையை நிமிர்த்திப் பார்த்தல்

முகத்தைத்தூக்கிவைத்துக்கொண்டிருத்தல்—முகத்தில் வெறுப்பைக்காட்டுதல்

முகத்தைத்தொங்கப்போடல்—அதிருப்தி அல்லது வருத்தத்தை முகக்குறிப்பால் காட்டுதல்

முகத்தைத்தொங்கவிட்டுக்கொண்டிருத்தல்—வருத்தமா
யிருத்தல்; அவமானத்தால் தலைகுனிந்திருத்தல்

முகத்தைநீளமாகவைத்துக்கொள்ளல்—முகத்தைத்தூக்கி
வைத்துக் கொண்டிருத்தல்

முகத்தைநோக்குதல்—முகத்தைப்பார்த்தல்

முகத்தைப்பார்த்தல்—முகம்பார்த்தல்

முகத்தையேபார்த்துக்கொண்டிருத்தல்—அழகியமுகத்தை
இடைவிடாது பார்த்துக்கொண்டிருத்தல்

முகத்தைமலரவைத்துக்கொள்ளல்—முகத்தில் மலர்ச்சியை
வரவழைத்துக் கொண்டிருத்தல்

முகத்தைமறைத்துக்கொள்ளல்—துணி அல்லது முகமூடியால்
முகத்தை மறைத்துவிடல்

முகத்தைமினுக்குதல்—முகவெண்ணெய், முகச்சுண்ணம்
இவற்றால் முகத்தைப் பளபளப்பாகச் செய்துகொள்ளல்

முகத்தைமூடிக்கொள்ளல்—முகத்தை மறைத்துக் கொள்ளல்

முகத்தைவக்கிரமாகவைத்துக்கொள்ளல்—முகத்தைக்
கோணலாக வைத்துக்கொள்ளல் (நாடகமே 81)

முகத்தைவிகாரமாய்வைத்துக்கொள்ளல்—முகத்தை
வக்கிரமாக வைத்துக்கொள்ளல்

முகத்தொளி—முகவொளி (பெ 2–10–57)

முகத்தோடுமுகம்அணைத்தல்—முத்தமிடல்

முகத்தோற்றம்—முகவமைப்பு, முகவெட்டு, முகப்பொலிவு

முகதரிசனங்காணல்—நேரில் பார்த்தல் (தனி 3–264)

முகதரிசனம்—பெரியோரின்முகத்தைப்பார்த்தல்

முகதரிசனம்செய்தல்—பெரியோரின் முகத்தைப் பார்த்தல்

முகதலை—மகளிரின் சீலை முன்றானை

முகதலை(ப்பு)—முதலில் நெய்யுஞ் சீலைத் தலைப்பு.

முகதாட்சிணியம்—முகத்தாட்சணியம்

முகதேஜசு—முகவிலாசம்

முகந்தருதல்—கருணைகாட்டுதல்

முகந்திரிதல்—முகம்மாறுதல் (கு 90)

முகந்திருத்தல்—முகத்திற்கு ஒப்பனை செய்தல் (தனி 1-53)

முகந்திருத்துதல்—வாட்டந்தவிர்த்தல்; தேற்றுதல்

முகந்திருப்பிக்கொள்ளல்—முகத்தைத் திருப்பிக்கொள்ளல்

முகந்துடைத்தல்—முகத்தைச் சவரம் செய்தல் (சாச)

முகநட்பாகப்பேசல்—அகநட்பின்றி வெளிக்கு நட்புடையவன் போல் பேசல்

முகநட்பு—முகத்திற்குமுன்காட்டும் நட்பு; வெளி நட்பு

முகநாடி—முகத்திலும் மூக்கிலும் ஓடும்நாடி பார்த்து நோய்த்தன்மை கூறும்நூல்; முகக்குறி; முகத்தோற்றம்; முகவியல்பு

முகநோக்கல்—(முகம்) பார்த்தல் (பெரிய 124)

முகநோக்குதல்—நோக்கெதிர் நோக்குதல் (இலக் வி 580 உரை)

முகப்படுதல்—முன்தோன்றுதல்

முகப்பந்தல்—வீட்டின்முன்போடும் பந்தல்

முகப்பரு—முகக்குரு; முகத்தில்தோன்றும் சினைப்பு அல்லது பரு

முகப்பழக்கம்(வைத்திருத்தல்)—அறிமுகம்(செய்துவைத் திருத்தல்)

முகப்பளிங்கில் மனச்சாயம்விளங்கும்—'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம் கடுத்ததுகாட்டும் முகம்'

முகப்பாக்கு—பாகின்மேற்பகுதி

முகப்பிரகாசம்—முகவிலாசம்

முகப்பிரியம்—முகத்தில் காட்டும்அன்பு; மரியாதை

முகப்பு—தலைப்பு; முற்பகுதி; வீட்டுமுன்கூரைக்கட்டிடம்

முகப்புகழ்ச்சி—முகத்துதி, முகமன்

முகப்புகழ்ச்சிசெய்தல்—முகமன்கூறுதல்

முகப்புற்று—முகத்தில்கட்டிவெடிக்கும் நோய்வகை

முகப்பூச்சு—முகத்தில் பூசிக்கொள்ளல்; முகமன்; முகத்தில் தடவும்பொடி; வெளிப்பகட்டு

முகப்பொடி—முகப்பவுடர், முகத்திற்கிடும் வாசனைச் சுண்ணம்

முகப்பொருத்தம்—முகராசி; முகநட்பு

முகப்பொலிவு—முகமலர்ச்சி, முகக்களை

முகப்போதரவு—இச்சகம், முகமன்

முகபங்கம்—இலச்சை, நாணம்; அவமானம்

முகபடம்—(மகளிர்)மேலாடை (தி513); மூடும் அலங்காரத்துணி (தி 354)

முகபடாம்—யானையின் முகப்போர்வை (தாயுமௌன 1)

முகபரிச்சயம்—முகப்பழக்கம்

முகபாடஞ்செய்தல்—உருச்செபித்தல்

முகபாடம்—வாய்ப்பாடம்

முகபாவம்—முகக்குறை

முகபூரணம்—தாராளமுகம்; முகக்களை

முகபூஷணம்—வெற்றிலை, தாம்பூலம்

முகம்அமைதியாயிருத்தல்—முகம்உணர்ச்சியைக் காட்டாதிருத்தல்

முகம்அழகுகுன்றல்—முகத்தின்அழகு குறைதல்

முகம்அழுதுவடிதல்—முகத்தில்அமைதி குலைந்து கவலை மிகுந்திருத்தல்

முகம்ஆறுடையபெருமான்—முருகன்(வான்மி. பு. கட. 9.)

முகம்இடுங்கிப்போதல்—முகம்குன்றிப்போதல்

முகம்இல்லை—தைரியம் இல்லை(இங்கேவருவதற்கு அவனுக்கு முகம் இல்லை)

முகம்உப்பியிருத்தல்—முகம்பருத்திருத்தல்; முகம் வீங்கியிருத்தல்

முகம்உவகையில் ஒளிவிடல்—முகம் மகிழ்ச்சியால் பிரகாசித்தல் (அன்னே—ஜா)

முகம்ஊதித்தோன்றல்—நோயால் முகம் வீங்கியிருத்தல்

முகம்எடுத்துப்பார்த்தல்—அண்ணுந்து பார்த்தல்; முகம் நிமிர்ந்துபார்த்தல் (மங் காதல் 98)

முகம்ஒட்டியிருத்தல்—முதுமையால் கன்னம்ஒட்டியிருத்தல் (இருநண்பர்கள் 90)

முகம்ஒற்றிமுத்தமிடல்—முகத்தோடு முகத்தை ஒற்ற வைத்துமுத்தமிடல் (பாரதி)

முகம்கடுகடுப்பாகக்காணப்படல்—முகம்உர்ரென்றிருத்தல்

முகம்கருகல்—முகம் வாடுதல்; முகம் கறுப்புநிறமடைதல்

முகம்கலங்கியிருத்தல்—முகத்தில் கலக்கம் காணப்படுதல்

முகம்கவிழ்ந்துநிற்றல்—அவமானம் அல்லது வெட்கத்தால் தலேகுனிந்துநிற்றல்

முகம்கழுவுதல்—முகத்தைக் கழுவுதல்

முகம்கறுத்துவிடல்—வெய்யில் அல்லது நோய்மிகுதியால் முகம் கறுப்புநிறமடைதல்

முகம்கன்றிப்போதல்—முகம்கறுத்துவிடல்

முகம்குப்பென்றுவியர்த்தல்—முகம்விரைவில் மிக வியர்த்து விடல்

முகம்குளுப்பைதட்டுதல்—(காமாலேயில்) முகம்வீங்கிப் போதல்

முகம்கொடுத்துப்பேசுதல்—முகம்பார்த்து அமைதியாகப் பேசுதல்

முகம்கொடூரமாகக் காட்சியளித்தல்—முகத்தில்கடுமை மிக்கிருத்தல்

முகம்கொடூரமாகமாறுதல்—முகம்கொடியஉணர்ச்சியைக் காட்டுதல்

முகம்கொதித்துக்கொண்டிருத்தல்—கோபக்குறிப்பு முகத்தில் விளங்குதல்

முகம்கோடுதல்—முகம்மாறுபடுதல் (முத்துக் பித 7–2); சாய்தல் (அரி 11–43)

முகம்கோணிப்போதல்—அவமானம் அல்லதுவெட்கத்தால் தலைக்குனிவு ஏற்படுதல்

முகம்சவக்களைதட்டியிருத்தல்—முகம்உணர்ச்சியின்றி வெளிறிப்போதல்

முகம்சிவத்தல்—சினம்அல்லது வெட்கத்தால் முகம் சிவந்து போதல்

முகம்சிறுத்துப்போதல்—வெட்கம், அவமானம் முதலிய வற்றால் முகம் சுண்டிப்போதல்

முகம்சுண்டிப்போதல்—முகம்சுண்டிவிடல் (மூவர் 76)

முகம்சுண்டிவிடல்—முகம்சிறுத்துப்போதல்

முகம்சுருக்குதல்—முகக்தைச்சுளித்தல்

முகம்சுருங்குதல், சுருங்கிவிடல்—முகம்சிறுத்துப்போதல்

முகம்சுளித்தல்—வெறுப்பு, சினம் முதலியவற்றைக் காட்ட முகத்தைக்கோணலாக்குதல்

முகம்செத்துப்போதல்—அவமானத்தால் முகம் களையிழத்தல்

முகம்செல்லல்—முன்புசெல்லல் (க 6–1962; கு923)

முகம்சோகத்தால்சாம்பிவிடல்—முகம் பெருந்துக்கத்தால் மிகவாடிவிடல்

முகம்தருதல்—திருநோக்கம் தருதல் (திருவா 378)

முகம்திருப்பல்—முகத்தைத்திருப்புதல்; வெறுப்பைக் காட்டுதல்

முகம்துன்பத்தில் தோய்தல்—துன்பமிகுதியை முகம் காட்டுதல்

முகம்தொங்கிப்போதல்—துயரமிகுதியால் அல்லது அவமானத்தால் முகம்வாடித் தளர்ந்திருத்தல்

முகம்நான்குடையான்—பிரமன்

முகம்நிமிர்தல்—தலைநிமிர்தல்

முகம்நோக்கல்—பார்த்தல்; கருணைசெய்தல்

முகம்பசப்பூர்தல்—முகம்பசுமைநிறமடைதல் (கலி 100–18)

முகம்பண்ணல்—அலங்கரித்தல் (திவ் 3042 உரை)

முகம்பலவிதக்கோணல்களாக மாறுதல்-முகம்பலவகையாகச் சுருங்குதல் (பார்வதி 102)

முகம்பழகல்—அறிமுகம் செய்துகொள்ளல்; நட்புடன் பழகுதல்

முகம்பளபளஎன்றிருத்தல்—முகம் பிரகாசமாக இருத்தல்

முகம்பனிபடைக்கும்—முகம் துக்கத்தையடையும் (திவ் 1183 உரை)

முகம்பார்க்கப்பெறல்—குழந்தைபிறர்முகம் பார்த்து அடையாளமறிந்துகொள்ளல்

முகம்பார்க்குங்கண்ணுடி—முகத்தைப்பார்க்க உதவும் கண்ணுடி

முகம்பார்த்தல்—கண்பார்த்தல், இரங்குதல், அருள்புரிதல்; முகத்தைநோக்குதல்; (குழந்தை) முகம்பார்த்து அடையாளமறிந்து கொள்ளல்; நேர் நோக்குதல்; அன்புசெய்தல்

முகம்பார்த்துக்கொளல்—முகஅடையாளமறிந்து கொள்ளல்

முகம்பார்வை—கண்ணுடி (சாச)

முகம்பிரதிபலித்தல்—உள்ளத்துணர்ச்சியை முகம் பிரதிபலித்துக்காட்டுதல்

முகம்புகுதல்—அருளுக்காகஎதிர்சென்று நிற்றல் (நாலடி 306); தலைகாட்டுதல் (நாலடி–303); முகம் மலர்தல் (தொல் பொ 152)

முகம்புடைத்தல்—துக்கக்குறியாக முகத்திலடித்துக் கொள்ளல்

முகம்புதைத்தல்—முகத்தைமூடுதல்

முகம்புன்னகைபூத்துமலர்தல்—முகம் புன்னகையால் பொலிவுற்று விளங்குதல்

முகம்பெறுதல்— தோன்றுதல் (சிந் 1404)

முகம்பேயறைந்தமாதிரி இருத்தல்—துயரமிகுதியால் முகம் சோபையிழந்து காணப்படல்

முகம்பொலிதல்—முகம் மலர்தல்; முகம் அழகுடன் விளங்குதல்

முகம்மலர்தல்—முகப்பொலிவு கொள்ளல்

முகம்மறைத்தல்—முகத்தைமறைத்துக் கொள்ளல்

முகம்மறைதல்—ஆள்மறைதல்

முகம்மாறுதல்—முகங்கோணுதல்

முகம்மினுக்குதல்— முகத்தை மினுக்குதல்

முகம்ரத்தம்செத்துவிட்டது—முகம் வெளுத்துப்போய் விட்டது (பே)

முகம்வழித்தல்—முகச்சவரம்செய்தல்

முகம்வாட்டமாகஇருத்தல்—முகம்கவலையை வெளிப்படுத்தல்

முகம்வாட்டமுற்றிருத்தல்—முகம்வாடியிருத்தல் (நாடகமே 129)

முகம்வாடல்—முகம் வாடுதல்; பொலிவின்றியிருத்தல்

முகம்வியர்த்தல்—முகத்தில் வியர்வைதோன்றுதல் (சி16–31; திவ் 135)

முகம் விளக்கமுறல்—முகம் பொலிவுறல்

(அழுதழுது) முகம்விங்கல்—முகம்விக்கமுறுதல்

முகம்வெந்துபுண்ணுதல்—தீப்பட்டு முகம் புண்ணுதல்

முகம்வெளிறிப்போதல்—முகம் வெளுத்துப்போதல்; மரணக் குறியுள் ஒன்று

முகம்வெளுத்தல்—அவமானத்தால் முகம் வெளுத்துப் போதல்

முகம்வேருதல்—(பயத்தால்) முகம் மாற்றமடைதல்

முகம்வேறுபடுதல்—வெறுப்புக் குறிப்பு முகத்தில் தோன்றுதல்

முகம்வைத்தல்—முகங்காணுதல்

முகமண்டகம்—முகமண்டபம் (கல்)

முகமண்டபம்—முன் மண்டபம்; கோயிலின் முன் மண்டபம் (சாச)

முகமண்டலம்—முகம்

முகமதி—மதிமுகம்

முகமயக்கு—பார்வையால் மயக்கும் மாயவித்தை

முகமலர்ச்சி—முகத்தில் மகிழ்ச்சி தோன்றுதல்

முகமலர்தல்—முகம் மலர்தல்

முகமலர்வு—முகமலர்ச்சி (இரா சிந்து ப 9)

முகமலரோடுமுகமலர்ஒற்றுதல்—முகத்தோடு முகம் சேர்தல்; முத்தமிட்டுக்கொள்ளல்

முகமழிப்பு—முகச்சவரம்

முகமற்கிளவி—முகமன் (பெ 2–10–14)

முகமறிதல்—அறிமுகமாதல் (இலக் வி 555 உதா)

முகமறியாதஆட்கள்—புதிய ஆட்கள்

முகமறுத்தல்—கண்ணோட்டமின்றிப் பேசுதல்; கணக்காய்ப் பேசுதல்

முகமன்—உபசாரம் (கல்லா 13 ); துதி, முகத்துதி

முகமாதல்—உடன்படுதல் (சிந் 1120 உரை)

முகமாயக்காரி—முகவசிகரமுள்ளவள்

முகமாயம்—முகவசிகரம் (திரு 199)

முகமாளிகை—முகத்தையுடைய மாளிகை, முன்புறம் (திவ் 1183)

முகமாற்று—முகமயக்கு

முகமினுக்குதல்—முகத்தை அலங்கரித்தல் (தி 1016)

முகமுகங்கள்நோக்குதல்—முகமுகம் பார்த்தல் (சிந் 1808)

முகமுகம்பார்த்தல்—முகத்தை முகம் பார்த்தல் (திருவாலவா 29–1)

முகமுகமாய் (இருத்தல்)—நேருக்கு நேராய்; முகத்துக் கெதிரே (இருத்தல்)

முகமுளரி—முகத்தாமரை

முகமுறித்தல்—தாட்சிணியமின்றித் துன்புறுத்தல்; கோபமூட்டுதல்

முகமுறிதல்—கண்ணோட்டங்கெடுதல், வெறுப்படைதல், மனம்நோதல்

முகமுறியப்பேசுதல்—(பிறர்) முகம் சுண்டுமாறு பேசுதல்

முகமுறிவு—கண்ணோட்டமின்மை; வெறுப்பு

முகமுன்னிலை—நேர்முகம்

முகமூடி—முகத்தை மூடுவது; முகத்திரை; முக்காடு; பிறக்கும்போது குழந்தையின் முகத்தை மூடியுள்ள பை

முகமெடுத்தல்—தலைநிமிர்தல் (குற் பு 2–12)

முகமொட்டுதல்—சேவல்களைச் சண்டைக்கு எதிர்முகமாக்குதல்

முகராசி—அதிர்ஷ்டம்

முகரூபம்—முகவெட்டு; முகச்சாயம், முகத்தின் அழகு

முகரோமம்—மீசை, (மனுமுறை; சிவஞான)
முகலட்சணம்—முகவழகு
முகவங்கு—முகத்தில் படருந் தேமல்
முகவசனம்—வாய்ச்சொல்
முகவசியம்—முகத்தினழகு
முகவசிகரம்—முகவசியம்;அன்புப்பார்வை;கவர்ச்சிப்பார்வை
முகவட்டம்—முகமண்டலம்
முகவட்டு—விலங்கின் நெற்றியுச்சியில் அணியும் அணிவகை (திருவி 29–15)
முகவடிவு—முகஉருவம், முகஅழகு (பாரதி 4–1–14–2)
முகவணை—முகப்பு, வண்டியின்முகப்பில் வண்டிக்காரன் இருந்து ஓட்டுமிடம்
முகவணைக்கல்—போதிக்கல்; தூண்மேல்உள்ளது (திவ் 2708 உரை)
முகவமைப்பு—முகவெட்டு
முகவரி—மேல்விலாசம்
முகவலிப்பு—முகவாத சன்னி
முகவாசச்செப்பு—முகவாசம் வைக்கும் பரணி (சிந் 838)
முகவாசம்—வெற்றிலை (சிந் 1055); வாசனைக்காக வாயிலிட்டுக் கொள்ளுதற்குரிய தக்கோலம், தீம்பூ, இலவங்கம், கருப்பூரம், சாதி என்ற ஐவகை நறுமணப் பண்டங்கள் (சிந் 838 உரை); தூபம் (திருவி 42-26); முகப்பழக்கம்; பிணத்தின் முகத்தைமூடும் ஆடை
முகவாசல்—தலைவாசல்
முகவாசை—முகப்பிரியம்
முகவாட்டம்—முகக்கோட்டம்; முகத்தில் தோன்றுஞ் சோர்வு (அருட் 9–4–9)
முகவாடல்—முகவாட்டம்

முகவாத்தியம்—கையால் வாயை அடித்து இசையொலி எழுப்புதல்

முகவாதசன்னி—முகத்தைக் கோணச்செய்யும் சன்னி வகை

முகவாதம்—ஒருநோய்

முகவாய்—முகவாய்க்கட்டை, மோவாய்

முகவாய்க்கட்டை—முகவாய்

முகவார்—குதிரைமுதலானவைகட்கு முகத்திலிடுங் கயிறு

முகவிச்சகம்—முகமன், முகத்துதி

முகவிச்சை—முகத்துதி

முகவிம்பம்—முகமண்டலம் (தக்க 10)

முகவிலாசம்—முகச்சிறப்பு, முகப்பொலிவு

முகவிழி—முகத்தில் விழித்தல்

முகவிழுப்பு—முகவாத சன்னி

முகவீணை—ஒருவகை இசைக்கருவி (சிறு உலா 89)

முகவு—முகவொளி (ச 97-6)

முகவுண்ணிபிடுங்குதல்—முகமன்கூறுதல்

முகவுரை—நூன்முகம், பாயிரம், மேல்வாசகம்

முகவெட்டி—சோழர் ஆட்சிக்காலத்திலே அரசாங்கத்துறைத் தலைவன்

முகவெட்டு—முகவழகு (பார்வதி 88); முகவசீகரம்

முகவெண்டலை—முகம்மட்டும் வெள்ளைநிறமாயிருக்கும் மாட்டுக்குற்றம் (மாட்டு வா 15)

முகவெண்ணெய்—முகத்தில் பூசிக்கொள்ளும் வெண்ணெய் (snow)

முகவெழுத்து—முகத்தில் எழுதிப் புனையும் அலங்காரம்

முகவெள்ளைப்பருந்து—ஓர் பருந்து

முகவேலை—முகப்பணி; முகச்சவரம்

முகவேறுபாடு—முகமாறுபாடு; உணர்ச்சி வேறுபாடு காட்டும் முகக்குறிப்பு

முகவை—கண்கயில்

முகவொளி—முகச்சோதி (திவ் 3480)

முவாலே—அரசர் முதலியோர் எழுதும் திருமுகம் (பாரத சம்பவ 43)

முகறக்கட்டை—முகம் (வசைச்சொல்)

முகனமர்கிளவி—முகமன் (பெ 4-8-6)

முகனெழிதல்—கண்ணோட்டம் ஒழிதல் (நான்மணிக் 60)

முகஜாடை—சாயல் (அம்மணி 43)

முகஸ்துதி—எதிர் நின்று கூறும் புகழ்ச்சிமொழி

முகஸ்தோத்திரம்—முகத்துதி

முகாக்கினி—கட்டையில் வைத்த பிணத்தின் வாயிலிடும் நெருப்பு

முகாம்புயம்—முகத்தாமரை (வெங் கோ 33; வாஞ் பு 51)

முகாரவிந்தம்—முகத்தாமரை

முகாலம்பனஞ் செய்தல்—முகமலர்தல்

முலைமுகம்—முலைநுனி (சீகாளத் 7-18; அரி 4-288); முலையிடம் (சி பதி 34)

முளரிவாள்முகம்—தாமரை போன்ற ஒளி பொருந்திய முகம்

முறுவல்பூத்தமுகம்—புன்முறுவல் பொலிந்த முகம்

முனைமுகம்—படை முகம் (ஆத்தி 91)

மூஞ்சிகாட்டுதல்—எளிமைகாட்டுதல்

மூஞ்சிச்சுவர்—நெற்றிச்சுவர் (கட்டட நாமா 15)

மூஞ்சி சுண்டுதல்—முகத்தைச்சுளித்தல்; முகங்கடுத்தல்

மூஞ்சியாலடித்தல்—உடன்படாமைக் குறிப்புத் தோன்ற எரிந்துவிழுதல் (பே)

மூஞ்சியை இழுத்துக்கொண்டிருத்தல்—சிணுங்கிக் கொண்டிருத்தல்

மூஞ்சிவீங்கியிருத்தல்—(அழுதழுது) முகம் உப்பியிருத்தல் (பார்வதி 142)

மேகமுகம்—வில் (வன்னி பு 16–4)

மேல்முகஎரி—மேல்நோக்கி எரியும் நெருப்பு (ச 345–9)

மேற்குமுகம்—மேற்குப்பக்கம்

மைம்முகம்—ஆட்டின்முகம் (தணி மு. பி. த.7)

மைம்முகன்—முசு; குரங்கு

மோழைமுகம்—பன்றி

யாளிமுகம்—யாளியின் முகம்போல அணிகளில் அமைக்கப் பட்ட முகப்பு

யானைமுகத்தவன்—விநாயகர்

யானைமுகத்தான்—விநாயகர்

யானைமுகவோடம்—யானையுருவமான முகப்புள்ள படகு (சி 13–176 உரை)

யுத்தமுகம்—போர்முனை

ரணமுகம்—போர்க்களம் (தி 169)

வடக்குமுகமாய்—வடக்குப் பக்கமாக

வடமுகம்—வடக்குத்திக்கு (திவ் 2354)

வடவாமுகம்—வடவைத்தீ

வடவாமுகாக்கினி—பெண்குதிரை முகத்தின் வடிவோடு கடற்குள் தங்கியிருந்து யுகாந்தத்தில் மேலேகிளம்பி உலகத்தை எரித்து விடுவதாகக் கருதப்படும் தீ (தக்க 67 உரை)

வதனக்களை—முகக்களை, முகமலர்ச்சி (பாஞ்சாலி 227)

வதனபங்கயம்—முகத்தாமரை (குற் சி வெ 87)

வதனமண்டலம்—முகமண்டலம்

வதனம்புயம்—முகாரவிந்தம் (கந் அந் 64)

வலிமுகம்—குரங்கு (பெருந் பு 2–17; கல்லா 68–26)

வலீமுகம்—குரங்கு (வில்லி பதின் மூ 37)

வறுமுகம்—நம்பிக்கையிழந்த முகம் [இரட்ச 14–107]

வனசமலர் வதனம்—தாமரைபோன்ற முகம் [குன்றக் 154]

வாடித்திரைந்த முகம்—[முதுமையால்] வாடிச் சுருங்கிய முகம்

வாடிய முகம்—வருத்தத்தால் பொலிவிழந்த முகம்

வாரிச முகம்—தாமரை முகம் [பாரத 20–54]

வாள்முகம்—ஒளி பொருந்திய முகம் [கலி 100–18]

வான்முகம்—மேகம், மழை [இரட்ச 14–17]

விடியாமுஞ்சி—திருப்தி கொள்ளாதவன் [பே]

விடைமுகன்—காளையின் முகங்கொண்ட நந்தி [கந் விடை 23]

விண்முகப் புலவர்—தேவர் [கௌ 11–2]

விண்முகம்—ஆகாயம் [வையா பள்]

விதுமுகம்—சந்திர மண்டிலம் [திருவி 6–12; சுவாமி பித 33]

விரும்பிய முகத்தன்—அன்பால் மலர்ந்த முகத்தன் [பு 3978]

விளக்கெண்ணெய் குடித்ததுபோல் முகத்தை வைத்துக் கொண்டிருத்தல்—[வெறுப்பினுல் முகத்தைப் பல கோணங்களாக வைத்துக்கொண்டிருத்தல் [நாடகமே 130]

வெளிமுகமாக—வெளிப்படையாக

வெளிறியமுகம்—வெளுத்த முகம்

வெற்றிக்களை முகத்தில் துலங்கல்—வெற்றியினுல் ஏற்படும் பொலிவு முகத்தில் தோன்றி விளங்குதல்

வேழத்திருமுகத்தான்—விநாயகன்

வேழமுகக் கற்பகம்—விநாயகர் [முத்தக 15]

வேற்றுமுகம்—அன்னிய முகம்; வெறுப்பைக் காட்டும் மாறுமுகம்

ஸ்ரீமுகம்—பெரியோரின் திருமுகம், கடிதம்

# 4. கண்.

அக்கினிக்கண்—அக்கினிபோலக் கண்சிவந்துசிறுகுருக்களை எழுப்பி எரிச்சலுண்டாக்கும் நோய்

அக்கினிக்கண்ணன்—செங்கண்ணன்

அகக்கண்—உட்கண்; ஞானம், மனம்

அகக்கண் இல்லாதவன்—அறிவில்லாதவன்

அகஞ்சிவந்த கண்—உட்புறஞ் சிவந்தகண் (திவ் 2653)

அகத்திற் கண்கொண்டு பார்த்தல்—அறிவால் ஆராய்ந்து பார்த்தல் (திருமந்)

அகத்துக்கண்—உட்கண் (கலங்விமா 130)

அங்கண்—குளிர்ந்த அருள்நோக்கு (சுவாமி பித 10)

அங்கணன்—கண்ணழகுடையவன்;
கருணை நோக்குடையவன் சிவன்

அங்கணாளன்—கண்ணோட்டமுடையவன் (கலித்144-70)
சிவன் [காஞ்சிப்-சிவபுண் 33]

அங்கணி—பார்வதி (சங்அக)

அங்கணேற்றல்—துயிலுணர்தல் (பெ வத்தல 7-92!

அங்கமலக்கண்—அழகிய தாமரை போன்ற கண்

அங்கயற்கண்—அழகிய கயல்போன்ற கண்

அங்கயற்கண்ணமுது—பார்வதி

அங்கயற்கண்ணி—அழகிய கயல்போன்ற கண்ணை உடையவள்; பார்வதி.

அசட்டுக்கண்—அசட்டுத்தனம் காட்டும் கண்
அஞ்சனக்கண்—மைக்கண்
அஞ்சனந்தோய் கண்—மைதிட்டப்பட்ட கண்
அஞ்சனவிழி—மைதீட்டியகண்கள் (பிரபு 22-41)
அட்சமணி—உருத்திராக்கம்
அட்சிகோபம்—கண்சிவப்பு
அடைக்கண்—கண்ணிமைகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொள்ளும்நோய்
அத்திரக்கண்—வேல்விழி
அந்தக்கண்—உள்ளான்கண், குழிந்தகண்
அம்பகநுதலினன்—நெற்றிக்கண்ணன்; சிவபிரான் (திருவி 53-27)
அம்புக்கண்—அம்புபோன்று கூரிய கண்
அம்புவிழி—அம்புக்கண்
அயிற்கண்—கூரியவேல் போன்ற கண்
அருட்கண்—கிருபாநோக்கம், அருட்பார்வை (குன்றக்-438) கடைக்கணோக்கம்
அரிநெடுங்கண்—இரேகை படர்ந்த நீண்டகண்
அருட்கண்ணுற்பார்த்தல்—கருணையோடு பார்த்தல்
அருள்ஒழுகுகண்—அருள்விழி
அருள்விழி—அருட்கண்
அரைக்கண்—கண்திறந்ததும் திறவாததுமான நிலை; அரைக்கண் பார்வை
அரைக்கண்போடல்—(கால்நடைகளைப்போலப்) பாதிதிறந்த கண்ணோடு பார்த்தல்
அரைக்கண்மூடல்—பாதிக்கண்மூடிப் பாதிதிறந்திருத்தல்
அல்லிவிழி—தாமரைக்கண்
அலக்கண்—துன்பம் (க 6-1543; 3-870, 959)
அவிகண்—ஒருகண்ணோய்; குருட்டுக்கண்

அவிந்தகண்—குருட்டுக்கண்

அழற்கண்ணன்—அக்கினிக்கண்ணன் (சிவபிரான்)

அழிகண்—குருட்டுக்கண்; பார்வையைக்கெடுக்கும் ஒருவகைக் கண்ணோய்

அழுகண்—கண்ணோய்வகை, எப்போதும் கண்ணினின்று நீர்வடிந்துகொண்டிருக்கும் கண்ணோய்

அழுகைக்கண்ணீர்—துக்கக்கண்ணீர்

அழுங்கண்—அழுதுகொண்டிருக்குங்கண்

அழுதகண்ணும் சிந்தியமூக்குமாயிருத்தல்—அழுது கொண்டேயிருத்தல்

அழுதழுது கண்ணீர்வற்றுதல்—நெடுநேரம் அழுது கொண்டிருத்தல்

அற்புதக்கண்—வியப்பைக்காட்டுவதுபோல் கண்ணால் அபிநயித்தல்

அறிவுக்கண்—ஞானக்கண்

அறிவுக்கண்கொண்டுபார்த்தல்—பகுத்தறிவால் ஆராய்ந்து பார்த்தல்

அனற்கண்—சிவந்தகண்; கோபக்கண்; அழற்சியினல் சிவந்தகண்

ஆந்தைக்கண்—ஆந்தைபோன்ற பெரியகண்

ஆந்தைக்கண்ணன்—ஆந்தைக் கண்ணைப்போல் கண்களை உடையவன்

ஆயிரங்கண்ணோன்—இந்திரன் (மணி 1-26)

ஆயிரநாட்டன்—இந்திரன் (தி 1223)

ஆவல்சொட்டும் கண்கள்—மனத்தின் ஆர்வத்தைக்காட்டும் கண்கள்

ஆனந்தக்கண்ணீர்—மகிழ்ச்சிக்கண்ணீர்

ஆனைக்கண்—யானையின்கண்; கனிந்தபழத்தில் விழும் கறுப்புப்புள்ளி
இடக்கண்—இடதுகண்
இடதுகண்—இடக்கண்
இடுகண்—பொய்க்கண்
இடுகுகண்—இடுங்கியகண் (க 3-829)
இமைக்கண்—சிமிட்டுக்கண்
இமைதிறந்தகண்—விழித்தகண்
இரத்தக்கண்—சிவந்தகண்
இரத்தக்கண்ணன்—செங்கண்ணன்; கண்ணோய் உள்ளவன்
இரவில் கண்விழித்தல்—இரவில் தூங்காமலிருத்தல்
இராக்கண்—இரவில் கண் தெரியாத ஒரு நோய்
இருகண்—இரண்டுகண்கள்; ஊனக்கண்ணும் ஞானக் கண்ணும்
இருட்கண்—இருள்சூழ்ந்த பார்வையுடையகண்; குருட்டுக் கண் (திருமந் 1808)
இருண்டவிழி—இருட்கண்
இல்லிக்கண்ணன்—மிகச்சிறிய கண்ணுடையான் கூச்சக்கண்ணுடையான்
இழிக்கண்—பீழைக்கண்; எப்போதும் பீளையும் நீரும் ஒழுகிக் கொண்டிருக்கும்கண்; இமைதிறந்தகண்
இழியற்கண்—இழிகண்
இளிகண்—பீழைக்கண், பொங்கு கண்
இளிகண்ணன்—புளிச்சக்கண்ணன் (தில் 3209, ப்ர)
இளிச்சற்கண்—இளிகண், புளிச்சக்கண்
இளித்தற்கண்—விங்கிப் பீளை ஒழுகுங்கண்
இறைவிழி—உருத்திராக்கம் (தனி 3-737)

இன்கண்—இன்பம் (கு 1152) கண்ணோட்டம் (கலி 37–22)
இன்பவிழிப்புனல்—ஆனந்தக்கண்ணீர் (காஞ்சிப் 7–10)
உகிர்க்கண்—நகக்கண் (தகரா 1–33)
உட்கண்—ஞானம், போதம், உணர்வு
உண்கண்—மைஎழுதியகண் (கு. 1091)
உண்ணோட்டம்—அந்தர் முகதிருஷ்டி (ரமண: மா 99)
உருவவாட்கண்—அழகிய ஒளிவீசும் அல்லது வாள்போன்ற கண்
உவகைக்கண்ணீர்—ஆனந்தக்கண்ணீர்
உழைக்கண்—மான்போன்ற கண்
உழைக்கண்ணாளன்—தோழன்; உடனிருப்போன்
உள்வளைந்தகண்—உள்ளே வளைந்த கண்
உள்ள(ா)ங்கண்—(உட்) குழிந்தகண்
உளக்கண்—மனக்கண்
உளைவுக்கண்—கண்மணியுள் உளைந்துவலிக்கும்ஓர்விதக் கண்ணோய்
உறட்டுக்கண்—வக்கிரக்கண், கலங்கியகண்; சாய்ந்த பார்வையுடைய கண்
உறுகண்—அச்சம்; துன்பம்;நோய்; தரித்திரம்
உறுகண்ணாளர்—தரித்திரர்
ஊசிக்கண்—சிறுகண்; ஊசித்தொளை
ஊற்றுக்கண்—ஊற்றுத்துவாரம், ஊற்றெடுக்குமிடம், மூலம், கண்ணில் நீரொழுகும் ஒருநோய்
ஊன்கண்ணார்—ஊனக்கண்ணையுடைய மனிதர்
ஊனக்கண்—கட்பொறி; குருட்டுவிழி; புறக்கண்; பொய்த் தோற்றம்; பசுஞானம் (சி போ 9–1) பொட்டைக்கண்
ஊனவிழி—முகக்கண் (கலங் வி மா 128)

எட்டுக்கண்விட்டெறிதல்—எங்குந் தன் அதிகாரஞ் செலுத்துதல்

எரிகண்—நச்சுக்கண்; எரிச்சலை உண்டாக்கும் ஒருவகைக் கண்ணோய்

எலும்புக்கண்—எலும்பின் கண்ணறைகள்

எழில்விழி—அழகுமிக்க கண்

எழுச்சிக்கண்ணோவு—கண்கூச்சமுண்டாக்கும்நோய், பீழைக்கண்ணோய்

ஏ-ஏந்துகண்—கூர்மையுடைய கண்

ஒட்டுக்கண்—இமையொட்டும் நோயுள்ளகண்; கண்ணில் எப்போதும் பீளையும்நீரும் சொரியும் ஒருநோய்; பொய்க் கண்

ஒட்டுக்கண்ணாள்—பீளைக்கண்ணை உடையவள்

ஒண்கண்—அழகிய கண் (திவ் 3926)

ஒருக்கண்பிண்டம்—ஒரேகண்ணுடைய பிண்டம்

ஒருக்கணித்தல்—ஒரு பக்கமாய்ச் சாய்தல்

ஒருகண்—சுருங்கியகண்; ஒரேகண்

ஒருகண்ணன்—ஒற்றைக்கண்ணன்

ஒருகண்ணில்எண்ணெயும், ஒருகண்ணில்சுண்ணும்பும் தடவுதல்—இருவரில் ஒருவரிடம் மிக்க அன்பு காட்டுதல்

ஒரு கண்ணுக்குறங்கல்—சிறிது தூங்குதல்; ஒருமுறை அல்லது ஒருதூக்கம் தூங்கல்

ஒருகண்தூங்குதல்—சிறிதுநேரம் உறங்குதல் (நாடகமே 143)

ஒருகண்பறை—ஒருகண்உள்ள பகுவாய்ப்பறை

ஒருகண்பார்வை—ஒரேகண்ணைப் பயன்படுத்தலால் ஏற்படும் மிகத்தெளிவான தோற்றம், ஒற்றைக்கண்ணின் பார்வை

ஒருகண் வைத்திருத்தல்—[ஒருவனைப் பழிவாங்குவதற்காகச்] சமயம் பார்த்துக்கொண்டிருத்தல்

ஒளியிழந்தகண்—குருட்டுக்கண், ஒளிமங்கியகண்

ஒளிவிழி—ஒளிவீசும் விழி

ஒளிவீசும்கண்கள்—ஒளிமிக்க கண்கள்

ஒற்றைக்கண்—ஒருகண்; ஒருகண்பார்வை; மாறுகண்

ஒற்றைக்கண்ணன்—ஒருகண்மட்டும் தெரிந்தவன்; சுக்கிரன்; சாய்ந்தபார்வை உடையவன்

ஒற்றைக்கண்பார்வை—ஒருகண்ணினுற் பார்த்தல்; சாய்ந்தபார்வை, ஒருகண்பார்வை அழிந்து மற்றொரு கண்ணுற் பார்த்தல்

ஒன்றரைக்கண்ணன்—ஒருபக்கம் சரிந்த பார்வையன்

ஒன்றரைக்கண்ணுல்பார்த்தல்—சாய்வாகப் பார்த்தல்

ஓடரிக்கண்—பிறழ்ச்சியும் ரேகையும்உடைய (மகளிர்) கண் (திவ் 276)

ஓர்க்கண்—ஒற்றைக்கண்

ஓரக்கண்—சாய்ந்த பார்வைக்கண்

ஓரக்கண்ணன்—சாய்வான பார்வையுள்ளவன், ஒருகண் பார்வையுடையவன்; பட்சபாதன்

ஓரக்கண்ணுல் பார்த்தல்—சாய்வாகப்பார்த்தல்

ஓலைக்கண்—ஓலைச்சட்டத்தில் விழுந்துளை

கஞ்சமைக்கண்—தாமரைபோன்ற மைதீட்டப்பட்ட கண்

கட்கண்—ஊனக்கண் (திவ்-இயற்பெரிய திருவந்-28)

கட்காமுறுத்தல்—கண்களை விரும்பச்செய்தல் (பெ 3-12-71)

கட்கிலி—கண்ணுக்குப் புலப்படாதவன்

கட்கின்—கண்ணுக்கு இனிமையான

கட்குத்திக்கள்வன்—விழித்திருக்கும்போதே ஏமாற்றுபவன், பக்காத்திருடன்

கட்சத்தி—வேற்கண்—(திருப்பு—1171.)

கட்செவி—கண்ணையே காதாகக்கொண்ட பாம்பு

கட்செவிவெற்பு—அரவகிரி, திருச்செங்கோடு (தி 457)

கட்செவிவேந்தன்—ஆதிசேடன் (தனி 3–270)

கட்சேல்—சேல்மீன்போன்றகண் (தி–1021)

கட்டு—கண்களைஉடையது (திருவி 22–20)

கட்பயில்—கண்சாடை (தி 252)

கட்பரிவு—கண்ணருள் (தனி 3–112)

கட்புலம்—கண்ணென்றபுலம், கண்பார்வை; விழி [க 6-1970 சி பதி–8]

கட்புலமுத்தம்—கண்ணீர்

கட்புலன்—பார்வை, நோக்கம்

கட்புனல்—கண்ணீர் [புன பு 5–25]

கடமையேகண்ணுதல்—கடமைசெய்வதில் மூழ்கியிருத்தல்

கடுங்கண்—கொடுமை, தறுகண்மை [சி 5-55]; கோபப்பார்வை [திருவி 39-17]

கடுங்கணளர்—கொடியோர், வன்கண்ணர்

கடைக்கண்—கடாட்சம், கடைக்கண்ணின் கடைநுனியிடம், வெட்கம் முதலிய காரணத்தால் பார்க்கும்பார்வை, குறிப்போடுசாய்ந்து நோக்குதல்

கடைக்கண்சிவத்தல்—கோபக்குறிப்பு (ச 137-4)

கடைக்கண்ணுலே பார்த்தல்—கண்ணின் கடைப்புறமாகப் பார்த்தல், அருள்செய்தல்; அன்புடன் பார்த்தல்

கடைக்கண்நோக்கம்—கடைக்கண்பார்வை

கடைக்கண்பார்த்தல்—கருணைசெய்தல் (குசே–682)

கடைக்கண்பார்வை—குறிப்போடு சாய்த்துநோக்குதல், அருள்நோக்கம்

கடைக்கண்பார்வைபெறல்—உதவிபெறல்; அருள்பெறல்
கடைக்கண்பிச்சை—காதலர் கடைக்கண்ணுல் பார்த்தல்
கடைக்கணித்தல்—கடாட்சம் செய்தல், கடைக்கண்ணுல் பார்த்தல், கிருபைபுரிதல்
கடைக்கண்ணேக்கு—கடைக்கண்பார்வை
கண் அகன்றசாயல்—காட்சிமிக்கசாயல் (நாலடி 340)
கண் அடித்துக்கொள்ளுதல்—கண் துடித்தல்
கண் அடைதல்—கண்ணுறங்கல் (பட்டினப் 115)
கண் அதிர்ந்துகொள்ளல்—கண்வீங்கியிருத்தல்
கண் அதைத்திருத்தல்—கண்வீங்கியிருத்தல்
கண் அவாத்தக்ககலம்—கண்விரும்பத்தக்க ஆபரணம் (நாலடி 251)
கண் அவிதல்—கண்ஒளி கெட்டுப்போதல்; கண்ணழுகிப் போதல்
கண் அழுகிப்போதல்—கண் அவிதல்
கண் இடனுல்—கண் இடப்பக்கமாகத்துடித்தல்; சகுனக்குறி
கண் இடுங்குதல்—கண்ஒடுங்குதல் (திவ் 971)
கண் இருந்துங்குருடர்—ஊனக்கண் இருந்தும் அறிவுக்கண் இல்லாதவர்
கண் இருள்தல்—பசி, மயக்கம், கடும்பிணி இவற்ருல் கண் இருளடைந்துபோதல் [மன்மத மலர்]
கண் இல்லாதகபோதி—குருடன்
கண் இல்லையா—இரக்கம் இல்லையா?
கண் இன்புறக்காணல் — கண்ணுரக்காணல்
கண் உறை—கண்ணீர்த்துளி (பு வெ 314)
கண்எடுத்துப்பார்த்தல்—முகத்தை நிமிர்ந்துபார்த்தல்; இரக்கத்துடன் பார்த்தல்

கண்எழுதல்—கண்ணுக்கு மைஎழுதல் (கு 1127)
கண்எனப்போற்றுதல்—மிகக்கருத்துடன் போற்றுதல்
கண்ஏணி—மூங்கிலேணி
கண்ஏறுகுளத்தான்—சிவபிரான்; நெற்றிக்கண்ணன் (சூத 1-13.28)
கண்ஒட்டிக்கொண்டுவரல்—கண்ணில் தூக்கம் வருதல்
கண்கட்டி—கண்ணில்உண்டாகும்கட்டி; விக்கம்; கண்ணிமையில்வரும் ஒருநோய்
கண்கட்டிமந்திரம் பண்ணுதல்—கண்ணை மறைக்கும் மந்திரத்தைப் பிரயோகித்தல்
கண்கட்டி (டு) வித்தை—கண்ணைமறைக்கும் ஒருவிதத் தந்திரவித்தை
கண்கட்டு—கண்ணோய்களில் கண்ணுக்கிடும்மருந்துக்கட்டு; கண்ணைக்கட்டுதல், பொத்துதல்; கண்மறைப்புவித்தை; ஒருவகை விளையாட்டு
கண்கட்டுக்காசம்—கண்ணில் ஒருகுற்றமும் ஏற்படாமலேயே கண்ணைக்கட்டியதுபோல் பார்வையைக் கெடுத்துக் குருடாக்கும் ஒருநோய்
கண்கட்டுச்சாலம்—கண்கட்டுவித்தை
கண்கட்டுதல்—கண்ணைக்கட்டிவிடுதல்; மந்திரத்தால் கண்ணைமறைத்தல் (ராமநா 28)
கண்கடை—கடைக்கண்
கண்கண்டதெய்வம்—கண்ணால் காணும் தெய்வம்
கண்கண்டமருந்து—திண்ணமாய்ப்பயனளிக்கும் மருந்து
கண்கண்ணாடி—மூக்குக்கண்ணாடி (பே)
கண்கண்ணி—குறுங்கண்ணி; சிறுகண்ணி (திணை நூற் 21)
கண்கயில்—உடைத்த தேங்காயின் மேல்மூடி; கொட்டாங்கச்சி

கண்கரித்தல்—கண்ணெரிவு; பொருமை; அனுதாபம் காட்டல்

கண்கரிப்பு—உடம்பின் சூட்டினுல் கண்ணில் ஏற்படும் வலி

கண்கல்—கண்ணுக்குள்ளிருக்கும் கல்லைப்போன்ற ஒரு கெட்டியான பொருள்; கண்ணில் தங்கிநின்று துன்புறுத்தும் பொருள்களை வெளிப்படுத்துவதற்காகப் பயன்படுத்தும் ஒருவகைக் கிளிஞ்சற்கல்

கண்கலக்கங்கொள்ளல்—கண்கலங்கப்பெறல் (கோடீச் கோ 274)

கண்கலக்கம்—துக்கமிகுதியால் கண்ணீர்விடுதல்; வருத்தம் (தாயு பராபரக் 261); கண்ணுறுதுன்பம்

கண்கலங்கஅடித்தல்—பிறருக்குப் பெருந்தொல்லை கொடுத்தல்

கண்கலங்கஅழுதல்—கண்விங்குமாறு அழுதல்

கண்கலங்கல்–துக்கம், வருத்தம் முதலியவற்ருல் அதிகமாகக் கண்ணீர்விடல்; கண்ணில்காயம் முதலியவற்ருல் இரத்தங்கட்டல்

கண்கலங்கவைத்தல்—பெருந்தொல்லைகொடுத்துப் பிறர் அழுமாறு செய்தல்

கண்கலங்காமல் பார்த்துக்கொள்ளல்—மனைவி, குழந்தை முதலியோரை அழாமல் பார்த்துக்கொள்ளல்

கண்கலங்கிநிற்றல்—மிகவும் வருத்தமுற்றிருத்தல்

கண்கலங்கிவிடல்—பெருந்துயரநிலை ஏற்பட்டுவிடல்

கண்கலங்குதல்—தூசிமுதலியன விழுதலால் கண்கலக்க மடைதல்; வருந்துதல்; அழுதல் (திவ் திருவாய் நூற் 39)

கண்கலத்தல்—ஒருவரைஒருவர் பார்த்தல்; எதிர்ப்படுதல், எதிர்முகமாதல் (சிந் 2545)

கண்கலவி—காதற்குறிப்போடு முதன்முறை தலைவனுந் தலைவியுங் காணுதல் (ஈடு 5-3ப்ர)

கண்கலிக்கம்—கண்ரோகம்

கண்கலுழ்தல்—கண்ணீர்விட்டழுதல் (காசிகண் 13-20)

கண்கவர்வனப்பு—கண்ணைக்கவரும் பேரழகு

கண்கவிழ்தல்—கீழ்நோக்குதல் (பெ 3-7-16)

கண்கழீஇ—கண்களைக்கழுவி (இடக்கரடக்கல்) (பெ 1-55-7)

கண்கழு—முளைவெளிவர முன்விடும்நீர்

கண்கழுவு தண்ணீர்—கண்கழு; சாமை முதலிய சிறு தானியங்களுக்கு முதற் பாய்ச்சுந்தண்ணீர்

கண்கழுவுதல்—தண்ணீர் அல்லது மருந்துநீரிட்டுக் கண்களைக் கழுவுதல்; முகங்கழுவுதல்

கண்கழுவுநீர்—கண்களைக் கழுவப் பயன்படுத்தும்நீர்

கண்களைஏறச்செருகுதல்—கண்கள் உள்ளே செருகிக் கொள்ளல்

கண்கள் குழிந்துபோதல்—முதுமை அல்லது நோயினால் கண்கள் குழிவடைந்துவிடல்

கண்கள்குளமாக இருத்தல்—கண்களில் நீர் நிறைந் திருத்தல்

கண்கள் கோவைப்பழம்போல் சிவந்திருத்தல்—கண்கள் மிகச் சிவந்திருத்தல்

கண்கள் சந்தித்தல்—நண்பர்கள் அல்லது காதலர்கள் ஒருவரையொருவர் ஒரு குறிப்புடன் பார்த்துக்கொள்ளல்

கண்கள் சுற்றுமுற்றும் தேடுதல்—அங்குமிங்கும் கண்கள் ஆர்வத்துடன் தேடுதல்

கண்கள் சொருகுதல்—நோய்மிக்க நிலையில் அல்லது மரணத் தறுவாயில் கண்கள் செருகிப்போதல்

கண்கள் நாசனி—கண்ணைக் கெடுக்கும் செந்திராய் என்ற பூண்டு

கண்கள் நாடுதல்—கண்கள் ஒன்றைத் தேடுதல்
கண்கள் நிலைகுத்தி நிற்றல்—மரணத் தறுவாயில் கண்கள் இமையாது திறந்தபடி இருத்தல்
கண்கள் நீர்சொறிதல்—கண்களில் நீர் வழிதல்
கண்கள் பார்வையைக் கீழே செலுத்துதல்—கண்கள் கீழ் நோக்கிப் பார்த்தல்
கண்கள் வியப்பால் மலர்தல்—வியப்பினால் கண்கள் அகல விரிதல்
கண்களவு கொள்ளுதல்—பிறரைக் காணாதவாறு பிறரைப் பார்த்தல் (கு 1092)
கண்களாரக் காணுதல்—கண்கள் திருப்தியடையுமாறு பார்த்தல் (திவ் 1872)
கண்களால் ஏறுண்ணல்—கண்களால் தாக்கப்படல் (திருவா 570)
கண்களால் பருகுதல்—ஆர்வமிகுதியுடன் கண்ணால் பார்த்தல்
கண்களி கூர்தல்—பார்த்து மகிழ்ச்சி மிகுதல்
கண்களி கொள்ளுங்காட்சி—கண்கள் களிப்புக் கொள்ளும் இன்பக்காட்சி (சி 26–73)
கண்களி துளும்பல்—இன்பக் காட்சியால் கண் மிகவும் இன்புறல்
கண்களிப்பத் தரிசித்தல்—கண்கள் மகிழ்ச்சியடையுமாறு பெரியோர், கடவுளைக் கண்டின்புறல்
கண்களிப்ப நோக்கல்—கண்கள் குளிர்ந்து விளங்கப் பார்த்தல் (அரி 4–158)
கண்களிப்பாதல்—கண்களிப்படைதல் (கந் 1–10–11)
கண்களிப்பு—கண்ணுக்கு இன்பம் (தி 613)
கண்களி மயக்கம்—கண்களித்தற்குக் காரணமான ஆச்சரியம் (சி 25–65)

கண்களில் அனல் கொப்புளித்தல்—சீற்றத்தினுல் கண்ணில் சினக்குறி தென்படல்

கண்களில் ஆனந்தம் துளித்தல்—கண்களில் பெருமகிழ்ச்சிக் குறி தென்படல்

கண்களில் கண்ணீர் ஒட்டிநிற்றல்—கண்களில் கண்ணீர் தேங்கி வழியும் நிலையிலிருத்தல்

கண்களில் கனிவு ததும்பல்—அருள் நோக்கத்தினுல் கண்களில் இரக்கம் தென்படல்

கண்களில் தீப்பொறி பறத்தல்—கண்களில் அனல் கொப்புளித்தல்

கண்களில் நீர் தத்தளித்தல்—கண்ணீர் ததும்பி நிற்றல்

கண்களில் நீர் திரையிடல்—கண்களில் நீர் நிரம்பி வழியும் நிலையிலிருத்தலால் கண்பார்வை தடைப்படல்

கண்களில் நீர் முட்டுதல்—கண்களில் நீர் தத்தளித்தல்

கண்களில் படுதல்—கண்களுக்குத் தென்படுதல்

கண்களிலிருந்து மறைந்துவிடல்—பார்வைக்குத் தெரியாமல் மறைந்து விடல்

கண்களுக்குப் புலனுதல்—கண்ணிற்குத் தெரிதல்

கண்களுக்கு விருந்தூட்டல்—இனிய காட்சிகளால் கண்கள் மகிழ்ச்சியடையச் செய்தல்

கண்களை அகல விரித்தல்—வியப்பினுல் கண்களை விரித்து நோக்குதல்

கண்களை அரைகுறையாக மூடிக்கொள்ளல்—கண்களைப் பாதி மூடிக்கொள்ளல்

கண்களை இடுக்கிப் பார்த்தல்—கண்களால் சாய்வாகப் பார்த்தல்

கண்களை உருட்டி உருட்டி விழித்தல்—கண்களை உருட்டி உருட்டிப் பார்த்தல்

கண்களைக் கசக்குதல்—தேம்பி அழும்போது கண்களைக் கசக்குதல்

கண்களைக் கட்டுதல்—கண்ணும்பூச்சி விளையாட்டில் கண்களைக் கட்டிவிடல்

கண்களைத் திறந்துவிடல்—கட்டப்பட்ட கண்களைத் திறந்து விடல்; அறிவுக் கண்ணைத் திறக்கச்செய்தல்

கண் களைதல்—கண்ணைப் பிடுங்குதல் (அக 262)

கண்களை மிரள விழித்தல்—கண்களால் மிரளமிரள விழித்தல்

கண்களை வேறு பக்கம் திருப்பல்—பார்வையை வேறு பக்கம் திருப்புதல்

கண்கறுத்த தேங்காய்—முற்றிய தேங்காய்

கண்கறுத்தல்—மரணக்குறி

கண்கனல்—கண் நெருப்பு (அரி 13–11)

கண் கனல் சிந்தல்—கண்ணில் தீப்பொறி பறத்தல்

கண் கனலுதல்—சினத்தால் கண் சிவத்தல் (புவெ 6–23)

கண்காசப்படலம்—கருவிழியில் பூப்படர்ந்து கண்ணொளியை மறைத்துக் குருடாக்கும் ஓர் நோய்

கண்காசம்—கருவிழிக்கு வரும் ஓர் நோய்; கண்பூ; கண்ணின் படல நோய்

கண்காட்சி—பொருட்காட்சி; அதிசயம்; கண்ணுக்குச் சிறப்பு; விசித்திர வேடிக்கைகளைக் கண்ணுறக் காணுதல்; கண்ணுக்கு மகிழ்ச்சி தருவது

கண்காட்சிச்சாலை—பொருட்காட்சிச்சாலை

கண்காட்டல்—கண்ணினால் குறிப்புக் காட்டல்

கண்கலட்டி—அழகுள்ளவன்-ள்-து( திவ் பெரியதி 8-6-3வ்யா ஞானம் கொடுப்பது (திற் 1786 உரை; நிர்வாகி கண்காணிப்பாளன்

கண்கட்டி விடுதல்—கண்சாடையால் ஒலி விடுதல் (குற் குற 116–2)

கண்காட்டுதல்—குறிப்பாகக் கண்சிமிட்டுதல் (தமிழ் நா 90)
கண்காட்டுவான்—குருடர்களுக்கு வழி காட்டுவோன்
காண்காண—கண்ணெதிரில், பிரத்தியட்சமாக (தில் 3385)
கண்காணக்காரன்—கண்காணச்சேவகன்; காவற்காரன் போல் விசாரணைக்காரன்
கண்காணச் சேவகன்—காவற்காரன்
கண்காணம்—மேல்விசாரிப்பு; கண்காணிப்பு; உத்தரவு; கதிரனுக்காகக் கொடுக்குங் காவல்
கண்காணம் பார்த்தல்—கண்காணிப்புச்செய்தல்
கண்காணுத இடத்திற்கு ஓடிவிடுதல்—பிறர் எளிதில் கண்டுபிடிக்க முடியாத தூரத்திற்கு ஓடிவிடுதல்
கண்காணுதோடல்—(நோய்) மறுபடியும் திரும்பாது முற்றிலும் குணமாதல்
கண்காணுமல் போய்விடல்—கண்காணுத இடத்திற்குப் போய்விடல்
கண்காணி—மேல்விசாரிப்புக்காரன்; மேற்பார்வைத்தொழில் (சிறு 40); புகைவண்டிக்காவலர் (இளைஞர் இலக் 81)
கண்காணித்தல்—மேற்பார்வை செய்தல்
கண்காணிநாயகம் மேல்விசாரணைத் தலைமைப்பதவி; கண்காணி வேலை (சாச)
கண்காணிப்பாளர்—கண்காணிப்பவர்
கண்காணிப்பு—மேற்பார்வை; காவல், காப்பு
கண்காணியர்—மேல்விசாரணைக்காரர்; கிருஸ்த்துவ சபைகளை மேற்பார்க்கும் தலைவர்; தேயிலை தோட்டங்களுக்கு வேலையாளைக் கொண்டு அதனால் ஊதியம் பெறுவோன்

கண்காணித்தல்-மேற் பார்வை செய்தல்

கண்காணிநாயகம்—மேல்விசாரணைத் தலைமைப் பதவி; கண்காணிவேலை (சாச)

கண்காணிப்பாளர்—கண்காணிப்பவர்

கண்காணிப்பு—மேற்பார்வை; காவல், காப்பு

கண்காணியர்-மேல் விசாரணைக்காரர்; கிறித்துவ சபைகளை மேற்பார்க்கும் தலைவர்; தேயிலைத் தோட்டங்களுக்கு வேலையாளைக் கொண்டு அதனால் ஊதியம் பெறுவோன்

கண்காணியாக—பிரத்தியட்சமாக (திருமந் 2072)

கண்காதனூர்—கண்ணையே காதாகஉடைய பாம்பாகிய பதஞ்சலி முனிவர் (குமர 480)

கண் காது தெரியாமல் அடித்தல்—கன்னத்தில் கண், காது முதலிய இடங்களிலும் படுமாறு கண்டபடி அடித்தல்

கண்காந்தல்—கண்ணெரிவு

கண்காரம்—கண்ணிற்கு இடும் கார மருந்து

கண்காரர்—அஞ்சனமிட்டுப் பார்ப்போர்; குறிப்பறியத் தக்கவர்கள்; மேற்பார்வை செய்வோர்; நோட்டக்காரர்; நாணய மதிப்பீட்டாளர்

கண்கிடங்கில்விழல்—அசீரணபேதி, வாந்திபேதி முதலிய நோய்களினால் கண் ஆழப்பதிதல்

கண்குத்தல்—கண்ணில் முள் அல்லது ஊசியால் குத்துவது போறகாணும் வலி

கண்குத்தலிடல்—சாகுந்தறுவாயில் கண் நிலைக்குத்தவிடல்

கண்குத்திப்பாம்பு—கண்ணுக்குத் தெரியாது பிறர் கண்ணைக் குத்தும் பாம்பு; பச்சைப் பாம்பு

கண்குத்திப்பாம்பாகக் கவனித்தல்—விழுங்கிவிடுவது போல் பார்த்தல்

கண்குந்தம்—கருவிழியின் நடுவேயுள்ள கண்மணியின் மேல் அழற்சியினுல் பருவைப் போன்ற சிலந்தி யுண்டாகிப் புடைத்துக் காணும் ஓர் கண்நோய்

கண்குருடாதல்—கண்ணவிதல்

கண்குருடு—கண்ணுக்கு ஏற்பட்ட குருட்டுத் தன்மை

கண்குவளை—கண் பதிந்திருக்குமிடம்; கண்குழியாகிய எலும்பின் பகுதி; கண்குழி; கண்கூடு

கண்குழி—கண்குவளை; கண்கூடு

கண்குழிதல்—பசியால் விழி குழிந்து போதல்; விழி உள்ளடங்குதல் (சுந் 611)

கண்குழிவிழுதல்—முதுமையால் கண் உள்ளே போதல்

கண்குழிவு—எளிமை (ஈடு 3-3-1)

கண்குளிர்ச்சி—கண்ணுக்கு ஏற்படும் குளிர்ச்சி; கண்களிப்பு

கண்குளிர்தல்—கண்ணுக்குக் குளிர்ச்சியுண்டாதல்; கண்களித்தல்; பார்வைக்குத் திருப்தியாயிருத்தல்

கண்குளிரப்பார்த்தல்—மகிழ்ச்சிமிக்குக் கண்ணுல் பார்த்தல் (அம்மனி 157)

கண்குறிப்பு—கண்சாடை; பார்வையால் அறிதல்

கண்குறைத்தல்—கண்ணைப்பறித்திடுதல் (தொ பொ 258-உரை)

கண்கூச்சம்—அதிகவெளிச்சத்தைப் பார்க்க முடியாது கண் கூசுதல்

கண்கூச்சன்—அடிக்கடி கண்ணைச்சிமிட்டும் நோயுடையவன்; கிட்டப்பார்வையுடையவன்

கண்கூசச்செய்தல்—ஒளிமிகுதியால் கண்ணைக்கூசுமாறு செய்தல்

கண்கூசுதல்—கண் கூச்சமடைதல்

கண்கூடல்—ஓரிடத்துக்கூடல், பார்த்தல், எதிர்ப்படல், சேர்தல்

கண்கூடாகக்காட்டு—வெளிப்படையாகக் காட்டு (தணி ஆற் 310)
கண்கூடாகக்காணல்—பிரத்தியட்சமாகக்காணல்; கண்முன்னலேயே காணல்
கண்கூடு—கண்குவளே (இந் வைத் 8); பிரத்தியட்சம் (பரங் அலங் 186; பெ 3-4-90), காட்சித் துறை (சி 8-77 உரை); நெருக்கம்
கண்கூடுதல்—ஒன்று கூடுதல், நெருங்குதல்
கண்கூடு துறுகல்—ஒன்றுகூடி நெருங்கின கல் (மலேபடு 384)
கண்கூடுவரி-ஒருவர் கூட்டவன்றித் தலேவன் தலேவியர் தாமே சந்திக்கும் நிலேமையை நடித்துகாட்டும் நடிப்பு (சி 8-77)
கண்கூர்மை—பார்வையின் நுட்பம்; கூரிய கண்ணெளி
கண்கூலி—இழந்த பொருளேக் கண்டு பிடித்ததற்குக் கொடுக்கும் வெகுமதி
கண்கெட்டபிறகு சூரிய நமஸ்காரம் செய்தல்—பயனற்ற காரியஞ் செய்தல்
கண்கெட்டவன்—கண்ணிழந்தவன்; குருடனனவன்
கண்கெட்டார்—குருடர்
கண்கெட்டுக் கருத்தழிதல்—அறிவுகெட்டு மனந்தடுமாறுதல்
கண்கெடச்செய்தல்—அறிந்து தீமைசெய்தல்
கண்கெடப்பேசுதல்—வெட்டென்றுகூறல்
கண்கெடுதல்—பார்வைகுறைதல்; கண்பார்வையழிதல்; கண்காயப்படுதல்; அறிவழிதல்
கண்கொட்டாது பார்த்தல்—கண்சிமிட்டாமல் பார்த்தல்
கண்கொட்டல், கண்கொட்டுதல்—கண்ணிமைத்தல் (ச இரட்-4)
கண்கொடுத்தல்—கண்ணேத்தானம் செய்தல்; அறிவு கொடுத்தல் (ஏலாதி 80)

கண்கொண்டு நோக்கல், நோக்குதல்—கண்ணால் நன்கு பார்த்தல் (முத் 33)

கண்கொண்டு பார்க்கமுடியாத காட்சி—மிகவும் இரங்கத் தக்க அல்லது அருவருப்பான காட்சி

கண்கொண்டு பார்த்தல்—கண்ணால் பார்த்தல் (புதுமைப் 22)

கண்கொத்திப் பாம்பு—கண் குத்திப்பாம்பு

கண்கொதி—கண்ணூறு; கண்ணெரிவு நோய்; கண்வலி

கண்கொதிப்பு—கண்ணுக்குச் சூட்டினால் ஏற்படும் அழற்சி

கண்கொழுப்பு—அகங்காரம் (யாழ் அக)

கண்கொள்ளா அழகு—கண்ணால் பருகியும் அமைய முடியாத பேரழகு

கண்கொள்ளாக்கவின்—கண்கொள்ளா அழகு

கண்கொள்ளாக் காட்சி—அற்புதமான காட்சி

கண்கொள்ளாக்கோபம்—பெருங்கோபம் (மின்னொளிகு)

கண்கொளா—கண்ணுக்குப் புலப்படாத (சிந் 172)

கண்கொளாக் கவின்பெறுவனப்பு—கண்ணாற்கண்டு திருப்தி அடைய முடியாத பேரெழில் (தணி மு பித 51)

கண்கொளாவகை—கண்ணுக்குக் காணஒண்ணாதபடி (திவ் 3446)

கண்கோடல்—கண்துயிலுதல் (க 6–1220)

கண்சதை—கண்ணிற்குள் துர்மாமிச வளர்ச்சி; கண்ணின் மேற்றோல் அல்லது கண்ணிமைத் தோலின் தடிப்பு

கண்சந்து நோய்—வெள்விழிக்கும் இமைச்சந்திற்கும் நடுவில் பிறக்கும் நோய்கள்

கண்சமிக்கினை—கண்ணாற் செய்யுஞ் சாடை

கண்சமிக்கை, கண்சமிக்ஞை—கண்சாடை; இமைகொட்டல்

கண்சவ்வு—கண்இரப்பையையும், விழியையும் கவர்ந்துள்ள மெல்லிய சவ்வு; விழியின் ஓரச்சதை; கண்தோல்

கண்சாடை—கண்ணாற்காட்டும் குறிப்பு; சைகை

கண்சாடைசெய்தல்—கண்ணைச் சிமிட்டிக் குறிப்புக்காட்டடல்

கண்சாத்துதல்—அன்போடு நோக்குதல் (காஞ்சி. கழுவா 204)

கண்சாதல்—கண்சாய்த்தல்

கண்சாய்த்தல்—பதனழிதல், வாடல், கெடல்

கண்சாய்தல்—அறிவு தளர்தல் (கு 927); அன்பு குறைதல் (கலி 80-24; உறங்கல், தூங்குதல்

கண்சாய்ப்பாயிருத்தல்—பார்த்தும் பார்க்காதது போல் இருந்து விடல்

கண்சாய்ப்பு—வெறுப்பான பார்வை; சம்மதப்பார்வை; குறிப்பாகக் காட்டுந்தயவு; கண்சாடை; கண்ணூறு

கண்சாய்வு—சாய்ந்த பார்வை

கண்சிம்புளித்தல்—கண்மூடுதல்;கண்மூடி உறங்குதல் (நந்திக் 76); கண்ணைச் சுருக்கல் பெ (4—14 47); கண்கூசல் (தொ பொ 292 உரை)

கண்சிமிட்டல், சிமிட்டுதல்—கண்ணிமைத்தல்; அடிக்கடி இமை கொட்டல்; கண்சாடை செய்தல்; கண்ணாலே குறிப்புக்காட்டடல்

கண்சிமிட்டி—சிமிட்டுக்கண்ணன்; சிமிட்டுக்கண்ணி

கண்சிமிட்டிப்பேசுதல்—கண்சாடையால் பேசுதல்

கண்சிமிட்டும் நேரம்—கைந்நொடிப்பொழுது

கண்சிமிழ்த்தல்—கண்கொட்டுதல்

கண்சிரட்டை—முக்கண் உள்ள கொட்டாங்கச்சி

கண்சிவத்தல்—நோய், கோபம் முதலியவற்றால் கண் செந்நிறமடைதல்; கண்கனலுதல்; கோபித்தல்

கண்சிவப்பு—கண்ணழற்சி;செங்கண்; கோபம்(குலோத் கோ 447)

கண்சிவப்பேறல்—கோபத்தால் கண் சிவப்பு நிறம் அடைதல்

கண்சிறுத்துப்போதல்—பார்த்துப் பார்த்துக் கண் பூத்துப் போதல்

கண்சிறைப்படுத்தல்—பார்ப்பவரின் கண்களைத்தம்மிடத்தே தடுத்துக்கொள்ளல் (சிந் 79)

கண்சுடரோன்—கண்ணொளி போல்பவன் (திருமந் 221)

கண்சுருட்டல், சுருட்டுதல்—கண்ணுறங்குதல்; தூக்க மயக்கம் ஏற்படுதல்; மிக்க அழகினுல் வசீகரித்தல்

கண்சுருண்டுபோதல்—கண்சோர்வடைதல்

கண்சுருள்—இரப்பை மடிப்பு

கண் சுருலில்—இரப்பை மடங்குதல்

கண்சுழலல், சுழலுதல்—அயர்ச்சியால் சுழன்று மயங்குதல்

கண்சுழற்சி—விழிதனக்குத்தானே விரைவாகச் சுழலுதல்

கண்சுழற்றுதல்—கண்ணைச்சுழலும்படி செய்தல்

கண்சூடாதல்—கோபத்தால் கண்சிவப்பாதல்

கண்செம்முதல்—கண்பொங்குதல்; கண்விங்குதல்; கண் மூடுதல்

கண்செருக்கல்—அறிவு செருக்கல்; தருக்கியிருத்தல் (அருட் 11—3—4)

கண்செருகல், செருகுதல்—விழிகள் உள் வாங்குதல்

கண்செலுத்துதல்—பார்த்தல்

கண்செழிக்கக் காணல்—கண்களிப்பக்காணல்

கண்செறியிடுதல்—முழுதும் வியாபித்து அடைத்துக் கொள்ளல் (திவ் திருக்குறுந்வ் 3 யா); விழுங்கிவிடுதல்; (ஈடு 5—9—1); கூர்ந்து பார்த்தல்

கண்சைகை—கண்சாடை

கண்சொக்கல், சொக்குதல்—கண்சொருகுதல்; தன்னையறி யாது மயங்கி நித்திரை கொள்ளல்; கண்மயங்குதல்

கண்சொருகல்; சொருகுதல்—உறக்கங் கொள்ளல்; விழி உள்வாங்கல்;கண்சொக்கல்; காக்கைவலிப்பு, சன்னி முதலிய நோய்களில் கண்கள் அடையும் நிலைமை; ஓர் மரணக்குறி

கண்சொருகிப்போதல்—கண்குருடாதல்; கண்ணொளி குறைந்து போதல்

கண்சோதி—கண்ணின் கருவிழியின் மையம்

கண்சோர்தல்—பார்த்துப் பார்த்துக்கண்சோர்வுறல்

கண்டுகண்களி கொள்ளல்—பார்த்துக்களிப்படைதல் (போரூர் மணிப் பதி 10)

கண்டுயில்தல்—தூங்குதல் (நீதிநெறி 34); பார்வை மங்குதல் (பு 159-4)

கண்ணகப்பை—துளையோடு கூடிய இரும்புச்சட்டுவம்

கண்ணகற்றுதல்—துயில் நீங்கி விழித்தல்

கண்ணசைத்தல்—சாடையாகக் கண்ணடித்தல்

கண்ணசந்து போதல்—கண்வீங்கி வலியுடனிருத்தல்

கண்ணஞ்சல், கண்ணஞ்சுதல்—பயப்படல்(பு வெ 344)

கண்ணஞ்சனம்—கண்மை; கண்ணுக்கிடும்மை

கண்ணடக்கம்—சாமிக்குக் கண்போல் செய்து சாத்தும் கண்ணுறை

கண்ணடித்தல்—கண்ணசைத்தல், கண்சாடை செய்தல்

கண்ணடை—சாமிக்குச் சாத்தும் கண்ணடக்கம்

கண்ணடைத்தல்—தேங்காயில் திறந்த கண்ணை மீண்டும் மூடல்; புண்புரையில் உள்ள துவாரத்தை மருந்துச் சீலையிட்டு அடைத்தல்; தூங்குதல்; இறந்தவரின் பரந்த கண்ணை மூடுதல்

கண்ணடைதல்—கண்பஞ்சடைதல்,ஓர் மரணக்குறி; துவாரம் அடைபடுதல்; ஊற்றடைதல்; கண்ணுறங்கல்; பயிரின் குருத்து வெளித்தள்ளாமல் நின்று போதல்

கண்ணதிர்தல்—அடிப்பட்ட அதிர்ச்சியால் கண் வீங்கிக் கொள்ளல்

கண்ணது—(ஒருவர்) பாலுள்ளது (பு 3097)

கண்ணப்பன்—தம் கண்ணைப் பிடுங்கிச் சிவனுடைய கண்ணுக்குப் பதிலாக வைத்து முத்தி பெற்ற ஒரு நாயனர்

கண்ணம்பு—கண்ணீர் (திருவி 32-6)

கண்ணம்பு பாய்தல்—கூரிய கண் பார்வை பாய்தல்

கண்ணமரம் (கண் அமரம்) —சூட்டினல் கண்களின் இரப்பையில் நோவுண்டாகிச் சிவந்த குருக்களை எழுப்புவதால் அவ்விடம் சுருக்கமடைந்து விகாரமாய்த் தோன்றச் செய்யும் ஒரு வகைக்கண்ணேய்; கண்சூட்டு நோய்

கண்ணமைப்பு—கண்அமைந்த விதம்

கண்ணமைமணி—கண்ணின் மணி (சுந்தர பாண்டியம் 254)

கண்ணயத்தல்—விரும்புதல்; மோகங் கொள்ளுதல் (கோ 109(

கண்ணயர்தல்—உறங்கல், தூக்க நிலைமையடைதல், சிறு உறக்கங் கொள்ளல்

கண்ணயர்ந்து உறங்குதல்—ஆழ்ந்த உறக்கங்கொண்டு தூங்குதல்

கண்ணயனம்—கட்குழி

கண்ணயில்—கண்ணம்பு (க 3-256)

கண்ணர்—கண்ணுடையோர்

கண்ணராவி—பார்த்தவர் இரங்கத்தக்கது; கண்ணிக்கு வெறுப்பானது

கண்ணரித்தல்—கண்இரப்பை அரிக்கும் ஒரு மேகநோய்

கண்ணரிதல்—கரும்பை உடைத்தல்

கண்ணரிப்பு—கண்ணில் வரும் ஒரு நோய்; கண்ணில் ஏற்படும் தினவு அல்லது நமைச்சல்

கண்ணருகில்—முகத்தருகில், பக்கத்தில்

கண்ணருகுதல்—கண்ணை இடுக்குதல்; கண்ணுறுத்தல்

கண்ணருவல்—கண்கரித்தல்; கண் இரப்பை கெடுதல்

கண்ணருவி—கண்ணீர்ப்பெருக்கு (திருவி கட 13)

கண்ணருள்—கடைக்கண்நோக்கம் (காஞ்சிப் 11–40 கிருபை நோக்கம் (பஞ்சாக் 2; கல்லா 39)

கண்ணருள்சுரத்தல்—கண்களில் கருணை பொழிதல் (அரி4–124)

கண்ணருள்புரிதல்—கண்ணால் அருள் புரிதல் (எருக்பு 5–10)

கண்ணரை—அரைக்கண்; கண்பகுதி

கண்ணல்—கருதுதல், குறித்தல்

கண்ணலர்—கண்ணீல் (சீகாழிக் கோ 286)

கண்ணவர்—அமைச்சர் (பரி 19–22); ஒற்றர்; இனியவர்; கண்ணில் உள்ளவர்

கண்ணவாக் கெடல்—கண்பூத்துப் போதல்

கண்ணவிதல்—கண்கெடல்

கண்ணவிந்துபோதல்—கண்கெட்டுவிடல்

கண்ணவிழ்த்தல்—கண்விடல்; மலர்வித்தல்; மறைவகற்றல்; அறிவு புகட்டல்; சிலையின் கண்திறத்தல்

கண்ணவிழ்தல்—பிணியவிழ்தல், முறுக்கவிழ்தல்; கண் விடல்; வாயவிழ்தல்; மலர்தல்

கண்ணழகு—கண்ணின் அமைப்பினால் ஏற்பட்ட அழகு

கண்ணழல்—வெப்பத்தினால் கண் அல்லது இமைக்குள் ஏற்படும் எரிச்சல்

கண்ணழற்சி—கண்ணில் ஏற்படும் அழற்சி, கண்ணெரிவு, பொறாமை

கண்ணழித்தல்—கண்பார்வையைக் கெடுத்தல்; கண் முழுதும் அழிந்து போகச் செய்தல்

கண்ணழிதல்—பார்வை கெடல்; கண்நோயினுல் மெலிதல்

கண்ணழிவு—இடையூறு; தாமதம்

கண்ணழுக்கு—கண்பீளை

கண்ணள்—கண்ணையுடையவள் (பு 247-6)

கண்ணளவு—கண்ணுற் காணும் அளவு; பிரத்தியட்சப் பிரமாணம் (கூர்ம 1-29-22)

கண்ணளி—கண்ணுற் செய்யும் அருள் (கல்லா 10-13)

கண்ணற்ருர்—கண்ணில்லாதவர், குருடர்; அறிவில்லார்

கண்ணற்று—கண்ணோட்டமின்றி (சிந் 13 நச்)

கண்ணறுதல்—கண்ணோட்ட மறுதல் (கு 184); நட்புக் குலைதல்

கண்ணறை—குருடு (கதி வெ 90); குருடன், குருடி; துவாரம்; வன்னெஞ்சு; வலை முதலியவற்றின் கண்; தேன் கூடு முதலியவற்றின் அறை; கட்குழி; சிறு சிறு துவாரங்கள்; நுரையீரலின் வாயு அறை

கண்ணறைக் கண்டம்—வண்ணங்களால் இடமறுக் கப்பட்ட துணி (பெ 2-2-110)

கண்ணறைய(ா)ன் கண்ணோட்டமில்லாதவன் (சுந் 475; குமர 273; திவ் 916) வன்னெஞ்சன் (நீதிநெறி 67; கூர்ம 1—26—23); குருடன்

கண்ணன்—கண் உடையவன்; கிருஷ்ணன்

கண்ணுக இருத்தல் – கருத்தாக இருத்தல்

கண்ணகத்தவன்—கண்கள் நிறை உடலினன், இந்திரன் (தண்ட வண்ணம்)
கண்ணுஞ் சுழலே—மருண்டு பார்த்தல் (ஈடு 8–1–4)
கண்ணட்டி—காதலி; அன்பினள்; மனையாட்டி
கண்ணடி—முகம் பார்க்கும் கண்ணடி; மூக்குக் கண்ணடி
கண்ணணி—கண்ணின் கருவிழி (ஈடு 4–7–4)
கண்ணணிப்பூ—கண்ணில் விழும் பூ; கண் நரம்பு
கண்ணணை—ஒரு சூளுரை, சபதம்
கண்ணுதல்—கருத்து வைத்தல் (நீதி நெறி 53); அருமையாதல்
கண்ணும் பூச்சி—பொறி தட்டுவதால் கண் முன் மின்னும் பூச்சி பறப்பதுபோல் தோற்றும் பொய்ப்பூச்சி; கண் மயக்கம்; கண்ணைக் கட்டி யாடும் குழந்தை விளையாட்டுவகை
கண்ணும் பூச்சி பறத்தல்—கண்ணுக்கு மின்மினி பறப்பதுபோல் தோன்றுதல்
கண்ணும்பூச்சி யாடுதல், விளையாடுதல்—கண்ணைக்கட்டி ஓடி விளையாடுதல்
கண்ணும் பொத்தி—கண்ணும் பூச்சி; குழந்தைகள் கண்பொத்தியாடும் ஒரு விளையாட்டு
கண்ணமண்டை—கண்மேலுள்ள எலும்பு; கண்ணோடு
கண்ணமுழி—கண்விழி (பே)
கண்ணமூய்ச்சி—கண்ணும் பூச்சி (பே)
கண்ணய்ப் பார்த்தல்—கருத்தாய்ப் பார்த்தல்
கண்ணயிரம்—இந்திரன்
கண்ணயிர நாதர்— திருக்காருயலில் கோயில் கொண்டிருக்கும் சாமியின் திருப்பெயர்
கண்ணயிரன்—இந்திரன்
கண்ணயிர முடையான்—இந்திரன் (திருவி நக 102)

கண்ணுயிருத்தல்—உற்றுப்பார்த்துக் கொண்டிருத்தல்; காவலாயிருத்தல்; மிகு கருத்தாயிருத்தல்; உன்னிப்பா யிருத்தல்; அருமையாயிருத்தல்

கண்ணுயிரேசுவரர்—திருக்கண்ணூர் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சுவாமி பெயர்

கண்ணூர்வித்தல்—கண்ணுக்கு இன்பமூட்டுதல்

கண்ணுரக் காணல், காணுதல், பார்த்தல்—ஆசை தீரக் கண்ணுல் பார்த்தல் (தாயு பராபரக் 2); கண் கூடாகப் பார்த்தல்; கண் முன்னுல் பார்த்தல்; தெளிவாக அறிதல்

கண்ணுரம்—அம்மனுக்குப் போடும் கண்ணுறை

கண்ணுரும்—கண்ணுக்கு இனிமை நிறைந்த (ச 323-11)

கண்ணுல் அமர்ந்து நோக்கல்—விருப்பத்துட னும் ஆசையுடனும் நெடிது நோக்குதல்

கண்ணுல் ஆளை விழுங்குதல்—விழுங்குவது போல் ஆர்வத்துடன் பார்த்தல்

கண்ணுல் எரிப்பதுபோல் பார்த்தல்—மிகுந்த சினத்துடன் நோக்குதல்

கண்ணுல் ஏவல் சொல்லுதல்—கண்ணுல் சைகை செய்து கட்டளையிடுதல்

கண்ணுல் ஏறிட்டுப் பார்த்தல்—கூர்ந்து பார்த்தல்

கண்ணுல் காணல்—பார்த்தல்

கண்ணுல் குறையிரந்து நிற்றல்—குறையைக் கண்ணுலேயே தெரிவித்தல்

கண்ணுல் கூடப் பார்ப்பதில்லை—பார்ப்பதற்குக் கூட அலட்சியமாயிருத்தல்

கண்ணுல் கூர்ந்து நோக்குதல்—உன்னிப்பாகக் கவனித்தல்

கண்ணால் கொல்வது போல் பார்த்தல்—காமமயக்கம் ஏற்படும்படி அல்லது மிக்க சினக் குறிப்புடன் நோக்குதல்

கண்ணால் சீறிப் பார்த்தல்—சினந்து நோக்குதல்

கண்ணால் சுவைத்தல்—காதலர் ஒருவரை ஒருவர் பார்த்து மகிழ்தல்; காமவயப்பட்டோர் பிறரைக் கண்டு மகிழ்தல்

கண்ணால் தரிசித்தல்—நேரில் கண்டு களித்தல்

கண்ணால் திளைக்கப் பெறல்—கண்ணால் தரிசிக்கப் பெறல் (சிதம் பு 2-9)

கண்ணால் பருகல்—ஆர்வத்துடன் நோக்குதல் (சிந் 412)

கண்ணால் பேசுதல்—(காதலர்) கண்கள் தமக்குள் பேசிக் கொள்ளல்; கண் சாடைகளால் கருத்தைப் பரிமாறிக் கொள்ளல்

கண்ணால் மருட்டல்—கண் பார்வையால் பிறரை மருளச் செய்தல்

கண்ணால் முறைத்துப் பார்த்தல்—ஒருவரைச் சினந்து நோக்குதல்

கண்ணால் விழுங்குவது போல் பார்த்தல்—அழகு மிக்க ஒருவரை அப்படியே விழுங்குவது போல ஆர்வத்துடனும் ஆசையுடனும் பார்த்தல்

கண்ணாலுறுத்தல்—பார்த்தல் (பெ 1–37–27)

கண்ணாவார்—கண்போல்வார்; அமைச்சர்; ஒற்றர்

கண்ணாவி—கண்ணாறு; பாசனவாய்க்கால்; திருஷ்டி

கண்ணாள்—கண்ணுடையாள்; கண்போன்றாள்; சரசுவதி

கண்ணாளன்—காதலன், நாயகன் (திவ் 1741); தோழன்

கண்ணாற்சுடுதல்—கண்ணேறுபடப் பார்த்தல்

கண்ணாற் சுவை பார்த்தல்—கண்ணாற் பருகுதல் (பாரதிதா)

கண்ணாற் பருகுதல்—கண்ணால் காமவிருப்புடன் அல்லது மிக்க அன்புடன் நோக்குதல்

கண்ணாற் பேசல்—கண்சாடையால் பேசுதல்

கண்ணாறி—கண்ணொளி (வளை 71)

கண்ணாறு—பெரிய வாய்க்காலிலிருந்து பிரிந்து சிறு வயல்களுக்குப் பாயும் சிறு வாய்க்கால்கள்

கண்ணான்—கண்ணையுடையவன் (திவ் 202)

கண்ணானபேர்—கண்போற் சிறந்த நண்பர்

கண்ணான மனதைப் புண்ணாக்கிவிடல்—அன்புமிக்க மனதைப் புண்படுத்திவிடல்

கண்ணாஸ்பத்திரி—கண்வைத்தியசாலை

கண்ணி—வலை; கண்ணையுடையாள் .

கண்ணிடந்து அப்பல்—கண்ணைத் தோண்டி அப்புதல் (காளத் கட்டளை 6)

கண்ணிடுக்குதல்—தூக்கமயக்கமாயிருத்தல்

கண்ணிடுகுதல்—கண் ஒடுங்குதல்

கண்ணிடுங்குதல்—கண் ஒடுங்குதல் (திவ் பெரியதி 1-3-4)

கண்ணிடு மருந்து—கண்ணில் துளி துளியாக விடும் மருந்து

கண்ணிடை கண்டு—கண்ணால் கண்டு (அரி 9-83)

கண்ணிதழ்—கண் மடல், கண்ணிமை

கண்ணிமை—கண் மடல், கண்ணிதழ், ஓரிமைப் பொழுது

கண்ணிமை கொட்டுதல்—கண்ணிமைத்தல்; கண்ணிதழ் சேர்தல்

கண்ணிமைத் தடிப்பு—நோயினால் கண்ணிமைகள் தடித்தல்

கண்ணிமைத்தல்—கண்ணிமை கொட்டுதல்

கண்ணிமைத்துக் கூறல்—கண்சாடையால் சொல்லுதல்

கண்ணிமைத் துடிப்பு—இமைகொட்டல்

கண்ணிமை திறத்தல்—பரக்க விழித்தல்

கண்ணிமைப் பசபசப்பு—கண்ணிமையின் அரிப்பு

கண்ணிமைப்பு—இமைத்தல்; இமைவெட்டு

கண்ணிமைப் பொழுது—கண்ணிமை கொட்டுங் காலவளவு

கண்ணிமை பொருந்தல்—கண்ணுறங்கல்

கண்ணிமை போலக் காத்தல்—கண்ணைக் காக்கும் இமை போல மிகப் பரிவுடனும் கவனத்துடனும் காத்தல்

கண்ணிமையாடுதல்—கண்கொட்டுதல்

கண்ணிமையாது நோக்கல்—கண்கொட்டாது பார்த்தல்

கண்ணிமையார்—தேவர் (சிந் 248)

கண்ணிமையுறுத்தல்—இமைகளில் உறுத்தல் ஏற்படுதல்

கண்ணியக்கம்—கண்ணொளி; கண்ணின் இயக்கம்

கண்ணியல்—கண்ணைப் பற்றிக் கூறும் இலக்கணம்

கண்ணியல் நெற்றியன்—நெற்றிக் கண்ணன், சிவபிரான் (11தி 6-30)

கண்ணிரங்குதல்—ஒலித்தல் (சிந் 1985) அருள் செய்தல்

கண்ணிரத்தம்—கண் சிவப்பு (முத் 23)

கண்ணிரப்பை—கண்ணிதழ்

கண்ணிருட்சி—கண் மயக்கம்; நோயினாலும் பட்டினியாலும் கண் இருளுதல்

கண்ணிருள் மூடல்—கண்ணிருளல்

கண்ணிருளல்—கண்ணிருட்சி, கண் பஞ்சடைதல், ஒரு மரணக்குறி

கண்ணில் அமர்ந்திருக்கப் பெறல்—காதலர் தாம் விரும்பியவரின் கண்ணில் இருத்தல்

கண்ணில் ஒத்திக் (ஒற்றிக்) கொள்ளல்—அருமையாகக் கிடைத்த அல்லது அன்புமிக்கவரிடமிருந்து வந்த பொருளை ஆர்வமிகுதியால் கண்ணில் ஒற்றிக் கொள்ளல்

கண்ணில் கண்டதையெல்லாம் வாங்குதல்—கண்ணிற்கு எதிர்ப்பட்ட பொருள்களையெல்லாம் வாங்குதல்

கண்ணில் கனல் சிந்துதல்—கண்ணில் தீப்பொறி பறத்தல்; கண்ணில் சினக்குறி தென்படல்

கண்ணில் காணல்—கண்ணால் காணல்

கண்ணில் குடியிருத்தல்—கண்ணில் அமர்ந்திருக்கப் பெறல்

கண்ணில் குறும்பு கூத்தாடல்—கண்ணில் குறும்புத்தனம் நிரம்பியிருத்தல்

கண்ணில் தீட்டல்—கண்ணில் (மையை) இடுதல்

கண்ணில் தூக்கம் இருத்தல்—தூக்கக் கலக்கம் கண்ணில் வெளிப்படல்

கண்ணில் தைத்தல்—பார்ப்பதற்குக் கோரமாயிருத்தல்

கண்ணில் நீர்ததும்பல், நீர்நிறைத்தல்—கண்ணில் நீர் தேங்கியிருத்தல்

கண்ணில் நீர் வடிதல்—கண்ணோய் அல்லது முதுமை காரணமாகக் கண்ணில் நீர் வடிதல்

கண்ணில் நீர் வருதல்—துன்பப்படும் பிறர் மேல் இரக்கத்தால் கண்ணில் நீர் உண்டாதல்; அழுகையால் கண்ணீர் உண்டாதல்

கண்ணில் நெருப்புப் பொறி பறக்கவிடல் — மிகக் கடுமையான கோபம் கண்ணில் வெளிப்படல்

கண்ணில்படல், படுதல் — எதிர்ப்படுதல்; திடீரென்று சந்தித்தல்; கண்ணுக்குப் புலப்படுதல்; கண்ணில் கை முதலியன படுதல்

கண்ணில் படாமலிருத்தல் — மறைந்திருத்தல்

கண்ணில் பூப்படுதல் — கண்ணில் பூ விழுதல்

கண்ணில் பூ விழுதல் — கண்ணில் பூப்படுதல்

கண்ணில் பொறி பறத்தல் — மிகக் கோபமாயிருத்தல்

கண்ணில் மண்ணைஅள்ளிப் போடுதல் — பிறரைஏமாற்றுதல் (புருஷர்களுக்கு 21)

கண்ணில் மண்ணைத்தூவுதல் — பிறரை ஏமாற்றுதல்

கண்ணில் மிளகாய்ப் பொடி தூவுதல்— கண்ணில் மண்ணைத் தூவுதல் (குடும்ப 126)

கண்ணில் மோதுதல் — கண்களில் அறைந்து கொள்ளல் (க 6 – 1598)

கண்ணில்லாத கபோதி — குருடன்

கண்ணில்லாதவன் — குருடன்

கண்ணில்லான் — குருடன்

கண்ணில் விரலைவிட்டு ஆட்டுதல் — தனக்குக் கீழ்ப்பட்டவரை ஒருவன் பெருந்தொல்லைகளுக்கு ஆளாக்குதல்

கண்ணில் விழுதல் — கண்ணில் படுதல்

கண்ணில் விளக்கெண்ணையை விட்டுக்கொண்டு பார்த்தல் – மிக உன்னிப்பாகவும் கருத்துடனும் பார்த்தல்

கண்ணில் வெள்ளெழுத்து — கண்ணில் மங்கல் ஏற்படும் நோயான வெள்ளெழுத்து (புதுமைப்)

கண்ணிலகுதல் — கண்ணொளி செய்தல்; கண் துலக்கமடைதல்; கண்பிரகாசித்தல்

கண்ணிலமர்தல் — கண்ணில் அமர்ந்திருக்கப் பெறல்

கண்ணிலன் — குருடன் (கு 566); இரக்கமற்றவன்; அறிவில்லான்

கண்ணிலான் — இரக்கமில்லாதவன் (இரட்ச 21 - 188) அறிவீனன் (இரட்ச 21 - 163); பார்வையிலான் (இரட்ச 17 - 13)

கண்ணிலி அறிவிலாதவன்; கண்ணேட்டமில்லாதவன் (பெ 1 - 35 - 163); குருடன்; குருடி; எறும்பு

கண்ணிலிடல் — கண்ணில் பூசுதல்

கண்ணிலிருந்து மறைத்தல் — அவமானப் படத்தக்க ஒரு பொருளைப் பிறர் பார்வையிலிருந்து மறைத்தல்

கண்ணிலே காட்டாதே — பிறர்க்குக் காண்பிக்காதே

கண்ணிலே தைத்தல் — கண்ணைக்கவருதல், கவனத்தை மிகவும் ஈர்த்தல்

கண்ணிலே பூப்படல், பூவிழுதல் — கண்ணில் பூவிழுதல்

கண்ணிலே மண்ணைத்தூவுதல் — கண்ணில் மண்ணைத் தூவுதல் (பார்வதி 99)

கண்ணிழத்தல் — கண்பார்வை கெட்டுப் போகவிடுதல்

கண்ணிழந்தார் — கண்கெட்டார்

கண்ணிழல் —கண்ணெளி (பெ 2-2-120; குருதாச 1-59-10)

கண்ணிழிதல் — கண் இழிவுறல்; நோயினுல் ஒளிகுன்றல்

கண்ணிழுக்கம் – கண் தளர்ச்சி; கண் சுருக்கம்; கண் பார்வைக் குறைவு

கண்ணிழைதல் — கண்ணுறுத்தல்; கண்ணின் உட்புறம் குறைதல்

கண்ணிற்கணிகலம் — கண்ணிற்கு அணி (கு 575)

கண்ணிற்காணுமாறு வைத்தல் — அருகிலேயே வைத்தல்

கண்ணிற் காய்தல் — கண்ணுல் எரித்தல் (ச 139–2)
கண்ணிற்கு அமையா — கண்ணினுல் கண்டு பிடிக்க முடியாதபடி அவ்வளவு அதிகமான (அரி நாட் 5)
கண்ணிற் பூ — கண்ணில் விழுந்த பூ
கண்ணிற்குப் போடுதல் — கண்ணுக்கிடுதல்
கண்ணிற் கூட்டம் — உள்ளப்புணர்ச்சி (பெ 3–9–142)
கண்ணிற் கூறல், கூறுதல் — கண்பார்வைக் குறிப்பால் கூறுதல் (க 6–3970)
கண்ணிற் பூ — கண்ணில் விழுந்த பூ
கண்ணிற்றல் — எதிர் நிற்றல் [கு 184]
கண்ணிறுக்கம் — விழி பருத்தலால் ஏற்படும் கண்ணெருக்கம்
கண்ணிறை — தூக்கம் [க கும்பகரு 10]
கண்ணின் நிற்றல் — தியானத்தில் எதிர்ப்படுதல் (க 3-1170)
கண்ணின் நிறம் மாறப் பெறல் – கோபம் முதலிய வல்லுணர்ச்சிகளால் கண்ணின் நிறம் மாறுதல்
கண்ணின் நீர் — கண்ணீர் [க 6–4095]
கண்ணின் நோக்குதல் — கண்ணுற் காணல் [அரி 4–146]
கண்ணின் மணி — கண்மணி
கண்ணின் மேலிமை — கண்ணின் மேல் மூடி
கண்ணிணை — இருகண் [இரட்ச 21–87]
கண்ணினளவு — ஒரு மாத்திரையளவு (சிந் 1393); இமைப் போது; கண்பார்வையளவு; கண்ணளவு
கண்ணினுற் காணல் — கண்ணுற்காணல்
கண்ணினுக்கினியான் — கண்ணுல் பார்ப்பதற்கு இனிமை தரும் அழகன் (திருவி 5–115)
கண்ணினும் இனிய — மிக இனிய
கண்ணினைச் சூலுதல் — கண்ணைத் தோண்டுதல் (அரி 8-59)

கண்ணீர் — கண்ணிலிருந்து வழியும் நீர் (மணி 3–13)
கண்ணீர் உகுத்தல், உதிர்த்தல் — கண்ணீர் சிந்துதல் சொரிதல், வடித்தல், விடுதல்
கண்ணீர்க் கொழுந்து — கண்ணீர்த் தாரை (நள 2–113)
கண்ணீர் கலங்கல் — கண்ணீர் ததும்பல்
கண்ணீர் ததும்பல் — கண்ணீர் துளும்பல்
கண்ணீர் துளும்பல் — கண்ணில் நீர் தேங்கியிருத்தல்
கண்ணீர்ப் பாத்திரம் — கண்ணீர் தங்கியிருக்கும் உள்ளுறுப்பு
கண்ணீர்ப் பிரவாகம் — கண்ணீர்ப் பெருக்கு (பிரதாப 23)
கண்ணீர்ப் புகை — கண்ணீரை வரவழைக்கும் வெடி குண்டுப் புகை
கண்ணீர்ப் பெருக்கு — கண்ணீர் வெள்ளம்
கண்ணீர் பீறிடல் — கண்ணீர் மிகுதியாக வெளிப்படல்
கண்ணீர் மல்குதல் — கண்ணீர் பெருகுதல்
கண்ணீர் முட்டல் — ஒருவகைக் கண்ணோய்
கண்ணீர்மை — கண்ணின் இயல்பு (கந் வெ 2–67)
கண்ணீர் வடித்தல் — கண்ணீரை வழிய விடல்
கண்ணீர் வறட்சி — கண்ணில் ஈரமின்மை
கண்ணீர் வாரல் — கண்ணீர் விடுதல்
கண்ணீர் விடுதல் — கண்ணீர் சிந்துதல், அழுதல்; துக்கப் படுதல்; க்ண்ணீருருத்தல்
கண்ணீரம் — கண்ணுக்கிடு மை
கண்ணீரருகல் — கண்ணினின்று எப்பொழுதும் நீர் ஒழுகிக் கொண்டிருக்கும் ஒரு கண்ணோய்
கண்ணீராக்கி — பச்சைக் கருப்பூரம்
கண்ணீருகுத்தல் — கண்ணீர் விடல், அழுதல்

கண்ணீரும் கம்பலையுமாயிருத்தல் — அழுது கொண்டே யிருத்தல்

கண்ணீரொழுக்கு — கண்ணினின்று நீர் வடிதல்

கண்ணீலம் பூத்தல் — கண் நீலநிற மடைதல்

கண்ணுக்கஞ்சனம் – கண்ணுக்கிடு மை

கண்ணுக்கிடு மருந்து — கண்மை

கண்ணுக்கினியான் — காட்சிக்கு இனியான், அழகன்; கரிசலாங்கண்ணி; பொன்னுங் கண்ணி; கண்ணிற்கு நன்மை பயக்கும் மருந்து

கண்ணுக்கு அகப்படுதல் – கண்ணில் படுதல்

கண்ணுக்கு எட்டும் தூரம் வரை – கண்பார்வை செல்லும் தூரம் வரை

கண்ணுக்குக் கட்டுதல் – கண்ணுக்கு எண்ணெய் அல்லது தைலமிட்டுக் கொள்ளுதல்

கண்ணுக்குக் கண்ணாக வளர்த்தல் – மிக அருமையாகப் போற்றி வளர்த்தல்

கண்ணுக்குக் கண்ணாதல் – மிகப் பாராட்டப் படுதல்; அந்தரங்கனாயிருத்தல்

கண்ணுக்குக் கண்ணாய் வைத்திருத்தல் – போற்றிப் பாதுகாத்தல்

கண்ணுக்குக் கண்ணானவன் – கண்போல் மிகச் சிறந்தவன்; தோழன்

கண்ணுக்குக் குளிர்ச்சி – கண்ணுக்கு ஏற்படும் குளிர்ச்சி

கண்ணுக்குச் சிறிது புலனாதல் – கண்ணிற்குச் சிறிது தென்படுதல்

கண்ணுக்குச் சுமாராயிருத்தல் – பார்ப்பதற்கு ஓரளவு அழகாயிருத்தல்

கண்ணுக்குத் தட்டுப்படல் – கண்ணில் படல்

கண்ணுக்குத் தப்புதல் – பார்வையில் அகப்படாமல் போதல்
கண்ணுக்குத் தெரிதல் – கண்ணுக்குத் தென்படல்
கண்ணுக்குத் தென்படுதல் – கண்ணில் படுதல்
கண்ணுக்குத் தோன்றுதல் – கண்ணில் படுதல்
கண்ணுக்குப் படுதல் – கண்ணில் படுதல்
கண்ணுக்குப் புலப்படுதல் – கண்ணில் படுதல்
கண்ணுக்குப் புலனுதல் – கண்ணுக்குத் தென்படுதல்
கண்ணுக்கு மறையும் வரை பார்த்தல் – கண் பார்வைக்குத் தெரியும் வரை பார்த்தல்
கண்ணுக்கு மறைவாயிருத்தல் – ஒளிந்திருத்தல்
கண்ணுக்கு முன்பாக – கண்முன்னுல்
கண்ணுக்கு மையெழுதல் – கண்ணிற்கு மையிடுதல்
கண்ணுக்கு ரம்மியமான – கண்ணுக்கு அழகான
கண்ணுக்கு விருந்து – அழகுமிக்க காட்சி
கண்ணுக்குள் நிற்றல் – நினைவு மாருமலிருத்தல்
கண்ணுக்கெட்டாத தூரம் – நெடுந்தூரம்
கண்ணுக் கெட்டிய தூரம் – அண்மை; கண்பார்வை செல்லும் தூரம்
கண்ணுங் கண்ணீருமாக இருத்தல் – அழுது கொண்டிருத்தல்
கண்ணுங் கருத்துமாய் இருத்தல் – முழுக்கவனத்துடனிருத்தல்
கண்ணுடை மூலி – விஷ்ணுகிராந்திச் செடி
கண்ணுடையார் – கண்ணுடையவர்; தயை உடையவர் *(திவ் 3470)*
கண்ணுணர்வு – கண்பார்வை; கட்புலன்
கண்ணுதல் – சிவபெருமான்; பார்த்தல் (நாம நி)
கண்ணுதலோன் – நெற்றிக் கண்ணன்

கண்ணுதற் கடவுள் – நெற்றிக்கண்ணனுகிய சிவபிரான் (குமர 524)

கண்ணுதற் செல்வன் – கண்ணுதற் கடவுள் (குமர 699)

கண்ணுதற் பரன் – கண்ணுதற் செல்வன்

கண்ணுதறல் – கண்ணடுக்கம்

கண்ணுதித்தல் – இழந்த பார்வை தோன்றுதல்; கண் படுதல்

கண்ணுந்தல் - கண் வெளியே தள்ளல்; கருவிழியில் சதை தளர்தல்

கண்ணுப்பீ – கண் முளை; கண்ணிலுண்டாகும் புளிச்சை

கண்ணுப்பீளை – கண்ணுப்பீ; கண் மலம்

கண்ணும் காதும் வைத்துப் பேசல் – ஒரு நிகழ்ச்சி குறித்துச் சில புனைந்துரை புனைந்து கூறல்; இட்டுக்கட்டிச் சொல்லுதல்

கண்ணுமண்ணுத் தெரியாமல் — கண் மூடித்தனமாக

கண்ணுமை — காட்சி (தொ பொ 76); கண்ணுக்கிடுமை; பார்வை; கண்மை; கண்ணோட்டம்

கண்ணுயர்தல் — கண்ணுந்தல்

கண்ணுயிர்த்தல் — தூங்கிவிழித்தல்

கண்ணுரசல் — கண்தேய்த்தல்

கண்ணுரித்தல் — கண்ணில் படர்ந்த சவ்வைக் கழற்றுதல்

கண்ணுரு — கண்ணிறம்; கண்ணோய்

கண்ணுருகல், கண்ணுருகுதல் — கண்ணீர் வார்தல், கண்ணீர் சிந்தல் (சிந் 682)

கண்ணுருட்டல் — கண்ணை உருளச் செய்தல்

கண்ணுலை மூடி — துவாரமுள்ள உலை மூடி; வடிதட்டி

கண்ணுலைவு — கண்ணடுக்கம்

கண்ணுவலி — கண்வலி
கண்ணுள் — கண்ணின் உட்புறம்; காத்து, சிறப்பு, சித்திரம்
கண்ணுள் வினைஞன் — சித்திரக்காரன் [சி 5 – 30]; சிற்பி
கண்ணுள்ளார் — கண்ணில் உள்ளார்; அறிஞர்
கண்ணுளர்—கண்ணகத்துள்ளார்; கூத்தர் [கழுத் உலா 369]
கண்ணுளாளர் — கண்ணுளர், நடிகர்
கண்ணுாளன் — கண்ணை உடையவன்
கண்ணுறக்கம் — தூக்கம், அரைத்தூக்கம்
கண்ணுறக்கல் — தூங்கும்படி செய்தல்
கண்ணுறக் காணல் — கண்ணால் பார்த்தல் [தனிபு 9 – 35]
கண்ணுற நோக்கல்—கண்கள் தைக்கப் பார்த்தல் [திவ் 515]
கண்ணுறல், கண்ணுறுதல் — பார்த்தல்
கண்ணுறத்தல், கண்ணுறுத்தல் — கண்ணுருட்டல்;
பொருமை உண்டாதல்; காட்டுதல்
கண்ணுறுதல் — பார்த்தல் [க குகப் 29]; எதிர்ப்படுதல் [சிந் 1214]; இட்டுதல் [பு வெ 2 – 4 கொளு]
கண்ணுறுப்பு — கண்ணின் பகுதிகள் இமை, விழிப் பாடவம் வெள்விழி, கருவிழி, பாவை, கண்குழி, கண்சோதி, தரிசநாம்பு முதலியன
கண்ணுறு படலம் — கண்படலம்
கண்ணுறு பொறி — விழிகளினின்று தெறிக்கும் சினப் பொறி [க 6 – 1306)
கண்ணுறை — சுவாமிக்குப் போடும் கண்ணடக்கம்; மேலிடு [பு 61; வலிவல 10 – 69]; கண்ணுற் கண்டு அஞ்சும் அச்சம் [கலி 96 – 12); தொடுகறி, துணைக்கறி; கண் மறைப்பு; கண்ணீர்; கருவிழி; கண்ணோர் தீர்க்கும் மருந்து
கண்ணுறைபவன் — கண் வளர்கிறவன் [திவ் 3221]
கண்ணூறு — கண் திருஷ்டி

கண்ணூறு கழித்தல் — கண்ணெச்சில் கழித்தல்; திருஷ்டி தோஷம் போக்குதல்

கண்ணூனம் — கண்ணில் எக்குற்றமுமின்றி ஏற்படும் குருட்டுத் தன்மை

கண்ணூல் — கண்ணோய்களைப் பற்றிக் கூறும் நூல்

கண்ணூறு — கண் திருஷ்டி (வைண 2–252; குசே 348, பரங் அலங் 184)

கண்ணூறு கழித்தல் — கண்ணேறு போக்குதல் (அருட் 12–42-14)

கண்ணூனன் — குருடன்

கண்ணெச்சில் — திருஷ்டி, கண்ணேறு

கண்ணெச்சில் கழித்தல் — கண்ணேறு கழித்தல்

கண்ணெச்சில் படுதல் — கண்ணேறு உண்டாதல்

கண்ணொட்டுதல் — கண் தூக்கநிலை யடைதல்

கண்ணெடுக்காது பார்த்தல் — வைத்தகண் வாங்காது பார்த்தல்

கண்ணெடுத்தல் — பார்வையைத் திருப்புதல் (குயில் 9—230)

கண்ணெடுத்துப் பார்த்தல் — கவனித்துப் பார்த்தல்; உற்றுப் பார்த்தல்; அருள் செய்தல்

கண்ணெடுப்பு — கடைக் கண்ணில் உப்பலை உண்டாக்கிக் கொண்டேயிருக்கும் ஒரு கண்ணோய் (சீவரட் 269)

கண்ணெதிர்ப்படுதல் — திடீரென்று ஒருவர் அல்லது ஒன்று கண்ணில் படுதல்

கண்ணெதிரே தோன்றுதல் — கண் முன்னுல் தோன்றுதல்

கண்ணெதிரே நிற்றல் — முகத்தின் முன்பு நிற்றல்

கண்ணெரி — கண்ணிலிருந்து எழும் தீ; கோபப் பார்வை (சி பதி அடி)

கண்ணெரிச்சல் — கண்ணில் உண்டான எரிச்சல்

கண்ணெரிசல் — விழி வீங்குதலால் கண்ணுக்கு ஏற்படும் நெருக்கம்

கண்ணெரித்தல் — கண் எரியச் செய்தல்: கண்குவளையை நெரிக்குமது போற் காணும் ஒரு நோய்

கண்ணெரிதல் — கண்ணுக்கு உண்டாகும் எரிச்சல்

கண்ணெரிவு—சூடு, தூக்கமின்மை, அழற்சி முதலியவற்ருல் கண்ணில் ஏற்படும் எரிச்சல்

கண்ணெருக்கம் — நடுவிழி அல்லது கண்ணிரப்பையில் அதிகமான வீக்கம் காணுவதால் கண்ணுக்கு ஏற்படும் இறுக்கம்

கண்ணெழுகாசம் — கருவிழியிலுண்டாகிக் கண்பார்வையைக் கெடுக்கும் காசநோய்கள்

கண்ணெழுச்சி — கண்ணில் சதை வளருதல்; கண்ணில் எழும்புதல்

கண்ணெழுத்தாளன் — அரசனுடைய திருமுகம் முதலியன எழுதுவோன் (சி 26—170)

கண்ணெழுத்து — சித்திரவகை யெழுத்து

கண்ணெறி — திருஷ்டி தோஷம்; கண்ணின் வெள்விழியில் ஏற்படும் விரணம்

கண்ணெறிதல்—கடைக் கண்ணாற் பார்த்தல்; விரும்புதல்; கண்சாடை காட்டல்

கண்ணெனப் போற்றுதல் — மிக அருமையாகப் போற்றுதல்

கண்ணேணி — கணுக்களில் அடிவைத்து மலை முதலியவற்றில் ஏறிச் செல்லும்படி யமைத்துள்ள மூங்கிலேணி; கணுவேணி (குற் பு 2-13-1)

கண்ணேறு — கண்ணூறு, கண்திட்டி; கண்ணேறு படத் தக்க அழகு (சேக் பு 92)

கண்ணேறு கழித்தல் — திருஷ்டி கழித்தல் (வைண 2—13)

கண்ணேறு படுதல் — கண் திருஷ்டி உண்டாதல்

கண்ணேறு வாந்தி — ஒருவர் சாப்பிடும் உணவைப் பார்த்துத் தனக்கு இல்லையே என்று வருந்துவதால் அல்லதுபொருமைப் படுவதால் உண்போருக்குத்திருஷ்டி ஏற்பட்டு ஓயாத வாந்தியை உண்டாக்கும் ஒரு தோஷம்

கண்ணை — கண்ணினை; கண்ணை உடையாய்

கண்ணை இமைகாத்தது போல் — மிக்க கவனத்துடன்

கண்ணை இடுக்கிப் பார்த்தல் — ·கண்ணைச் சுருக்கிப் பார்த்தல்

கண்ணை இமைக்காது பார்த்தல் — கண் கொட்டாது பார்த்தல்

கண்ணை இருட்டிக் கொண்டு வருதல் — கண் இருளடைவது போல் திடீரென்று ஏற்படும் மயக்க நிலை (பே)

கண்ணை இறுக மூடிக்கொள்ளல் — பயம் முதலியவற்றால் கண்ணைக் கெட்டியாக மூடிக் கொள்ளல்

கண்ணை உருட்டி விழித்தல் — கண் உருளுமாறு சினங் கொண்டு பார்த்தல்

கண்ணை உறுத்துதல் — கண்ணில் தூசு முதலியன விழுந்த தால் கரித்தல்; பொருமையுடன் கண்ணைக் கவர்தல்; பொருமைப்படல்

கண்ணை உறுத்திக் கொண்டிருத்தல் — பொருமையை உண்டாக்கிக் கொண்டிருத்தல் (நாடகமே 164)

கண்ணை எடுக்காமல் பார்த்தல் — வைத்த கண் வாங்காமல் பார்த்தல்

கண்ணை ஏமாற்றல் — பிறர் காணுதவாறு திருட்டுத்தனம் செய்தல்

கண்ணை ஒரேயடியாய் மூடி விடுதல் — சாதல்

கண்ணை ஒடுக்குதல் — கண்ணைக் குருடாக்கல் (பே)

கண்ணை ஓட்டுதல் — கண்ணைச் செலுத்துதல்

கண்ணை ஓட விடுதல் — பார்த்தல்

கண்ணைக் கசக்கிக் கொண்டு நிற்றல் — வருத்தத்தைத் தெரியப்படுத்தல் (பரந்த 151)

கண்ணைக் கசக்குதல் — தூங்கி விழித்தவுடன் கைகளால் கண்களைத் தேய்த்தல்; அழும்போது கண்ணைக் கசக்கிக் கொண்டிருத்தல்;கண்ணைத் தேய்த்தல்; துக்கப் படுதல்

கண்ணைக் கட்டல்—துணியால் கண்ணைக் கட்டி மூடுதல்

கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டதுபோலிருத்தல்— ஒன்றும் புரியாது விழித்தல்; திக்குமுக்காடுதல்

கண்ணைக் கட்டிக் கொண்டு வருதல் — கிறுகிறுப்பினால் கண் மயங்குதல்; மயக்கம் வரும் உணர்ச்சியை அடைதல் (பே)

கண்ணைக் கவர்தல் — கண்ணைப் பறித்தல்; கூசுதல்; அழகுடைத்தாதல்

கண்ணைக் கவரும் காட்சி — அழகு மிக்க காட்சி

கண்ணைக் கழுவுதல் — தூங்கியெழுந்ததும் முகம் கழுவுதல்

கண்ணைக் காட்டல், காட்டுதல்—விருப்பம் முதலியவற்றைத் தெரிவிக்கக் கண் சாடை காட்டுதல்

கண்ணைக் குத்துதல் — கண்ணைப் பிடுங்குதல்

கண்ணைக் குத்தும் வெய்யில் — சுள்ளென்று காய்ச்சும் வெய்யில் (புதுமைப்)

கண்ணைக் குருடாக்கிக் கொள்ளல் — வேண்டுமென்றே ஒரு நிகழ்ச்சியைப் பார்க்க விரும்பாதிருத்தல்; வேண்டுமென்றே பராமுகமாயிருத்தல்

கண்ணைக் கெட்டியாக மூடிக் கொள்ளல் — கண்ணை இறுக மூடிக் கொள்ளல்

கண்ணைக் கெடுத்தல் — கண்ணைக் குருடாக்கல்

கண்ணைச் சிமிட்டல் — கண்ணால் சைகை செய்தல்; கண்ணிமைத்தல்

கண்ணைச் சிமிட்டாது பார்த்தல் — கண் கொட்டாது பார்த்தல்; வைத்த கண் வாங்காது பார்த்தல்

கண்ணைச் சுழற்றுதல் — கண்ணால் அங்குமிங்கும் பார்த்தல்; கண் சுழலும்படி செய்தல் (அலை)

கண்ணைச் சுற்றிக் கொண்டு வருதல் — மயக்கம் அல்லது தூக்கம் வருதல்

கண்ணைச் சொருகல், சொருகுதல் — தூக்கம், நோய் இவற்றால் கண் தானாக மூடிக் கொள்ளல்

கண்ணைத் தாக்குதல் — (நோய்) கண்ணைப் பற்றுதல்

கண்ணைத் திருப்பிக் கொள்ளல் — வெட்கம் அல்லது துக்கத் தால் ஒரு காட்சியைக் காண விரும்பாது முகத்தைத் திருப்பிக் கொள்ளல்

கண்ணைத் திறந்து கொண்டே காரியம் செய்தல் — வேண்டு மென்றே திட்டமிட்டுக் காரியம் செய்தல்

கண்ணைத் தின்றவன் — குருடன் (பே)

கண்ணைத் துடைத்துக் கொள்ளல் — அழுது முடிந்த பிறகு கண்களைத் துணியினால் துடைத்துக் கொள்ளல்; ஆறுத லடைதல்

கண்ணைத் தேய்த்துப் பார்த்தல் — பூத்துப் போன கண்ணைக் கையால் தேய்த்து நோக்குதல்

கண்ணைத் தோண்டி யெடுத்தல் — கண்ணைக் குடைந் தெடுத்தல்

கண்ணை நீரால் நிறைத்தல் — கண்ணில் நீர் தேங்கி நிற்கும் படி செய்தல்

கண்ணை நோண்டி எடுத்தல் — கண்ணைத் தோண்டி எடுத்தல் (பே)

கண்ணைப் பதித்து வைத்தல் — வைத்த கண் வாங்காது பார்த்தல்

கண்ணைப் பற்றுதல் — கண்ணை ஊன்றிப் பிடித்தல்

கண்ணைப் பறிக்கும் அழகு — பேரழகு (பாஞ்சாலி 44)

கண்ணைப் பறிக்கும் ஒளி—பேரொளி

கண்ணைப் பறிக்கும் மின்னல் — கண்ணை வெட்டும் மின்னல்

கண்ணைப் பறித்தல் — கண்ணைப் பிடுங்குதல்; கண்ணைத் தோண்டுதல்; கண்பார்வையைக் கவர்தல் (சுவாமி பி த 74)

கண்ணைப் பார்த்தல் — உள்ளத்து உணர்ச்சியைக் கண்ணிலிருந்து தெரிந்து கொள்வதற்காகப் பிறர் கண்ணை நோக்குதல்

கண்ணைப் பிசைதல் — கண்ணைக் கசக்குதல் (புதுமைப்)

கண்ணைப் பிசைந்து கொண்டு நிற்றல்—கண்ணைக் கசக்கிக் கொண்டு நிற்றல்

கண்ணைப் பிடுங்கல், பிடுங்குதல் — கண்ணைத் தோண்டுதல்

கண்ணைப் பிதுக்குதல் — கண்ணின் உள்ளக இமைப் பகுதி வெளியே தோன்றுமாறு செய்தல்; கண்கலங்குமாறு செய்தல்

கண்ணைப் போன்ற — மிகச் சிறந்த

கண்ணை மறைத்துக் கொள்ளல் — வெட்கம் அல்லது அவமான முண்டாக்கும் செயல் அல்லது காட்சியைக் காண விரும்பாது கண்ணை மூடிக் கொள்ளல்

கண்ணை மூடிக் காட்டில் விட்டு விடல்—கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டு விடுதல்

கண்ணை மூடிக் கொண்டு காரியத்திலிறங்குதல்—ஆராயாது காரியம் செய்யத் தொடங்குதல்

கண்ணை மூடிக் கொண்டு பிறரைப் போல் நடத்தல் — பிறர் செய்வது போல அப்படியே செய்தல்

கண்ணை மூடிக் கொண்டு செலவு செய்தல் — ஊதாரித்தனமாய்ச் செலவு செய்தல்

கண்ணை மூடிக் கொளல் — அவமானத்தால் கண்ணை மறைத்துக் கொளல்; சாதல் (அம்மணி பாய் 13)

கண்ணை மூடி விடல், மூடுதல்—சாதல்

கண்ணை யுருட்டிப் பார்த்தல் — கண்ணை யுருட்டி விழித்தல்

கண்ணை விட்டகல்தல் — கண்பார்வையினின்றும் மறைதல்

கண்ணை விட்டு நீங்காதிருத்தல் — கண்ட காட்சி மனத்திலிருந்து சிறு போதும் மறையாதிருத்தல்

கண்ணை விழித்துக் காட்டல் — பயமுறுத்துதல்

கண்ணை விழித்துக் கொள்ளல் — கண் திறந்து கொள்ளல்; எதிர்வரும் ஆபத்தைத் திடீரென உணர்ந்து கொள்ளல் (நாடகமே 143)

கண்ணை விழித்துப் பார்த்தல் — கண்ணைத் திறந்து விரித்துப் பார்த்தல் (படித்த 35)

கண்ணை வெட்டும் மின்னல் — கண்ணைப் பறிக்கும் மின்னல் (புதிய 87)

கண்ணொட்டுதல் — கண்ணின் இரப்பைகள் பீளையினால் ஒட்டிக் கொள்ளல்; தூக்க நிலையடைதல்; கண்ணிரப்பை கண் விழியில் ஒட்டிக் கொள்ளல்

கண்ணோராயிரத்தான் — இந்திரன் (வள்ளி 3—22)

கண்ணொளி — கண்வெளிச்சம்; கண்ணின் பிரகாசம்

கண்ணொளி ம(மு)ங்குதல் — கண்பார்வை மங்குதல்

கண்ணோ — கண்ணோய்; கண் வலி

கண்ணோக்கம் — கண் பார்வை

கண்ணோக்கல் — பார்த்தல்

கண்ணோக்காடு — கண் வலி; கண் வாதம்

கண்ணோக்கு — பார்வை; அருட்பார்வை (நீதிநெறி 37)

கண்ணோக்குதல் — கருணையோடு பார்த்தல்

கண்ணோசை — கண்ணில் சதை வளருதல்

கண்ணோட்டம் — கடாட்சம், கடைக்கண் பார்வை; கண்குறிப்பு, பட்சம், பார்வையிடுதல்; சுழி முனை; நோக்கம்

கண்ணோட்டு மூசி — கண் சிகிச்சைக்கு உபயோகிக்கும் ஊசி

கண்ணோடல், கண்ணோடுதல் — இரங்குதல் (பு 19); விரும்பிய பொருள் மேற் பார்வை செல்லுதல்; விருப்பம் வைத்தல்

கண்ணோடு கண் பேசுதல் — காதலர் கண்கள் தமக்குள் பேசிக் கொள்ளல்

கண்ணோடை — கண்ணீர்த்தாரை

கண்ணோய் — கண்ணோவு; கண்வலி

கண்ணோய்க்காரம் — கலிக்கம்; கண்ணுக்கிடும் பிரமதண்டு ஆவாரை முதலியன,

கண்ணோய்க்கிரியை — கண்ணோய்களுக்கு ஏற்பட்ட பல விதமான சிகிச்சைகள்

கண்ணோய்க் கூச்சம் — கண்ணழற்சியால் உண்டாகும் கூச்சம்

கண்ணோய்ச் சிகிச்சை — கண் வைத்தியம்

கண்ணோய்ச் சூலை — கண்ணோயிற் காணும் சூலை

கண்ணோய்த் தூமம் — கண்ணோய்க்கிடும் புகை

கண்ணோய்ப் பீளை — கண்ணழற்சியால் உண்டாகும் பீளை

கண்ணோய் வலி — கண்ணோவு

கண்ணோய் விகாரம் — கண்ணுக்கு ஏற்படும் நோயினால் உண்டாகும் விகாரங்கள்

கண்ணோவு — கண்ணில் ஏற்படும் வலி, கண்ணோய்

கண்ணோவுப் பூண்டு — செங்காந்தட் பூ

கண்தலை தெரியாது — கண்ணு மண்ணுத் தெரியாது (பே)

கண்தாக்குதல் — கண்ணிற் படுதல் [க 6—3766]

கண்தாரை — கண்ணின் நடுவிலிருக்கும் கண்மணி

கண்திட்டம் — பார்வையாலிடும் மதிப்பு; கண் மதிப்பு

கண்திட்டி —கண்ணூறு; கண்ணேறு; கடும் பார்வை

கண் திமிரம் — கண் புரைகளில் வாயு அனுசரிப்பதால் கண் நரம்பைக் கெடுத்துப் பார்வையைக் குலைத்து இருளை உண்டாக்கும் நோய்

கண்திரை — கண்ணேய்க் காலத்தில் வெளிச்சம், தூசு முதலியன படாதபடி கண்ணுக்கு இடும் திரை; கண் சுருக்கம்.

கண்திறத்தல்—சிலே முதலியவற்றிற்குக் கண்விழி தோன்றச் செய்தல்; பருகுவதற்கு இளநீரில் கண்ணேத் திறத்தல்; கருணை புரிதல்; அறிவுண்டாக்குதல்; கல்வி கற்பித்தல் இரக்கப்படல்; திரை நீக்கல்; வழி பிறத்தல்

கண் திறந்திருத்தல் — கவனத்துடன்; எச்சரிக்கையுடன் இருத்தல்

கண் திறந்து பார்த்தல் — உண்மை நிலேயை உள்ளபடி உணருதல்

கண் திறந்துவிடல் — (ஞாஞசிரியன் சீடனின்) அறிவுக் கண்ணேத் திறந்து விடல் (புதுமைப்)

கண் தினவு — கண் சிவந்து, அரிப்பும் உறுத்தலும் உண்டாகி, நீர் வடிந்து, எரிச்சல், தூக்கமின்மை முதலிய குணங்களேக் காட்டும் நோய்

கண் துஞ்சல் — கண் துயில்தல்; கண்ணுறங்கல்; கண்ண டைதல்

கண் துடித்தல் — கண்ணிமை துடித்தல்

கண் துடைத்தல் — கண்ணீரைத் துடைத்தல்

கண் துடைப்பு — ஏமாற்று

கண் துயில் — தூக்கம்; கண்ணுறக்கம் (காஞ்சிப் *11-5*; இரட்ச *22-13*)

கண் துயில்தல் — உறங்குதல்

கண் துயில் புரி → உறங்கு (கூர்ம 1-29-182)

கண் தூக்கம் கொள்ளாமல் — தூங்காமல் (இராமப் அம் 14)

கண் தெரிதல் — கண் பார்வை பெற்றிருத்தல்

கண் தெரியாதவன் — குருடன்

கண் தெறித்தல் — கண்ணில் குத்துவலி காணுதல்; விழி தெறித்து விழுதல்; கண் பிதுங்கி நிற்றல்; பெரு வெளிச் சத்தால் கண்ணொளி மங்குதல்

கண் நனைதல் — கண்ணீர் விடல் (அஷ் 6-46)

கண் நிதானம் — கண்ணால் பார்த்து மதிப்பிடல்

கண் நிலைக்குத்திவிடல் — கண் மேலே பார்த்தபடி ஒரு வழியே நிற்றல்

கண் நிறைந்த அழகி — கண்ணுக்கு இன்பந் தரும் பேரழகி (சேற்றில்)

கண் நிறைந்த கணவன் — அழகு மிக்க கணவன்

கண் நிறைந்த காரிகை — கண் நிறைந்த அழகு (கு 1272)

கண் நிறைந்திருத்தல் — (நண்பர்கள், அன்பினர் குழுவினைக் கண்டு) மகிழ்ச்சியுற்றிருத்தல்

கண் நின்ற — கண் முன்னே நின்ற (க 6-1558)

கண் நோக்காடு — கண்வலி (பண தூ 300)

கண் பகிர்தல் — கண் வெடிப்பு

கண் பசத்தல் — கண்ணின் நிறம் மாறுதல் (கலி 82-20; நற் 35)

கண் பசலை பாய்தல் — கண் பசலை நிறமடைதல் (ஐங் 477)

கண் பஞ்சடைதல் — பசி முதலியவற்றால் பார்வை மங்குதல்; கண்ணொளி மழுங்கும் ஓர் மரணக்குறி

கண்பஞ்சாதல் — மரணக்குறி (பெ தொகை 1739)

கண் பட்டு விடல், விடுதல் — கண்ணேறு படுதல்

கண் பட்டை — கண்ணிமை; கண் மடல்

கண்படல் — திருஷ்டிபடுதல்; நித்திரை செய்தல்; தூங்கல்; கண் பார்வை செல்லல் (சிறு 78)

கண் படலம் — பார்வையைக் கெடுக்கும் ஒரு கண்நோய் (திருமந் 2074)

கண் படு — உறங்கு (தணி பு 10-297)

கண் படுக்கும் — உறங்கும் (திவ் 1194)

கண் படுத்தல் — கண் துயில்தல் (கந் திருக்கைலாச 5)

கண் படுதல் — தூங்குதல்; கண்ணேறு படுதல்

கண் படை — உறக்கம் (பு322; பு வெ 183 கொளு); மேகத்தினால் கண்ணில் படரும் சதைச் சவ்வு

கண் படை கொள்ளல் — உறங்குதல் (குசே 505; இரட்ச 16-20)

கண் படைத்தோர் — கண் பெற்றோர்; கண்ணுள்ளோர்

கண் படை நிலை — தூக்க நிலை; அவையில், இரவில் நெடு நேரம் தங்குதலினால் அரசனை நோக்கி மருத்துவர் முதலியோர் அவன் துயில் கோடலைக் கருதிக் கூறும் புறத்துறை (தொ பொ 90)

கண் பரிகாரம் — கண் வைத்தியம்; கண் சிகிச்சை

கண் பரிகாரி — கண் வைத்தியன்; கண்ணோய் தீர்ப்பவன்

கண் பரிதல் — மூட்டறுதல் (பெ தொகை 516)

கண் பரியும் (ஒளி) — கண்ணால் பற்றக்கூடிய (ஒளி) (ச 325-9)

கண்பழக்கு — கண் ஓடிப் பழகிய பழக்கம்; கண்ணோட்டம் (அப் 681)

கண் பழகுதல் — கண்டு பழகுதல் (திவ் 900)

கண் பரப்பல் — அங்குமிங்கும் அலமந்து பார்த்தல்; தேடுதல் திகைத்தல்; பார்த்தல்

கண் பறைதல் — கண்ணொளி குறைதல்

கண் பனி — கண்ணீர் (அக 265; கலி 53–11 ஐங் 19; திவ் 3299; குறுந் 86; கூர்ம 1–16-27; க 3-222)

கண் பணித்தல் — கண்ணீர் சிந்துதல் (திவ் திருநெடுந் 12)

கண் பனி தூங்கல் — கண்ணீர் துளித்தல் (காசிகண் 7-3)

கண் பாடு — உறக்கம் (நாலடி 366; குமர 297)

கண் பாய்ச்சல் — பார்வை

கண் பார்த்தல்; கடைக்கண் பார்த்தல் அருளொடு நோக்குதல்; தயை பண்ணல்,இரங்கல்; கருணை செய்தல்; கடாட்சித்தல் (திவ் 3376);கிருபைசெய்தல் (புக அ 92) கண்ணால் பார்த்தல்;அருள் செய்தல் (பாஞ்சாலி 271)

கண் பார்வை—மேற் பார்வை; மதிப்பு; கண்ணால் பார்த்தல்

கண் பார்வையில்லாதவர் — குருடர்

கண் பார்வையில் வைத்தல் — ஒரு பொருளைக் கண்ணில் படும்படி வைத்தல்

கண்பால் ஒளியினர் — கண்ணில் ஒளியுடையவர்கள் (சிரா கோ 104)

யண் பாவை — கண்மணியிலுள்ள பாவை

கண் பிசைதல் — துக்கத்தால் கண்ணைக் கசக்குதல் (இரட்ச 20-79); கண்ணைப் பிசைதல் (தி 1172)

கண் பிடி — கொத்திளங்காய்; பிஞ்சுக்காய்; இளங்காய்

கண் பிணி — கண்ணோய்

கண் பிதுக்கம் — கண் வெளித்தோன்றி நிற்றல்

கண் பிதுங்குதல் — வேலை மிகுதியால் வருத்தம் மிகுதல்; கண் தெறித்தல், ஒரு மரணக்குறி

கண் பிரிதல் — கருவிழி பிரிதல்

கண் பீலி — ஒரு வகைக் கால் மோதிரம்; மயில் தோகையிலுள்ள கண்

கண்பீளை — கண்ணில் உண்டாகும் புளிச்சை; கண்ணழுக்கு

கண்புகல் — கண் துயிலல் (ச 177–1)

கண் புகைச்சல் — பார்வை மேகம் கம்மியது போல் மங்கலாயிருத்தல்; வெள்ளெழுத்து

கண் புடைத்தல் — கண் வீங்குதல்; கண்ணுக்குள் சதை வளர்ந்து குத்தலுடன் மிக்க வலியையும், மெய்ம் மறந்த மூர்ச்சையையும் தினவையும் வேதனையையும் உண்டாக்கும் ஓர் கண்ணோய்

கண் புண் — கண்ணில் ஏற்படும் புண்

கண் புணராமை — தூங்காமை

கண் புதைத்தல் — கண் பொத்துதல் (கோ 43); மறைத்தல் (சிந் 1982)

கண் புதைதல் — அறிவு கெடுதல் (நல்வழி 28), மூடப்பட்டு மறைதல் (திவ் இயற் பெரியதிருவ 21); உள்ளுக்கு ஆழ்தல்

கண் புரை — கண்ணின் புரை; சவ்வுகளுக்குத் தாபிதம் முதலியவை ஏற்பட்டு அதனாலுண்டாகும் நோய்கள்; கண்ணில் வளரும் படலம்

கண் புருவம் — கண்ணின் மேலுள்ள புருவம்

கண் புலன் — கண் பார்வை

கண் புழு — கண்ணின் குவளையிற் காணப்படும் புழு. மேலிமையிற் காணும் புழு

கண் புழு வெட்டு — கண்ணின் இரப்பையிலுள்ளமயிர்களைப் புழுக்கள் அரித்து அழற்சியை உண்டாக்கும் ஒரு கண்ணோய்

கண் புளிச்சை — கண்ணிலுண்டாகும் பீளை

கண் புனல் — கண்ணீர் (கந் 3–9–12; சிங் ம 1-51)

கண் புனல் சொரிதல் — கண் நீரைச் சொரிதல் [அரி 7–41]

கண் பூ — இரப்பையில் சதை வளர்ந்து அதனால் விழி தேய்வடைந்து கண்ணில் பூவைப் போல் படர்ந்து காணப் படும் ஒரு கண்ணோய்

கண் பூத்தல் — நெடு நேரம் உற்றுப் பார்ப்பதால் கண்ணுக்கு ஏற்படும் ஒளிக் குறைவு; கண்பார்வை மங்கல்[பஞ்ச 5–69] கண் மங்கல் கண் கூசுதல் (வேங் உலா 33)

கண் பூத்துப் போதல் — கண் பார்வை மங்குதல்

கண் பூர்தல் — கண் திருப்தியடைதல் [யாழ் அக]

கண் பூளைச் செடி — சிறு பூளைச் செடி

கண் பெருங் கண்ணன் — பெரிய கண்களையுடைய கிருஷ்ணன் [திவ் 3833]

கண் பெற்ற பேறு பெறுதல் — அழகிய காட்சியைக் காணப் பெறுதல்

கண்பெறுதல் — இழந்த பார்வைபடைதல் (நா 3–92) அருள் நோக்கிற்கு இலக்காதல் (கலி 8-33); அறிவு பெறல்

கண்பொட்டு — கன்னப் பொட்டு

கண் பொங்கல், பொங்குதல்—வெப்பத்தினுல் கண் இரப்பை மூடிக் கொள்ளல்

கண்பொத்தல் — கண்ணைத் துணி அல்லது கையினுல் மறைத்தல்

கண்பொத்திக் குட்டல் — சிறுவர் கண்ணை மூடி ஆடும் ஒரு விளையாட்டு; கண்ணும் பூச்சி

கண்பொத்துதல் — (விளையாட்டில்) துணியால் அல்லது கையால் கண்ணை மூடுதல்

கண் பொருந்தல் — கண் துயிலல் (பெ 4–5–60)

கண் பொறி — கண்ணொளி (பு 161–13)

கண் பொறி தட்டுதல் — கண் கலங்குதல்; கண்ணொளி மங்குதல்; சூடு மிகுதியால் கண்ணில் பொறி தோன்றுதல்

கண் பொன்றல், பொன்றுதல் — கண்ணழிதல்; கண் பார்வை குறைதல்; கண் பார்வை கெடல்; முதுமை பிணி அல்லது வெகு நேரம் ஊன்றிப் பார்த்தல் முதலிய காரணங்களால் பார்வை குறைதல்

கண் போடல், போடுதல் — இச்சையுடன் ஒரு பொருளின் மேல் மனம் வைத்தல்; நாட்டம் வைத்தல்; திருஷ்டி தோஷ முண்டாக்கல்

கண்போல் சிறந்த — மிகச் சிறந்த (புகழே 5–3–32)

கண்போல்வார் — கண் போல் சிறந்தவர்கள் (ஏலாதி 15)

கண் மங்டம் — கண் மங்கல்

கண் மருடமாயிருத்தல் — கண் மங்கலாயிருத்தல்

கண் மங்கல், மங்குதல் — கண்ணொளி குறைதல்; குருடாதல் கண்புகைச்சல்; வெள்ளெழுத்தாதல்

கண் மட்டம், கண் மட்டு — கண் மதிப்பு; கண் நிதானம்

கண்மடல் — இமை; ஊற்றுக்கண்; கண் பட்டை; கண் ரெப்பை

கண்மடுத்தல் — கண் பார்த்தல் (மதுரைக் 630)

கண்மண்டை — கண் கூடு; கண்ணெலும்புக்கூடு

கண் மண் தெரியாமல் ஓட்டுதல்—வெகு வேகமாக ஓட்டுதல் (பே)

கண்மணி — உருத்திராக்கம், அக்குமாலை (சூத 3-9-14); கழுக் சி வெ 40; கலங் வி மா 20; அம்பர் 20; சேக் பித 10; ஆற் பு 3-8); கண்ணின் கருமணி (சி11-55) கடவுள் (அருட் 10-1-2); பிரியமான பொருள்

கண் மணித் தாழ் வடம் — உருத்திராக்கமாலை (தணிகா பு 126]

கண் மத்திமமாயிருத்தல் — கண் இடைப்பட்ட ஒளியுடைய தாயிருத்தல்

கண் மதிப்பு — கண் திட்டம்

கண் மதியம் — கண்மதிப்பு; கண்பார்வை

கண் மயக்கம் — கண்ணின் சதைக் குற்றத்தினாலும், உணர்ச்சிக் குறைவு அல்லது மாறுபாட்டினாலும் தலை சுற்றுவது போல் உண்டாகும் உணர்ச்சி

கண் மயக்கு — கண் மயக்கம்; மாயத் தோற்றம்; கண்மயங் கும்படி செய்யும் வித்தை; கண்ணால் மயக்கஞ் செய்யும் பார்வை (குற் குற 68)

கண் மயக்குவாதம் — ஒரு வகையான வாத நோய்

கண் மயக்கு வித்தை — கண்மயங்கும்படி செய்யும் வித்தை; தந்திர வித்தை, சாலவித்தை

கண் மயத்த கத்தூரி — கண் நோக்கு நிறைந்த கத்தூரி [சுந் 477]

கண் மயம் — தாட்சிணியம் [உபதேச உருத்திராக் 106]

கண் மயிர் — கண்ணிமையிலுள்ள மயிர்; புருவம்

கண் மருட்சி — கண்மருட்டு, கண் மயக்கு; கண்ணுல் மயக்குதல்; மாயத்தோற்றம்; கண்ணை விழிக்கும் போது உண்டாகும் ஒருவித மயக்கம்

கண் மருட்டல் — கண்ணுல் மருட்டல் (திருமுகவி)

கண் மருட்டு — கண்ணுலே நோக்கி மயக்குதல்

கண் மருத்துவம் — கண்ணுக்குச் செய்யும் வைத்தியம்

கண் மருந்து — கண்ணுக்குப் போடும் மருந்து; கண்ணுக்கிடும் மை

கண் மலம் — பீளை

கண் மலர் — கண்ணுகிய மலர், மலர் போன்ற கண் (திவ் 1913); விக்கிரகங்களுக்கு அணியும் விழிமலர் போன்ற ஆபரணம் (சாச)

கண் மலர் சாத்தல் — விக்கிரகங்களுக்குக் கண் மலர் அணிவித்தல்; கண்பார்த்தல் [குமர 505]

கண் மலர்த்தல் — கண்ணைத் திறத்தல்; தூங்கிவிழித்தல்

கண் மலர்தல் — முகமலர்ச்சியோடு விழித்தல்

கண் மழுங்குங் காரிருள் — கண்ணொளியை மழுங்கச் செய்யும் கும்மிருட்டு

கண் மழை — கண்ணீர் வெள்ளம் (பெரிய மனு 45); கண்ணீர் (மயூர கோ 388)

கண்மழை சிந்தல்—கண்ணீரை மிகுதியாய்விடல்(குமர 165)

கண் மழை பொழிதல் — கண்ணில் நீர் வழிதல்

கண் மறிக் காட்டல் — கண் குறிப்புக் காட்டல்

கண் மறு — கண் மாசி, கண் குற்றம்; கண் மலம்

கண் மறுத்தல் — பாராமுகமாயிருத்தல்

கண் மறைத்தல் — கண் பொத்துதல் [கண்ணன் பாட்டு 17]

கண் மறைப்பு — கண் மங்கல்; வெள்ளெழுத்து; குதிரைக்கிடும் கண் மறைப்பு

கண் மறைவாயிருத்தல் — தலை மறைவாயிருத்தல்

கண் மாசு — கண்ணழுக்கு, கண் பீளை; மேகத்தினால் இமையிலும், கருவிழியின் மேற்றோலிலும் தாபிதம் உண்டாகி அதனால் மாசுபடிந்து கண்ணொளியை மறைக்கும் ஓர் கண்ணோய்

கண் மாசுபடிதல் — கண்ணின் கருவிழியில் மாசு படர்தல்

கண் மாந்தம் — கண்ணின் பார்வைக் குறைவு

கண் மாய் — கண் வாய், ஏரி, குட்டை

கண் மாயம் — கண் மயக்கம் [திருவா46]; கண்கட்டுவித்தை [திருவா 5-42]; பொய்க்காட்சி, உருவெளித் தோற்றம், நோயினால் ஏற்படும் பொய்த் தோற்றம், கண்ணை மறைத்தல், ஏமாற்றம், திருஷ்டி தோஷம்

கண் மாயமாய்ப் போதல் — கண் பார்வையிலிருந்து திடீரென்று காணாமல் போதல்

கண் மாரி — கண்ணீர்ப் பெருக்கு [கலைசைக்கோக22]

கண் மாரி பெய்தல் — கண்ணீரைப் பெருக்குதல் [பழனி மதூது307]

கண் மாற்றம் — தோன்றிமறைதல்; கண்ணுக்கேற்படும் பலவிதத் தோற்றங்கள், இயற்கைக் கண்ணை எடுத்துவிட்டுப் பொய்க் கண்ணிடுதல்

கண் மாறல், கண் மாறுதல் — தோன்றி உடனே மறைதல் நிலைகெடுதல் [கு125], அன்பு குறைந்து புறக்கணித்தல் [பு வெ 12இருபாற் 17 கொளு], இடமாறுதல், மாறுபடல் அன்பு கெடல், கருத்துமாறல், புறங்கூறல் [நான்மணிக் 8], கண்ணோட்டமறல் [முதுமொழி 37]

கண்மாருடவர் — கண் இமைக்குமளவில் மறைகின்றவர்கள் [மதுரைக் 642]

கண்மாருதிருத்தல் — கொண்ட கருத்தை மாற்றிக்கொள்ளா திருத்தல்

கண் மாறு — நிலையழி [இன்னா 40-4]

கண் மாறு எண்ணுமை — கண்ணோட்டஞ் செய்தல் [சிறு 52]

கண் மிச்சில் — கண்ணூறு, கண்ணேறு [பிரபு 3-48];

கண் மிளிர — கண் வெருவி விழிக்கும்படி [திவ் 2842]

கண் மின்னல், கண் மின்னுதல்; கண் பொறி தட்டல்

கண் மின்னி யார்த்தல் — கண் சுழன்று ஒளிவீசுதல்

கண் முகப்பு — கண்முன்னிடம், கண்முனே, கண்ணுக் கெதிரே [திவ் 1861]

கண் முகிழ் — இமை [வெங் கோ 218], கண் மடல் கண்ணிதழ்

கண் முகிழ்த்தல் — கண் மூடுதல் [க. நாகபா 244] தூங்கு தல்

கண் முத்தரும்பல் — கண்ணீர் வாரல்

கண் முத்து — கண்ணீர்த்துளி [ச 197 3, சி 4-71, குமர 149]

கண் முத்து உகுத்தல் — கண்ணீர் சொரிதல்

கண் முத்து உதிர்த்தல் — கண்ணீர்விடல்

கண் முழி — கண்விழி, கண்ணின் கருமணி

கண்முன் நிற்றல் — முகத்துக்கெதிரே நிற்றல்

கண் முன்பு — கண்ணெதிரே

கண் (ணுக்கு) முன்னால் — முகத்துக்கு முன்பு, நேரே

கண் முன்னால் வாழ்பவர் — ஒரே (சம) காலத்தவர்

கண் முன்னாலேயே நிற்றல் — (மனக்) கண்ணுக்கு முன்னால் எப்போதும் காணப்படல்; மனத்தை விட்டு மறையாதிருத்தல்

கண் முன்னாலேயே பார்த்தல் — கண்ணாலேயே பார்த்தல்

கண் மூக்கி — எறும்பு

கண் மூடல் — தூங்கல், இமை குவித்தல், யோக நித்திரை புரிதல், தியானித்தல், திறத்தல், புண்புரையின் துவாரத்தைக் காரச்சீலையால் அடைத்தல், தேங்காய்க் கண்ணை மூடுதல், சாதல்

கண் மூடி — குருடன், கவனமில்லாதவன், அறிவீனன், கண்ணுறை, தூக்கத்தை உண்டாக்கு மருந்து, கண் மூடித்தனமான காரியஞ்செய்பவன்

கண் மூடிக் கண் திறப்பதற்குள் — ஒரு நொடியில், மிக விரைவில்

கண் மூடிக்குருடராய் வாழ்தல் — கண்ணிருந்துங் குருடராய் வாழ்தல், அறிவிலிகளாய் வாழ்தல்

கண்மூடிக் கொண்டிருத்தல் — அலட்சியமாயிருத்தல், கவன மின்றியிருத்தல்

கண் மூடிக் கொள்கை — கண்மூடி வழக்கம்

கண் மூடித்தவஞ் செய்தல் — கண்ணை மூடித்தவஞ் செய்தல்

கண் மூடித்தனம் — கவனமின்மை, அறிவின்மை

கண் மூடித்தனமான வழி — குருட்டுவழி

கண் மூடித் தியானம் செய்தல் — தியானம் செய்யும் போது கண்ணை மூடிக் கொண்டிருத்தல்

கண்மூடித் திறக்கும் நேரத்தில் — நொடியில், மிக விரைவில்

கண் மூடித் தூங்கல் — கண்ணை மூடி யுறங்குதல்

கண் மூடிப் படுத்திருத்தல் — தூங்குவது போலக் கண்ணை மூடிப் படுத்திருத்தல்

கண் மூடிப் பழக்கம் — பகுத்தறிவுக் கொவ்வாத பழக்கம்; குருட்டு வழக்கம்

கண் மூடிப் பாசம் — வெறி

கண் மூடிப்போதல் — கண் குருடாதல்

கண்மூடுதல் — இமை குவிதல், கண்டுங் காணார் போன்று இருத்தல்‘ சாதல், தூங்குதல்

கண் மூலம் — கண்ணின் அடிப்பகுதி

கண் மூன்றுடையான் — சிவபிரான்

கண்மை — கண்ணோட்டம் (கர கோ 4), காட்சி (க ஒற்றுக் 51; எழில் 147), கண்ணுக்கிடும்மை

கண்மையுறல்–கண்களில் மைஎழுதப்பெற்றிருத்தல்(இங்கி86)

கண்மொழி — கண்ணால் பேசும் மொழி, நயன பாஷை

கண்ரெப்பை — கண்மடல் கண்ணிதழ்

கண் ரோகம் — கண்ணுக்கேற்படும் நோய்

கண் வட்டம் — கண் பார்வைக்குள்ளான இடம், கண்ணின் சுற்றுப் பாகம், கண் மண்டலம், கண் வளையம்

கண் வண்டு — கண்ணாகிய வண்டு

கண் வந்துவிடல் — கண் பார்வை மீளப் பெறல்

கண் வரி — கண்ணின் வரி, வெள்விழியின் செவ்வரி

கண்வலி — கண்ணோய், கண்ணோவு

கண் வலிக்கப் பார்த்தல் — கண் பூத்துப் போகுமாறு பார்த்தல்

கண் வலிப்பூ — கண்ணோய்க்கு உதவும் நந்தியாவட்டப்பூ

கண்வலி போக்கி — கண்ணின் நோயைக் குணப்படுத்தும் மருந்து

கண் வலை — [மகளிர்] கண்ணாகிய வலை, சிறுவலை, துவார முள்ள வலை

கண் வலைப்படல் (காதலியின்) கண்ணாகிய வலையில் வீழ்தல் (சிந் 181)

கண் வலை வீசல் — வசியப்படுத்தும் நோக்குடன் கண் பார்வையைச் செலுத்துதல் (கோ 74)

கண் வழுக்கு — கண்கூச்சம்

கண் வழுக்குதல் — கண் கூசுதல் (காசிகண் 67-56)

கண் வளர்தல், கண் வளரல் — தூங்குதல் குவிதல் (தே 621-1)

கண்வளையம் — மத்தளத்தின் கண்ணைச் சுற்றியுள்ள வட்டம் (பாரத ஒழிபி 12 உரை)

கண் வளையமிடல் — (நோயினால்) கண் வளைந்து கொள்ளல்

கண் வனப்பு — கண்ணின் அழகு (சிறுபஞ்ச 9)

கண் வாகடம் — கண்ணையும் அதற்குண்டாகும் நோய்களையும் பற்றிக் கூறும் நூல்

கண் வாங்குதல் — கண் வாருதல், கண்ணைக் கவர்தல் (கலி 39, 75) அன்பு கெடல், கவனிப்பு ஒழிதல், தூர்வை எடுத்தல்

கண் வாய் — சிறுகால்வாயால் நீர் நிரம்பும் குளம்

கண்வாயு — கண்ணின் ரெப்பையைத் தூக்கும் வாயு; கண்ணிரப்பை துடித்தல்

கண் வாளி — (மாதர்) கண்ணாகிய அம்பு [திவ் 1470, தனி 1–110]

கண் விட்டாடல் — (உலோகங்கள்) உருகியாடல்

கண் விட்டு நீங்காதிருத்தல் — கண்முன்னாலேயே நிற்றல், மனக்கண்ணிலிருந்து நீங்காதிருத்தல்

கண் விடல், கண்விடுதல் — பார்வையைச் செலுத்துதல் [குசே 216]. துளையுண்டாதல்

கண் விடுத்தல் — விழித்துப் பார்த்தல் [சிறுபாண் 205] கண் திறத்தல் [சிந் 180], சித்திரப் பாவைக்குக் கண் வரைதல், சிலைக்குக் கண் திறத்தல்

கண் விடுத்துப்பார் — கண்ணைச் செலுத்திப் பார் (காஞ்சிப் 11-22)

கண் விடுதல் — வெள்ளி முதலியன உருகுதல்; துவாரம் விடுதல்; வெண்ணெய் திரளல்; அறிவுண்டா(க்கு)தல்; கணு வெடித்தல்; மலர்தல்; ஊசி முதலியவற்றின் காது ஒடிதல்; பார்வையைச் செலுத்துதல் (குமர 216)

கண்விடு தூம்பு — தோற்கருவி வகை (சி 3-27 உரை)

கண் விதனம் — கண்ணின் வேதனை

கண் விதுப் பழிதல் — தலைவனைக் காண்டற்கு விரைந்து தலைவி வருந்துதல் [கு அதி 118]; கண்ணின் அழகு கெடுதல்

கண் விதுப்பு — கண்கள் காண்பதற்கு விரைதல்; காம விருப்பம்

கண் விதும்புதல் — காதலர் ஒருவரையொருவர் விரைந்து காண விரும்புதல்

கண் வியாதி — கண்ணோய்

கண் விரணம் — கண்கள் சிவந்து சுற்றிலும் புண்ணாகித் தினவெடுத்து இமைகள் வலித்து முதிர்ந்து ஒன்றையும் விழித்துப் பார்க்க முடியாமலும் கண்ணுறக்கமில்லாமலும் துன்புறுத்தும் ஒரு கண்ணோய்

கண் விழி — கண்ணின் பாவை, கண்ணின் விழி, கண்ணுறை கருமணி

கண் விழிக்கச் செய்தல் — அறிவுண்டாக்குதல்

கண் விழித்தல் — கண் திறத்தல்; தூங்காமல் விழித்திருத்தல் வாட்டந் தெளிதல்; தூங்கி விழித்தல்; தோன்றுதல்

கண் விழித்துப் பார்த்தல் — உறக்கம் நீங்கிப் பார்த்தல்: கருணையுடன் பார்த்தல்

கண் விழிப்பாக இருத்தல் — தூங்காமலும் கவனத்துடனும் இருத்தல்

கண் விழிப்பு — கண் விழிந்திருத்தல்; கவனம்; சாக்கிரதை

கண் விழி பிதுங்குதல் — வேலை மிகுதியால் வருந்துதல் [பே]

கண் விளக்கம் — கண் பார்வையின் தெளிவு, கண்ணைப் பற்றி விவரிக்கும் நூல்

கண் விளித்தல் — அழைத்தல் (மணி 1-30)

கண்விளிம்பு — கண்ணிமை

கண் வினைஞர், கண்வினையாளர் — பொன், வெள்ளி வேலை செய்யும் கம்மாளர்

கண் விக்கம் — கண்ணில் உண்டாகும் விக்கம்

கண் விங்கிப் போதல் — அழுகையால் கண் வீங்கி விடுதல்

கண் விச்சு — கண்ணோக்கு

கண் விசுதல் — கண் கூசுதல்

கண விழ்த்தல் — காதல் புரிதல்; அன்பு கொள்ளல்

கண் வெடிப்பு — பிறவியிலேயே விழி அல்லது இமை பிரிந்து காட்டல்; கண்ணிமை வெடிப்பு

கண் வெதிர்ப்பு — கண்ணடுக்கம்

கண் வெளித்தல் — கண்ணொளி தெளிவாதல்

கண்வெளி பரப்பல் — கண் பார்வையை வலை போல வெளியே வீசி அதனுள் அகப்பட்டாரை வயப் படுத்துஞ் செயல் முயற்சி [பெரிய 1684]

கண் வெளிறு போதல் — கண் பூத்துப் போதல்

கண் வெறிப்பு — கண் மருட்சி; கண் மயக்கம் [சிந் 2397 உரை]

கண் வேக்காடு — கண் சூடு

கண் வேகம் — கோபத்தினால் கண் செந்நிறமடைதல்

கண் வேழம் — கணுக்களையுடைய மூங்கில் [பித கொத் 2-215, கச் ஆ பு 1-32]

கண் வைத்தல் — பெறுதற்கு இச்சை வைத்தல்; கிருபை வைத்தல்; கண்ணூறு படுத்துதல்; புண்ணில் துவாரம் உண்டாதல்; அருள் புரிதல்; மெய்க்கண்ணை எடுத்து விட்டுப் பொய்க்கண்ணை வைத்தல்; விருப்பமாய்ப் பார்த்தல்; குறிக்கொள்ளல்; சிறிது பார்த்தல்

கண் வைத்தியசாலை — கண் மருத்துவமனை

கண் வைத்தியம் — கண் நோய்களுக்குச் செய்யும் மருத்துவம்

கண் வைத்தியர் — கண்ணுக்குச் சிகிச்சை செய்பவர்

கணைக் கண் — கணைமீன் போன்ற கண்

கணைமீன் நாட்டம் — அம்பையும் மீனையும் போன்ற கண்கள்

கணை விழி — கணைக்கண்

கமலக் கண் — கமலம் போன்ற கண் [திவ் 3710]

கமலக் கண்ணன் — திருமால்

கயற் கண் — [மகளிரின்] கயல் மீன் போன்ற கண்

கரிய மைக் கண் — கருமையான மை தீட்டப் பெற்ற கண்

கருங்கண் — திருட்டி தோஷம், கண்ணூறு, கரியகண், கொடுமை

கருங் கண்ணி — கரிய கண்களை உடையாள்

கருடக்கண் — சாய்ந்த பார்வையுள்ள கண்

கடுங் கண்ணிப் பாரை — ஒரு வகைக் கடல் மீன்

கருடக் கண்ணன் —ஓரக் கண்ணுடையோன்

கருடக் கண் புள் தோடம் — குழந்தைகளைத் தாக்கும் ஒரு வகைப் பறவை தோஷம்

கருணைக்கண் [பார்] — அருள்நோக்கம் (செய்)

கருணை தரும்பும் கடைக்கண்கள் — கருணை காட்டும் கடைக் கண்கள்

கருணை நாட்டம் — கிருபா நோக்கம் (அரு க 21)

கருணையங்கண் — கருணையோடு கூடிய கண் [அரி 12–15]

கருணை வழிந்தோடும் விழி — கருணை மிக்க பார்வை காட்டும் கண்

கருமமே கண்ணாயிருத்தல் — வேலையில் மிகக் கவனிப்பாயி ருத்தல்

கருவிழி — கண்மணி; கருப்பு விழி

கருவிழிக் கெண்டை — கெண்டை மீன் வகை

கல்லாரக்கண் — [மகளிரின்] குவளை போன்ற கண்

கலங்கின கண் — துக்கமிகுதியால் கலக்கமடைந்த கண்

கலைக்கணாளர் — அறிவுக் கண்ணர், அமைச்சர் (சிந்1924)

கவிகண்ணேக்கு — புருவத்திற்கு அருகாகக் கையைக் கவித்துக் கொண்டு பார்க்கும் பார்வை

கழல்கண் (கூகை) — பிதுங்கிய கண் (முருகு 49)

கழிகண்ணேட்டம் — அளவிறந்த உவகை (கு - 432 உரை

கழுகுக்கண் — கூரிய பார்வை யுடைய கண்

களிதுளும்பாக்கண் — களிப்பில்லாதகண்

களிப்புக்கண் கொண்டு நோக்குதல்-களிப்புடன் நோக்குதல்

கனல்கக்கும்கண் — தீப்பொறிபறக்கும் கண்

கனல்விழி — நெற்றிக்கண் (ச 371-1)

கனற்கண் — திட்டிவிடம் அழற்கண் (தக்க. 554); சிவனது நெற்றிக்கண் (தி 324)

கனிவுஒழுகும் கண் — கனிவுகாட்டும் கண்

காக்கைக்கண்ணன் — மாறுகண்ணனவன்

காணுக் கண்ணிடல் — பார்த்தும் பாராதது போலிருத்தல்

காணுத கண் — உலகப் பொருளேயறியாத கண்; ஞானக் கண் (திருமந் 1610)

காத்திருந்த கண்கள் — ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த கண்கள்

காதற்கண்ணுல் பார்த்தல் — காதற்பார்வை பார்த்தல்

கார்விழி — கருங்கண்

காரியமே கண்ணுயிருத்தல் — கருமமே கண்ணுயிருத்தல்

கிருபைக்கண் — அருள்நோக்கம்

கிழக்கண் — கிழப்பருவம் எய்தியோரின்கண்கள்

கீழ்க்கண் — கண்ணின் கீழ்ப்பக்கம்; கீழ்க்கண பார்வை

கீழ்க்கண்ணுன் — கெடுதல்செய்ய எண்ணுபவன் (பாரதிதா)

குண்டுமணிக்கண் — சிறிய சிவந்த கண்

குருட்டுக் கண் — பார்வையற்றகண்

குருட்டுக்கண்ணன் — குருடன்

குருதிகொப்பளிக்கும் கண்கள் — கோபத்தால்சிவப்பு மிக்குக் காணப்படும் கண்கள்

குருவிக்கண் — சிறுகண், குறுங்கண்

குவளைக்கண் — குவளை போன்ற, கண் (திவ் 1109)

குவளையுண்கண் (ணி) — குவளைபோன்ற, மைபூசப் பெற்ற கண்(ணையுடையவள்)

குழிகண் — ஆழ்ந்தகண், குழிந்தகண், குவிந்தகண்

குழிந்தாழ்ந்தகண் — மிகவும் குழிவான கண் (நாலடி 49

குழிவிழுந்தகண் — குழிவானகண்

குளுகுளு என்றகண் — ஈர்ங்கண்

குறுங்கண் — பலகணி, சன்னல்

குறும்புக்கண்கள் — குறும்பு மிளிரும் கண்கள்

கூச்சக்கண் — கூசும்கண்

கூசுகண் — கூச்சமுள்ளகண், ஒருவகைக்கிட்டப் பார்வை யுள்ளகண்

கூர்மைக்கண் — கூரிய நோக்குடைய கண்

கூர்விழி — கூர்மைக்கண்

கெண்டைக் கண் — [மகளிரின்] கெண்டை மீன் போன்ற கண்

கொட்டுங்கண் — அடிக்கடி இமைக்குங் கண்

கொடுங்கண் — கொடும் பார்வை; பொருமை

கொடுங்கணுளன் — கொடியவன் [இரட்ச 21-397]

கொல்லும்கண் — கொல்லுவதுபோற் பார்க்கும் கண்

கொழுங்கண் — அருட்கண், கிருபைக்கண்

கொள்ளிக்கண் — கண்ணேறு உண்டாக்கும் கண்

கொள்ளிக்கண்ணன் — தீங்கு பயக்கும் பார்வையை உடையவன்

கோபக்கண் — மாறுகண், பிறழ்ச்சிக்கண்

கோலக் கண்ணன் — அழகிய கண்ணையுடையவன் [திவ் 3075]

கோற்கண் — அம்புபோன்ற கண்

சட்சு தீட்சை — நயன தீட்சை

சுட்சு — கண் [அவை பி த 24]

சந்தேகக்கண் கொண்டு பார்த்தல் — ஐயுறவுடன் பார்த்தல்

சரித்திரக் கண்ணேடு பார்த்தல் — வரலாற்றுணர்வுடன் பார்த்தல்

சல்லடைக்கண் சல்லடையிலுள்ள துவாரம்

சாந்தம் குடிகொண்ட கண்கள் — அமைதி தவழும் கண்கள்

சாயல் கண் — காக்கைக் கண்

சாலக்கண் — பலகணி (கருவிளை நக 44)

சாலேசுரக்கண் — வெள்ளெழுத்துடைய கண்

சிகிவிழியார் — அக்கினிக் கண்ணரான சிவபிரான் (இராமாவண்;

சிம்புருகண் — கண்ணிற்படலம் உரிவதாகிய ஒரு வித நோய்

சிமிட்டுக்கண் — இமைகொட்டுங்கண்

சிவந்த கண் — (கோபத்தாற்) சிவப்புற்ற கண்

சிறுகண் யானை — சிறிய கண்களையுடைய யானை

சிறுத்த கண் — சிறிய கண்

சிறைக் கணித்தல் — கடைக்கண்ணால் பார்த்தல்

சினப்பொறி பறக்கும் கண்கள் — கோபக்கனல் தெறிக்கும் கண்கள்

சினந்து விழித்த கண் — கோபத்துடன் பார்த்த கண்

சீத்தைக்கண் — பீழைக்கண், கூசுங்கண்

சுடர்க்கண் — ஒளி வீசுங்கண்

சுடர்விழியோன் — சிவபிரான்

சுடுகண் — கொள்ளிக்கண், நெருப்புக்கண்

சுருங்குகண் — இடுங்குகண்

சுழல்கண் — உருட்டிப் பார்க்கும் கண்

சுழல்விழி — கோபத்தால் சுழலும் விழி [முருகு 48]

சுற்றுக் கண் — சுழல்கண்

சூக்ஷ்மக்கண் — சூட்சக்கண், சமீபப்பார்வை

சூர்த்தகண் — கொடூரமான கண்

செக்கச் சிவந்த கண் — மிகச் சிவந்த கண்

செங்கண் — சிவந்த கண் [பரி 4-10]

செங்கண்கரி — அழகான கண்ணையுடையயானை [திவ் 2254]

செங்கண்மா — கரடி

செங்கண்மாரி — கண்ணோய், காமாலை நோய்

செங்கண்மால் — சிவந்த கண்களையுடைய திருமால்

செங்கணன் — திருமால் [க கும்ப 310]

செதுக்கண் — ஒளிமழுங்கின கண் (பு 261-9

செய்யகண் — சிவந்தகண் (திவ் 3457; கலி 54-10)

சேற்கண் — சேல் போன்றகண் (தனி 1-846)

சேற்கண்ணி — மீனாட்சி

சொருகலான கண் — குழிந்த கண்

சொறிகண்—கண்ணிமைகளில் உண்டாகும் ஒருவிதச் சொறி நோய்

சோங்கண் — மாறுகண், தூங்கற்கண்

ஞானக்கண் — பிரத்தியட்சப்படாதவற்றை அறியத்தரும் ஓரறிவு; ஞான திருஷ்டி; ஞானமாகிய கண் (திவ் 3306)

ஞானவிழி — ஞானநோக்கம் (ரமண-மா 93); அகக்கண்; ஞானக்கண் (கலங் வி மா 128; தி 205; பிரபு 12-14)

தடங்கண் — பெரியகண், விசாலமான கண் (சிந் 1068)

தடங்கண்ணன் — பெருத்த கண்களையுடையவன் (திவ்280)

தடங்கண்ணி — பெரிய கண்ணுள்ளவள்

தழல் பார்வை — [சிவனது] நெருப்புக் கண் [தி 1202]

தாமரைக்கண் — தாமரை போன்ற கண் [தனி 3–871)

தாமரைக்கண்ணன் — திருமால் (குமர 464–30)

தாய்க்கண் — பருங்கண்; தேங்காயின்முக்கண்களில் மேலே யுள்ள கண்

திரிகண் — மூங்கில்

திரிநேத்திர சூடாமணி — சந்திரன் [சோதிட அக]

திரிநேத்திரன் — சிவபிரான்
திரிலோசனன் — சிவபிரான்

திருக்கண் — அருட்பார்வை; அழகியகண் (ச 68–4)

திருக்கண் சாத்துதல் — அருள்நோக்கம் வைத்தல், பார்வை யிடுதல்

திருக்கண்ணேக்கு – சுவாமியை மண்டபப்படிக்கு எழுந்தருளச் செய்தல் (சாச)

திருக்கண்மலர் — சுவாமி திருமேனியில் சாத்தும் மலர் போன்ற கண்ணுரு

திருக்கேறு — கண்ணேறு (ஆற் பு 9–27)

திருநயனந்துயில்தல் — கடவுளர் முதலியோர் துயில் கொள்ளல் (திருவரங்–க 1)

திருவிழியருள் — உருத்திராட்சம் [சுவாமி பி த 28,

திருஷ்டிக்கண் — திருஷ்டி செய்யுங்கண்

திறந்த கண் — இமை மூடாமல் இருக்கும் கண்

தீவிழி — சிவந்தகண்

துஞ்சாக்கண்ணர் — தூங்காதகண்ணர் (நற் 223)

துணைமலர்க்கண் — ஒன்றுக்கொன்று ஒப்பான மலர்போன்ற கண் (திவ் 319)

தெய்வக் கண்ணோர் — கேவலஞான முடையவர்

தெருட்கண் — ஒளியுடையதாய்க் காணுங்கண்

தேங்காய்க்கண் — தேங்காயின் மேலிடத்துள்ள முக்கண்

தொளைக்கண் — புல்லாங்குழல் (பாக பு 10-8-28

நகக்கண் — நகத்தைச் சுற்றியுள்ள சதை

நயனகாசம் — கண்மேற்படரும் சதை

நயனசைகை — நயனபாஷை

நயனதீக்கை — நயனதீட்சை [பெ தொகை-1929]

நயனதீட்சை — குரு சீடனைத்தனது அருட்பார்வையால் ஞான முடண்டாகும்படி செய்தல்

நயனப்பார்வை — கண்ணோக்கு, காதல் நோக்கம்

நயனபாஷை — கண்சாடை, கண்ணால் பேசிக் கொள்ளல்

நயனமாலை — உருத்திராட்சமாலை (பிரமோத் 12-6]

நயனமிருளல் — கண் இருளடைதல் (தி 1166)

நயனமோட்சம் (மோக்கம்) — சிற்பிகள் விக்கிரகம் முதலிய வற்றிற்குக் கண்ணைத் திறந்துவிடுதல்

நயனரோகம் — கண்ணோய்

நயனவாரி — கண்ணீர்ப் பெருக்கு

நயனோபாந்தம் — கடைக்கண் (யாழ் அக)

நயனோற்சவம் — அழகுமிக்கப் பொருள் [யாழ் அக]

நாணிக் கண் புதைத்தல் — அகத்துறையுள் ஒரு துறை; நாணத்தால் கண்ணை மூடிக் கொள்ளல்

நாலு கண் — மூக்குக் கண்ணாடியுடன் கூடிய கண்கள்

நித்திலக் கண் — கண்ணீர் அரும்புங்கண் (குமர–537)

நிலைக்குத்தற் கண் — இமையாது திறந்தபடியே இருக்குங் கண் (மரணக் குறியுள் ஒன்று)

நீலக்கண் — நீலநிறக் கண் (சிந் 905)

நீலவிழி — நீலக்கண் (தி 1147)

நீலிக் கண்ணீர் வடித்தல் — முதலைக் கண்ணீர் வடித்தல்

நுங்குக்கண் — வெட்டிய பனங்காயிற் காணப்படும் உள்ளீட்டுக்குழி

நுட்பமான கண்பார்வை—நுண்ணியதாகக் கண்ணால் பார்த்தல்

நுதலமர் கண் — நெற்றிக் கண்

நுதற்கண் — (சிவபிரானது) நெற்றிக் கண்

நேத்திரபாடவம் — கண்ணின் பார்வைத் திறம்

நேத்திர பிண்டம் — கண்விழி

நேத்திரம் மூன்று உடைய பிரான் — சிவபிரான் (சிதம்பு–8–5)

நேத்திரயோனி — இந்திரன்

நேத்திரரசம் — கண்ணீர்

நேத்திரானந்தம் — கண்ணுக்கு விருப்பமான காட்சி

நேத்திரரோகம் — கண்ணோய், கண்வலி

நேத்திர வைத்தியன் — கண் மருத்துவன்

நொள்ளைக் கண் — பார்வை மாறிய கண், குருட்டுக் கண்

நொள்ளைக் கண்ணன் — குருட்டுக் கண்ணன்

பகற் கண் — பகலில் சரியாகத் தெரியாத கண்

பகுத்தறிவுக் கண் கொண்டு பார்த்தல் — பகுத்தறிவுணர்ச்சி யுடன் பார்த்தல்

பங்கயக் கண் — தாமரைக் கண் (வைண 2-363)

பஞ்சடைந்த கண்கள் — வெளிறடைந்த கண்கள்; மரணக் குறி

படிகிலா விழி — தூங்காத கண்கள் (அரி பு-88)

படைக்கண் — வாட்கண் (பாக பு 10-19-23; அப் 229-9)

படைவிழி — படைக் கண்

பயானகக் கண் — அச்சத்தைத் தோற்றுவிக்கும் ஒரு வகைக் கண்ணபிநயம் (பரத பாவ. 69)

பலகணி — சாளரம், திட்டிவாயில் (தைலவ. தைல)

பறவைக் கண் — பறவையின் கண்

பனிக் கண் — குளிர்ந்த கண் (நந்திக் 60)

பாக்குக் கண் — பாக்கின் கண்

பார்த்துப் பார்த்துக் கண் பூத்துப் போதல் — நீண்ட நேரம் எதிர் பார்த்ததால் கண்ணொளி மங்கிப் போதல்

பால நேத்திரன் — சிவபிரான் (சிதம் பு 3–10)

பாலவிழியான் — சிவபிரான் (பாதிரி பு 4–15)

பானல் விழி — நிலவிழி (பிர 22-84)

பிணைவிழி — மான் போன்ற கண் (வெங் கோ 349)

பீதி நிறைந்த கண் — பீதியுணர்ச்சியைக் காட்டுங்கண்

பிலிக்கண் — மயிற்ரேகைக் கண்

பீளைக்கண் — பீளை படிந்த கண்

புகைச்சற்கண் — மங்கல் நிறப் பார்வையுடைய கண்

புலக்கண் — அறிவாகிய கண் (இரட்ச 19–59)

புலிக் கண் — பிரகாசமான கண்

புள்ளிக் கண் — மாட்டின் கடைக் கண்ணில் விழும் வெள்ளை நிறப் புள்ளி (மாட்டுவா 16); கொள்ளிக்கண்

புளிச்சைக் கண் — பீளை நிரம்பிய கண்

புளித்த கண் — புளிச்சைக் கண்

புறக்கண் — கண்ணிமையின் வெளிப்புறம்; தூலக் கண்

பூக்கண் — பூப்போன்ற கண்

பூங்கண் — பூப்போலுங் கண், பொலிவுடைய கண் (பு 41; சிந் 1339; பு வெ 227)

பூஞ்சற்கண் — சிறிய, குழிந்த கண், பீளைக்கண், ஒளி மழுங்கின கண்

பூப்பட்ட கண் — பூ விழுந்த கண் (தனி 1–719)

பூவெடுத்த கண்— அறுவை சிகிச்சையால் பூ எடுக்கப்பட்ட கண்

பூனைக்கண் — பூனையின் கண் போன்ற கண்கள்; ஒளி வீசும் கண்கள்

பூனைக் கண்ணன் — பூனைக் கண் போன்ற கண்ணையுடையவன்

பெட்டைக் கண் — ஊனமுள்ள கண்; மாறு கண்; சிறு கண்; சாய்ந்த கண்; தேங்காயின் துவாரமில்லாக் கண்கள்

பெந்தைக் கண் — பெரிய கண்; மிரண்ட பார்வை

பெருந்தடங்கண் — பெரிய, விசாலமான கண் (சு 129-2)

பேசும் கண்கள் — சாடையால் மனக் கருத்தை அறிவிக்குங் கண்கள்

பைங்கண் — குளிர்ந்த கண்; பசியகண் (பரி 5-27)

பொட்டைக் கண் — குருட்டு விழி; கூசு கண்

பொட்டைக் கண்ணன் — குருட்டுக் கண்ணன்

பொட்டையன் — பொட்டைக் கண்ணன் (பெற்றன்)

பொடிக் கண் — சிறிய கண் (தனி 3-871)

பொய்க் கண் — போலிக் கண்

பொற்றைக்கண் — பொட்டைக்கண்

மங்கியகண் — ஒளி குறைந்த கண்

மஞ்சட்கண் — காமாலைக் கண்

மடக்கண்(ண மயில்) — மடப்பம் பொருந்திய கண்(ணையுடைய மயில்) (பொருந 189)

மண்டைக்கண் — குழிந்த கண்

மயக்குங்கண் — வசியஞ்செய்யுங் கண்

மயிர்க்கண் — மயிர்க்கால்

மயில் உகுத்த கண் — மயிற் பீலி (11 தி 34-6)

மயிற்கண் — மயிற்ரேகையின் கண்; அழகிய கண்

மயிற் கண் வலை — மீன் பிடிக்கும் வலை வகை

மரக்கண் — மரக்கணு, (முத்தொள்-90;) புலனற்ற கண் (திருவா-23-9) மரப்பாவையின் கண் (கு 576 உரை)

மருட்டும் கண் — மயக்குங் கண்

மலர்க்கண் — மலர் போன்ற கண் ( திவ் 277)

மலர்விழி — மலர்க்கண்

மலருண் கண் — மலர் போன்ற மை தீட்டிய கண்

மழைக்கண் — குளிர்ந்த கண்; மழைபோல் நீர் சொரியுங் கண் (புகழே 4-2-92)

மழைக்கண் திறத்தல் — மழைபெய்தல் (கல்லாடம்-24)

மழைவிழி — மழைக்கண் (சேய்த் 727)

மறக்கண் — கொடிய கண் (க 6-3911)

மறிவிழி — மான் போன்ற கண் (சீகாளத் 8-143)

மாட்டுக் கண் — பெரிய கண்

மாலைக்கண் — இரவிற் கண் தெரியாமை; பார்வைக் குறைவு

மாலைக்கண்ணன் — இராக்குருடன், பார்வைக் குறைவுள்ளவன்

மாறு கண் — வேறுபட்ட கண் (காசிகண் 37-50)

மான்கட் காலதர் — மான் கண் போன்ற சாளரம் (சி 5-8)

மான்கண் — மான்கண் போன்ற கண் (மதுரைக்கோ குலாம் 70)

மான்விழி — மான் கண்

மின்கண் — ஒளி வீசுங்கண் (திருவா 24-7)

மீகண் — கண்மேலே

மீன்கண் — மீன் போல் பிறழுங்கண்

மீன்விழி — மீன்கண்

முக்கட்சுடர் — சிவபிரான் (திரிசி அந் 35)

முக்கட் பகவன் — சிவபிரான் (இன் நாற் 1)

முக்கட் பரமனுர் — சிவன் (குமர-466)

முக்கண் — தேங்காய் (தி 456); மூன்று கண்கள் (ச 102-2

முக்கண்ணப்பன் — சிவன் (திவ் திருவாய் 10–10-1)

முக்கண்ணன் — சிவபிரான் (கலி 2)

முக்கண்ணி — உமாதேவி

முக்கண் நாயகன் — சிவபிரான் (போரூர் சந் 616)

முகவிழி — ஊனக்கண் (கலங் வி மா 55)

முட்டைக்கண் — உருண்டை விழி

முட்டைக் கண்ணீர் — கண்ணீர்ப் பெருந்துளி

முதுகண் — பாதுகாவலர் [கல்]

முலைக்கண் — முலைக்காம்பு [அக 150]

மூங்கிற் கண் — மூங்கிற்கணு

மெய்ஞ்ஞானக் கண் — மெய்ஞ்ஞானம் நிரம்பிய கண் [க 3-254; கந்தர்கலி 26]

மைக்கண் — மை தீட்டிய கண் [தி 1088]

மைய கண்ணாள் — கருங் கண்ணி [திவ் 3276]

மையரிக் கண் — மை தடவிச் செவ்வரியையும் உடைய கண் [திவ் 291]

மையெழிலுண்கண் — மைதீட்டிய அழகிய கண் [அக 81]

யானைக்கண் — சிறுகண்

வக்கிரக்கண் — உறட்டுக்கண்

வட்டணித்த கண் — வட்டமான கண் [திவ் 1751 உரை]

வட்டத்தடங்கண் — வட்டமாய்ப் பெரிதான கண் [திவ் 264 உரை]

வடிக்கண் — கூரான கண் [பார்வை] [திவ் 1693]

வடிவேல் தடங்கண் — கூரிய வேல் போன்ற பெரிய கண்

வரலாற்றுக் கண்ணோடு பார்த்தல் — வரலாற்றுணர்ச்சியுடன் பார்த்தல்

வலக்கண் — வலது கண் [நாலடி 388]

வலதுகண் — வலக்கண்

வலைக்கண் — வலையின் சிறு துவாரம்

வழிமேல் விழி வைத்து எதிர் பார்த்தல் — ஒருவரை ஆவலுடன் எதிர் நோக்கி [வாசலில்] காத்துக் கொண்டிருத்தல்

வறுங்கண் — குருட்டுக் கண் [தக்க 44]

வன்கண்ணன் — கொடியவன், வீரமுள்ளவன்

வன்கண்மை — கொடுமை, வீரம் (அழுதா பி த 76)

வாக்குக்கண் — மாறுகண்

வாட்கண்ணாள் — வாள் போன்ற கண்களை உடைய
வள்

வாட் கண் நோக்கு — வாள் போன்ற கண் பார்வை
(சிந்-1299)

வான்கண் — சூரியன் [பு-203; மலைபடு 257; சி 10-1]

விரிகண் — விழியை அகலச் செய்யும் கண்ணிமை நோய்
வகை

விழிக்கண் குருடு —வெளித் தோற்றத்தில் விழியில் மாறுபாடு
இன்றியே கண் தெரியாமை [கடம்ப பு இலீலா 104]

விழிக்கதவு — கண்ணிமை [இரட்ச 21–211]

விழிக்கனல் — விழி நெருப்பு [அரி 13–14]

விழிக் குறிப்பு — கண் சாடை [குயில் 9–93]

விழிக்கண் குருடன் — விழித்துக் கொண்டே குருடன்போல்
இருப்பவன் [தேசிகர் ரகஸ்]

விழி கவர் வனப்பு — கண் கவர் அழகு [கூர்ம 1-28-42]

விழி கவரும் வனப்பு — விழி கவர் வனப்பு [சங் நா பு 7–59)

விழி களித்தல் — மனங்களித்தல்

விழித்தீ — கோபப்பொறி [அரி 5-38]

விழி நீர் — கண்ணீர் (குயில் 5-10;இரட்ச 15-3; நள 2-147)

விழிப் பாவை — கண் பாவை (குமர 425)

விழிப் புனல் — கண்ணீர்

விழி மணி — உருத்திராக்கம் (குற் பு கட 11)

விழி மணி மாலிகை — ருத்திராட்ச மாலே (தமிழ்ப்பா 702)

விழியம்பு — கண்ணிர் (கலிங் 40)

விழியாடி — கண்ணுடி [தகரா 2-14]

விழியறல் — கண்ணிர் (தனி 3-687]

விழியின் மணி — கண்மணி (சுவா பி த 11)

விழிவாதம் — இமையின் ஓரத்தில் ஏற்படும் நரம்புச் சுளுக்கு

விஷக்கண் —கேடு பயக்கும் பார்வையுள்ள கண்

வெங்கண் — கொடிய கண் (க 3-742); கோபக் கண் (பாக பு 10–41–60); பொருமை; அழல் எழ விழிக்குங்கண் (திவ் திருவாய் 6–8–3); கண்ணேட்டமில்லாத கண்

வெங்கணன் — கொடியவன்

வெறுங்கண் கொண்டு பார்த்தல்—மூக்குக் கண்ணுடியின்றிப் பார்த்தல்

வேட்டைக் கண் — மாறு கண்

வேற் கண் — வேல் போன்ற கண் (திவ் 1911)

வேற்கண்ணுள் — வேல் போன்ற கண்களையுடையவள்

வைத்த கண் வாங்காமல் பார்த்தல் — (அழகிய) ஒரு பொருளை நீண்ட நேரம் பார்த்துக் கொண்டேயிருத்தல்

——

# 5. காது

அகக்காது — அகச்செவி

அகச்செவி — உட்செவி, உட்காது

அகஞ்செவி — உட்செவி

அகர்ணம் — செவிடு; பாம்பு

அஞ்செவி — உட்செவி (முல்லைப் 89); அழகிய காது (குசே-146)

அடர்செவி (வேழம்) — பரந்த காதினையுடைய (யானை) (ச 40-7)

அணர்செவி — மேலே எடுத்த செவி

இல்லிக்காது — சிறுதுவாரமுடைய காது.

உட்செவி — அகச்செவி (பாரதி 2-1-4.)

ஊசிக்காது — நுட்பமாயறியும் செவிப்புலன்; ஊசியின்துளை

ஊசியின் காது — ஊசியின் கண்

ஊளைக்காது — சீ(ழ்) வடியுங்காது.

எஃகுச்செவி — நுண்ணிய ஒலியையுங் கேட்குஞ்செவி

ஒட்டற்காது — சுருங்கற்காது; ஒட்டறுத்த காது, ஒட்ட வைத்த காது, குறுகிய காது.

ஒருகாதில் வாங்கி இன்னொரு காதில் விடல் — செவியால் கேட்டதை மறந்துவிடல்

ஓட்டைச் செவி — கேள்வி புகாத செவி; செவிடு

கட்செவி — பாம்பு

கர்ண கடுரம் — காதுக்குக் கடுமையானது

கர்ண கடோரம் — காதுக்குக் கடுமை (பிரதாப 42)

கர்ண கண்டு — காதுக்குள் சிலேட்டுமத்தினுல் தினவையும் வலியையும் உண்டாக்கும் ஒரு வகைக் காது நோய்

கர்ணகிருமி — ஒருவகைக் காது நோய்; காதில் உண்டாகும் மிகச் சிறிய பூச்சி

கர்ணகீடம் — காதுப்புழு

கர்ணகுதம் — காதுக் குறும்பி

கர்ண குரோசம் — காதிரைச்சல்

கர்ணகூசிகை — காது நோய் வகை; காதிற்குள் வாயு தங்குவதனுல் பிளந்து அதனுல் காதின் உட்கருவியில் குறும்பி முடங்கிக் கொண்டு மிக்க வேதனையை உண்டாக்கும் ஒரு நோய்

கர்ண கூதகம் — காதில் குறும்பி கெட்டிப்பட்டு அதனுல் ஏற்படும் காதுநோய்

கர்ணசுரம் — காதிரைச்சல்; காது நோயால் ஏற்படும் சுரம்

கர்ண சுரோதம் — செவியின் தாரை

கர்ண சூலே — காதுக் குத்து நோய் (தைலவ தைல 44)

கர்ண சோபை — காதில் அதிக வீக்கமுண்டாக்கும் ஒரு வகை நோய்.

கர்ண தந்திரிகை — காதிற்குள் பிசினேப்போல் நெகிழ்ச்சியாகவும், இழுத்தால் அருமல் தந்தியைப்போல் நீளுந் தன்மையுமுள்ள சீழை உண்டாக்கும் ஓர் நோய்

கர்ண தாபிதம்—காதுக் குழலில் வெளிப்புறமிருக்கும் சவ்வுக்கு அழற்சி கண்டு அதனுல் காணும் வீக்கம்

கர்ண நாதம் — ஒரு வகைக் காது நோய்; காரணமின்றிக் காதில் பலவித ஒலிகள் கேட்கும் நோய் (தைலவ தைல 44)

கர்ண ரோகம் — ஒரு காது நோய்

கர்ணப்பூ — மாதரணியும் ஒருவகைக் காதணி

கர்ணபத்திரம் — ஓலை என்னுங்காதணி; விக்கிரகங்கட்குச் சாத்தும் காதுபோன்றஅணி; காதுமடல்.

கர்ண பரணி — காதில் உண்டாகும் ஓர் விரண நோய்

கர்ண பரம்பரை — செவிவழிச் செய்தி; கேள்வி வழியாக [வந்த செய்தி

கர்ண பரம்பரைக் கதைகள்—செவிவழியாகக் கேட்கப்பட்டு வரும் கதைகள்

கர்ண பாகம் — காதின் வெளிப்புறத்திற் காணும் அழற்சி

கர்ண பாத்திரம் — காது வைத்த பாத்திரம்.

கர்ணபாதிரியம் — காதிற்குச் செவிட்டுத்தன்மை உண்டாக்கும் நோய்

கர்ண பாலி — காதின்மடல்; வெளிக்காது

கர்ண பீடம் — காதின் வெளிப்புறம்

கர்ணபீலி — காதுக்குறும்பி

கர்ணபூதி — ஒருவகைக் காது நோய்

கர்ண பூரணம் — காதிற்குள் மருந்தை ஊற்றி நிரப்புதல்

கர்ணபூரம் — கர்ணப்பூ, காதணி வகை

கர்ண மந்திரம் — இறக்கும் நிலையிலிருப்பவரின் காதில் செபிக்கும் வேத மந்திரம்

கர்ண மலம் — காதுப்பீ

கர்ணமூலம் — செவி மூலம்

கர்ணவாதம் — செவிடுபடு வாதம்

கர்ண வேதனி — காதைக்குத்துவதற்கும் இரணங்களை அறுப்பதற்கும் உபயோகப்படுத்தும் ஒரு ஊசி

கர்ணும்ருதம் — செவிக்கமுது

கர்ணு வதங்கிசம் — செவிப்பூ (பாச-பர-187.)

கர்ணிப்பூ — ஒரு வகைக் காதணி

கருணமூலம் — காதடி (பெ. தொகை-2210)

கன்னக்குடுமி — காதுக்கு மேற்பக்கமாக முடிக்குங் குடுமி

கன்னகடுரம் — கர்ண கடுரம்.

கன்னசந்தம் — செவித்துளை (தனி 1–192)

கன்னப்பூ — கர்ணப்பூ.

கன்னப்பூண் — காதணி (குற்.பு. 2–4–42)

கன்னபூரம் — காதணியினென்று.

கன்னமதம் — (யானையின்) காதில் வடியும் நீர்

கன்னமலம் — காதுக்குறும்பி.

காதடைத்தல் — இளைப்பு, பசி, பலவீனம் முதலியவற்ருல் செவிப்புலன் கலங்கல்; காது மந்தமாகி விடல்; பட்டினி கிடப்பதால் காதடைத்தல்; காதில் ஏதாவது புகுந்து கொண்டு அதனுல் கேளாதிருத்தல்; காதில் பஞ்சு முதலியனவைத்தடைத்தல்

காதடைப்பு — பசி, களைப்பு முதலியவற்ருல் காது அடைத்துக்கொள்வது போன்று ஏற்படும் உணர்ச்சி

காதணி — காதில் அணியப்படும் அணி; குண்டலம் குழை முதலியன.

காதழற்சி — காதிற் குண்டாகும் தாபிதம்

காதழுக்கு — காதுக்குறும்பி

காதற்த ஊசி — காதொடிந்த ஊசி

காதற்றமுறி — செலுத்தற்குரியதைத் தீர்த்துக் கிழித்துவிடப் பட்ட ஓலைப்புத்திரம்

காதறுத்தல் — ஆவணத்தை (பத்திரத்தை) அறுதியாகத் தீர்த்துக் கிழித்தல்; காதையறுத்தல்; காதின் துளையை அறுத்தல்

காதறுதல் — காதின் துளையறுதல்; பகை கொள்ளல் (யாழ் அக)

காதறுப்பான் — காதைச் சுற்றிவரும் இரணம்

காதறுப்புண்டவன் — காது அறுபட்டவன்

காதறை — காதறுந்தது, காது கெட்டது; செவிடு; காதின் அறை; காதுக்குழி; காது அறுபட்டவன்

காதறைச்சி — சண்டைக்காரி (யாழ் அக)

காதாரக் கேட்டல் — விருப்புடன் நன்கு கேட்டல்; செவிப் புலன் நிரம்பக் கேட்டல்

காதாரமுதம் — திருப்பாட்டு (வெங் கோ 179)

காதிரைச்சல் — காதில் உண்டாகும் குரல்; கர்ணநாதம்

காதில் அடிபடுதல் — ஒரு செய்தி அடிக்கடி கேட்கப்படுதல்

காதில் உறைக்கவில்லை — காதில் ஏறவில்லை; அறிவுரைக்குச் செவி சாய்க்கவில்லை

காதில் ஊதுதல் — காதில்ஓதுதல்

காதில் ஏறவில்லை — காதில் உறைக்கவில்லை

காதில் ஏறுதல் — புரிந்துகொள்ளல்; அறிந்துகொள்ளல்

காதில் ஓதுதல் — மந்திரோபதேசஞ் செய்தல்; இரகசியஞ் சொல்லல்; கோள் சொல்லல்

காதில் குசுகுசு என்று சொல்லுதல் — காதோடு காதாய்ச் சொல்லல்

காதில் சீழ்வடிதல் — காதில் விரணம் ஏற்பட்டு அதனல் சீழ் வெளிப்படல்

காதில் தரித்துக்கொள்ளல் — காதில் போட்டுக்கொள்ளல்; நகையைக் காதில் அணிந்துகொள்ளல்

காதில் படுதல் — கேட்கப்படுதல்

காதில் படும்படி முணுமுணுத்தல் — காதில் விழும்படி மெதுவாகச் சொல்லல்

காதில் படுமாறு பேசுதல் — காதில் கேட்குமாறு உரக்கப் பேசுதல்

காதில் போட்டுக் கொள்ளல் — செவிசாய்த்தல்

காதில் போட்டுவைத்தல் — காதால் கேட்டுவைத்தல்

காதில் வாங்கிக் கொள்ளுதல் — நன்ருகக் கேட்டல்

காதில் விரலை வைத்துக்கொள்ளல் — கேட்கவிரும்பாமல் விரல்களை வைத்துக் காதைப் பொத்திக்கொள்ளல்

காதில் விழல், விழுதல் — காதிலே விழுதல்

காதிலி — செவிடன், காது கேளாதவன்; செவிடி; காதில்லாதவன்

காதிலே அடிபடல் — காதில் (அடிக்கடி) விழுதல்

காதிலே உறைக்க வில்லையா? — காதிலே ஏறவில்லையா?

காதிலே உறைந்துகிடத்தல்—ஒருசெய்தி கேட்டுக் கேட்டுக் காதிலே படிந்துகிடத்தல்

காதிலே ஏருதிருத்தல் — பல முறை கூறியும் காதிலே போட்டுக்கொள்ளாமல் இருத்தல்

காதிலே சொல்லல் — குசுகுசென்று சொல்லல்

காதிலே போட்டுக் கொள்ளாமல் இருத்தல் — கேட்டும் கேளாமல் இருத்தல்; கேட்கவிரும்பாமல் அலட்சியமாயிருத்தல்

காதிலே வாங்கிக் கொள்ளல் — காது கொடுத்துக் கேட்டல் (காவேரிக் 131)

காதிலே விழுதல் — காதிலே படுதல்

காதிற்கு வருதல் — காதில் படல் (பே)

காதிற் சவ்வு — காதிலுள்ள சிறுகுருத்து, காதின் உட்புறத்தேயுள்ள பறைச்சவ்வு

காதின் புறம் — வெளிக்காது

காதின் மடல் — கர்ணபாலி

காதின் மேல் கையை வைத்துக்கொள்ளல் — காதைப் பொத்திக்கொள்ளல்

காதினிக்கும்படி சொல்லல் — மனமகிழும்படி காதில் சொல்லல்

காதுக்கடுக்கன் — காதிலணியும் கடுக்கன்

காதுக்கரப்பான்—காதின் வெளிப்புறத்திற்காணும் ஒரு வகைக் கரப்பான் நோய்

காதுக்கற்சட்டி — காது வைத்துள்ள மாக்கற் சட்டி.

காதுக்கிண்ணம் — விளிம்பிலே பிடிப்புள்ள கிண்ணம்.

காதுக்கிதமாகச் சொல்லல் — காதுக்கு இன்பம் ஏற்பட இனிமையாகச் சொல்லல்

காதுக்கினிய — செவிக்கினிய, இன்னோசையுடைய

காதுக்கு எட்டுதல் — காதில் படுதல்

காதுக்குடைச்சல் — காதில் ஏற்படும் நமைச்சல்; காதில் உண்டாகும் குத்தல்வலி

காதுக்குடைவான் — காதைக்குடைந்து சுத்தி செய்யப் பயன்படுத்துங் கருவி

காதுக்குத்தல் — உட்காதில் ஏற்படும் குத்தல் வலி

காதுக்குள் ஓதுதல் — இரகசியமாகச் சொல்லல் (பளிங்குச் சிலை-57)

காதுக்குள் கிசுகிசுத்தல் — காதுக்குள் மிகமெதுவாகப் பேசுதல்(பே)

காதுக்குறும்பி — காதழுக்கு

காதுச் கொப்பு — காதிலணியும் ஒருவகை அணி

காதுக் கொப்புளம் — வெளிக்காதில் காணும் கொப்புளம்

காதுகளை நம்பாதிருத்தல் — நம்பத்தகாத அல்லது மிகவியப்பான செய்தியைக் கேள்விப்படல்

காதுகளைப் பொத்திக்கொள்ளல் — கேட்கவிரும்பாமல் காதுகளை அடைத்துக்கொள்ளல்

காதுகளை விரலால் அடைத்துக்கொள்ளல் — காதில் விரலை வைத்துக்கொள்ளல்

காதுகிழித்தல் — பத்திரத்தை ரத்து செய்து கிழித்தல்

காதுகிள்ளுதல் — காது கிழித்தல், காதுகுத்துதல்.

காதுகுடைதல் — காதிற் குடைச்சல் நோவு உண்டாதல், காதுக்குறும்பி எடுத்தல்; காதை நோண்டுதல்; காதில் தினவெடுத்தல்

காதுகுத்தல் — காதில் துளை செய்தல்; ஒரு நோய்,

காதுகுத்துதல் — காதில் துளை செய்தல்; ஏமாற்றுதல், வஞ்சித்தல்; காதில் நோவெடுத்தல்.

காது கிழிதல்
காது கிள்ளுதல் } —ஆவணத்தைத் தீர்த்துக் கிழித்தல்.

காதுகுளிரப் பேசுதல்—கேட்பதற்கு இன்பம் உண்டாகும்படி பேசுதல்

காது குற்றுதல் — காதுகுத்துதல்; (குழந்தைகட்குக்) காதில் அணி அணிதல்

காதுகூசுதல் — கெட்டவார்த்தை கேட்டல் (அம்மணி 100)

காதுகூடக் கேளாமலிருத்தல்—மிகவும் அலட்சியமாயிருத்தல்

காது கேட்கும்படி பேசுதல் — செவியில் விழுமாறு சிறிது சத்தமாகப் பேசுதல்

காது கேட்டல் — காதில் படுதல்

காது கேளாதவன் — செவிடன்

காது கேளாதிருத்தல் — செவிடாயிருத்தல்; அலட்சியமாயிருத்தல்

காது கேளாமற் போதல் — காது செவிடாதல்; மரணக் குறி

காது கொடுத்தல் — காதால் உற்றுக் கேட்டல்; விரும்பிக் கேட்டல்; செவி சாய்த்தல்

காது கொடுத்தபடி நிற்றல் — கேட்டபடி நிற்றல்

காது கொடுத்துக் கேட்டல் — நன்ருய் உற்றுக் கேட்டல் (வசந்த 57)

காதுச் சவ்வு — காதிலுள்ள சவ்வு

காதுச்செவி — காது கேளாமை

காதுச் சோணை — காதுத்தண்டு

காது சீழ்கொள்ளல் — காதில் சீழ் வடிதல்

காது செவிடாதல் — காது செவிடுபடுதல்

காது செவிடுபடுதல் — சத்தமிகுதியாற் காது கேளாமல் போதல்

காது செவிடுபடும் சத்தம் — காதடைக்குஞ் சத்தம்; பேரொலி

காது செவிடுபடும்படியான கரகோஷம் — பலத்த கைத் தட்டல் (கண்கொள்)

காதுத்தண்டு — கீழ்க்காது; சோணை; காதினருகு

காதுணர்வு — காதால் கேட்டல்

காதுத் தாபிதம் — காதழற்சி

காதுத்துவாரம் — காதின் வழி; காதுத்துளை

காது தினவெடுத்தல் — காதில் தினவு ஏற்படுதல்; கேள் கேட்க விரும்புதல் (அசையா விளக்கு 80)

காது தூருதல் — காதுத்துளை மூடுதல் (திவ் 146)

காது நடு — காதுப்பறை

காதுநோய் — காதிலுண்டாகும் நோய்கள்

காது நோவு — காது வலி

காதுப்பறை — காதின் ஒலிச்சவ்வு

காதுப் பிதுக்கம் — வெளிக்காது உள்ளடங்காமல் விரிவாய்க் காணல்

காதுப் பீ — காதுக் குறும்பி

காதுப்புண் — காதுவிரணம்

காதுப்புழு — காதிற்குள் உண்டாகும் புழு

காதுப்புற்று — காது நரம்புகளில் துன்மாமிசம் வளர்ந்து பருக்கும் ஒரு புண்

காதுப்பூ — கன்னப்பூ (ஒரு காதணி) ; ஒருவகைச் சிறு மலர்

காதுப்பூச்சி — காதிற்குள் நுழையும் ஒரு செவிப்பாம்பு; கன்னப்பூச்சி

காதுபடக் கேட்டல் — நன்ருகக் கேட்டல் [கல்கி]

காதுபடச் சொல்லல் — காதில் படும்படி தெளிவாகச் சொல்லல்

காது பழுதாதல் — காது செவிடாதல்

காது புளிக்கப் பேசுதல் — வெறுப்புண்டாகப் பேசுதல்

காது புளித்தல் — காதில் கேட்க வெறுப்படைதல்

காது பெருக்குதல் — காது வளர்த்தல் [திவ் 142]

காது புளித்துப்போதல் — காது கேட்டுச் சலித்துப்போதல்

காது பெருக்குதல் — காதுச் சோணையிலுள்ள துளையைப் பெரிதாக்குதல்

காதும் காதும் வைத்தாற்போல் பேசுதல் — இரகசியமாகப் பேசுதல்

காது மடல் — காதினிதழ் ; புறக்காது ; புறச்செவி ; ஒருவகைக் காதணி ; காதின் முருந்து

காது மத்திமம் — மந்தக் கேள்வி

காது மந்தம் — செவிப்புலன் நன்ருகக் கேளாமை; சிறு செவிடு ; காதடைப்பு ; அரைச்செவிடு

காது மந்தன் — காது கேளாதவன்

காது மருத்துவர் — காது நோய்களைக் குணப்படுத்துபவர்

காது மருந்து — காதுக்குள் விழும் மருத்துத்துளி ; காதுக்கிடு மருந்து

காது மலம் — காதுப்பி ; குறும்பி

காது மூர்ச்சை — காதின் நோயினால் ஏற்படும் களைப்பு

காது மூளி — அறுந்த காது ; அழகற்ற காது.

காதுவலி — காதுக் குத்து

காது வளர்த்தல் — குத்தின காதின் துவாரத்தைப் பருக்கச் செய்தல் ; நகையணிந்து காதை நீளச் செய்தல்.

காது வாதை — காதுக் குத்தல் ; காதின் தொந்தரவு.

காதுவிடாய் — பசி முதலியவற்றாலுண்டாகுஞ் செவியடைப்பு

காது விடுதல் — காது வெட்டுதல்.

காது விரணம் — காதில் புண் ; புரை முதலியவற்றால் ஏற்படும் புண்.

காது விறைப்பு — காது முறைப்பு.

காது வீக்கம் — காதில் ஏற்படும் வீக்கம்

காது வெளியாதல் — காதடைப்பு நீங்குதல் ; செவிடு குணப்படல்.

காது வைத்தியர் — காது மருத்துவர்

காதுறக் கேட்டல் — நன்றாகக் காதில் கேட்டல் (அருட் 6ம் 14-7)

காதெலும்பு — கன்னப் பொது எலும்பு

காதெழுச்சி — காதில் எழுங் கட்டி ; காதில் சதை வளர்ந்து துவாரம் அடைபடுவதனுல் செவிடுண்டாகும் ஒரு நோய்.

காதைக் கடித்தல் — காதோரமாக முகத்தை வைத்து மறை பொருள் சொல்லுதல் ; கோள் சொல்லுதல்.

காதைக் கிழிக்கும் சத்தம் — பெருஞ் சத்தம்

காதைக் கிள்ளுதல் — காதைப் பிடித்து நிமிண்டி விடுதல்

காதைச் சுடுதல் — காதிற்குத் துன்பந்தருதல் ; பிடிக்காத செய்தியைக் கேட்டல்

காதைத் திருகுதல் — காதைக் கிள்ளுதல்

காதைத் திறக்கவைத்தல் — காதில் விழும்படி சொல்லல்

காதைத் தீட்டிக்கொண்டு கேட்டல் — மிகவும் உன்னிப் பாகக் கேட்டல்

காதைத் துளைக்கும் ஒலி — பெரிய கிறீச்சொலி

காதைத் துளைத்தல் — காதில் துளையிடல் ; மிக்க ஒலி கேட்கப்படல்

காதைத் தொடுதல் — [பேச்சுக்] காதில் படுதல்

காதைத் தொளைத்தல் — கூக்குரல் முதலியன காதில் மிகுதி யாக ஒலியுண்டாக்குதல் [ஒற்றை]

காதை நம்ப முடியவில்லை — வியப்பினுல் கேட்ட செய்தியை நம்பமுடியவில்லை

காதை நிமிண்டுதல் — காதைத் திருகுதல்

காதை நீட்டுதல் — கேட்பதற்குக் காதை அருகில் கொண்டு செல்லல்

காதை நெரித்தல் — கவனித்துக் கேட்கும்படி குதிரை முதலிய விலங்குகள் காதை நிமிர்த்தல்

காதைப் பிடித்துக் கிள்ளுதல் — காதை நிமிண்டுதல்

காதைப் பிய்த்துக்கொண்டு போகும் ஒலி — காதைத் துளைத்துச் செல்லும் பேரொலி

காதைப் பிடித்து முறுக்குதல் — காதை முறுக்குதல்

காதைப் பிளக்கும் சத்தம் — பேரொலி

காதைப் பொத்திக் கொள்ளல் — காதை மூடிக்கொள்ளல் [இடிச்சத்தம் அல்லது பிடிக்காத செய்தி கேட்கும்போது]

காதைப் பொத்துதல் — சத்தம் கேளாதபடி காதை மூடுதல்

காதை முறுக்குதல் — காதைத் திருகுதல்

காதையடைக்கும் பசி — பெரும் பசி

காதையடைத்தல் — பெருஞ்சத்தம் காதுப்பறையில் மோதிக் காதடைக்கும்படி செய்தல்

காதை வாயருகே பொருத்தல் — இரகசியம் பேசத் தொடங்குதல்

காதை விறைத்துக்கொண்டு நடத்தல் — செவிப் புலனுணர்வின்றி மனத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு நடந்து செல்லல் [பே]

காதொட்டி — அறுந்து போன காதை ஒட்டச் செய்யும் மருந்து

காதொலி — காதின் சத்தம் ; காதிரைச்சல்

காதொழுக்கு — காதில் சீழ் வடிதல்

காதோடு காதாய்ப் பேசுதல் — காதுக்குள் முணுமுணுத்தல்; இரகசியம் பேசுதல்

காதோடு காது வைத்துப் பேசுதல் — மிக நெருக்கமாகக் காதுகளை வைத்துக்கொண்டு இரகசியம் பேசுதல்

காதோடு சொல்லுதல் — காதுக்குள் சொல்லுதல் (ராஜசிம்மன் 87); இரகசியமாகச் சொல்லுதல்

காதோதி — காதருகில் வந்து கூச்சலிடும் பூச்சி; கொசு; வதந்தியைப் பரப்புபவன்; தீய எண்ணத்தோடு இரகசியம் ஓதுவோன்

காதோரத்தில் — காதருகில்

காதோலை — காதிலுள்ள துவாரம் பெரிதாவதற்காக இடும் ஓலை; காதணி (தோடு, கம்மல் முதலியன) தி 288

கீழ்க்காது — காதடி; காதின் கீழ்

குடச்செவி — வளைவான காது

குடைச்செவி — உள்வளைந்த செவி; வளைந்த காது

குடைச் செவிக்கொள்ளல், எடுத்தல் — மிருகங்கள் கோபத்தினாலே செவியை நிமிர்த்தல்

குண்டலத்தோடிசை காது — குண்டலம் பொருந்திய காது

குதம்பை ததும்பிய காது — குதம்பையணிந்த காது (மீனாட் பித 2)

'குப்' என்று காதடைத்தல் — திடீரென்று காதில் இரைச்சல் ஏற்படுவதால் பிறசெய்திகளைக்கேட்க முடியாமற்போதல்

குழை காது — வடிந்த காது (குமர 366)

குழைச்செவி — இலை வடிவக்காது (மீனாட் பித)

குறிய காது — சிறிய காது (கந் 2–5–70)

கேள்விச் செவியன் — கேட்டதை நம்புவோன்

கேளாக் காது — செவிட்டுக்காது

கேளாச் செவி — செவிட்டுக்காது (பெரி 3599)

சில்லிக் காது — துளையிட்ட காது, சிறுத்த தொளையுள்ள காது

சீக்காது — சீழ்ப்பிடித்த காது

சுரோத்திராநந்தம் — செவியின்பம் (பிரதாப 24)

செஞ்செவி — அழகிய காது (தணி ஆற் 5)

செஞ்செவியர் — பணியும் பொன்னும் காதில் அணிந்த பணக்காரர்கள் (வாழும் தமிழ் 199); நேர்மையானவர்

செவிக்கமுதம் — செவிக்கின்பமான செய்திகள் (புதுமைப் கவி 64)

செவிக்கவரி — சாமரை; குதிரை, யானை இவற்றின் காதணி

செவிக்கின்பம் — செவிக்கமுதம்

செவிக்கின்பமூட்டுதல் — இசை, நல்ல செய்தியால் செவி இன்புறச் செய்தல்

செவிக்கினிமை — செவிக்கு இன்பமானது

செவிக்கினிய பாட்டு — இனிய பாட்டு

செவிக்கு அமுது அளி — இன்னிசை விருந்து அளி

செவிக்குத்து — காது நோவு

செவிக்கு விருந்து — செவிக்கின்பமான இசை அல்லது சொற்பொழிவு

செவிக்குற்றம் பார்த்தல் — பிறர் குறை கேட்டல் (திரிகடு 28)

செவிக்கெட்டுதல் — கேள்விப்படுதல்; செவிக்கேறுதல்

செவிக்கேறல்; செவிக்கேறுதல் — செவியில் விழல்; கேள்விப்படல்; கேட்டதற்கு இனிதாயிருத்தல்

செவிக்கொள்ளல் — கேட்டல் (பாஞ்சாலி 252-81)

செவிகளைத் தீட்டிக்கொண்டு கேட்டல் — காதுகளைச் சாய்த்து உற்றுக் கேட்டல்

செவிகுளிர உரையாடல் — இன்ப உரையாடல்களைச் செய்தல்

செவி கேட்டல் — செவியால் கேட்டல்

செவி கேளாதவன் — செவிடன்

செவிகைத்தல் — செவி கசப்புறல் (கு 389)

செவிகொடுத்தல் — கேட்பதற்குக் காது கொடுத்தல் [நாலடி 322]; செய்தியை உற்றுக் கேட்டல்; செவி சாய்த்தல்

செவி கொடுத்துக் கேட்டல் — செவி சாய்த்துக் கேட்டல்

செவிகொள்ளல் — செவிகொடுத்தல்; கேட்டல்

செவிச்சுவை — செவியமுதம்

செவிச்சுவையமிர்தம் — இசை [பெ 3-14-277]

செவிச் செவியறி செயல் — இரகசியச் செயல்

செவிச்சூட்டாணி — நாராசம்

செவிச்சொல் — காதில் ரகசியமாய் ஓதுதல் [கு 694]; கேள்விச் சொல் ; வதந்தி

செவி சாத்தல் — செவியால் கேட்டல் [உபதே 38-7] ; எடுத்துரைத்தல்

செவி சாய்த்தல் — செவி கொடுத்தல் ; உற்றுக் கேட்டல் ; இணங்கிக் கேட்டல்

செவி சாய்த்துக் கேட்டல் — இணங்கிக் கேட்டல்

செவிட்டுக் காது — கேளாக்காது ; செவிடுள்ள காது

செவிடர் — செவி மந்தர் ; காது கேளாதவர்

செவிடன் காதில் ஊதிய சங்கு — பயனில்லாத மொழி ; பயனற்ற ஒலி

செவிடி — காது கேளாதவள்

செவிடு — காது கேளாதவன் [ள், து] ; ஒருவகைக் காதணி

செவிடு செல்லுதல் — செவிடு படுதல்

செவிடுபடுதல் — சத்தமிகுதியாற் காது கேளாமற் போதல் ; செவிடாதல்

செவித்தண்டு — மூக்குத்தண்டு

செவித்தலம் — செவி (ராமா வெ 9-16 ; க 3-13-114)

செவித்தலம் புதைத்தல் — செவிகளைப் பொத்திக்கொள்ளல் (பெ 4–14–46)

செவித்து — செவியை உடையது (உப 1772) ; செவியின் கண்ணது (பு 68-8)

செவித்துளை — காதின்துளை (திருவி 1–77; அருட் 12-1-731); பேரு பு 7–38

செவித்துறண்டி — குறும்பி வாங்கி ; காது பிடுங்கி

செவி தாழ்த்தல் — சொல்வதைக் கேட்கச் செவி சாய்த்தல் (கலி 95) ; செவி கொடுத்தல் ; உற்றுக் கேட்டல்

செவி தின்கிறவன் — காதில் ஓதுபவன்; கோள் சொல்பவன்

செவி தின்னல், செவி தின்னுதல் — இரகசியம் பேசுதல்; இரகசியமாக ஓதுதல்

செவி நிறக்கல் — மாந்தளிர்க்கல்; செங்கல்

செவிப்படல் — காதிலே விழல் (வில் 1–79, கலிங் 382; விரிஞ் பித 65; பிரபு 5–77)

செவிப்படிகம் — காதுகளையுடைய படிகம்

செவிப்படுத்தல் — காதில் சொல்லுதல் (வில் 1–184)

செவிப்படுத்துதல் — காதில் மெல்ல அறிவித்தல்

செவிப்படுதல் — காதுக்கு எட்டுதல்; காதில் படுதல்; கேட்கப்படுதல்

செவிப்பண் — கேள்வி ஞானம்

செவிப்பணி — செவியணி

செவிப்பறையறைதல் — மந்திரம் முதலியவற்றைப் பிறர் செவியிற்படாது இரகசியமாக ஓதுதல் (ஈடு 3–5–5)

செவிப்பாடு — காதில் புகுதல்; கேள்வியின்பம் (ஈடு 9–9–11)

செவிப்பாம்பு — செவியை உடைய ஒரு செந்து; காதுப் பூச்சி

செவிப்புடை — காதில் (அரி 9-114); காதடிப்பு; காதின் பக்கம்

செவிப்புலம் — காது [சீகாளத் 9–61; செந் க 59]; செவியுணர்வு

செவிப்புலன் — செவியுணர்வு [குமர 591–3] ; கேள்வி ; காதாலுணரும் ஓசையுணர்வு

செவிப்புலனாகாத — காது கேளாத

செவிப்புற்று — காது விங்கும் நோய் வகை

செவிப்பூ — செவிமலர் ; ஒருவகைக் காதணி [திருப் பாவை 27]

செவிபடுவாதம் — காது கேளாமற் செய்யும் நோய்வகை

செவி பிடித்தல் — விளையாட்டில் வெற்றிக் குறியாகத் தோற்றவன் காதைப் பிடித்தல்

செவி புதைத்தல் — காதுகளைப் பொத்துதல் ; [விரும் பாமைக் குறிப்பு]

செவிபொத்தல் — காதுகளைக் கையால் மூடிக்கொள்ளல் [வில் 1–159 ; கந் 1–6–28]

செவி பொத்துதல் — காதைப் பொத்துதல் (க 6–1974)

செவிமடல் — காதின் வெளியுறுப்பு ; செவிமலர்

செவிமடுத்தல்—கேட்டல் (க வீடண 106) ; உற்றுக்கேட்டல்

செவி மந்தம் — காது மந்தம்

செவிமலம் — காதுக்குறும்பி

செவிமலர் — செவிப்பூ ; மகளிர் காதணி வகை ; தெய்வத் திருமேனிகளிற் சாத்தும் கர்ணபத்திரம் ; காது நோய் நீங்கியதுபற்றிப் பிரார்த்தனையாகச் செலுத்தும் செவி யுருவம் ; உட்செவி

செவிமலர்ப்பூ — செவிமலர் ; செவிமடல்

செவிமறை — செவியில் மறுவை யுடைய எருது [கலி 101]

செவி மாட்டுதல் — பிறர்காதில் வலிய நுழைத்தல்

செவிமுதல் — செவியடி (பாகபு 10–41–97 ; தக்க 126 உரை

செவியகம் — காதினுட் பாகம்; செவியிடம்
[புகழே 5–3–34] சி 6–20

செவியடி — காதின் அடிப்பகுதி; கன்னம்

செவியடித்தல் — [யாழ்] காதாட்டுதல்

செவியடை — காதடைப்பு; பட்டினி அல்லது
பசியால் காது கேளாத நிலை [அக 31]

செவியறிவு — செவியறிவுறூஉ [காரிகை 15]

செவியறிவுறுத்தல் — நல்லறிவு புகட்டுதல் [கந் அசுரர்
யாக 33]; செவியுபதேசமாகச் சொல்லும் புத்தி;
உபதேசம் செய்தல்

செவியறிவுறு மருட்பா — வியப்பின்றி உயர்ந்தோர்கண்
நயந்தொழுகல் கடனென அரசர் முதலியவர்க்கு
மருட்பாவானுமுரைப்பது

செவியறிவுறூஉ — அரசர் முதலியோர்க்குச் செவிக்கண்
நிற்கக் கூறும் நீதி [தொல் பொ 423]; அரசர்க்கு
நல்லறிவு புகட்டுதலைக் கூறும் புறத்துறை [பு வெ 9–33];
உபதேசம்; ஒரு பிரபந்தம்

செவியறை — காதறை; காதிலி; காதுகேளாதவன்

செவியால் மொள்ளல் — விருப்பங்கொண்டு கேட்டல்
[மணி வெ 23]

செவியாற் பருகுதல் — காதால் இன்புறக் கேட்டல்

செவியான் — காதுக்குட் சென்று துன்புறுத்தும்
 பூரான் வகை

செவியில் ஏறுதல் — காதில் புகுதல்; காதில் படல்

செவியில் தோய்ந்த சொல் — காதில் அடிக்கடி
 கேட்கப்படுஞ் சொல்

செவியில் நுழைதல் — செவியில் படுதல்

செவியில் வாங்கிக்கொள்ளல் — காதில் ஏற்றுக்கொள்ளல்;
 சொல்வதைக் கேட்டுக்கொள்ளல்

செவியில் விழல் — காதில் விழுதல்; காதில் படுதல்

செவியிலி — செவிபறை; காது கேளாதவன்; செவிடன்
 [நன் 283 மயிலை]; பாம்பு

செவியிற் சுவை — செவிச்சுவை [கு]

செவியுற வாங்கல் — வில்லின் நாணைக் காதுவரை இழுத்தல்

செவியுறுதல் — காது கொடுத்துக் கேட்டல் [க நாகபாச 68]

செவியுறை — காதுக்கிடும் மருந்து; செவியறிவுறூஉ
 [தொல் பொ 426]; கேள்வி; ஒற்றுக் கேட்டல்

செவியுறையங்கதம் — அரசர்க்கு உறுதி கூறும் நோக்குடன்
 அறிஞர் கூறும் வசைச் செய்யுள் [தொல் பொ 440 உரை]

செவியேற்றல் — காதால் கேட்டல் [வேங்கட பு 37-7;
 காஞ் 11-36]

செவியேறல் — காதில் புகுதல்

செவியேறு — கேள்விப்படல் [ஈடு 10-3-1]

செவி வழிப் புகுதல் — காதில் புகுதல்

செவி வழியாக வருதல் — செவி வழிச் செய்தியாக வருதல்

சோணைக்காது — துளையிடாத பெரிய காது மடல்; அடி பெருத்து அகன்ற காது

தடசெவி — பெரிது காது [தனி 4-5]

தடவு[ச்]செவி — பெரிய செவி

தாழ்காது — வடிந்த காது

திருச்செவி — பெரியோரின் செவி

திருச்செவி சாத்துதல் — கேட்டருளுதல்

துப்பாக்கிக் காது — துப்பாக்கியின் கொளுத்துவாய்

துளைச் செவி — உட்செவி; உட்செவியுள்ள பிராணி; துளைக் காது

தெட்சண செவி — வலக்காது [தி 1146]

தொங்கு காது — வடிந்த காது

தொள்ளற் காது — வடிந்த காது

தொள்ளைக் காது — அணி நீங்கிய தொளைக்காது; துவாரமுள்ள காது; துவாரம் பெரிதாயுள்ள காது; தொங்கு காது [சுந் வி 6]

தொன்னைக் காது — மடங்கிய காது

தோட்டுக்காது — ஓலைச் சுருள் முதலியன இட்டகாது காதின் அடித்தண்டு

தோடுண்ட காது — தோடு அணிந்த காது

தோளாச் செவி — தோட்கப்படாத செவி; துளைக்கப்படாத செவி (பெ தொகை 1384)

தோற்காது — தோற்செவி ; தொள்ளைக்காது

தோற்செவி — புறச்செவி [பெ உஞ்சைக் 45-49] ; காது ; தொள்ளைக் காது

பாம்புச் செவி — கூர்மையான செவியுணர்வு

பேச்சு காதில் அடிபடல் — பேச்சு அடிக்கடி காதில் விழுதல்

மடலித்த காது — விறைத்துநிற்குங் காது

மடிகாது — [நாய் முதலியவற்றின்] மடிந்த காது

மடிசெவி — மடிகாது

மணிச்செவி — அழகிய காது

மறச்செவி — பாவம் பயக்கும் மொழிகளைக் கேட்குங் காது [மணி 9-60]

முயற்செவி — செடி வகை ; முயலின் காது

முறஞ்செவி — யானையின் முறம் போலுஞ் செவி [கலி 52-1]

முறஞ்செவி வாரணம் — யானை [சி 10-247]

மூளிக்காது — பெண்களின் ஆபரணமணியாத காது ; அறுபட்ட காது

மேற்காது — காதின் மேற்புறம்

வடிகாது — தொங்குந் துளைச் செவி ; நீண்ட துவாரமுடைய செவி [தே 1091-1]

வடிசற் காது — வடிகாது

வடிந்த காது — தொங்குங் காது [திவ் 3443 உரை]

வண்காது — வளவிய காது [முருகு 20]

வள்ளைக்கொடிச்செவி — [மகளிரின்] வள்ளைக்கொடி போன்ற காது

வள்ளைச்செவி — வள்ளைக் கொடிச் செவி

வன்செவி — உணர்ச்சியற்ற காது (திருவா 7–1)

வார்காது — வடிகாது (திவ் 142)

விகர்ணம் — காதின்மை ; செவிடு (புள் பு 29-5)

விடுகாது — வளர்த்துத் தொங்கவிடும் தொள்ளைக் காது (ஈடு 10–1–1 ; க 3–338)

வெறுங் காது — நகையில்லாத காது ; மூளிக்காது (அம்மணி 140)



# 6. மூக்கு

அடைமூக்கு — சளியால் அடைபட்ட மூக்கு

அணிமூக்கு — அழகிய மூக்கு

அல்லி மூக்கு — சில்லி மூக்கு ; இரத்தம் ஒழுகும் மூக்கு

இல்லி மூக்கு — சில்லி மூக்கு

உண்மூக்கு — மூக்கின் உட்புறத்தின் மேற்பாகம்

உலைமூக்கு — துருத்தி வைக்குந் துவாரம் ; துருத்தி (கலி 543 நச்)

ஊழல் மூக்கு — சதா சளி வடியும் மூக்கு

ஊளைமூக்கன் — சளிவடியும் மூக்கை உடையவன்

ஊளைமூக்கு — சதா சளி வடிந்துகொண்டிருக்கும் மூக்கு

எடுப்பான மூக்கு — அழகான மூக்கு

ஒட்டை மூக்கு—சில்லி மூக்கு, இரத்தம் வடியும் மூக்கு ; சளி ஒழுகும் மூக்கு

கடைந்தெடுத்தாற் போன்ற மூக்கு — அழகிய மூக்கு

கரகமூக்கு — நீர்விழுங்கெண்டியின் உறுப்பு

கருடமூக்கு — தேள்கொடுக்குச் செடி

காக்காய் மூக்கன் — நீண்ட மூக்குள்ளவன்

காக்காய் மூக்கி — நீண்ட மூக்குடையவள்

காக்காய் மூக்கு — நட்ட தென்னை நெற்றினின்று தோன்றும் மூளை ; நீண்டு வளைந்த மூக்கு

கிளிமூக்கன் — கிளிபோன்ற மூக்குடையவன்

கிளிமூக்கு — கிளியின் அலகு ; கிளிமூக்குப் போன்று நுனி சிவந்த மாங்காய்

கிளி மூக்கு மாம்பழம் — கிளியின் மூக்குப்போன்று நுனி சிவந்த மாங்காய்

குடமூக்கு — குடந்தை ; கும்பகோணம் (அப் 3-68)

குமரமூக்கன் — கொம்பேறி மூக்கன் பாம்பு

குமிழ் நாசி — குமிழ் போன்ற (மகளிரின்) மூக்கு

கூர்மூக்கு — கூர்மையான மூக்கு

கொடிமூக்கு — கொடிபோன்று மேலுயர்ந்த நீண்ட அழகான மூக்கு ; முன் வளைந்த மூக்கு (க 3-337 ; சிந் - 165) ; மூக்கின் நுனி — (திருமந் 562)

சப்பட்டை மூக்கு — சப்பை மூக்கு (பே)

சப்பை மூக்கு — தட்டையான மூக்கு, மூக்கறை

சில்மூக்கு — மூக்கிலிருந்து இரத்தம் வடியும் ஒருவகை நோய், சில்லி மூக்கு

சில்லி மூக்கு — இரத்தம் வடியும் மூக்கு ; மூக்கு நுனி

சில்லி மூக்குடைதல் — இரத்தம் மூக்கினின்று வடிதல்

சுற்றி வளைத்து மூக்கைத் தொடல் — சுற்றிவளைத்துச் சொல்லுதல்

செம்மூக்கன் — ஒருவகை முதலை

சொட்டைமூக்கு — மூக்குத்தியில்லாத மூக்கு (முல்லைக் காடு)

தலையைச்சுற்றி மூக்கைத் தொடுதல் — சுற்றி வளைத்து மூக்கைத் தொடல்

தாராமூக்கன் — பாம்புவகை

துண்டத்துளை — மூக்குத் துவாரம் (11தி 28 - 22)

துருத்தி மூக்கு — துருத்திக் குழாய்

தூக்கு மூக்குத்தி — ஒருவகை மூக்குத்தி

நாசிக் கனப்பு — சளி முதலியவற்றால் மூக்கு விங்கியிருத்தல்

நாசிகாக்கிரம் — நுனி மூக்கு (பிரபோத 44-14)

நாசிகாசூரணம் — மூக்குப் பொடி

நாசிகாபரணம் — மூக்குத்தி (திருவாலவா 45-6) மூக்கணி (சர கு நாட 46-5)

நாசிகாபிடம் — மூக்குள் வளரும் சதைவகை

நாசிகாமலம் — மூக்குச்சளி, மூக்குப்பீ, மூக்குக்கோழை

நாசிகாரோகம் — மூக்கில் வரும் நோய்

நாசிகை — மூக்கு

நாசித்துவாரம் — மூக்குத்துளை; நாசித்துளை

நாசிப்புதவு — மூக்குத் துவாரம் (உப 1521)

நாசிப்பொடி — மூக்குப்பொடி (கிரா 198)

நாசியடைப்பு — ஜலதோஷத்தினால் உண்டான சளியினால் மூக்கு அடைத்துக்கொள்ளல்

நாசியம் — மூக்கணாங்கயிறு

நாசியுடைவு — சில்லி மூக்குடைதல்

நாசியெலும்பு — மூக்கெலும்பு

நாசியைச் சிந்தல் — மூக்குச் சிந்தல்

நாசி ரோகம் — மூக்கு நோய் வகை

நுனை மூக்கின் சங்கம் — கூரிய மூக்கினையுடைய சங்கு (ச 66 - 1)

நெடு மூக்கு — துதிக்கை (அப் 3 - 946)

பொய் மூக்கு — போலி மூக்கு

மண்டை மூக்கு — சப்பையான மூக்கு (பே)

மூக்கடியான் — மூக்கடிச் சதை வளர்ச்சி

மூக்கடைத்துக் கொள்ளல் — தடுமனால் மூச்சுவிட முடியாமலிருத்தல்

மூக்கடைப்பான் — மூக்கடைப்பு

மூக்கடைப்பு — ஜலதோஷத்தால் மூக்கு அடைத்துக் கொள்ளல்; மூக்கு நோய் வகை

மூக்கறைங்கயிறு — மூக்காங் கயிறு

மூக்கணி — மூக்குத்தி (வைண 2 - 203 ; பிரபு 4-11)

மூக்கணை — மூக்கணாங்கயிறு

மூக்கந்தண்டு — மூக்குத் தண்டு

மூக்கரி கத்தி — வெற்றிலைக் காம்பை அரியுங் கத்தி (யாழ் அக)

மூக்கரிசியுடைதல் — மூக்கிலிருந்து ரத்தம் ஒழுகுதல்

மூக்கறிவு — மோப்பத்தாலறிதல்

மூக்கறுத்தல் — மூக்கையறுத்தல்; அவமானஞ் செய்தல் (இராமநாட யுத் 44)

மூக்கறுதல் — மூக்கறுபடல் ; அவமானப் படல்

மூக்கறுப்பு — அவமானம் (இராமநாட யுத் 44; மரகத 268)

மூக்கறுபடல் — மூக்குடைபடல்; அவமானப்படல்

மூக்கறை — குறைமூக்குள்ளவன்;(ள்-து (திருப்பு269) மூக்கிலி ; மூக்கறுபட்டவன் (திருப்பு 291)

மூக்கறைச்சி — குறைமூக்குள்ளவள் ; சூர்ப்பணகை ; (ஈடு 10-3-9 ; திவ் 3921 உரை)

மூக்கறையன் — மூக்குக்குறைவுடையவன், மூக்கறு பட்டவன்

மூக்கன் — எடுப்பான (பெரிய) மூக்குடையவன் ; மீன் கொத்தி (சினேந் 261)

மூக்காங்கயிறு — எருத்தின் மூக்கைத் துளைத்துப் பூட்டுங் கயிறு

மூக்காங் கொழுந்து — மூக்கு நுனி

மூக்காந் தண்டு — மூக்குத் தண்டு

மூக்காமண்டை — மூக்குத் தண்டு

மூக்கால் அழுதல் — சிணுங்குதல்

மூக்கால் பேசுதல் — சிணுங்கிக்கொண்டு பேசுதல்; மூக்கொலிகள் மிகுதியாய் வரப்பேசுதல்

மூக்கால் மோத்தல் — மூக்கால் முகர்தல்

மூக்கில் கைவைத்தல் — மூக்கின்மேல் விரல் வைத்தல்; வியத்தல்

மூக்கில் நமைச்சல் ஏற்படுதல் - மூக்கில் தினவு உண்டாதல்

மூக்கில் புகைவிடல் — புகை பிடிக்கும்போது மூக்குத் துவாரங்களின் வழியே புகையை வெளிவிடல்

மூக்கில் விரலை வைத்தல் — அதிசயித்தல்

மூக்கில் வேர்த்தல் — பழைய நினைவுண்டாதல் (உண்ட இன்ப உணர்ச்சி)முன்னடையாளந்தெரிதல்; ஆசை

மூக்கிலி — மூக்கறை; மூக்கில்லாதவன் (பிரபு வசவண் 31)

மூக்கிலே வியர்த்தல் — மிகு கோபம் அடைதல்

மூக்கின்மேல் விரல் வைத்தல் — வியத்தல்

மூக்கினுல் பேசுதல் — மூக்கொலியுண்டாகப் பேசுதல்

மூக்கு உடைபடல் — மூக்கு உடைதல்

மூக்குக் கண்ணுடி — பார்வை நன்கு தெரியுமாறு அணியும் கண்ணுடி

மூக்குக் கயிறு — மாட்டுக்குப்போடும் மூக்கணுங்கயிறு

மூக்குக் குத்துதல் — சிறுமிகளின் மூக்கில் துளேயிடல்

மூக்குக்கு மேல் கோபம் வருதல் — பெருங்கோபம் வருதல்

மூக்குக் குவளே — மூக்குப்போன்ற வளேந்த பகுதியையுடைய குவளே ;

மூக்குக் கொழுந்து — மூக்கு நுனி ;

மூக்குச் சட்டி — இரசம் முதலியன பரிமாறுதற்குரிய மூக்குள்ள பாத்திர வகை

மூக்குச் சளி — மூக்கினின்று வெளிப்படுஞ் சளி

மூக்குச் சிந்துதல் — மூக்குச் சளியை வெளிப்படுத்தல்; மூக்குச்சீறுதல் ;

மூக்குச்சீறுதல் — மூக்குச் சிந்துதல் (யாழ் அக)

மூக்குச் சுழித்தல் — இகழ்ச்சிக்குறியாக மூக்கை நெரித்துத் திருப்புதல்

மூக்குடைத்தல் — அவமானப்படுத்துதல் (பே)

மூக்குடைதல் — அவமானமுறுதல் ; சில்வி மூக்குடைதல்

மூக்குணர்வு — மோப்ப உணர்வு

மூக்குத் தடை — மூக்குத்தி

மூக்குத் தண்டு — மூக்கின் எலும்புள்ள மேல் பாகம்

மூக்குத் தளி — மூக்குத் தளுக்கு (மலை குற 90-6)

மூக்குத்தளுக்கு — மூக்கணி, மூக்குத்தி

மூக்குத்தி — பெண்டிர் பூணும் மூக்கணி (கல் 2-339)

மூக்குத்திருகாணி — மூக்கில் போட்டுக்கொள்ளும் ஓராபரணம் (அஞ்சலி 108)

மூக்குத்திருகு — மூக்குத்தி (ஒற்றை)

மூக்குத் துடித்தல் — மூக்கிலுள்ள நரம்பு துடித்தல்; கோபங்கொள்ளல்

மூக்குத் துவாரம் — மூக்குத்துளை

மூக்குத்துளை — மூக்கின் ஓட்டை

மூக்குப் பிடிக்க உண்ணுதல் — நிரம்ப உண்ணுதல் (பே)

மூக்குப் பிளவை — மூக்கில் வரும் ஒருவகைப் புண்

மூக்குப் பீ(ளை) — மூக்கிலுள்ள உலர்ந்த சளிப் பொருக்கு

மூக்குப் பீனசம் — மூக்கில் சதை வளரும் நோய்

மூக்குப் புண் — மூக்கில் ஏற்படும் புண்

மூக்குப் பூரி — மேலுதடு விண்டவன்

மூக்குப் பூருதல் — மூக்குக் குத்துதல்

மூக்குப் பொட்டு — மூக்குத்தி

மூக்குப்பொடி — மூக்கால் உறிஞ்சப்படும் புகையிலைத் தூள்

மூக்கும் முழியுமாக இருத்தல் — அழகாக இருத்தல்

மூக்கு மயிர் — மூக்கினுள் மயிர்

மூக்கு முனை — மூக்கு நுனி

மூக்குயர்த்தல் — குழந்தையின் மூக்கைச் சப்பை யாகாமலிருப்பதற்காக இழுத்துவிடுதல் (சிந் - 2703)

மூக்குவட்டகை — மூக்குப்போன்ற விளிம்புகொண்ட கிண்ணம் (சாச)

மூக்குவலி - மூச்சு பலம் (திவ் 3239 உரை)

மூக்கு வளையம் — மூக்கணாங் கயிறு

மூக்குறிஞ்சி — மூக்கை உறிஞ்சுபவன் (ள்)

மூக்குறிஞ்சுதல் — மூக்கை உறிஞ்சுதல்

மூக்கெழுந்த முத்து - முத்தால் ஆக்கிய மூக்குத்தியணி (குற் - குற)

மூக்கை உடைத்தல் — மூக்கைத் தாக்குதல்; அவமானப்படுத்துதல்

மூக்கை உறிஞ்சுதல்—மூக்குச்சளியை உள்ளே இழுத்தல்

மூக்கைக் குடைதல் — (நாற்றம்) மூக்கைத் துளைத்தல் (பே)

மூக்கைச் சிந்துதல் — மூக்குச்சளி சிந்துதல்

மூக்கைச் சுளித்தல் — இகழ்ச்சிக்குறியாக மூக்கை நெரித்துத் திருப்புதல்

மூக்கைச் சொறிதல் — காரியம் நிறைவேறவேண்டி ஒருவர் மூக்கைச் சொறிந்து தனது வேண்டுகோளைத் தெரிவித்தல்; தனது எளிமையைக் காட்டுதல் (திருப்பு - 737)

மூக்கைத் துளைக்கும் நாற்றம்; நெடி — மூக்கில் மிகுதியாக ஏறும் நாற்றம்

மூக்கை நெறித்தல் — மூக்கை மேனோக்கி உயர்த்தல்; மூக்கைச் சுளித்தல்

மூக்கை நோண்டுதல் — மூக்கிலுள்ள பொருக்கை விரலால் எடுத்தல்

மூக்கைப் பிடித்தல் — மூச்சுவிட முடியாமல் மூக்கைப் பிடித்துக்கொள்ளல்; பிராணாயாமஞ் செய்தல்; மந்திரஞ் செபித்தல்

மூக்கை மூடிக்கொள்ளல் — மூக்கைப் பிடித்துக் கொள்ளல் - (புருஷர்களுக்கு 78)

மூக்கொலி உயிர் — மூக்கால் ஒலிக்கப்படும் உயிரெழுத்து

மூக்கொலிகள் — மூக்கினுல் உச்சரிக்கப்படும் ஒலிகள்;
ங, ஞ, ண, ந, ம, ன முதலிய ஒலிகள்

மூக்கொலியன் — சங்கு

மூக்கொழுகுதல் — சளி ஒழுகுதல்

மூக்கொற்றி — மூக்குத்தி;

மூக்கோட்டை — நாசித்துவாரம்

மூளிமூக்கு — மூக்கறை, மூக்குத்தியில்லாத மூக்கு

மொண்ணை மூக்கு — சப்பட்டையான மூக்கு
(புருஷர்களுக்கு - 98)

# 7. வாய்

அகல்வாய் — அகன்றவாய் (க 6-3781); உள்ளிடம்; உட்பக்கம்; இருதயம் (கீதை வெ 8-12)

அகவாய் — கதவுநிலை, (கல்வெட்டு); மனம்; உள்ளிடம்

அகவாய்க்கோடு — வண்டியின் நெடுஞ்சட்டம்

அகவாயில் — மனம் (குருபரம் 258)

அகன்றவாய் — விரிவான வாய்

அகைவாய்க்கால் — கிளை வாய்க்கால்

அங்காக்கும் வாய் — பகுவாய் (சி 5-218 அடி)

அங்காந்த வாய் — பிளந்தவாய், திறந்த வாய்

அட்டில்வாய் — சமைக்குமிடம் (திருவி 39-15)

அரத்தவாய் — செவ்வாய் (ச 237-8)

அருணவாய் — சிவந்த வாய் (தி 22)

அரைவாயன் — தெரிந்து பேச அறியாதவன்

அல்குல்வாய் — யோனித்துவாரம்

அலப்புவாயன் — பெருவாயன்

அலர்வாய்ப் பெண்டிர்—அலர்கூறும் வாயினையுடைய பெண்டிர் (நற் 36)

அலைவாய் — திருச்செந்தூர்

அலைவாய்க்கரை — கடற்கரை

அழுதபிள்ளை வாய் மூடும் — பயத்தினால் அல்லது வியப்பினால் அழுதகுழந்தை அழுகையை நிறுத்தி விடும்

அறுவாய்—புண்ணின் வாய்; கார்த்திகை (சோதிட)

அறைவாய் — கணவாய்

ஆகாசவாயர் — ஆகாயத்தைப் பார்த்து வாய்திறந் திருக்கும் தரித்திரர் (திவ் 3485)

ஆசன வாய் — மலவாய்; குதவாய்

ஆலவாய் — பாம்பு (வாயில் விடமுள்ளது)

ஆவென்று வாயைத் திறத்தல் — வாயைப் பெரிதாகத் திறத்தல்

ஆற்றுவாய் முகம்—நதிசங்கம முகம் (க. இராவணன் களங் 25)

இலவவாய் — இலவம்பூப் போன்று சிவந்த வாய்

இழிச்சல்வாய் — திறந்த வாய்

இழிச்ச வாய்ப்பட்டம் — ஒன்றுந் தெரியாதவன் என்ற பட்டம்; அப்பாவிப்பட்டம்

இளிச்சவாயன் — (குரங்குபோல்) எப்போதும் பல்லைக் காட்டுபவன்; இலகுவில் ஏமாற்றப்படுபவன்; பேதை; ஏமாளி

இளித்தவாயன் — இளிச்சவாயன்

இறுவாய் — சாவு, முடிவு

உதடு சிறிது உள்ளடங்கிய வாய் — சிறிய உதடுகளை யுடைய வாய் ; சப்பை வாய்

உதப்பி வாயன் — எச்சில் தெறிக்கும்படி பேசுபவன்; சொள்ளுவாயன்

உரைவாய் அரா — ஒலித்துச் சீறும் வாயினையுடைய பாம்பு (11 தி 3-3)

உலைவாய் மெழுகு — உலையின் கணுள்ள மெழுகு

உள்வாய் — வாயினுட்புறம் ; வாயினுட் பக்கம் (குறுந் 92)

உளறுவாயன் — ஓயாது பேசுவோன், விடாது பேசுபவன், பிதற்றுவோன், ஒன்றிருக்க ஒன்று கூறுவோன்

ஊமைவாயன் — ஊமையன்

ஊத்தைவாய் — பல்விளக்காதவாய் (திவ் 362; பெரிய 2655)

ஊத்தைவாயன் — நாற்றவாயன்

ஊரார் வாயை அடக்க முடியுமா?—ஒன்றைப்பற்றிப் பிறர் பேசாமலிருக்கச் செய்யமுடியுமா ?

எச்சவாய் — மலவாய், குதம்

எச்சில்வாய் — எச்சில் உள்ள வாய்

எச்சில் வாய் கழுவுதல் — உண்ட வாயைக் கழுவுதல்

எரிமலர்ச் செவ்வாய் — தீப்போன்று சிவந்து மலர் போன்று அழகான வாய் (பெருங்க 1-37-119)

எரிவாய் நரகம் — வாயில் தீயுடைய நரகம்

எருவாய் — குதம்

ஏனவாயன் — ஏமாந்தவன், ஏமாளி

ஐவாய்ப்புலி — சிங்கம் (மதுரை மும் கோ 16-4)

ஐவாய் மான் — சிங்கம் (காந் பித 45; திருவி மாணிக்கம் 54)

ஐவாய் மிருகம் — கரடி, சிங்கம்

ஓடுக்குவாய் — ஓடுங்கினவாய், கோணல் வாய்

ஒருபிடிவாயன் — ஒஞ்ஞன்

ஒருவாய் — ஒருவாய்கொள்ளு மளவு

ஒருவாய்க்கோதை — ஒருகட்பறை (கல்லா 8-27)

ஒருவாய் குடித்தல் — ஒரு மடக்கு நீர் குடித்தல்

ஒருவாய் கொள்ளல்—ஒருதடவை வாய்கொள்ளுமளவு உட்கொள்ளல்

ஒரு வாய் சாதம் — ஒருவாய் கொள்ளுமுணவு

ஒரு வாய் சொல் — ஒரு வார்த்தை சொல்லு (திவ் 2938)

ஒரு வாய்(ச்) சோறு — ஒரு கவள உணவு

ஒருவாய்ப் படுதல் — ஏககண்டமாகப் பேசப்படுதல் ; ஒரே குரலில் பேசப்படுதல்

ஒரே வாயில் தின்றுவிடல் — ஒரே முறையில் வாயி லிட்டுத் தின்றுவிடல்

ஒற்றைவாய்க் கணக்கு — ஒரே வகையாய்த் தீரும் கணக்கு

ஒறுவாய் — உதடு கிழிந்த வாய் ; ஒடிந்த வாய், சிதைவடைந்த வாய் ; வாயுடைந்த பாத்திரம் (மட்) ; ஒடிந்த விளிம்பு, மூளியான வாய் (சுந் 420 ; கலிங் 420)

ஒறுவாய்ப்பல் — சிதைவுற்ற பல் வரிசை

ஒறுவாய்ப் பானை — விளிம்பு சிதைந்த பானை

ஒறுவாய் போதல் — வாயொடிதல் ; வாய் சிதைதல்

ஒறுவாயன் — உதடு கிழிந்தவன், உதடு பிளந்த வாயுடையவன்

ஓட்டை வாய் — பல்லில்லாத வாய் ; சளசள என்று ஓயாது பேசும் வாய்

ஓட்டை வாயன் — இரகசியங்களை மறைக்கமாட்டாது வெளியிடுபவன், கண்டபடி பிதற்றுபவன் ; உளறு பவன்

ஓவாய் — பற்கள் போனவாய் ; பொக்குவாய் ; மூளி யான கலத்தின் வாய்

ஓவாய்ப்பல் — ஒறுவாய்ப்பல்

ஓவாய்ப்பானை — ஒறுவாய்ப் பானை, விளிம்பு போன பானை

ஓவாயன் — உதடு சிதைந்த வாயுள்ளவன் (நெல்விடு தூது 269)

கடிவாய் — கடித்த இடம்

கடுத்தவாயெறும்பு — கட்டெறும்பு

கடுவாய் — கழுதைப்புலி (மாக அம் 2-38; இரகு-தசாதன் சய 62); நாய்; வெற்றி முரசு. (நந்திக் 9)

கடுவாய்ப்பறை — ஒருவகைப் போர்ப்பறை (திவ் பெரியதி 2-9-9)

கடுவாயர் — கடுக்காயைத் தின்னும் வாயினர்; சமணர் (அப் 3-717)

கடுவாயன் — பேச்சால் எரிந்து விழுவோன்; கழுதை

கடுவாயெறும்பு — கடித்தால் கடுக்கும்படியான ஒரு வகைக் கறுப்பு எறும்பு

கடைவாய் — வாயின்கடை (க நாட்டுப் 10); வாயருகு

கடைவாய் நக்கி — உலோபி

கடைவாய்ப்பல் — உள்வாய் ஓரத்துள்ள பல்

கடைவாய் வழிதல் — வாய்நீர் தானே ஒழுகுதல்

கடைவாயில் — கடைவாசல்

கணவாய் — மலைகளுக்கிடைவழி

கணிவாய்ப் பல்லி — சோதிடம் கூறும் வாயை உடைய பல்லி (அக 151)

கதுவாய் — கொறுவாய், முரிந்தவாய் (சுந் 415)

கப்புவாய் — பிளப்பையுடைய வாய் (பாக பு 10-22-42)

கயவாய் — கரிக்குருவி (சிரா-கோ 174); பெரிய வாய் (அக 228)

கயவு வாய் — பெரிய வாய் (திருவி 45-18)

கருக்கு வாய்ப்படுதல் — கத்தி முதலியன கூர்மை பெற்றிருத்தல்

கருவாய் — (ஆண், பெண்) குறி

கருவாய்ச்சி — கெட்டவாக்குக்காரி; கறுப்பு நிறத்தினள்

கருவாயன் — கறுப்பன்

கலகலத்தவாய் — மனத்திலுள்ளதை மறையாது பேசுவோன்; உள்ளதைச் சொல்லுவோன்; அலப்புவாய், அளப்புவாயன்

கலக வாய்க்குருவி — விகடங்கற்ற ஒரு பறவை

கலகவாயன் — சண்டைக்காரன்; வாயால் ஆர்ப்பபவன்

கனிதரு செவ்வாய் — கனி போன்ற சிவந்த வாய் (திருவா 2-141)

கனிவாய் — கொவ்வைக் கனி போன்ற வாய்; பெண் (அரி 5-30; மதுரைக்கோ 128)

கனிவாய் நஞ்சன் — கொடிய நஞ்சுடைய பாம்பு வகை

கனிவாய் மொழியம்மை — திருவெண்பாக்கத்தில் கோயில் கொண்டிருக்குந் தேவியின் பெயர்

கனி வாயாள் — பெண்; கனிந்த மொழிகளைப் பேசு பவள்; கொவ்வைக் கனி போன்ற சிவந்த அதரங் களை உடையவள்

கால்வாய் — வாய்க்கால்

காளவாய் — பெருங்குரல் வாய்; கழுதை

கிஞ்சுக வாய் — சிவந்த வாய் (மாறன் ப குறம் 59)

கிஞ்சுகவாய் அஞ்சுகம் — சிவந்த வாயையுடை அழகிய கிளி

கீழ்வாய் — தாடி

குத்துவாய் — பூச்சி முதலியன கடித்த வாய், கடித்த விடம்

குமுதச் செவ்வாய் — குமுதம் போன்ற சிவந்த வாய் (ஆரூர்க் 23)

குமுதமணி வாய் — குமுதம் போன்ற அழகிய வாய் (ஆப்ப பு 8-16)

குமுதவாய்-குமுதம்போன்ற வாய் (பித கொத்து 2-41)

குழல்வாய் மொழியம்மை — திருக்குற்ருலத்தில் கோயில் கொண்டிருக்குந் தேவியார்

குளவாய்க்கரை — குளத்தங்கரை

குற்றுவாய் — கடிவாய்

குறுவாய் — குறுகிய வாய், குறுகிய வழி ; குழந்தையின் வாய்

கூன்வாயிரும்பு — அரிவாள் (காசி கண் 38-12)

கேட்டவாய்க் கேட்டல் — பலமுறை கேட்டல்

கேனவாயன் — முட்டாள், பேதை

கொக்கு வாய் — ஆபரணத்திற் செருகும் கண்ணியின் பூட்டு (சாச)

கொடுவாய் — வெறும் புறங்கூறும் வாய்; வளைந்த வாய், பழிச்சொல்; வாயினின்று வடியும் நீர்; குறளை, கழுதைப் புலி; புறங்கூறல்

கொடுவாய்க்குயம் — வளைந்த வாயை உடைய அரிவாள் (சி 16-30)

கொடுவாயிரும்பு — தூண்டில் முதலியவற்றிலுள்ள இரும்புக் கொக்கி, தூண்டில் முள்

கொல்வாய் — மதகு, மணல் வாரி (வையா பள்)

கொவ்வைச் செவ்வாய் — கொவ்வைப் பழம்போன்ற சிவந்த வாய் (வில்லி 5-20)

கொவ்வை வாய் — கொவ்வைப் பழம் போன்ற வர்ய் (பாரத 57-56)

கொள்ளிவாய் அலகை — கொள்ளிவாய்ப் பிசாசு (தி 909)

கொள்ளிவாய்ப் பிசாசு — ஒருவகைப் பேய்

கொள்ளிவாய்ப் பேய் — கொள்ளிவாய்ப் பிசாசு

கொள்ளிவாய் விரியன் — ஒரு பாம்பு

கொன்னைவாய் — கோணலான வாய்; திக்கு வாய்

கோட்டுவாய் — சலவாய் (பே)

கோடைவாய் — கோட்டுவாய்

கோணை வாய் — கோணலான வாய்

கோலமணி வாய் — அழகிய பவள வாய் (சிந் 2029)

கோவை வாய் — தொண்டைக் கனிபோன்ற சிவந்த வாய் (திவ் 3029)

சந்துவாய் — பொருத்துவாய்

சப்பை வாய் — உதடுகள் சிறிது உள்ளடங்கியிருக்கும் வாய்

சபையிலே வாய் சோர்தல் — அவையில் அச்சத்தால் பேசமுடியாது போதல்

சலவாய் (ஒழுகுதல்) — கோட்டுவாய் (வடிதல்)

சள்ளுவாயன் — ஓயாமல் பேசுபவன்

சளுவுவாயன் — சள்ளுவாயன்

சாளை வாய் — நீர் வடியும் வாய்

சாற்றுவாய் — நீர் வடியும் வாய்; சாலே வாய்

சாற்றுவாய் ஊற்றுதல் — சாலே வடிதல்

சாற்று வாயன் — சொள்ளுவாயன்;

சில்லி வாயன் — ஓட்டை வாயன்

சில்வாய் — கடைவாய், கொடுவாய்

சில்லிவாயர் — ஓட்டைவாயர் (பெரிய 2674)

சில்லி வாயன் — வாயில் வந்ததைப் பிதற்றுபவன் (பெரிய திருஞான 776), ஓட்டைவாயன், இரகசியத்தை வைத்திருக்க முடியாதவன்

சிறுவாய்க் கயிறு — குதிரையினுடைய லகான்

சுழுக்கு வாய் — மதகுப் பலகையாகிய சீப்பின் இடைவெளி (முக்கூடற் 36)

சுறவு வாய் — மகரவாய் என்னுந் தலைக்கோலம் (பெரும் பாண் 385)

செங்கனிவாய் — சிவந்த கனி போன்ற வாய் (அம்பிகோ – 405)

செந்துவர் வாய் — அழகிய சிவந்த வாய் (அப்104-3) மிகச்சிவந்த உதடு (திவ் 87)

செய்யவாய் — சிவந்த வாய், அழகிய சிவந்த வாய் (பாரத 98 - 106;) திவ் 3577

செவ்வாய் — சிவந்த வாய் (நைட 505; பிரபு 3-58)

சொல்ல வாயெடுத்தல் — சொல்லத் தொடங்குதல்

சொல்லி வாய் மூடுவதற்குள்—சொல்லி முடிப்பதற்குள்

தடவுவாய் — மலைச்சுனை (பு 105)

தந்திரவாயன் — வாய்ச்சாலக்காரன்

தந்துவாயன் — சாதுரியப் பேச்சுக்காரன்

தரை திறந்த வாய் — நில வெடிப்பு (கலிங் 79)

தலை வாசல் — முதல் வாயில்

தவளை வாய் — ஆபரண வகை (சாச)

தலைவாயில் — தலைவாசல்

தாழ்வாய் — தாழ்வாய்க்கட்டை; மோவாய், தாடி

திக்குவாய் — தத்திப் பேசும் வாய்; கொன்னைவாய் (சுவாமி பி. த. 27)

திக்குவாயன் — தெற்றிப் பேசுபவன், திக்கிப் பேசுபவன்

திரிவாய் — (வெடிகுண்டில்) தீ வைக்குமிடம்; திரியில் தீப்பற்ற வைக்குமிடம்

'திருந்துவாய் — அழகிய வாய் (பெருங்க 2–15–110)

திருவாய் — திருவாக்கு, அருள் வாக்கு;,அழகிய வாய் (பெரிய 1490; திருவா 12 - 1)

திருவாய்க் கேள்வி — அரசன் வாய் மொழியாக இடும் உத்தரவுகளைக் கேட்டு உரியவர்களுக்கு எழுத்து மூலம் அனுப்பும் அதிகாரி; அரசன் ஆணையையும் குறிக்கும் (காச); அரசவிசாரணை.

திருவாய் திறத்தல் — சிறந்த வாய் திறந்து பாடுதல் (சுந் 487)

திருவாய் மலர்தல், மலரல் — பெரியவர் வாய் திறந்து பேசல்; கூறியருளுதல்

திருவாய்மலர்ந்தருளுதல் — திருவாய் மலர்தல்

திருவாய்மொழி — ஒரு பிரபந்தம்; தெய்வவாக்கு, பெரியோர் அருளிய சொல்

திருவாயில் — கோயில் வாயில்; மாடம்

துகிர்வாய் — பவளவாய் - (தி 1140)

துப்பாக்கி வத்திவாய் — துப்பாக்கி வாய்

துலேவாய் — துலேமுகம்

துவர்வாய் — சிவந்தவாய் (குளத் கோ 427; சிந் 219)

தூற்றுவாய் — காற்றடிக்கும் பக்கம்

தூறுவாயன் — பழிச்சொற்காரன்

தெத்துவாயன் — தெற்றுவாயன்

தெற்றுவாய் — திக்குவாய், கொன்னேவாய்

தேன்வாயமிர்தம் — தேன் போன்ற வாயூறல் (யசோதர); பணிமொழி வாலெயிறு ஊறிய நீர்

தொகுவாய் — குவிந்தவாய்

தொடுவாய் — ஆறுங்கடலும் சந்திக்குமிடம்; புறங் கூறுதல்

தொண்டைக் கனிவாய் — தொண்டைக்கனி போன்றவாய் (கோ. 132; ம. பாரதம். 36-5)

தோற்றுவாய் — (நூலின்) முன்னுரை, தொடக்கம்

நச்சுவாய் — கேடுவிளைவிக்கும் வாய்; ஓயாது பேசும் வாய்; விஷவாக்கு; பலிக்கும் வாக்கு

நச்சுவாய்ப்பல்லன் — கேடுவிளைவிக்கும் வாய்ச்சொல்லுடையவன் (சித். நாய 5)

நச்சுவாயன் — ஓயாமல் பிதற்றுபவன், உளறுபவன்

நட்டுவாய்க்காலி — கவ்விக் கொட்டுந் தன்மையுள்ள தேள்வகை

நரகவாய் — நிரயவாய் (திவ் - இயற் 3-47); குதம்

நல்லவாய் — இனிய மொழி பேசும் வாய்

நாகணவாய்ப்புள் — பூவைப் பறவை

நால்வாய் — யானை (தனி 1-622); யானையின் தொங்கும் வாய் (கோ 55; தில் பதிற் அந் 1)

நால்வாய்க்குஞ்சரம் — தொங்கும் வாய் யானை

நால்வாய்முகத்தோன் — விநாயகர் (தி 1305)

நால்வாயன் — விநாயகர்

நாள்வாய் — நாள்தோறும் (கல்)

நாறல்வாயன் — ஊத்தைவாயன்; உலோபி; கெட்ட வார்த்தை பேசுபவன்

நான்றவாய் — தொங்கும் வாய்; யானையின் வாய்

நீள்வாய் — நீண்டவாய், துதிக்கை

நுரைவாயன் — நுரைதள்ளும் வாயுடையவன்; சாளைவாயன்

நெடுவாய் — வாய் நீண்டமீன், உள்ளா மீன்

நேர்வாய்க்கட்டளை — எதிரெதிராய் அமைந்த சாளரம்
நோய்வாய்ப் படுதல் — நோயுறுதல்
பகுவாய் — பிளந்தவாய், பேழ்வாய் (க. 3-356; 6 – 3858; முருகு 25); பாம்பு (திருவி 57 – 57); அகன்றவாய் - (திவ் - பெரியதி 6-5-6)
பகுவாய்ப்பறை — பறைவகை
பட்டிவாய் — வாய்மூடி
பண்வாய் — பண்பாடும் வாய் (ராமா வெ. 3-14)
பவள இதழ் வாய் — பவளம்போன்ற இதழையுடைய வாய்
பவளச் செவ்வாய் — பவளம்போன்ற சிவந்த வாய் (சிந் 2034)
பவளவாய் — பவளம் போன்ற வாய் - (சங்க 4-15)
பவளவாய் பருகுதல் — அதரபானஞ் செய்தல் (கொக்கோ 2-15)
பவனவாய்—குதம்; அபானத்துவாரம்
பழிவாய் — பழிச்சொல், பரிவாதம் (தகர 1-32)
பற்றுவாய் — உலோகப்பற்று வைக்குமிடம்; துப்பாக்கியில் மருந்திடும் துவாரம்
பாடியவாய் (தேனூறும்) — பாடும் வாய் (இனிக்கும்)
பாலார் துவர்வாய் — பால் மணம் வீசும் சிவந்த வாய்
பாழ்வாய் கூறுதல் — நன்றி மறந்து முணுமுணுத்தல்
பாழ்வாய்ச்சி — காரணமின்றிக் குறைகூறுபவள்
பாழ்வாயன் — காரணமின்றிக் குறை கூறுபவன்
பாழிவாய் — கழிமுகத்துள்ள திட்டு
பிடிவாய் — பெண் யானையின் வாய்

பிலவாய் — பிலம்போல் ஆழ்ந்த பெரியவாய் (க 3-1164)

பிலவாய்க்கணம்—பூதகணம் (உப 1356)

பிளந்தவாய் — திறந்தவாய்

பீரங்கிவாய் — பீரங்கியின் வாய்

புண்வாய் — புண்ணின் துவாரம்

புல்வாய் — கலைமான் (தொல் பொ 590 ; பு 193)

புறவாய் — வீட்டின் பின்புற வாயில் (இரா 1-8-64)

பூங்குமுதச் செவ்வாய் — அழகிய குமுதம் போன்ற சிவந்தவாய் (குமர 1 – 41)

பூசாவாய் — கழுவாத வாய் (அக 265)

பூட்டுவாய் — திறவுகோல் புகுந்துவாரம்

பூவாய் — அழகியவாய் (நெல் சி வெ 21)

பெண்வாயன் — பெண்டிரைப்போல் பேசுவோன்

பெரியவாய் — அலப்புவாயன்; ஓயாப் பேச்சுக்காரன் (பேச்சுக்காரி)

பெருவாயன் — வீண் பேச்சுக்காரன்; அலப்புவாயன்; கூடை (சாச)

பேச்சுவாயன் — வாயாடி, வெறும் வாய் வீச்சுக்காரன்

பேச்செடுக்க வாய் வரவில்லை — பேச நா எழவில்லை

பேழ்வாயன் — புரிந்து பேசுபவன் ; வாயாடி

பேழ்வாய் — பெருமையுடைய வாய் (முருகு 47) பிளந்தவாய் (ச 7-6); பெரிய வாய்

பொக்கல் வாய் — பொக்கை வாய்

பொக்குவாய் — பொக்கை வாய் (வள்ளி மணவெ)

பொக்கைவாய் — பல்லற்றவாய் (தனி 3-681)

பொக்கைவாயன் — பல் இல்லாதவன்

பொதிவாய் — மூடிய வாய்; மூடுவாய்

பொன்வாய் — அழகிய வாய் (கயிலைபாதி 62)

போழ்வாய்—பிளந்தவாய் ; பொக்கைவாய் (விறலிவிடு 195); திறந்தவாய் ; பிளவுபட்ட வாய், (சீகாளத் 7-57)

போழ்வாய அன்றில் — பிளக்கும் வாயை உடைய அன்றில் (திவ் 2564)

மகரப்பகுவாய் — அங்காந்த வாயுடன் கூடிய, மகர மீனின் வடிவமையச் செய்த தலைக்கோல வகை (முருகு-25)

மகரவாய் — மகரப்பகுவாய் (கலித் 54)

மகரவாய் மோதிரம் — மகர மீனின் வாய் வடிவாகச் செய்த கால் விரலணிவகை (சிர்-83-உரை)

மச்சுவாய் — ஓடவகை (மட்)

மட்டிவாய் — திறந்தகன்ற வாய்

மட்டிவாயன் — திறந்தகன்ற வாயையுடையவன்

மடித்தவாய் — (கோபத்தால்) இதழ்களைக் கடித்த வாய் (அக 8-53)

மடிவாய் நாஞ்சில் —மடித்த வாயினையுடைய கலப்பை

மணிவாய் — சிவந்தவாய் (கூர்ம-1-29-185)

மலவாய் — குதம்

முடைவாய் — நாற்றமுள்ளவாய் (பெரிய-1367)

முரவுவாய் — முழங்கும் வாய் (அக 260)

முரிவாய் — இடித்து உண்டாக்கினவாசல்; சன்ன வாசல் (திருவாலவா 55-5)

முலைவாய் — முலைக்கண்

முழங்குவாய்—கொக்கரிப்பையுடைய வாய் (சி 12-7)

முள்வாய்ச் சங்கம் — கூர்த்தவாய் உடையசங்கு (சி 4-78)

முள்வாயன் — அரிக்குங் கறையான் வகை

முன்வாய் — வாயின் முற்பக்கம்; உதடு

முன்வாய்ப்பல் — முன்னம்பல்

மூட்டுவாய் — பொருத்து, கயில், பூண்கடைப் புணர்வு, வாய் மூட்டு

மென்ற பேழ்வாய் — சீற்றத்தாலே மடித்த பெரிய வாய் (திவ் 1012)

மேல்வாய் — வாயின் மேற்பகுதி; அண்ணம்

மேல்வாய்ப்புறம் — வாயின் மேற்பகுதி

மோவாய் — வாய்க்குக் கீழுள்ள இடம், தாடை (4-257); தாடி (அக 133)

மோவாய்க்கட்டை — முகவாய்க்கட்டை

மோவாய்க்கட்டை பிடித்தல் — மோவாய் தாங்குதல், கெஞ்சுதல்

மோவாய் பிடித்தல் — மோவாய் தாங்குதல்

யோனிவாய் — பகம்; யோனித்துவாரம், அல்குல் வாய்

வடிப்பவளவாய் — அழகிய பவளம் போன்ற வாய் (திவ் 2414)

வண்டியகவாய் — வண்டிச் சக்கரத் துவாரம்

வண்ணமலர்ச் செங்கனிவாய் — அழகிய தாமரை மலரையும் சிவந்த கொவ்வைக் கனியையும் போன்ற வாய் (பெரிய 1960)

வல்லார்வாய்க் கேட்டுணர்தல் -- (ஒரு அறிவுத்துறையில்) வல்லவர் மூலம் கேட்டறிதல்

வல்வாய் — வலியவாய் (க 6-3768); வன்சொல் (வேங் உலா 378)

வல்வாயன் -- வாசாலகன் ; நன்ருய்ப் பேசுபவன், பெருஞ் சொற்பொழிவாளன் ; வாக்குவல்லமை உடையவன்

வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொள்ளல் — துன்ப மிகுதியால் வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொள்ளல்

வாய் அகலமான பாத்திரம் -- பெரிய வாயை உடைய பாத்திரம்

வாய் அங்காத்தல் — வாய் திறத்தல்

வாய் அடங்கச் செய் — பேசாமலிருக்கச் செய்

வாய் அவிழ்தல் — வாய்விட்டு மொழிதல் (அக 129)

வாய் ஆழற்சி — வாய்ப் புண்

வாய் உதகம் — வாய்நீர் (அரி 4-253)

வாய் உபசாரம் — வாயளவில் செய்யும் உபசாரம்

வாய் உலர்தல் — நா உலர்தல் (நாடகமே 98)

வாய் உறைக்கிறது — காரமான பொருள்களை உண்டதால் நாக்கு எரிதல்

வாய் ஊறுதல் — வாயில் நீர் ஊறுதல்; ஒன்றை உண்ண விரும்புதல்

வாய் ஒன்றும் உரையாதிருத்தல் — வாய் பேசாமலிருத்தல் ; பதில் பேசாமலிருத்தல்

வாய் ஓயாமல் பேசுதல் — எப்போதும் பேசிக் கொண்டேயிருத்தல்

வாய் ஓயாமல் பேசுபவன் — தொண தொண என்று எப்போதும் பேசிக்கொண்டிருப்பவன் ; அளப்பு வாயன் ; ஓட்டைவாயன்

வாய் ஓவாமை -- வாய் ஒழியாமல் பேசல் (திருவா 169)

வாய்க்கசப்பு — வாய் கசந்திருத்தல்; மாட்டுக்கு வரும் கோமாரி நோய்

வாய்க்கட்டு — கண்டதைத் தின்ருமலிருத்தல்

வாய்க்கட்டை — சிறுவர்க்குரிய தின்பண்டம ; லஞ்சம்

வாய்க்கடைகூடல் — உதடு இரண்டும் ஒன்ருய்ச் சேரல் (திவ் 276 உரை)

வாய்க்கணக்கு — மனக்கணக்கு ; வாயாற் சொல்லுங் கணக்கு

வாய்க்கணை —(வாகணை) ஆற்றேரம் தண்ணீர் அறுக்காமல் கட்டப்படும் அணை (ச 328-9)

வாய்க்கயிறு — கடிவாளக் கயிறு

வாய்க்கரிசி — பிணத்திற்கிடும் அரிசி; பிணம் சுடுபவனுக்குக் கொடுக்கப்படும் அரிசி

வாய்க்கரிசியளத்தல் — இலஞ்சங் கொடுத்தல் (சேற்றில்)

வாய்க்கருவம் — கருவ மொழிகள் (கும் குற 27)

வாய்க்கருவி — கடிவாளம் (நெடுந்ல் 178 உரை) தொலைபேசியின் வாய்க்கருவி

வாய்க்கரை — கிணறு முதலியவற்றின் விளிம்பு ; உதடு (ஈடு 6-1-1)

வாய்க்கரைப்படு — உதடு (ஈடு 4-8-8 ஜீ)

வாய்க்காசு — வாய்க்கரிசியுடன் வைக்கும் பணம், இலஞ்சம்

வாய்க்காடிவார்த்துக்கொண்டிருத்தல் — மிகவும் துக்கமுற்றிருத்தல்

வாய்க்காரன் -- பேச்சில் வல்லவன் ; செருக்கால் மிதமிஞ்சிப் பேசுபவன் ; பிறரைத் திட்டுஞ் சுபாவமுள்ளவன்

வாய்க்காரி — பேச்சில் வல்லவள், செருக்கால் மிதமிஞ்சிப் பேசுபவள் ; பிறரைத் திட்டுஞ் சுபாவமுள்ளவள்

வாய்க்கால் — கால்வாய்

வாய்க்கிதமான உணவு — வாய்ச்சுவைக்குப் பொருந்திய உணவு (பெற்ருன் 156)

வாய்க்கிரந்தி — வாய்ப்புண் (கடம்பபு இலீலா 124)

வாய்க்கிலை -- வெற்றிலை

வாய்க்கிலை கெட்டவன் -- பெருந்தரித்திரன் ; உபயோகமற்றவன்

வாய்க்கிறுது — செருக்கான பேச்சு ; பொருத்தமற்ற வார்த்தை (யாழ் அக)

வாய்க்கினிய (உணவு) -- நாக்குக்கு ருசியான உணவு

வாய்க்குக் கொடுத்தல் — உண்பித்தல்

வாய்க்குச் சர்க்கரை போடவேண்டும் -- மகிழ்ச்சியான செய்தியைக் கூறியவருக்கு அல்லது பின் வரும் நிகழ்ச்சியை முன்னறிந்து கூறியவருக்குப் பாராட்டுக் கூறும் மொழி

வாய்க்குச் சுவையான -- ருசியான

வாய்க்குட்டு -- வாய்ச்சாலகம்

வாய்க்குட் பேசுதல் — முணுமுணுத்தல்

வாய்க் குடுமி -- தாடி

வாய்க்கு நேர்ந்தபடி பேசுதல் — வாய்க்கு வந்தபடி பேசுதல்

வாய்க்குப் போடுதல் -- வெற்றிலை போடுதல்

வாய்க்கு மண் போடல் -- ஏமாற்றல்

வாய்க்கு ருசியாகப் புசித்தல் -- வாய்க்குச் சுவையாக உண்ணல் (குருதா 1-27-33)

வாய்க்கு ருசியாயிருக்கும் -- தின்பதற்குச் சுவையாயிருக்கும்

வாய்க்குருவி -- விளையாட்டு ஊதுகுழல்

வாய்க்கு வந்தபடி திட்டுதல்; பேசுதல் -- மனம் போனபடி வைதல்; கண்டபடி பேசுதல்; கெட்ட வார்த்தைகளால் திட்டுதல்

வாய்க்கு வந்த மட்டும் பேசல் -- வாய்க்கு வந்தபடி பேசுதல்

வாய்க்கு வழங்காமை — சுவையற்றதாதல்; கசப்பாயிருத்தல்

வாய்க்கு வேலை கொடு — தின்னு (பே)

வாய்க்குள் போட்டுக் கொள் -- வாயிலிட்டுக்கொள்; உண்ணத்தொடங்கு

வாய்க்குள் (ளே) பேசுதல் -- முணுமுணுத்தல்; மனதுக்குள்ளே பேசுதல்

வாய்க்குள் விரல் வைத்தல் — (குழந்தை) வாயில் விரலை வைத்துச் சூப்புதல்

வாய்க்குள்ளிழு — உறிஞ்சு

வாய்க்குள்ளே பேசுதல் — மனதுக்குள்ளே பேசுதல்

வாய்க்குற்றம் — தன்னையறியாமல் பேச்சில் நேரும் பிழை; பேச்சுக் குற்றம்

வாய்க்கூடு — விலங்கின் வாயின் மேலிடுங் கூடு ; கன்றுக்குப் போடும் வாய்ப்பூட்டு

வாய்க்கூடை — வாய்க்கூடு

வாய்க்கூலி — இலஞ்சம்

வாய்க்கெட்டுதல் — வாய்க்கு அகப்படுதல்

வாய்க்கேட்பார் — அரசன் முதலியோரது வாய் மொழி கேட்டுக் காரியம் நிர்வகிக்குமதிகாரிகள் (கல்)

வாய்க்கேள்வி — வாய்க்கேள்வியார்; வாய்க்கேட்பார்; தூதன்; அரசன் வாய் மொழியாக இடும் உத்தரவைக் கேட்டு அதை உரியவர்களுக்கு எழுத்து மூலம் அனுப்பும் அதிகாரி (சாச); பிறர் சொல்லக் கேட்ட செய்தி

வாய்க்கொண்ட — வாயிற் போட்டுக் கொண்ட

வாய்க்கொழுப்பாய்ப் பேசுதல் — திமிராகப் பேசுதல்

வாய்க்கொழுப்பு — மதியாது பேசுதல்; திமிர்

வாய்க் கொழுப்புக்காரி — வாய்க்கொழுப்புள்ளவள்

வாய்க்கொள் வாசகம் — வாயால் சொல்லும் வார்த்தை (திவ் 3500)

வாய்க்கொள்ளமாட்டேன் — வாயாலே சொல்ல மாட்டேன் (திவ் 433)

வாய்க்கொள்ளல் —வாயின்கண் இட்டு மெல்லுதல் (பரி 12-22); விழுங்கல் (சீகாளத் 7-51)

வாய்க்கொள்ளாத பேச்சு — கெட்ட வார்த்தை

வாய்க்கோட்டம் — வாக்கின் கோடுதல்; கோணல் (திவ் 356)

வாய்க்கோணல் — நோய் வகை (கடம்பபு இலீலா - 139)

வாய்க்கோமாரி — மாட்டுக்கு வாயில் வரும் நோய் வகை

வாய்கசத்தல் — வாய் கசப்புணர்ச்சி உணருதல்

வாய்கட்டி — வாய்மூடி (குறிஞ் தி 22)

வாய்கட்டுதல் —பேசாதிருக்கச் செய்தல்; மந்திரத்தால் துஷ்டப் பிராணிகளின் வாயைத் திறவாமற் பண்ணுதல்; மரியாதைக் குறிப்பாக ஆடையால் வாயை மூடுதல்; பிரேதத்தின் வாயை ஆடையாற் கட்டுதல்

வாய் கடித்தல் — வாயால் கடித்தல்

வாய் கடைசியாக மூடிக்கொள்ளல் — சாதல்

வாய் கதறல் — வாயினுற் கதறல் (அப் 1-340)

வாய்கரை — இறங்கு துறை (திவ் திருக்குறுந் 10 வ்யா)

வாய் கழுவு — வாயலம்பு

வாய்கனத்தல் — தெளிவின்றிப் பேசுதல்

வாய் காட்டுதல் — அதிகப் பிரசங்கமாய்ப் பேசுதல்; கெஞ்சுதல்

வாய்கிழியக் கத்துதல் — பெருஞ்சத்தமிட்டுக் கத்துதல்

வாய்கிழியச் சிரித்தல் — வாய் மிகத் திறந்து சத்தமிட்டுச் சிரித்தல்

வாய் கிழியப் பேசுதல் — பெருஞ் சத்தமிட்டுப் பேசுதல்

வாய்குமட்டல் — வாந்தியெடுக்க வருதல்

வாய்குழறல் — வாய் குழறுதல்

வாய்குழறு — நாக்குளறு (இரட்ச 2-41)

வாய்குழறுதல் — வாய்ச் சொற்கள் குழறுமாறு பேசல் (க 3-41)

வாய்குளறுதல் — தூக்கத்தில் கனவு முதலியவற்ருல் வாய் குழறுதல்

வாய்குளிரப் பேசுதல் — மேலுக்கு இனிமையாகப் பேசுதல்

வாய்குளிர வாழ்த்துதல் — வாயார வாழ்த்துதல்

வாய் கூசாது சொல்லுதல் — பொய் முதலியவற்றைத் தயக்கமும் நாணமுமின்றிக் கூறுதல்

வாய்கூசுதல் — தீச்சொற்கள் பேசுவதில் அருவருப் புக் கொள்ளல்; புளிப்புமிக்க பொருளை உண்பதற் குப் பல்கூசுதல்

வாய்கூப்புதல்— துதித்தல் (திருவிடைமும்-29)

வாய்கூம்புதல் — குவிதல் (திவ் திருப்பா 14)

வாய்கைத்தல் — கசப்பான பொருளை வாயிலிட்டதால் கசப்புணர்ச்சி ஏற்படல்; வாய்க் சுசப்பைத்தரும் ஒரு நோய்

வாய்கொடாமலிருத்தல் -- வாதத்தில் பதிலுக்குப் பேசாமலிருத்தல்

வாய்கொட்டல் -- கத்துதல் (பிதகொத்து 2-249)

வாய்கொடுத்தல் -- வாக்குத்தத்தஞ் செய்தல்; பேச்சுக் கொடுத்தல்; வாய்ச்சண்டை வளர்த்தல்

வாய்கொடுத்துப் பேசல் -- பேச்சை முதலில் தொடங்கல்

வாய்கொண்டமட்டும் கூச்சல் போடுதல் -- மிகப் பெரிய சத்தம் போடுதல்

வாய்கொண்டமட்டும் புகழ்தல் — வாய்வலிக்கும்வரை புகழ்தல் (மறைமலை)

வாய்கொண்டு -- வாயால் (குற் பு 2-14-15)

வாய் கொப்பளித்தல் — உணவுண்டபின்னர் வாயலம்புதல்; நீரால் வாயைச் சுத்தஞ் செய்தல் (மாகபு 14-143)

வாய்ச்சண்டை — (இருவர் அல்லது பலர்) வாயினுல் காரசாரமாகப் பேசிக்கொள்ளல் அல்லது திட்டிக் கொள்ளல்

வாய்ச்சண்டை முற்றுதல் — (இருவர் அல்லது பலர்) காரசாரமாகத் திட்டிக்கொள்வது மிகுதிப்படுதல்

வாய்ச்சப்பை — பேச்சுச் சாமர்த்தியமற்றவன் (ள்)

வாய்ச்சம்பிரதாயம் — பேச்சுச் சாமர்த்தியம்; கர்ண பரம்பரையாக வரும் வழக்கம்

வாய்ச் சாமர்த்தாய்ப் பேசல் — வாய்ச்சவடால் அடித் தல்

வாய்சலிக்கத் திட்டுதல் — வாய் வலிக்கும்வரை வைதல்

வாய்ச்சவடால் அடித்தல் — வாயினுல் பிரமாதமாகப் பேசுதல் (சித் கோ 19–18)

வாய்ச்சளுக்கு — வாய்த்திமிர், தற்பெருமைப் பேச்சு

வாய்ச் சாலக்கு, வாய்ச்சாலகம் — சொல் வன்மை

வாய்ச்சாலகன் — பெருஞ் பொற்பொழிவாளன்

வாய்ச்சி — வாயை உடையவள் (திவ் 1937)

வாய்ச்சித்தலை — தட்டையான தலை

வாய்ச்சின்னம் — காளம் (வாத்தியம்) (மயிலை அ 52)

வாய்ச் சுத்தம் — பொய் சொல்லாமை

வாய்ச்சுருள் — வெற்றிலைச் சுருள் (தி 963)

வாய்ச்சுவை — நாச்சுவை

வாய்ச்செருக்கு — வாயினுல் பேசுங் கர்வம்

வாய்ச்சொல் — வாயினின்று வருஞ்சொல் (கு-100); வாய்ப்பேச்சு ; அச்சீரி மொழி (அறப் சத 63); அதிகாரம் ("வாய்ச்சொல் செல்லாது")

வாய்ச்சொல் அலங்காரம் — வாயளவில் பிரமாதமாகப் பேசுதல்

வாய்ச்சொல் வீரர் — செயலில் காட்டாமல் வாயளவில் மட்டும் பிரமாதமாகப் பேசித் திரிபவர்

வாய்ச்சேதி — பேச்சுவாக்கு ; ஆள்மூலமாகச் சொல்லி யனுப்புஞ் செய்தி

வாய்ச்சொலவு — ஆரூடஞ் சொல்லுதல் ; கெடுதியை உண்டாக்கத்தக்க சொல்

வாய்ச்சோறு — வாய்க்கிடும் சோறு (பாரதிதா)

வாய்சலிக்கச் திட்டுதல் — வாய்வலிக்கும்வரை வைதல்

வாய் சிரித்தல் — பேசி வாயயர்தல்

வாய் சவக்களித்தல் — ருசியின்றியிருத்தல் ; அருசிப் படுதல்

வாய் சளப்புதல் — வீண் பேச்சுப் பேசுதல்

வாய் சளைத்தல் — வாய் சலித்தல் (சேற்றில்)

வாய் சுவைத்தல் — வாயால் சுவைத்தல்

வாய் சோர்தல் — வாய் பிதற்றுதல் (பெ வத்தவ 7-26) வாய்தடு மாறுதல் ; வாய் சலித்தல் (சி பதி அடி)

வாய்த்தட்டுப் பலகை-கூரையின் முகப்பில் தைக்கும் பலகை

வாய்த்தம்பலம் — வாயிலுள்ள தம்பலம்

வாய்த்தலை — வாய்க்காலின் தலைப்பு மதகு ; தொடங்கும் இடம் (சாச)

வாய்த்தாரை — ஆயுதத்தின் நுனி

வாய்த்திறம் — வாய்வன்மை (பாரதிதா)

வாய்த்திறன் — வாய்த்திறம்

வாய்த்திர்த்தம் — வாய் நீர் ; (திவ் 572)

வாய்த்துடுக்காய்ப் பேசுதல் — ஆத்திரத்துடன் பேசுதல்

வாய்த்துடுக்கு — பேச்சிற்காட்டும் ஆத்திரம்; பேச்சில் காட்டும் செருக்கு

வாய்த்துடுக்குக்காரி — அடக்கமின்றிப் பேசுபவள்

வாய்த்தெற்று — வாயால் திக்கிப் பேசுதல்

வாய்த் தோன்றல் — வாயின்கண் தோன்றல்

வாய்த்தோன்றும் சொல் — வாயின்மூலம் வெளிப்படும் வார்த்தை

வாய்தடிக்கச் சொல்லல் — பலமுறை சொல்லுதல் (அருட் 12-35-7)

வாய் தடுமாறுதல் — வாய் பதறுதல்; பேசுவதிற் பிழைபடுதல்

வாய்தரல் — இடந்தரல் (கோ 80)

வாய்தல் — வாசல் (சாச)

வாய் தவறிச் சொல்லுதல் — நினைவுப் பிசகாக வாய் வழுவிச் சொல்லிவிடல்

வாய் திறக்காமல் இருத்தல் — வாயைத் திறவாமலிருத்தல், பேசாமலிருத்தல்

வாய் திறத்தல் — வாயை அகல விரித்தல், அங்காத்தல் ; மலர்தல் (பிரபு பிரபுதே 54), புண்கட்டி உடைதல் ; வெள்ளம் கரையை உடைத்தல் ; மலர்த்துதல் (சிலப் 2-38); பேசுதல் (திவ் இயற் நான்மு 35)

வாய் திறந்தவாறு — வாயைத் திறந்தபடி

வாய்திறந்து கேட்டல் — வாயால் கேட்டல்

வாய் திறந்து பேசுதல் — வாய்மூலம் கருத்தைத் தெரிவித்தல்

வாய் தீட்டுதல் — ஆயுதம் முதலியனவற்றின் முனை தீட்டுதல் (பெருங் - இலா 4-168)

வாய்தீரத் திட்டுதல் — வாயார வைதுரைத்தல்

வாய் துடித்தல் — பேசுவதற்கு மிக விருப்புக் கொண்டிருத்தல் (அருட் 7-2-341)

வாய்நகை — புன்முறுவல்

வாய் நாற்றம் — வாயின் நாற்றம்; (திவ் நாய்ச் 7-1); வாயிலிருந்து தோன்றும் தீ நாற்றம்

வாய் நாறுதல் — வாய் துர்நாற்றம் வீசுதல்

வாய் நிரம்ப வாழ்த்தல் — வாயார வாழ்த்துதல் (அருட் 8-45-1)

வாய் நிறைந்த ஆசீர்வாதங்களைச் செய்தல் — வாயாரப் பல ஆசீர்வாதங்களைச் சொல்லல் (அலை)

வாய் நிறைய — வாய் கொண்டமட்டும்

வாய் நீண்டுவிடல் — வாயடக்கமின்றிப் பேசுதல்

வாய் நீர் — வாயிலுள்ள உமிழ்நீர், எச்சில் (11 தி 32-68); வாயூறல்; வாயில்போட்டுக் கொப்புளிக்கும் நீர்

வாய் உமிழ்தல் — எச்சில் உமிழ்தல்

வாய்நீர் ஒழுகல், } சலவாய் ஒழுகல், வடிதல்; கடை
வாய்நீர் வடிதல் } வாய் வழிதல்

வாய் நீரொழுக்கு — சலவாய் ஒழுக்கு

வாய் நீண்டு போதல் — பிறரை மதியாது பேசுதல்

வாய் நீளம் — முறையின்றிப் பேசுதல்

வாய் நீளம் காட்டுதல் — பெருமை பேசுதல்

வாய் நுரை — வாயில் உண்டாகும் நுரை

வாய் நெகிழ்தல் — மலர்தல் (திவ் 92)

வாய் நெரித்தூட்டல் — (குழந்தைக்குப் பாலை) வாயைப் பிளந்தூட்டல் (அஷ் 3–18)

வாய் நெறித்தல் — வாயைப் பிளத்தல் (அறநெறி 96)

வாய் நேர்தல் — தருவதாக வாக்களித்தல் (திவ் திருப்பா 16); நேர்த்திக் கடனைக் குறிப்பிட்டுச் சொல்லுதல் (திவ் நாய்ச் 9-6); பேச்சால் உடன் படுதல் (பெருங் உஞ் 44 – 146)

வாய் நோய் — மாட்டுக்கு வாயில் வரும் நோய்

வாய்ப்பகட்டு — தற்புகழ்ச்சி (திவ் 3371 உரை)

வாய்ப்பகை — வாய்ப்பேச்சினால் ஏற்படும் பகை (திரிகடுகம் 17)

வாய்ப்பதட்டம் — வாய்நடுக்கம்

வாய்ப்பட்சி — காக்கை (திருவேங் சத 90)

வாய்ப்பட்டி — வாய்க்கு வந்தபடி பேசுபவன்; வாயாடி

வாய்ப்படுதல் — உருசிப்படுதல்; ஒன்றில் விழுதல்; ("கடல்வாய்ப்படுதல்")

வாய்ப்பண் — வாய்ப்பாட்டு (தி 894)

வாய்ப் பதர்கள் — (பிறர்பழி) தூற்றும் வாயுடைய பதர்கள் (அருட் 12-37-11)

வாய்ப்பந்தல் — ஆடம்பர வார்த்தை

வாய்ப்பந்தல் போடுதல் — வாய்ப்பந்தலிடுதல் (நெஞ்சின் அலைகள் 65)

வாய்ப்பந்தலிடுதல் — வெறும் வார்த்தையால் ஆரவாரித்தல் (அருட் 12-37-10)

வாய்ப்பலி — வாய்க்கரிசி (தக்க - 53 உரை)

வாய்ப்பவளம் — வாயாகிய பவளம் (கோடீச் கோ 239; மதுசி வெ 23)

வாய்ப்பழக்கம் — வாய்ப் பேச்சு (இரட்ச 19 – 49)

வாய்ப்பறை யறைதல் - உரக்கச் சொல்லல் (பெ 4-7-118); பலருமறிய வெளியிடுதல் (சிந் 2)

வாய்ப்பாட்டு — வாயாற் பாடும் பாட்டு

வாய்ப்பாட்டுக்காரர் — வாய்ப்பாடகர்

வாய்ப்பாடம் - பாராமல் சொல்லும்படி நெட்டுருப் பண்ணிய பாடம்; புத்தகமின்றிக் கேள்வியால் படித்த பாடம்

வாய்ப்பாடகர் — வாயால் பாடுவோர்

வாய்ப்பாடு — குடம் முதலியவற்றின் விளிம்பு; கணக்கு வாய்பாடு

வாய்ப்பாலமுதம் — அதரவமுதம் (மயூர கோ 340)

வாய்ப்பாணை — அலப்புவோன்

வாய்ப்பாஷை — வாயால் பேசும் மொழி

வாய்ப்பிணி — வாயிலுண்டாம் நோய் (கடம்ப பு இலீலா - 130)

வாய்ப்பிதற்று — வாய் பிதற்றல் (அருட் 6-ம் 15-26)

வாய்ப்பிரசங்கம் — உட்கருத்தின்றி வாயினால் மாத்திரம் செய்யும் பிரசங்கம்; திடீரென்று செய்யும் சொற்பொழிவு; வாக்குவன்மையுள்ள சொற்பொழிவு

வாய்ப்பிறப்பு — வாயிலிருந்து வருஞ்சொல்; வாய்ச்சொல்

வாய்ப்புட்டில் — வாய்க்கூடு

வாய்ப்புண் — உள்வாயில் தோன்றும் புண்; வைதலால் உண்டாகும் மனநோய்

வாய்ப்புள் — நற்சொல் (லாகிய நிமித்தம்) (பெ 3-24-24; முல்லை 18); வாய்ச்சொல் (பெ 2-8-91); மங்கலச் சொல்

வாய்ப்புற்று — வாயிலுண்டாம் நோய் வகை (கடம்ப பு இலீலா 137)

வாய்ப்புறம் — உதடு (திவ் 511)

வாய்ப்புன்முறுவல் — புன்முறுவல் (மதுரை வருக்கோ)

வாய்ப்பூச்சு — வாயை நீரால் துடைத்தல்; ஆசமனம் (பெருங் உஞ் 1-53-87); வார்த்தையால் மழுப்புதல்

வாய்ப்பூட்டு - தாடை எலும்பின் பொருத்து; வாய்க்கூடு (குமர 274); பேசாமல் இருக்கும்படி தடுத்தல்; இலஞ்சம்; கன்றுக்குப் போடும் வாய்க்கூடு

வாய்ப்பூட்டுக்காசு—வாய் முட்டுக் காசு

வாய்ப்பூட்டுச் சட்டம்—பொதுக் கூட்டங்களில் பேசுவதைத் தடுக்குஞ் சட்டம்

வாய்ப் பூட்டுப் போடல், போடுதல்—மாட்டின் கன்றிற்கு வாய்க்கூடு போடுதல், வாய் பேசாமலிருக்கச் செய்தல்

வாய்ப்பெட்டி—வாய்க்கூடு.

வாய்ப் பெய்தல்—வாயிலிட்டுத் தின்னுதல் (மதுரைக் 25); வாயில் போடுதல்

வாய்ப்பேச்சில் வல்லவர் — திறமையாகப் பேசுபவர் (காற்ருடி 186)

வாய்ப்பேச்சின்மல்—வாக்குவாதம் (ரமண மா-185)

வாய்ப்பேச்சு—வாயினுல் பேசுதல்; வெறும் பேச்சு; அரட்டை

வாய்ப்பேச்சுப் பேசுபவன்—செயல் செய்யாது வெறும் வார்த்தைமட்டும் பேசுபவன்

வாய்ப்பேச்சு வல்லவன்—வாய்ச்சாலகன்

வாய்ப்பொய்—மெய்ம்மையின் பாற்படும் பொய் (தணி பு நாட் 48)

வாய்ப்பொருத்து—மூட்டுவாய்

வாய்ப்பொறி — வாயாகிய பொறி

வாய்ப் பொறுப்பாக அறிய விரும்புதல் — ஒருவர் வாய் மூலமாக நேரில் கேட்டறிய விரும்புதல் (கல்கி)

வாய்ப்பொருன் — கடிவாளத்தின் ஒருறுப்பு (இரகு-நகர,51)

வாய்ப்போக்கு — வாய்பேச்சு (செயங்கொண். சத 13)

வாய்ப்போர் கைப்போராக மாறல் — வாய்ச்சண்டை கைச்சண்டையாக மாறுதல்

வாய்ப்போர் நடத்தல் — வாய்ச்சண்டை அல்லது வாக்குவாதம் நடத்தல்

வாய் பணிந்துரைத்தல் — வாயளவில் பணிவுடையராதல் (அற நெறி 98)

வாய் பதைத்தல் — வாய் நடுங்குதல்; வாய்மூடி நிற்றல் (வில் 2-2)

வாய்பாடு — குறியீடு; பெருக்கல் முதலியன காட்டும் அட்டவணை; மரபுச்சொல்; வழக்கம்; சொல் வன்மை.

வாய்பார்த்தல் — பிறருடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருத்தல்

வாய் பாரித்துக் கொண்டு வரல் — வாயால் அலறிக் கொண்டு வரல் (திவ் 3185)

வாய்பாறுதல் — அலப்புதல் (ஈடு 3-6-10)

வாய் பிதற்றிக் கொண்டிருத்தல் — (நோயினால்) உளறிக்கொண்டுயிருத்தல்

வாய் பிதற்றுதல் — நாக் குழறிப் பேசுதல்; ஒரு நோய்

வாய் பிளத்தல் — அங்காத்தல்; திகைத்தல்; முடியாதென்று கைவிடுதல்; மரித்தல்

வாய் புதைத்தல் — பெரியார் முன்னிலையில் மரியாதைக் குறியாக வாயை வலக்கையால் மூடிக் கொள்ளல்; வாய் பொத்துதல் (அரி-4-48; சிதம் பு 2-106)

வாய் புதைத்து நிற்றல் — வாய் மூடி நிற்றல் (உபதே-10-182

வாய்புல்கு தோத்திரம் — வாயால் பாடப்படும் தோத்திரம் (ச 118-2)

வாய்புலர்தல் — வாயுலர்தல் (இரட்ச-21-314)

வாய்புலற்றுதல் — பலகாற் சொல்லுதல் -(ஈடு-2-3-11)

வாய் புழுத்தல் — வசைச் சொல் (பார்வதி 182)

வாய் புளித்தல் — வாயில் புளிப்புச்சுவை தோன்றுதல்

வாய்பூசல் — வாயைத் துப்புரவு செய்தல்

வாய் பூசறுத்தல் — உணவுக்குப்பின் வாயைச் சுத்தம் செய்தல், வாயலம்புதல் (கந் 2-21-28)

வாய்பூசு — வாய் கழுவு (பதிற் 5-41; ஆசாரக் 18 நான்மணிக் 36)

வாய்பூசுதல் — வாய்கழுவுதல் (திவ் இயற் 3-70); ஆசமனஞ்செய்தல் (ஆசாரக் 19;) இச்சகம் பேசுதல்

வாய் பூட்டல் — பேசாமலிருக்கச் செய்தல்; கன்று முதலியன மண் ணைத் தின்னுமலிருக்க வாய் மூடியைப் போட்டுவிடல்

வாய் பேசத்தெரியாதவன் — அடித்துப் பேசத்தெரியாதவன்

வாய் பேசாமலிருத்தல் — வாய்திறந்து பேசாமலிருத்தல்

வாய் பேசாவூமை — வாயினுல் பேசமுடியாத ஊமையன் (தாயு பரா 126)

வாய் பேசுதல் — வாயால் பேசுதல்; இடம்பமாகப் பேசுதல்; (திவ்–திருப்பா-14)

வாய் பொத்தல் — வாய் புதைத்தல்

வாய் பொத்தி நிற்றல் — வாய் புதைத்து நிற்றல்

வாய் பொத்துதல் — வாய் புதைத்தல்

வாய் பொருந்துதல் — வாய் புதைத்தல்

வாய் பொருமுதல் — வாய் குளறுதல்

வாய் போக்குதல் — எளிதில் வாக்குக் கொடுத்தல்

வாய் போடுதல் — ஒருவன் பேசும் போது இடையிற் புகுந்து பேசுதல்

வாய்மட்டம் — பாத்திரம் முதலியவற்றின மேல் மட்டம் பாத்திரத்தின் வாய் வளையம்

வாய் மடித்தல் — உதடுகளை (வாயிதழ்களைக்) கடித்தல் (க 6-2129; 3-907); (கோபத்தால்) வாயை மடித்தல்

வாய் மடித்துரறுதல் — வாயை மடித்து ஒலி எழுப்புதல் (பு 298)

வாய் மடிதல் — கூர் மழுங்குதல் (ஈடு-6-1-ப்ர)

வாய் மடிப்பாகப் பிதற்றிவிடல் — வாய்க்கு வந்தபடி பிதற்றல்

வாய் மடுத்தல் — வாயினுட் கொள்ளுதல், தின்னல் (இரட்ச 19-53; சுந் 407; திவ் திருவாய்-2-3-9) வாயில் வைத்தல்; குடித்தல் (பெரிய-64; க 6-3598; கற்ப சத 45)

வாய் மடுத்துண்ணல் — வாயிற் போட்டு உண்ணுதல் (க 1-1282)

வாய் மணக்கப் பாடல் — அருட்பாக்களை வாய் நிறையப் பாடுதல்

வாய் மணத்தல் — மணப் பொருளைத் தரித்தலால் வாய் மணம் வீசுதல்

வாய்மணி முறுவல் — வாயாற் செய்யும் அழகான புன் முறுவல் (சிந் 1183)

வாய் மணியம் — வாங்கத் திறமையின்றி வாயாற் செய்யும் அதிகாரம்; செல்வாக்கு ·

வாய் மதம் — வாய்க்கொழுப்பு(இரட்ச 21-305; குற்குற 76-1; மாக பு-10-247); சொற்செருக்கு (கும சத 57) வாய்க்கொழுப்பு (பஞ்சத-1-98 வாய்ச் செருக்கு (திரிபுர ஸ்தோ 6-2)

வாய் மதம் பேசுதல் — கர்வமாகப் பேசுதல்

வாய் மருந்து — வாயமுது (மயூரகோ 65); பாம்புகடித்தவரின் வாயில் விடம் போக்குவதற்காக மருத்துவர் துப்பும் எச்சில்; வாயில் போட்டுக் கொண்டு உமிழும் மருந்து(திவ் 630 உரை), அதரபானம் (கலிங் 55)

வாய் மலர் — வாயாகிய மலர்; மலர் போன்றவாய்

வாய் மலர்தல் — பேசுதல்

வாய் மலர்ந்தருள்தல் — திருவாய் மலர்ந்தருள்தல்; (காஞ்சிப் 9 - 34); வில் 1 - 630

வாய்மாளப் பண்ணல் — வாயடைக்கச் செய்தல்; பேசாதிருக்கும்படி செய்தல் (திவ் 3207 உரை)

வாய் மாற்றம் — வாய்ச்சொல் (திவ் 3852)

வாய் மிரட்டு — வாயால் மிரட்டுதல்

வாய்முட்டுக் காசு — இரகசியத்தை வெளிவிடாதிருக்குமாறு கொடுக்கும் லஞ்சம்

வாய்முட்டுப் போடுதல் — இரகசியத்தை வெளிவிடாதிருக்குமாறு லஞ்சம் கொடுத்தல்

வாய் முணமுணத்தல் — வாய் முணுமுணுத்தல்

வாய் முணுத்தல் — வாயால் முணுமுணுத்தல் (கண்ணன் பாட்டு 4)

வாய் முத்தம் — வாயால் தரும் முத்தம் (வேங் உலா 249) : பல் (யாழ் அக)

வாய் முத்து — வாய் முத்தம் (பெருங் இலா 10-59; மயூரா பு நக 17)

வாய் முத்துச் சிந்தி விடுமா? — பேசினால் என்ன குறைந்து விடும்?

வாய் முற்றிக் கைச்சண்டை செய்தல் — வாய்ச் சண்டை முதிர்ந்து கைகலப்புச் செய்தல்

வாய்மூட்டு — மூட்டு வாய்

வாய்மூட்டுக் காசு — வாய்மு டுக் காசு

வாய்மூடி இருத்தல் — வாயை மூடிக்கொண்டிருத்தல்

வாய்மூடிக்கொண்டு சிரித்தல் — புன்முறுவல் செய்தல்

வாய்மூடி மௌனியாதல் — வாயை மூடிக்கொண்டு மௌன விரதமிருத்தல்

வாய் மூடுதல் — வாய் புதைத்தல்; பேச்சு அழுகை முதலியன நிறுத்துதல்; குவிதல்

வாய் மூத்தல் — பேச்சிற் சிறத்தல்

வாய் மூத்தவன் — பேச்சில் முந்துவோன்; பேசுபவர் களில் தலைமையாளன்

வாய் மூப்பன் — பேச்சிற் சிறந்தவன்; பிறர் வழக்கை எடுத்து வாதாடுவோன்

வாய் மூழ்த்தல் — வாய் மூடுதல்

வாய் மொழி — வார்த்தை; எழுத்து மூலமின்றி வாயாற் கூறுஞ் சொல்; உண்மை மொழி (பதிற் 37 - 2); வேதம் (பரி 9 - 13; ச 52-10); பாட்டு (புகழே 3-1-59), தோத்திரம் (ச 52-8); உறுதிச் சொல், சத்திய வசனம் (க 3 - 794); நடுநிலைச் சொல் (பு வெ 15 - 7); மெய்ம்மொழி (பு வெ 190)

வாய்மொழித் தேர்வு — எழுத்துத் தேர்வு முடிந்தபின் நடத்தப்பெறும் வாய்த் தேர்வு

வாய் மொழிதல் — கூறுதல் (சிந் 1707); அபிமந்திரித்தல் (சிந் 2411); உண்மை கூறல் (பட்டினப் 208)

வாய்மொழிப் புலவர் — உண்மைமொழி கூறும் புலவர் (பரி கட)
வாய்மொழி மூலமாக வருதல் — கர்ண பரம்பரையாக வருதல்
வாய்மொழியாகக் கூறுதல் — வாயால் கூறுதல்
வாய்மொழியாகக் கேட்டல் — (பிறர்) வாய் மூலமாகக் கேட்டல்
வாய் மோசம் — வாய்க்குற்றம் சொன்ன சொல் தவறுதல்
வாய் ரணம் — வாய்ப்புண்
வாய் ருசிக்கத் தின்னல்—வாயில் சுவைத்துத்தின்னல் (கிரா 995)
வாய் ரொம்ப அதிகம் — வாய் நீளம்
வாய் வட்டமாகப் பேசுதல் — சாமர்த்தியமாகப் பேசுதல்
வாய் வடம் — குதிரை வாய்க் கயிறு
வாய் வந்தபடி — வாயில் வந்தபடி, வாய் போனபடி (பேசல் திவ் 1911 உரை)
வாய் வந்தபடி பிதற்றல் — வாய்க்கு வந்தபடி உளறுதல் (தமிழ கு 41)
வாய் வந்தனை செயல் — வாயால் வழிபடல்; பிரார்த்தனை செய்தல் (சிவ 1-18-6)
வாய் வம்பு அளத்தல் — வாய் வம்பு பேசுதல் (அஷ் 7-70)
வாய் வம்பு பேசுதல் — ஊர்வம்பு பேசுதல்
வாய் வராமல் நிற்றல் — வாய் பேசமுடியாமல் நிற்றல்
வாய் வரிசை — வாயொழுங்கு வாய் வரிசையில்லாமல் வம்பாகப் பேசல் (பஞ்ச வனவாசம் 1)

வாய் வலம் — சொல் வ்ன்மை

வாய் வலி — வாய் வலம் (ஈடு 4-2-8) சொல்வன்மை (திவ் 3249 உரை)

வாய் வலிக்கத் திட்டுதல், வைதல் — வாய் வலிக்கும் வரை வைதுரைத்தல்

வாய் வலிமை — வாக்கு வன்மை (குநதா 1-67-36)

வாய்வயிறு என்பதறியாமல் தின்னல்—வயிறு புடைக்கத் தின்னல்

வாய் வழங்குதல் — உண்ணுதல் (யாழ் அக)

வாய்மொழிப் பிறந்த சொல் — வாய்ச்சொல்

வாய் வழுக்குதல் — (பேசும்போது) வாய்தவறுதல்

வாய் வளையம் — பாத்திரம் முதலியவற்றின் விளிம்பில் பற்றவைக்கும் வளையம்

வாய் வறுமையுறல் — இன்பேச்சுக் குறைதல்

வாய் வாங்குதல் — ஆயுதத்தைக் கூர் செய்தல் (பரி 1-5)

வாய் வார்த்தை — வாய்ப்பேச்சு : நயம் பொருந்திய சொல் ; பயனில்லாது வெறும் வாயால் கூறும் சொல்

வாய் வார்த்தை தடித்தல் — வாய்ச்சண்டை பெரிதாதல்

வாய் வ்ாழ்த்துதல் — (மனங்கனிந்து)வாய் வாழ்த்துக் கூறுதல்

வாய்வாள் — குறிதப்பாத வாள் (பு 11 91)

வாய் வாள் உழவர் — வீரர் (பெ தொகை 219)

வாய் வாளாண்மை — வாய் வறிது இராமை (சி 26-222)

வாய் வாளாதிருத்தல் — பேசாதிருத்தல் (குறிஞ்சி49)

வாய் வாளா நிற்றல் — பேசாதிருத்தல் (பரிபா 20)

வாய் வாளாமை — பேசாதிருத்தல், மௌனம் (மணி 30 - 245)

வாய்வாளார் — வாய் பேசாதார் (பழ 302)

வாய் விசேஷம் — வாக்குச் சித்தி; வாய் மூலமான செய்தி

வாய்விட்டு அரற்றுதல் — அழுது புலம்புதல் (குமர 458 - 31; சேயூர் பித 8 - 5; சிங் உபித 2 - 1)

வாய்விட்டு அலறுதல் — வாய்விட்டு அரற்றுதல்

வாய்விட்டு அழுதல் — அழுது புலம்புதல்

வாய்விட்டுக் கதறல் — ஒலியெழுப்பிக் கதறுதல்

வாய்விட்டுக் கேட்டல் —(வெட்கவுணர்ச்சியிருப்பினும்) வாய்திறந்து கேட்டல்

வாய்விட்டுச் சிரித்தல் — சத்தம் போட்டுச் சிரித்தல்

வாய் விட்டுச் சொல்லல் — இரகசியம் வெளியிடல்; வாய்திறந்து சொல்லிவிடல்

வாய் விட்டுப் படித்தல் — உரக்கப் படித்தல்

வாய் விட்டுப் பேசுதல் — வெளிவிட்டுத் தெளிவாகச் சொல்லுதல்

வாய்விடல் — வாயால் சொல்லல் (அம்மணிபாய் 11); பேசுதல், இரகசியம் வெளிவிடல்; ஓலமிடல் (தி 212; வகுப் 6-40; அப் 2-92)

வாய்விடாச் சாதி — விலங்கு; பேசமாட்டாத பிராணி (திவ் 3315 உரை)

வாய்விடு — வஞ்சினம், ஆரவாரம் (சிந் 592)

வாய்விடுதல் — பேசுதல் (கலி 46 - 15); வெளிவிட்டுத் தெளிவாகச் சொல்லுதல் (மங் காதல் - 61); வெளிப்படுத்துதல்; மலர்தல்; உரக்கச் சத்தமிடுதல்; வஞ்சினங் கொள்ளுதல் (சிந் 592) கொட்டாவி விடுதல்; கடித்த கடிப்பை (அட்டை) விட்டு விடுதல் (ஈடு 4-1-7); ஒலித்தல் (திருவி 58 - 79; இரக்ஷணிய ப 36)

வாய் விடை — கைம்மரத்தின் நுனிப்பகுதி

வாய் விண்டறைதல் — வாய்திறந்து கூறுதல் (மீனாட்சி 5086)

(கனி) வாய்விண்டு — வாய்வெடித்து (அரி 2-39)

வாய் விரிதல் — அங்காத்தல்; அலப்புதல்; கொட்டாவி விடுதல்

வாய்விள்ளுதல் — மலர்தல் (பிரபு விமலை 50); பேசுதல்

வாய் விளம்பல் — பேசுதல், வருணித்தல்

வாய் விஸ்தாரம் — வாயாடித்தனம்

வாய் வீச்சு — வாயடி; வாய்ச்சவடால்

வாய்வீணர் — வீண் பேச்சுப் பேசுபவர்; வாய்ச்சொல் வீரர்

வாய் வெட்டல் — வாதத்தில் வெல்லும்படி பேசுதல்

வாய்வெட்டு — பிறர் பிரமிக்கும்படி பேசுதல்; வாய்த் துடுக்கு; பறை வெட்டு (யாழ் அக)

வாய் வெடித்தல் — நோய் அல்லது பனி மிகுதியால் உதடுகள் வெடித்தல்

வாய் வெந்து போதல் — (சுண்ணாம்பு மிகுதியால்) வாய் வெந்து போதல்

வாய் வெய்தொற்றல் — சூடான பொருளை வாயிலிட்டுக் கன்னங்களினுட்புறங்களில் அதை மாற்றி மாற்றி அடக்கிக்கொள்ளல் (பொருநர் 106)

வாய் வெரீஇ — வாய்புலற்றி (க 5-297 திவ்; 3046)

வாய் வெருவல், வாய் வெருவுதல் — வாய் பிதற்றுதல்; குழறல் (திவ் பெரியதி 8-2-3; காசிகண் 76-10; அம்பர் 387); அச்ச ஒலிகள் செய்தல் (நைட 130; பாவை 84)

வாய் வேக்காடு — வாய் முழுதும் வெந்தாற் போலிருக்கும் நோய்வகை

வாய் வேக்காளம் — வாய்ப்புண்

வாய் வைத்தல் — சாப்பிடத் தொடங்கல்; கால் நடைகள் நீருண்ணத் தொடங்குதல்; ஒரு காரியத்தைப்பற்றி முதலிலேயே முடிவு கூறிவிடல்; ஊதுதல், ருசி பார்த்தல்; தலையிடுதல்; சிறிது பயிலுதல்; கடித்தல்

வாய் வைத்துச் சுவைத்தல் — வாயினால் பற்றிச் சுவைத்தல்

வாய் வேதாந்தம் பேசல் — வறட்டு வேதாந்தம் பேசுதல்

வாயகம் புகல் — வாய்க்குள்ளே புகுதல் (திவ் 3494)

வாயங்காப்பு — வாய் திறத்தல்

வாயங்காத்தல் — வாய் திறத்தல்

வாயசைத்தல் — பேசத் தொடங்குதல்

வாயடக்கம் — கெட்டவார்த்தை, கடுஞ்சொல் பேசாதிருத்தல்

வாயடக்கல் — வாய் பேசாதிருக்கச் செய்தல்

வாயடக்கிப் பேசுதல் — மரியாதையுடன் பேசுதல்

வாயடங்கச் செய்தல் — வாயடக்கல்

வாயடங்கல் — வாயடங்குதல்

வாயடங்குதல் — பேச்சடங்குதல்; கர்வமாகப் பேசித் திரிபவனின் கர்வம் அடங்குதல்

(குமுதம்) வாயடங்குதல் — (வாய்) குவிதல் (அரி - 4-196)

வாயடி — வாயால் மருட்டுதல்

வாயடித்தல் — வாயடி யடித்தல்; வாயிலே அடித்துக் கொள்ளல்; அலப்புதல்

வாயடி யடித்தல் — வாய்ப் பேச்சால் மருட்டி வெல்லுதல்; மருட்டிப் பேசுதல் (இரட்ச 2-43)

வாயடை — உணவு (பரி 2-69)

வாயடைத்தல் — பேச ஒட்டாதபடி செய்தல்

வாயடைத்து நிற்றல் — பேச இயலாதிருத்தல்; வியந்து நிற்றல்

வாயடைத்துப் போதல் — (குழப்பத்தால் அல்லது வாதத்தில் தோல்வியால்) ஒன்றும் பேச முடியாமல் போதல்

வாயடைந்து பாடுதல் — வாய் குளிரப் பாடுதல் (ச 48)

வாயமிர்தம் — (காதலரின்) வாயூறல்; அதரபானம்

வாயமுதம் — வாய் நீர் (திவ் 57)

வாயமுது — துதி, இன்சொல், (இங்கி 9); வாயூறல் (மீனாட்சி 166; க 3-14-97); அதராமிர்தம் (கொக் 2-17)

வாயலகு — அலகு போன்ற வாய் (திவ் 2505)

வாயலம்புதல் — உண்டபின் வாயைச் சுத்தம் செய்தல்

வாயவன் -- தூதன் (புரூரவ போர்புரி 5); வாயை உடையவன் (திவ் 1889)

(மலர்) வாயவிழ்தல் -- (மலர்) இதழ் விரிதல்

வாயழகர் -- அழகான வாயுடையவர் (திவ் 599)

வாயளத்தல் -- வீணாகப் பேசுதல்

வாயளப்பு -- வீணாகப் பேசுகை

வாயளவில் பேசுதல் -- வெறும் பேச்சுப் பேசுதல்

வாயற்ற ஜீவன்கள் — வாயில்லா ஜீவன்கள் (நந்தி 54)

வாயாங்காரம் -- வாய்க் கொழுப்பு (யாழ் அக)

வாயாட்டம் -- வாயாடுதல் (அருட் 12-29-22)

வாயாடி -- அலப்புவோன்; வாசாலகன் (ஈடு 4-8-8)

வாயாடித்தனம் -- வாயளப்புத்திறம்

வாயாடு -- பேசு

வாயாடுகிறவன் -- வாயடிப்பவன்

வாயாடுதல் -- பேசுதல்; விசாலமாகப் பேசுதல்; வீண் பேச்சுப் பேசுதல்; ஓயாது மென்றுகொண்டிருத்தல்

வாயாம்பல் -- ஆம்பல் மலர்போன்ற வாய் (தி 1257)

வாயார்ந்து வணக்கம் சொல்லல் -- வாய் நிறைந்த வணக்கஞ் சொல்லல்

வாயார -- முழுக்குரலோடு; மனமகிழ்ந்து

வாயாரச் சபித்தல் -- சீற்றங்கொண்டு பலமுறை சபித்தல்

வாயாரப் புகழ்தல் -- மனமுவந்து வாய்குளிரப் புகழ்ந்து பேசுதல்

வாயார வாழ்த்துதல் -- மனமகிழ்ந்து வாய் நிறைய வாழ்த்துதல்

வாயால் ஊதுதல் -- வாயினால் ஊதுதல்

வாயால் கடித்தல் -- பல்லால் கடித்தல்

வாயால் கூறமுடியாத -- (கெட்டவார்த்தையாகலின்) வாயினால் சொல்லமுடியாத

வாயால் கெடுதல் -- தன் வாய்ப் பேச்சு மூலம் தன் கேட்டினைத் தேடிக்கொள்ளல் ("நுணலும் தன் வாயால் கெடும்")

வாயால் கேட்டது -- வாய்மூலமாக நேரடியாகக் கேட்டது

வாயால் சொல்ல முடியாத (துன்பம்) -- அளவிட முடியாத (துன்பம்)

வாயால் பந்தலிடுதல் -- வாய்ப்பந்தலிடுதல்

வாயால் மூச்சு விடல் -- வாயினால் மூச்சு விடல்

வாயால் வீறு பேசுதல் -- (தற்) பெருமை பேசுதல்

வாயாலரற்றுதல் -- வாய் புலம்புதல்

வாயாலுருட்டுதல் -- வாயடியடித்தல்

வாயாலெடுத்தல் -- சத்திசெய்தல்; வாயிலெடுத்தல்

(ஒருவன்) வாயாலேயே சொல்லக் கேட்டல் -- நேரடியாக வாய்மூலம் சொல்லக் கேட்டல்

வாயாவி -- கொட்டாவி; வாயால் விடும் மூச்சு

வாயாவி போக்குதல் -- கொட்டாவி விடுதல்; வீணே பேசுதல்

வாயாற் கவ்வுதல் -- வாயால் பற்றிக் கொள்ளல்

வாயாற் சொல்லல் — வாயாற் கூறுதல்

வாயிசைக் கருவி — வாயால் ஊதுவதால் இசை எழுப்புங்கருவி

வாயிடிப்பு — வைதல் (குலோத்'கோ 414)

வாயிடும்பு பேசுதல் — வாய்க்கொழுப்பாய்ப் பேசுதல்

வாயிதழ் — உதடு (தி 431)

வாயில் -- நுழைவாசல்; ஐம்பொறி; ஐம்புலன்; வழி; துவாரம்; இடம்; காரணம்; வாயிற்காப்பான்; தூதன்

வாயில் அதுக்குதல் -- வாயில் ஒதுக்குதல்

வாயில் ஈ புகுந்ததுகூடத் தெரியாமலிருத்தல் -- தன்னை மறந்து ஒன்றில் ஈடுபட்டிருத்தல்; வியப்பினுல் வாயை அப்படியே திறந்து நிற்றல்

வாயில் ஊற்றுதல் -- வாய்க்குள் (நீர் முதலியவற்றை) ஊற்றுதல்

வாயில் எச்சில் ஊறப் பேசுதல் -- பேசும்போது வாயில் எச்சில் ஊறுதல்

வாயில் எதிர்த்தல் - (சுவையில்லாத பொருள்) வாய்க்குள் செல்லாதிருத்தல்

வாயில் என்ன கொழுக்கட்டையா? -- ஏன் பதில் பேசாமலிருக்கிருய் ?

(வெற்றிலையை) வாயில் ஒதுக்குதல் -- வாயில் அடக்கி வைத்தல்

வாயில் ஒரு வார்த்தையும் வரவில்லை -- வாயடைத்து நிற்றல்

வாயில் நீர் ஊறல் -- ஒன்றை உண்ண விரும்புதல்

வாயில் நுரை தள்ளுதல் -- மாட்டின் வாயில் நுரை மிகுதியாக வெளிப்படல்

வாயில் நுழையாத பெயர், வார்த்தை -- உச்சரிக்க முடியாத பெயர், வார்த்தை

வாயில் பொடி அடுதல் -- வாயில் மண்ணைப் போடுதல் (திருவா 277)

வாயில்போட்டு அடக்கி வைத்துக்கொளல் — வாயில் போட்டுக் குதப்பாமல் ஓரிடத்தில் அடக்கி வைத்தல்

வாயில் போட்டுக் குதப்புதல் -- வாயிலிட்டு (வெற்றிலை முதலியவற்றைக்) குதப்புதல்

வாயில் போட்டுக்கொள்ளல் — ஏமாற்றித் தானே எடுத்துக்கொளல்

வாயில் போட்டு மெல்லுதல் — வாயிலிட்டு மெல்லுதல்

வாயில் போடுதல் — வாய்க்குள் இடுதல்

வாயில் மண்(ணைப்) போடுதல் — சீவனத்தைக் கெடுத்தல்; கொடுமை செய்தல்; கேடு விளைவித்தல்; ஏமாற்றுதல்

வாயில் மண்ணை வாரிப் போட்டுக் கொள்ளுதல் — தன்னைத்தானே கெடுத்துக்கொள்ளல்

வாயில் மண் விழுதல் — முற்றும் நாசமடைதல்

வாயில்லாச் சீவன் — விலங்கு

வாயில்லாச் செந்து — வாயிலாச் சீவன்

வாயில்லாத உயிர் — வாயில்லாத ஜீவன்

வாயில்லாதவன் — வாய்பேசத் தெரியாதவன்

வாயில்லாத ஜீவன் — வாயில்லாப் பிராணி

வாயில்லாப் பிராணி — வாயில்லா உயிர்; நன்றாக அடித்துப் பேசத் தெரியாதவன்

வாயில்லாப் பூச்சி — அப்பாவி (அம்மணி 20)

வாயில் வந்தபடி அளத்தல் — ஆராயாது நேர்ந்தபடி பொய் கூறுதல்; அரட்டையடித்தல்

வாயில் வந்தபடி பேசல் — வாய்க்கு வந்தபடி பேசல்

வாயில் விரலை வைத்தல் — வியத்தல்

வாயில் விழைச்சு — உமிழ்நீர் (ஆசாரக் 8)

வாயில் வைக்கமுடியாத கரிப்பு — உப்பு மிகுதியால் ஏற்படும் தின்னமுடியாத கரிப்பு

வாயில் வைத்து உறிஞ்சல் — வாயினால் ஒரு பொருளை உறிஞ்சுதல்

வாயிலடித்தல் — முற்றுங் கெடுத்தல்

வாயிலாளன் — வாயிற் காப்போன்

வாயிலிகும்பம் — ஒறுவாய்க்குடம் (காளத் பு 30-40)

வாயிலிட்டுக் கொள்ளல் — வாயில் போட்டுக்கொள்ளல்

வாயிலிட்டு மெல்லுதல் — வாயில் போட்டு மெல்லுதல்

வாயிலிருந்து சொற்கள் எழுதல் — (மெதுவாகப்) பேசத் தொடங்குதல்

வாயிலிருந்து வழிதல் — (கோட்டுவாய்) வாயிலிருந்து ஒழுகுதல்

வாயிலே ஏய்த்தல் — வாய்ப்பேச்சின் மூலம் ஒருவரை நம்பச்செய்து ஏமாற்றுதல்

வாயிலேயே போட்டுக்கொள்ளல் — ஒருவனை ஏமாற்றிப் பணம் முதலியன பிடுங்கிக்கொள்ளல்

வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொளல் — துக்க மிகுதியால் வாயிலும் வயிற்றிலும் அறைந்துகொள்ளல்

வாயிலெடுத்தல் — வாயாலெடுத்தல்

வாயிலே ஈ புகுந்தது தெரியாமல் அலைதல் — கருமமே கண்ணாக உழன்று அலைதல் (கமலம் 32)

வாயிலே புழு புழுக்க — ஒருவசைச் சொல்

வாயிலேபோட்டுக் குதப்பல் — வெற்றிலை, புகையிலை முதலியவற்றை வாயில் வைத்து அடக்கிக் கொள்ளல்

வாயிலே போடுதல் — பேசவொட்டாது குறுக்கிட்டு பேசித் தடைசெய்தல்

வாயிலே மண்ணை வாரிப் போடல் — ஏமாற்றுதல்

வாயிலே வந்ததைப் பேசுதல் — இங்கிதமறியாது கண்டபடி பேசுதல்

வாயிழுத்தல் — சண்டை போடல்

வாயிளிச்சான் — எப்போதும் காரணமின்றிப் பல்லைக் காட்டிக்கொண்டிருப்பவன்

வாயிற்றிவலை — எச்சில் (பிரபு 3-46)

வாயின் அமுது — வாயின்னமிர்தம்

வாயின்மேல் விரலை வைத்தல் — வியத்தல்

வாயின்மொழி மறையர் — வாயில் வேதம் மொழியும் அந்தணர் (ச 288-5)

வாயின்னமிர்தம் — (காதலரின்) வாயூறல் (சிந்-484)

வாயினடங்குதல் — வாயடக்கமாயிருத்தல் (திரிகடு-43)

வாயினர் — வாக்கு வல்லார் (தகரா 1-32)

வாயினிக்கச் செய்யும் — நாச்சுவை யூட்டும் (உணவு)

வாயினல் கவ்வுதல் — வாயில் பற்றுதல்

வாயினல் சீட்டி யடித்தல் — வாயை மடித்துச் சீழ்க்கை எழுப்புதல்

வாயினல் பந்தல் போடல் — வாய்ப்பந்தல் போடுதல்

வாயினுள்ளே நகை செய்தல் — புன்னகை செய்தல் (இங்கி 80)

வாயுடையான் — வாய்வன்மையுடையவன்

வாயுதகம் — வாய்நீர் (இட்ட மா 3)

வாயுதடு — உதடு

வாயுபகாரம் — வாயாற் செய்யும் உதவி

வாயுபசாரம் — வாயளவிற் காட்டும் மரியாதை (புல பு 23-62); முகத்துதி

வாயும் வயிறுமாய் இருப்பவள் — கர்ப்பிணி

வாயுயிர்ப்பு — வாய்மூச்சு (பிரபு 5-30)

வாயுருட்டு — பேச்சால் மருட்டுதல்

வாயுரை — வாய்ச்சொல் (விஷ் 1-12-36)

வாயுள்ள பிள்ளை — வாயுள்ளவன்; பிழைக்கத் தெரிந்தவன்

வாயுள்ளவன் — உசாவி அறிந்து கொள்ளக்கூடியவன்

வாயுளைதல் — இடைவிடாது பேசுதலின் வாய் வலித்தல்

வாயுறுத்துதல் — வாக்கினுல் மெய்ம்மையை அறிவுறுத்தல்; வாயிலூட்டுதல்

வாயுறை—உண்ணல் (சிறுபஞ் 60); உணவு; கவளம்; மருந்து; வாயுறைமொழி (தொல் பொ 423 உரை) தாளுருவி என்னும் மகளிர் காதணி (நெடுநல்140)

வாயுறை வழங்கல் — அறுகம்புல் கொடுத்தல் (திவ் 924)

வாயுறை மொழி — கேட்கும்போது வெவ்வியதாய்ப் பின்பு உறுதி தருஞ் சொல்

வாயூற்று — வாயில் உமிழ் நீர் சுரத்தல்

வாயூறல் — எச்சில் (குசே 126)

வாயூறி நிற்றல் — மிக்க விருப்பங்கொண்டிருத்தல் (குமர 365)

வாயூறுதல்— வாயில் நீர் ஊறுதல்; உணவை நினைந்து உமிழ்நீர் சுரத்தல் ; அவாவுதல்

வாயெரிச்சல் — உமிழ்நீர்

வாயெடுத்தல் — பேச (சொல்ல)த் தொடங்குதல்; குரலெடுத்தல்

வாயெழுதல் — பேசத் தொடங்குதல்

வாயை அகலத் திறத்தல்—(கொட்டாவி விடும்போது) வாயை மிகப் பெரிதாய்த் திறத்தல்

வாயை அசைத்தல் — திரைப்படத்தில் நடிக்கும் போது பேசுவது அல்லது பாடுவதுபோல வாயை அசைத்தல்

வாயை அடக்கல், அடக்குதல் — பேசாமலிருக்கச் செய்தல்

வாயை அடக்கிப் பேசுதல் — வாயடக்கமாகப் பேசுதல் ; இங்கிதமறிந்து பேசுதல்

வாயை அப்படியே திறந்து நிற்றல் — வியப்பினால் வாயைத் திறந்துகொண்டே நிற்றல்

வாயை அல்ம்புதல் — வாயைக் கொப்புளித்தல்

வாயை ஒடுக்கி வயிற்றை ஒடுக்கிப் பணம் சேர்த்தல்— வயிற்றுக்குச் சரியாகச் சாப்பிடாமல்கூடப் பணம் சேர்த்தல்

வாயைக் கட்டிக்கொண்டிருத்தல் — சாப்பிடாமலிருத்தல் ; பேசாமலிருத்தல் (பசி ப 85)

வாயைக்கட்டிப் போட்டுவிடல் — சத்தியம் செய்து கொடுத்ததால் ரகசியத்தை வெளியிட முடியா திருத்தல்

வாயைக்கட்டி வயிற்றைக்கட்டி மீதி பண்ணல்—சாப் பிடாமல் பணத்தை மீதி பண்ணுதல்

வாயைக் கட்டிவிடல் — வாயை அடக்கிவிடல்

வாயைக் கட்டுதல் —உணவிற் பத்தியமாக இருத்தல்; சிக்கனமாக உணவு கொள்ளுதல்

வாயைக் காத்துக்கொள்ளல் — நாவடக்கமாயிருத்தல்

வாயைக் கிண்டுதல் – வாயைக் கிளறுதல் (பார்வதி 153)

வாயைக் கிளறுதல் — வாயைக் கிண்டுதல் ; பேசும் படி செய்தல், தூண்டுதல் (மாலினி 23)

வாயைக் கொப்புளித்தல்—வாயில் நீரிட்டு அலம்புதல்

வாயைத் திறக்காமல் சிரித்தல்—புன்முறுவல் செய்தல்

வாயைத் துடைத்துக் கொள்ளல் — சாப்பிட்டு வாய லம்பி ஈரத்தைத் துடைத்துக் கொள்ளல்

வாயைப் பிடுங்கல் — வாயிலிருந்து வார்த்தையைப் பிடுங்கல் ; வாயைக் கிளறல்

வாயைப் பிளத்தல் — வியப்பினால் வாயைத் திறத்தல்

வாயைப் பிளந்துகொண்டிருத்தல் — வாயைத் திறந்து கொண்டிருத்தல்

வாயைப் பிளந்து விடல் — இறந்துபோதல்

வாயைப் புதைத்தல் — வாயைப் பொத்துதல்

வாயைப் பெருக்கல் — வாயைக் கிளறிவிடல் (நாகரிகப் 30)

வாயைப் பொத்தியவாறு தேம்பியழல் — வாயைமூடிக் கொண்டு தேம்பியழுதல்

வாயைப் பொத்துதல் — வாயைக் கையால் அடைத்தல்

வாயை மூடிக்கொண்டிருத்தல் — பேசாமலிருத்தல்

வாயை மூடிக்கொள்ளல் — பேசாதிருத்தல்

வாயை மூடிவிடல் — (பிறர்) வாயை அடக்குதல்

வாயை மூடு — பேசாதே!

வாயை வளர்த்தல் — பேச்சை வளர்த்தல்; பேசிக் கொண்டே யிருத்தல்

வாயை வைத்தல் — அபசகுனமாக ஏதாவது கூறுதல் (பெ); உண்ணத் தொடங்குதல்

வாயொடுங்குதல் — பேச்சடங்குதல்

வாயொலி — பாடல் (திவ் பெரியதி 4-5-10)

வாயோடு — உடைந்த பானையின் வாய்ச்சில்லு

வாள்வாய் — வாளின் ஓரம் (சிறு 58); வாளால் உண்டாகிய வடு (சிந் 454)

வாளைப் பகுவாய் மோதிரம் — முடக்குவாய் மோதிரம் (சி 6-95)

வியல் வாய் — அகன்றவாய் (பெரிய 66)

வீண்வாய் பேசல் — வெறும் பேச்சுப் பேசல்

வீழி வாய் — கொவ்வைக் கனி போன்று சிவந்தவாய் (பார 7-2)

வெட்டு வாய் — அறுபட்ட புண் வாய்

வெவ்வாய் — வெம்மை வாய்ந்த வாய் (நள 1-97)

வெள்வாய் — வெளுத்தவாய் (கல்லா 5-7)

வெவ்வாயுரை — சுடுசொல் (கர கோ 324)

வெள்ளை வாயன் — இரகசியத்தை மறைக்கமுடியாது வெளியிடுபவன்

வெளிவாய் -- பாண்டத்தின் வெளிப்புற விளிம்பு ; பகிரங்கமாய்

வெளிவாயன் — ரகசியத்தை வெளியிடுபவன்

வெறும் வாய்ப் பேச்சு — செயல் படாத வீண் வாய்ப் பேச்சு

வெறும்வாய்க்கிலை கெட்டவன் —ஒன்றுமில்லாத தரித்திரன்

வெறு:வாய் கூறுதல் — பிதற்றுதல்

வெறுவாய் பசப்புதல் — வெறுவாயலட்டுதல் ; வெறுஞ் சொற்களால் வசப்படுத்துதல்

வெறும் வாய் மெல்லுதல்—வெறும் வாயை மெல்லுதல்

வெறும் வாயலட்டுதல் — வீண் பேச்சுப் பேசுதல் ; வெறுவாய் கூறுதல் ; தற்பெருமை பேசுதல்

வெறும் வாயை மெல்லுதல் — பல்லில்லாதவர் வாயை அசைத்துக் கொண்டிருத்தல் ; வாயில் உண் பொருள் எதுவுமின்றி வாயை அசைத்தல்

வேற்று வாய் — பிறர்வாய் (திவ் 2073)



# 8. நாக்கு

அடிநா — அடிநாக்கு, உண்ணாக்கு; நாவினடி; நாவின் கீழ்ப்புறம்

அண்ணா — மேல் நாக்கு

அண்ணாக்கழற்சி — உண்ணாக் கழற்சி

அண்ணாக்கு — மேல் நாக்கு

அண்ணாக்கு வளர்தல் — மேல்நாக்கு வளர்தல்

அரைநா — முதலை

அறங்கரைநா — அறமுரைக்கும் நாக்கு(இன்னிலை 20)

அறங்கூறும் நா — அறத்தைக் கூறும் நாக்கு(அறநெறி 103)

ஆயிரநாவினன் — ஆதிசேடன் (திருவி நக 102)

இரட்டை நாக்கு — கபடநாக்கு; உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் நாக்கு; முன்சொன்னதைப் பின் மறுத்துப் பேசும் நாக்கு

இருநா — பிளவினால் ஏற்பட்ட இரண்டு நாக்குகள்; இரண்டு நாக்குடைய பாம்பு அல்லது உடும்பு; இரண்டாவது சொல்; சொல்மாற்றம்

இருநாக்கு — இருவகையாகப் பேசும் நாக்கு

இழந்த நாக்கடித்தல் — முன்பின் யோசியாது வாக்களித்தல்; இரக்கப்படுதல்

இளநாக்கடித்தல் — உறுதியற்ற சொல் சொல்லல்;சம்மதமில்லாதது போற்காட்டுதல்

இளநாக்கு — பேச்சுத் திருந்தாத நாக்கு; உண்ணாக்கு
ஈரநா — புறங்கூறும் நாக்கு
ஈரநாவுக்கு எலும்பில்லை — நாக்கு எப்படி வேண்டுமானாலும் பேசும்
உடும்பு நாக்கன் — பொய்யன், புரளிக்காரன்
உடும்பு நாக்கு — இருபிளப்பாயுள்ள நாக்கு
உடைநா — சிதறிய நாக்கு
உண்ணா — அண்ணத்துள்ள சிறு நாக்கு
உண்ணாக்கு — அண்ணத்திலுள்ள சிறுநா; அடிநாக்கு
உண்ணாக்கழற்சி — உண்ணாக்கில் ஏற்படும் அழற்சி
உலர்ந்த நாக்கு — வறட்சியுற்ற நாக்கு
உள்நா — உள்நாக்கு
உள்நாக்கு — உண்ணாக்கு; சிறுநாக்கு
எஞ்சா நாவினர் — வார்த்தை தப்பாத நாவினர் (சி 26-167)
எருமை நாக்கி — ஒருவகைக் கருப்பு நாக்கு மீன்; ஒருவகைப் பூண்டு
எருமை நாக்கு — எருமையின் நாக்கு; எருமை நாக்கி
எருமை நாக்குப்புல் — கோரைப்புல்; எருமையின் நாக்குப் போன்ற அருகுகளையுடையது.
எலும்பில்லா நாக்கு — சொன்னதை அழித்துப் பேசும் நாக்கு
எழுநா — எழுகின்ற நாவையுடையை நெருப்பு
எழுநாமித்திரன் — காற்று
எழுநாவன் — அக்கினி (அ 6-10-65)

ஏழு நெடு நாவினன் — நீண்ட நாவினன்; அக்கினி (வில் 2-56)

கபட்டு நாக்கு — வஞ்சகம் பேசும் நா

கபட நாக்கு — கபட்டு நாக்கு

கருநாக்கன் — கஞ்சன், தீயன்

கருநாக்கு — சொன்னல் சொன்னபடி பலிக்கும் நாக்கு; தீயநாக்கு; கருப்புப் புள்ளிகளையுடைய நாக்கு; தீய நாக்குள்ளவன் [ள்]

கருநாக்குச்சூலை — குத்தல், வலியோடு கூடிய ஒரு வகை நாக்கு நோய்

கவைநா — உடும்பு அல்லது பாம்பின் பிளவுபட்டநா (திவ் பெரியதி 3-2-4); பாம்பு

குற்றமே கூறும் நாக்கு — பிறர்குற்றத்தையே எடுத்துப் பேசும் நாக்கு

கெட்ட நாக்கு — கருநாக்கு

கொடு நாக்கு — கருநாக்கு

கொடுநாக் கெறிதல் — விருப்பக் குறியாக நாவால் வாய்ப்புறத்தை வளைத்துத் துழாவுதல்

சிறுநாக்கு — உண்ணுக்கு, நாவின் அடிப்புறம்

சிறுநாக்கு வளர்ந்திருத்தல் — உள்நாக்கு வளர்ந்திருத்தல், சாப்பிட முடியாமலிருத்தல்

செந்நா — பிறர்க்குத் தீங்கு பயக்கும் மொழி கூருத நா (பு 140)

செந்நாப் போதார் — திருவள்ளுவர்

செந்நாவலர் — செம்மையான புலவர் (திருவா 504)

சொல்ல நாக்குக் கூசுதல் — கெட்ட வார்த்தையை அல்லது நாணப்படத் தக்க வார்த்தைகளைப் பேச நாக்குக் கூசுதல்

தாலாட்டு — நாவசை; கண் வளரச்செய் [நள 1-138]

தீநாக்கு — கருநாக்கு

தோலா நா — பொய்யாத நா (நாமகள் 1)

தோலா நாவினர் — நாவன்மையுடையார்

நரம்பில்லாத நாக்கு — எலும்பில்லாத நாக்கு

நா அமிழ்து — (காதலரின்) உமிழ் நீர் [வில்லி 11-202]

நா அணங்கு — நாமகள் (பூவண உலா 311)

நா இறங்குதல் — நாக்குப் பேச எழாமல் மெலிந்து போதல் (கரு வெ அ 64)

[பேச] நா எழவில்லை — வாயடைத்து நிற்றல்; நாத் தழுதழுதல்

நாக்கடிப்பறை — உறுதிச் சொல்

நாக்கப் பாம்பு — நாங்கூழ்

நாக்கரணை — நாவில் வரும் ஓர் நோய்

நாக்கழற்சி — நாக்குப்புண்

நாக்காம்பூச்சி — நாக்குப்பூச்சி

நாக்கிரந்தி — நாக்கு நோய்

நாக்கில் தேன் தடவியதுபோல் பேசுதல் — கேட்பதற்கு இனிமையாயிருக்கும்படி பேசுதல்

நாக்கில் நஞ்சு வைத்திருத்தல் — உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுதல்

நாக்கில் நரம்பின்றித் திட்டுதல்; தூற்றுதல் — நன்றியின்றி நல்லோரை வைதுரைத்தல்

நாக்கில் நீரூறுதல் — ஒன்றை உண்ண விரும்புதற் குறிப்பு

நாக்கிலிட்டுத் தின்னல் — வாயிலிட்டுத் தின்னல் (பாரதிதா)

நாக்கிலே தண்ணீர் சொட்டுதல் — நாக்கில் நீர் ஊறுதல்

நாக்கிலே விஷமுள்ளவன் — கருநாக்கன்

நாக்கிழத்தி — நாமகள் (பாசுப வெதுதி)

நாக்கு உறைத்தல் — காரம் மிகுதியால் நாக்கில் உறைப்புணர்ச்சி உண்டாதல்

நாக்கு எழாமலிருத்தல் — பேசமுடியாது தத்தளித்தல்

நாக்கு ஒட்டிப்போதல் — நாக்கு வறண்டு போதல்

(சொல்ல) நாக்குக் கூசுதல் — அவமானப்படத்தக்க வார்த்தை அல்லது கெட்ட வார்த்தையைக் கூறத் தயங்குதல்

நாக்குக்கு ருசி தேடுதல் — சுவைமிக்க உண்பொருள்களை நாடுதல்

நாக்குக்கு ருசியுள்ள பதார்த்தம் — சுவைமிக்க உண்பொருள்

நாக்குச் சாதல் — நாக்குச் சுவையுணர்ச்சியை இழத்தல்

நாக்குச் சுத்தம் — பிறரை இகழ்ந்து பேசாமை

நாக்குச் செத்துப் போதல் — நாக்கு ருசியுணர்வற்றிருத்தல்

நாக்குத்தட்டல் — நாக்குத்தட்டுதல்; திக்கிப் பேசுதல்; பூட்டின் நாக்குக் கெடுதல்

நாக்குத் தடித்தல் — வாய் வெருவல்; வாக்கு மாறுதல்; நாக்கு மாத்துப் போதல்

நாக்குத் தடுமாறல் — உளறல்

நாக்குத் தப்பல், நாக்குத் தப்புதல் — பேச்சுறுதி தவறுதல்; பொய்சொல்லுதல்

நாக்குத் தவறுதல் — சொல் தவறுதல்; வாக்கு மாறுதல்

நாக்குத் தள்ளுதல் — வாயினின்றும் நா வெளிவரல்

நாக்குத் தாபிதம் — நாக்குப் புண்

நாக்குத் தாளம் போடுதல் — உணவு கொள்ள விரும்புதல்; அளவு கடந்து பரிகசித்தல்

நாக்குத் திருந்துதல் — எழுத்தின் உச்சரிப்புத் திருத்தமாயிருத்தல்

நாக்குத் தீட்டுதல் — உணவை மிகுதியாக விரும்புதல்

நாக்குத் துடிப்பு — நாக்குத் தாளம் போடுதல்; கடும் பேச்சு; நாக்கு நீளம்

நாக்குத் துறுதுறுத்தல் — உண்பதற்குத் துடித்தல்

நாக்குத் தெறிக்கப் பேசுதல் — பெரியோரை நிந்தித்தல்

நாக்குநயம் — நாநயம் (இதழ்கள் 211)

நாக்கு நரம்பற்றவன் — அளவு கடந்து பேசுபவன்

நாக்குநீட்டம் — வாய்நீட்டம்

நாக்கு நீட்டல், நாக்கு நீட்டுதல் — அளவு கடந்து பேசுதல்

நாக்கு நீள்தல் — நாக்கு நீளுதல் (திவ் 3302)

நாக்கு நீளம் — உணவு விருப்பம்; கடும் பேச்சு; துடுக்கு

நாக்கு நீளுதல் — விருப்பமிகுதல்; கடுமையாய்ப் பேசுதல்

நாக்குப்புண் — நாவில் தோன்றும் நோய் வகை

நாக்குப் புரட்டர் — பொய் மொழிவோர்

நாக்குப் புரட்டு — பொய், திருகுதாளம்

நாக்குப் புரண்டு பேசல் — வார்த்தை மாறிப் பேசல்

நாக்குப் புரள்(ளு)தல் — பொய் பேசல்; சொல் தவறுதல்; நாவசைத்தல் (ஆனால் பேசமுடியாதிருத்தல்); நாத் தழுதழுத்தல்

நாக்குப் புற்று — நாவிலுண்டாகும் இரண வகை

நாக்குப்பூச்சி — கீரைப்பூச்சி; மலப்பைச் சிறுபுழு; நாங்கூழ்ப்புழு

நாக்கு மக்குதல் — நாக்கில் கார்ப்புணர்ச்சி ஏற்படல் (பே)

நாக்குமீன் — நாக்கு நீட்டமான ஒரு மீன்

நாக்கு ருசிக்காரன் — சுவையான உண்பொருள் களையே உண்பவன்

நாக்கு ருசி கண்டவன் — சுவையான பொருள்களையே உண்டு பழகினவன்

நாக்கு வழித்தல் — நாவின் மாசினை வழித்து நீக்குதல் (திவ் பெரியாழ் 1-2-15)

நாக்கு வளைத்தல் — பழித்தல் (திவ் 619 உரை); இகழ்தல்; நாவை வளைத்தல்

நாக்கு வறண்டு போதல் — நாக்கு உலர்ந்து போதல்

நாக்கு வாங்கிப்போதல் — அதிசயத்தால் பேச முடியாதபடி நா உள்ளுக்கிழுக்கப்படல்; தாகத்தால் நா வறளுதல்; பேசிக் களைத்துப்போதல்

நாக்கு வாங்குதல் -- நாக்கை உள்ளிழுத்தல்; களைத்துப் போதல்; நாவடக்கல்

நாக்கு விசுவாசம் -- சொன்ன சொல்லைக் காப்பாற்றுதல்

நாக்கு விரணம் -- நாக்குப் புண்

நாக்கு விழுதல் -- பேச்சுத் தடைப்படல் (திருப்பு 1193); நாக்குத்திமிர்வாதப்படுதல்

நாக்கு வெடித்தல் -- நாக்கு வெடிப்புண்டாதல்

நாக்கு வெடிப்பு -- நாவில் பிளவுண்டாகும் நோய் வகை

நாக்கு வெளியே தள்ளுதல் -- ஒரு மரணக்குறி

நாக்குழறுதல் -- நாத்தழுதழுத்தல் (பாரத இராச 160)

நாக்குளற -- நாக்குழறுதல்

நாக்குளிர வாழ்த்துரைத்தல் -- வாயார வாழ்த்துதல்

நாக்குறுதி -- சொல்தவருமை; சொல்வன்மை

நாக்கை அடக்கிப் பேசுதல் -- மரியாதையாகப் பேசுதல்

நாக்கைக் கடித்துக் கொளல் -- வியப்படைதல்

நாக்கைச் சப்புக்கொட்டல் -- உண்ணும்போது சுவையான பொருளை நாக்கில் நீண்டநேரம் வைத்துச் சுவைத்தல்

நாக்கைச் சப்புதல் -- நாக்கைச் சப்புக் கொட்டுதல்

நாக்கைத் துண்டித்தல் -- நாக்கை அறுத்தல்

நாக்கைத் தொங்கப் போடுதல் -- உண்ணும் ஆசையால் நாவைத் தொங்கவிடுதல்

நாக்கை நீட்டிக்கொண்டு சாப்பிடல் -- சுவைத்துச் சாப்பிடல் (வாழ்க் சக் 254)

நாக்கை நீட்டுதல் -- ஒன்றை உண்ண விரும்புதல்

நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாவு -- வசைச் சொல்; மிக்க அவயானம் என்ற குறிப்பு

நாக்கைப் பிடுங்கிக் கொண்டு வேலைசெய்தல் -- மிகக் கடுமையாக வேலையிலீடுபட்டிருத்தல்; அவமானப் படத்தக்க அல்லது விருப்பமில்லாத செயலை வற்புறுத்தலினால் செய்தல்

நாக்கைப் பிடுங்கிக் கொள்ளல் -- நாக்கைப் பிடுங்கிக் கொண்டு தற்கொலை செய்துகொள்ளல்; தவறு நடந்ததற்கு மிகவும் வருத்தங் காட்டல்; தன்னாலான முயற்சி எடுத்துக் கொள்ளல்; அதிக மாகப் பேசுதல்

நாக்கை நீட்டுதல் — நாக்குநீட்டல்

நாக்கை வளர்த்தல் -- நாக்குக்கு ருசியை வளர்த்தல்

நாக்கொட்டுதல் -- நாவறளுதல்

நாகொன்று -- நாவை வருத்தி (குமர 274)

நாகோடாமை -- சொன்னசொல் தவருமை

நாச்சாம் -- நாக்குச் சாகும் (சிறுபஞ்ச 10)

நாச்சுருட்டல் -- பேசாதடக்கிவைத்தல்

நாச்சுவை — நாவால் உணரும் சுவை; இன்சுவை (குமர 458-9)

நாச்செற்று விக்கி -- நாவையடக்கி விக்குதலுண்டாகி (கம் அ 72)

நாச்செறு — வசை; (சிந் 2825); திட்டு த

நாத்தடுக்குதல் -- திக்குதல்

நாத்தடுமாறல் -- உணர்ச்சிவசத்தால் நாத்தழுதழுத்தல்; திக்குதல்

நாத்தழுதழுத்தல் -- நாக்குழறுதல்

நாத்தழும்பத்துதி -- நாத்தழும்பேறத்துதி (குமர 358)

நாத்தழும்ப வழுத்துதல் -- நாத்தழும்பேறத்துதித்தல் (மீனாட்சி 75)

நாத்தழும்பிருத்தல் -- நாத்தழும்பேறல் (பு 200)

நாத்தழும்பு ஏழ ஏத்துதல் -- நாத்தழும்பேறத் துதித்தல் (திவ் 661)

நாத்தழும்பு ஏற ஏத்தல் -- நாத்தழும்பு ஏற்பட வாழ்த்துதல் (சிவ 1-8-7)

நாத்தழும்புதல் -- நாத்தழும்பேறுதல் (சிந் 1469)

நாத்தழும்பெழுதல் -- நாத்தழும்பேறுதல் (திவ் பெருமாள் 2-30)

நாத்தழும் பேறப் பேசல் -- பலப்பலமுறை ஒன்றைப் பேசல்

நாத்தழும்பேறுதல் -- பலமுறை சொல்லுதலால் நாக்குப் பழக்கமுண்டாதல் (திருவா 4-47)

நாத்தாங்கிப் பேசுதல் -- திக்கிப் பேசுதல்; எண்ணிப் பேசுதல்; நாவடக்கிப் பேசுதல்

நாத்தாட்டிகம் -- சொல்வன்மை (தனி 3-53)

நாத்திகம் பேசி நாத்தழும்பேறல் -- நாத்திகமேபேசிப் பேசி நாத்தடிப்பாகிவிடல் (திருவா)

நாத்திருந்துதல் -- உச்சரிப்பி நாத்திருத்தமுறல்

நாத்திறம் -- நாவன்மை

நாநல் கூர்தல் -- பேசாதிருத்தல் (மணி 10-34)

நாநவில் அவையம் — கற்ருேர் தாம் சுற்றவற்றை நாவான் உரைத்தற்கேற்ற அவைக்களம (மலேபடு 77)

நாநீட்டுதல் -- பேசுதல் (மணி 5-108)

நாநோவ ஏத்துதல், திட்டுதல் - நாவலிக்கப் புகழ்தல்; திட்டுதல்

நாப்பயிற்சி -- நாப்பழக்கம்

நாப்பழக்கம் -- நாவிற்கு ஏற்படும் பழக்கம்

நாப்பறை கொட்டுதல் -- எல்லார்க்கும் எடுத்துச் சொல்லுதல்

நாப்பாடம் -- நெட்டுருப் பண்ணிய வாய்ப்பாடம் (நாலடி 312]

நாப்பாடஞ் செய்தல் -- நெட்டுருச் செய்தல் (நாலடி 312)

நாப்புலவர் -- செந்நாப் புலவர் (பு வெ 31)

நாப்புலன் -- நாவாகிய புலன்

நாப்புற்று -- நாநோவு வகை; நாப்புண்

நாப்பொடிதல் -- நாவுலர்தல்; நாவு வறள்தல்

நாமணக்கப் பாடுதல் -- சுவைமிக்க அல்லது தெய்வப் பாடலேப் பாடுதல்

நாமகள் — கலேமகள்

நாமங்கை -- நாமகள் (ஞான வி க 16)

நாமடந்தை -- நாமகள் (தே பிர 218)

நாமருவு -- நாவில் பொருந்திய (வருண மடல்)

நாமான் -- நாமகள் (பொதி நி)

நாமுடி — நாநுனி; நுனிநாக்கு

நாவகம்பால்—நாக்கிலே, நாக்குக்குள்ளே (திவ் 467)

நாவசைத்தல்—பேசுதல்; வாயசைத்தல்

நாவசைதல்—பேசுதல் ; உண்ணுதல்

நாவடக்கம்—மந்திரத்தால் வாயைப் பேசவொட்டாமல் செய்தல்; மௌனம், நாவொடுக்கம்

நாவடக்கமாகப் பேசுதல்—நாவை அடக்கிப் பேசுதல்

நாவடக்கத்துடன் பேசுதல் — நாவடக்கமாகப் பேசுதல்

நாவடைத்தல்—பேசக்கூடாதிருத்தல்

நாவடைத்துப் போதல்—பேசமுடியாமற் போதல்

நாவண்ணம்—உள் நாக்கு

நாவயர்தல்—நாச்சோர்தல் (உபதே 5-116)

நாவர்—நாவினையுடையோர் (திவ் 1624)

நாவரசர்—திருநாவுக்கரசர்

நாவரசு—நாவரசர்

நாவரணை—நாப்புற்று நோய்வகை

நாவரையர்—திருநாவுக்கரசு நாயனார் (சேதுபுகட 9)

நாவல் புலவர்—நாவன்மையுடைய புலவர் (நீல 5)

நாவல்லமை — நாவன்மை

நாவல்லோர்—புலவர் (திருவிளை 15-13)

நாவலர்—கவிஞர், பேச்சாளர்

நாவலிக்கப் புகழ்தல், பேசுதல்—மிகுதியாகப் புகழ்தல் பேசுதல்

நாவழி—நாவழிக்குங்கருவி (சிந் 3045)

நாவளம்—நாவின் வளம் ; சொல் வளம்; நாக்குக்கு அலங்காரமான திருநாமம் (திவ் 1298)

நாவளைத்தல்—பேசல்; பழி கூறல் (குமர 695)
நாவறட்சி—நாவறண்டு போதல்; தாகம்; நீர் வேட்கை
நாவறண்டு போதல்—நாவறள்வுறல்
நாவறள்வுறல்—நாவறட்சியுறல் (மாக 3-2)
நாவறளக் கத்துதல்—நொண்டைத்தண்ணீர் தீரக் கத்துதல்
நாவன்—நாவன்மையுடையவன் (திவ் 422)
நாவன்மை—நாவல்லமை
நாவாடல்—உருச் செபித்தல் (திருவி 65-8); நாவசைத்தல் (திவ் 1784)
நாவாடு — பேசு (சிறு 21)
நாவாணர் — புலவர் (ஈட்டி பாயி)
நாவாய்ச்சித்தி — வாக்குச்சித்தி
நாவாரப் பாடல் — மனமகிழ்ந்து பாடல்
நாவால் சீட்டியடித்தல் — நாக்கை மடித்துச் சீழ்க்கையடித்தல்
நாவால் நக்குதல் — நாவினுல் நக்கியுண்ணல்
நாவால் புகழ்பாடல் — நாவினுல் புகழ்ந்து பாடல்
நாவாள் — நாமகள் (சேது பு சிவதீர் 46)
நாவாற் சொல்லுதல் — வாயால் சொல்லுதல்
நாவிட்டு எரி கொழுந்தழல் — நாக்கு நீண்டு எரிகின்ற வளமான நெருப்பு (அரி 9-39)
நாவில் அடிக்கடி நடமிடுதல் — அடிக்கடி பேசுதல்
நாவில் தவழ்தல் — (பெயர்) அடிக்கடி நாவிலிருத்தல் அடிக்கடி பேசப்படல் அல்லது நினைத்தல்
நாவில் நடமிடல் — நாவில் தவழ்தல்

நாவில் நீர் ஊறல் — ஒன்றை உண்ண விருப்ப முண்டாதல்

நாவில் முள்ளுண்டாதல் — நோய்க்குறியாக நாவில் புண் ஏற்படுதல்

நாவில் வார்த்தை வரவில்லை — பேச முடியவில்லை

நாவில் ஜலம் கொட்டுதல் — நாவில் நீர் ஊறுதல் (கண்கொள்)

நாவிழுதல் — பேச நாவெழாது போதல்;

நாவின் கிழத்தி — கலைமகள் (நாலடி-252)

நாவின் சுவை — நாச்சுவை

நாவின் செம்மை — வாக்குத் தவறாமை; இகழ்ந்து பேசாமை

நாவின்பாலால் — நாவினால் (வில் 1-317)

நாவின் மங்கை — நாமகள் (வி பு 71-25)

நாவின் மடந்தை-நாமகள் (பதி முறை 28-28)

நாவின் மேலோர் — நாவலர்

நாவினிக்கப் பாடுதல் — நாமணக்கப்பாடுதல், நாவாரப் பாடுதல்

நாவினால் நக்கிக் கொடுத்தல் — பசு தன் கன்றினை அன்புடன் நாவில் நக்குதல்

நாவினுக்கரசி — நாமகள் (பு ன பு 13-47)

நாவினுள் அமிர்தம் — நாவில் விளையும் அமிர்த மனைய இசை (சிந் 504)

நாவீறு — பேச்சுவல்லமை

நாவீறு காட்டுதல் — பேச்சுவன்மையைக் காட்டுதல்

நாவுக்கரசு — திருநாவுக்கரசு நாயனார்

நாவுக்கினிய — உண்பதற்கினிய
நாவுணங்கல்—நாவுலர்தல் (சிதம்பு 2-112)
நாவுணர்வு — சுவையுணர்ச்சி
நாவுரி — கால்நடைகளின் அண்ணத்து வீக்கம்
நாவுலர்ந்து போதல் — நா வறண்டு போதல்
நாவுழற்றுதல் — பொருமைப் பட்டுப் பேசுதல்
நாவுழலை — நாக்குழறுதல்; நாஹூறு, விடாய்
நாஹூறு—நாவால் வருந்தோஷம்; நாக்கினுல் ஏற்படுங் குற்றம்
நாவெடிப்பு — நாவின் பிளவு நோய்
நாவெழாதிருத்தல் — பேச முடியாமல் இருத்தல் (பாரதி 1-42-49)
நாவெழாது நிற்றல் — பேச முடியாமலிருத்தல்
நாவெழாமல் நடுங்குதல் — பேச முடியாமல் நடுங்குதல் (மனுமுறை)
நாவெழுதல் — பேசத் தொடங்குதல்
நாவேந்தர் — சொல்லின் செல்வர், திருநாவுக்கரசர்
நாவேய்ந்த சொல் — நாவினுல் அழகுறப் புனைந்தமைந்த பாடல் (நள 402)
நாவேறு — நாஹூறு, நாவால் வரும் தோஷம் (வனை பித 11)
நாவேறு செல்வி — சரசுவதி (திருவா 10-1)
நாவை அசுத்தப்படுத்திக் கொள்ளல்— வீண் அவதூறு பேசி நாவைத் தூய்மை யிழக்கச் செய்தல் (அலை)
நாவைச் சப்புக் கொட்டல் — நாக்கைச் சப்புக் கொட்டல்

நாவைத் துண்டித்தல் — நாவை யறுத்தல்

நாவை யசைத்தல் — பேசத் தொடங்குதல்

நாவை யடக்கல் — சுவையுணர்ச்சியைக் கட்டுப்படுத்திக் கொள்ளல்

நாவை யடக்கிப் பேசல் — கெட்டவார்த்தை அல்லது வசையுரை அல்லது கடுமொழி பேசாமல் நாவடக்கத்துடன் பேசல்

நாவை விட்டகலாதிருத்தல் — நாவில் தவழ்தல்

நாவொட்டிக் காய்ச்சல் — நாவறட்சி யுண்டாக்கும் காய்ச்சல் வகை

நாவொடு நவிலா நகை படுமழலை — நாவொடு பொருந்தாத சிரிப்பை விளைவிக்கும் மழலை (பெருங் 1-36-266)

நுனிநா — நாக்கின் நுனி (தொல் எழுத் 91)

நெடு நாக்குப் பூச்சி — நாக்குப் பூச்சி வகை

பசுநா — பசுவின் நாக்கு

புலநா — அறிவாற் சிறந்த நா (சிறு 6-7)

பொய்யறியா நா — பொய்யா நா

பொய்யா நா — பொய் கூறாத நா (சுந் 237)

பொல்லாத நாக்கு — கருநாக்கு

பேச நா வெடுத்தல் — பேசத் தொடங்குதல்

பேச நாவெழாமை — நாத்தழு தழுத்தல்

மெய்யுறைகின்ற நா — பொய்யாத நா; சத்தியமே பேசும் நா

மணி நாக்கு — மணியின் நாக்கு (தமிழ் நா 128)

மழலை நா — மழலை பேசும் நாக்கு; கட்குடித்தோர் உளறும் நா

வடியா நா — திருந்தாத நா (பு 47)

விஷ நாக்கு — தீமை விளைக்கும் சொற் பயிலும் நா; கரு நாக்கு



# 9. கை

அக்கிரபாணி — கைந்நுனி; வலக்கை

அகங்கை — அங்கை ; உள்ளங்கை (காஞ்சிப் திருக் 123)

அங்கை — அகங்கை, உள்ளங்கை (திருவி நாட் 27 ; சிந் 173 ; 4380) அழகிய கை (கலி 83)

அங்கை அறைதல் — கையில் அடித்தல், சத்தியஞ் செய்தல் (அரி 10–34)

அங்கை ஆமலகம் — உள்ளங்கை நெல்லிக் கனி (பெருந் பு 11-12)

அங்கை கொடு அங்கை அறைதல் — கைதட்டுதல் (அரி 7–61)

அங்கையில் வட்டாதல் — அடைதற்கு எளிதாயிருத் தல் (திவ் பெரியதி 10-9)

அணி வளைக்கை — அழகிய வளையணிந்த கை (க 5-13-3)

அணிவளை முன் கை — அழகிய வளையணிந்த முன்கை (அக 361)

அத்த கடகம் — பொற்கங்கணம், கைவளையல் (குற் குற 58; அரி 4–118)

அத்தமலர் — கைகளாகிய மலர் (கந் அந் 67)

அபயஹஸ்தம் — அடைக்கலப் பாவனையில் வைத் திருக்கும் கை

அரைக்கைச் சட்டை — முழங்கைக்கு மேற்பகுதிவரை துணி இருக்குமாறு தைத்த சட்டை

அவிர் தொடி முன்கை — விளங்குகின்ற தொடியுடைய முன் கை (அரி 75)

அறங்கை — உள்ளங்கை (பே)

இடக்கை — இடது கை

இடக்கைப் பக்கம் — இடப்பக்கம்

இடக்கையான் — இடது கைப்பழக்கமானவன் (திருவிளையாடல் 30 ; குறுமா 65)

இடது கை — இடக்கை

இடது கைக்காரன் — இடக்கை வழக்கமுள்ளவன்

இடது கைப் படுக்கை — இடது கைப் பக்கமாக ஒருக்கணித்துறங்குதல்

இடுப்பில் கைபோட்டணைத்தல் — இடையுடன் சேர்த்து அணைத்தல்

இரண்டு கைகளையுந் தூக்குதல் — மிகவும் விருப்புடன் ஏற்றுக்கொள்ளல்

இரு கை கூப்பி வரவேற்றல் — மிக்க விருப்புடன் வரவேற்றல்

இரு கை கொட்டிச் சிரித்கல் — கைகளைக் கொட்டி நகைத்தல்

இரு கையினுல் வாரியெடுத்தல் — இரண்டு கைகளாலுந் தூக்கிக் கொள்ளுதல்

இழி கை — கைச்சுரிகை (பெ 1-47-177)

இறுகின கை — உலோபியின் கை

ஈர்ங்கை — உண்டு பூசிய கை; உண்டு கழுவிய கை (கு 1077);

ஈரக்கை — ஈர்ங்கை, உண்டு கழுவிய கை

உச்சிமேல் கைகுவித்தல் — தலைமேல் கைகுவித்து வணங்குதல்

உட்கை — உள்ளங்கை

உட்கையாயிருப்பவன் — உள்ளாள், ஒற்றன்

உடக்கை — உள்ளாங்கை (கருஹூ குருநூல்)

உபய கரங்காட்டல் — கைகுவித்தல் (ஞானசம் தாலாட் 15)

உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருத்தல்— உயிருக்காகப் போராடுதல்

உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஓடல் — மிக வேகமாக ஓடுதல்

உள்ளங்கை — அகங்கை

உறட்டுக்கை — இடக்கை, இடக்கைப் பழக்கம்

ஊசற்கரம் — துதிக்கை (பெரிய 1376)

ஊசிக்கை — இளைத்த கை

எச்சில் கை — சோறுண்டு கழுவாத கை

எச்சிற் கையால் காக்கை ஓட்டாதவன் — உலோபி

எட்டாக்கை — தூரமான இடம், எட்டாத இடம்

எடுப்பார் கைப்பிள்ளை — யாவர்க்கும் வசப்படக் கூடியவன்

எழிற்கை — அழகு பெறக் காட்டுங் கை (அபிநயம்) (சி 3-18)

எழுதக்கை ஓடவில்லை — எழுதுவதற்கு மனம் வராதிருத்தல்

எழுதக் கை கூசுதல் — எழுதுவதற்கு நாணம் அடைதல்

ஏந்தும் கை — தாங்கும் கை

ஏற்கும் கை — ஏற்றுக்கொள்ளுங் கை
ஐங்கரக் களிறு — விநாயகர் (காஞ்சிப்)
ஐங்கை — ஐந்து கரம் (வி மான் சா 15)
ஐங்கையன் — விநாயகர் (திருத்தொண்டர் திருநாமக் கோவை)
ஐந்து கையன் — விநாயகர் (தி 315)
ஒட்டுக்கை — ஒடிந்த கையைத் திரும்பவும் பொருத்தியது; பொய்க்கை
ஒட்டுக்கைவிரல் — ஒட்டிக் கொண்டிருக்கும் கைவிரல்
ஓரட்டாங்கை — இடக்கை (பே)
ஓரட்டுக்கை — பழக்கமான இடது கை
ஒருகை — ஒருகாட்சி, ஒருபக்கம், ஒற்றுமை; சீட்டாட்டத்தில் ஒருவர்
ஒருகை தட்டினால் ஓசை கேட்குமா — ஒற்றுமையின்றேல் பலமில்லை [பழ]
ஒருகை பரிமாறுதல் — விருந்தினர் வரிசையில் ஒருபுறமாகப் பரிமாறுதல்; ஒரு முறை பரிமாறுதல்
ஒருகை பார்த்தல் — வெல்ல முயலுதல்
ஒருகை பார்த்து விடுதல் — துணிவுடன் காரியத்தில் இறங்குதல்; சவால் விடுதல்
ஒருகைம் முகன் — விநாயகர்
ஒருகை முறிந்தது போலிருத்தல் — நண்பன் போன்ற சிறந்தவரைப் பிரிந்து வருந்துதல்
ஒருகையன் — ஒரே கை உள்ளவன்
ஒருகையாயிருத்தல் — ஒரு காரியத்தில் பலரும் ஒன்றாய் ஈடுபட்டிருத்தல்; எதிர்க்கட்சிக்கு விரோதமாய் ஒற்றுமையாயிருத்தல்

ஒருகையானை — விநாயகர்

ஒருகை விளையாடுதல் — எல்லாருக்கும் ஒருமுறை வர ஆடுதல்

ஒற்றைக்கை — ஒரு கையால் காட்டற்குரிய அபிநயம் (பரத பாவ 19)

ஒற்றைக் கைமா- யானை (11 தி 26-21)

ஓங்கியகை — அடிக்க உயர்த்தியகை

ஓட்டைக்கை — பணம்மிச்சமாகாது செலவழிக்கும் கை; பொருள் தங்காத செலவுக்கை

கங்கணக்கை — கங்கணம் அணிந்திருக்கும் கை (தேசிங்கு 54)

கஞ்சக்கரம் — தாமரை மலர் போன்ற கை (தென் புது உலா 27)

கட்டிய கை — மரியாதையைக் காட்ட மார்பில் கட்டிய கை; கட்டப்பட்ட கை

கட்டுக்கை — கட்டுப்போட்டுள்ள கை

கடக கரம் — கடகமணிந்த கை (தென் புது உலா64)

கடுங்கை — வருத்துகின்றகை; கருங்கை (ச 167-1)

கடுங்கை வரை — வலிய கையை உடைய யானை (பெரிய 2247)

கணைக்கை — முன்கை; முன்னங்கை

கணுக்கை -- மணிக்கட்டு, முன்கை

கமலக்கை -- தாமரை போன்ற கை [க 6-776]

கமலச் செங்கை -- கமலம் போன்ற அழகிய கை

கரக்களிறு -- துதிக்கையுடைய யானை [வில் 2-71]

கரகமலம் -- கைத்தாமரை [திருவி 2-3; க 6-4288; கலிங் 128]

கரகோஷம் -- கைதட்டல்

கரகோட்டம் -- கைதட்டல் [தனி 3-570]

கரங்குவித்திறைஞ்சுதல் -- கைகுவித்து வணங்குதல்

கரங்குவிதல் — கைகுவித்தல் (திருவா 1-9)

கரங்கொண்டு கும்பிடுதல் — கைகுவித்து வணங்குதல்

கரசரணாதிகள் -- கை கால் முதலிய உறுப்புக்கள் (பிர தாப 37)

கரசைலம் -- யானை (அரி-10-28)

கரண்டக்கை -- முன்கை

கரத்தமர் நெல்லி -- உள்ளங்கை நெல்லிக்கனி (வி பு 44-24)

கரத்துணை -- இணைக்கை [க 6-3978]

கரதலம் — கைத்தலம், உள்ளங்கை [தே 44-3 இரட்ச 21-74; க 6-1270]

கரதலம்புடைத்து நகுதல் — கை கொட்டிச் சிரித்தல் [கந் 2-24-9]

கரதலாமலகம் — உள்ளங்கை நெல்லிக்கனி (அறப் சத 86; பரங் பு2-19.

கரதாடனம் — [லீலையில்] கைகளாற் செய்யும் பல வகைச் செயல் [பால்வண் 21]

கரதீபம் — தீவட்டி [கிள்ளை தூ 165]

கரந்தொடுதல் — அமுது செய்தல் [ஆனந்தருத்தி கோ 168]

கரநொடி -- கைத்தாளம் [11 தி 34-82]

கரபரிசம் கையால் தொட்டறிவது, கையில் தொடுவதால் ஏற்படும் உணர்ச்சி

கரபத்திரம் — கைவாள் [11 தி 6-58]

கரபல்லவம் — கைவிரல்
கரபாகம் — கைப்பாகம்
கரபாதம் — கையுங் காலும்
கரபாத்திரத்திலுண்டல் — கையே பாத்திரமாகக் கொண்டு கையில் வாங்கிச் சாப்பிடல்
கரபாத்திரம் — விரல்களை மடக்கி உள்ளங்கையைக் குழியாகச் செய்வது
கரபி — யானை
கரபூடணம் — கங்கணம்: காப்பு, கைவளை; கையணி;
கரம் எதிர் குவித்தல் — கைகுவித்து வணங்கல்
கரம் ஆயிரத்தான் — சூரியன்
கரம் சிரம் சேர்த்தல் — கைகளைச் சிரமேல் வைத்துத் துதித்தல் (க 3-1020)
கரம் சோர்தல் — கை தளர்தல்
கரம் நீடுமா — யானை (அழ வண் 7)
கரம் பொத்துதல் — கையால் மூடுதல்
கரமலர் — கைகள் (இரட்ச 19-33)
கரமலர் மொட்டித்தல் — கைகளைக் குவித்தல் (திருவா 4-84)
கரமலை — யானை (தி 1258)
கரமா வெற்பு — யானை (அ 17-9-53)
கரமுகவம்பி — யானை முகஓடம்
கரமுகன் — யானைமுகன்; விநாயகர்
கரமுகிழ்த்தல் — கரம் கூப்புதல் (தாயு பொருள் வ 10)
கரமுட்டி — கைமுட்டி; கைப்பிடி
கரமுட்டி செய்தல் — கைமுட்டியடித்தல்

கரலட்சணம் — கையாற்புரியும் அபிநயம் (பரத பாவ 19 தலைப்பு)

கரவாரம் — கைதட்டல், கைமுழக்கம் (திருவாத பு 43)

கரவாள் — கைவாள் (ச 81 - 8)

கரவாளம் — கைவாள், சிறுவாள் (அரி 13 - 12)

கரஸ்தம்பவாதம் — கையைத் தம்பிக்கச் செய்யும் வாத நோய் வகை

கராசலம் — கைம்மலை, யானை (க அலங் 65; கந் 6-23-63)

கராத்திரி — யானை

கராம்புயம் — தாமரைக் கை

கரிக்கால் — கருங்கிரந்தி அல்லது கரப்பான் கொண்ட கால்

கரிக்காலன் — கருப்புக்காலை உடையவன்

கரிக்கை — கேடு விளைக்குங் கை; யானைத் துதிக்கை

கரிகரம் — கைச்செயல்; சுரதலீலைவகை, கலவி விளையாட்டில் ஒன்று (தி 289 கந்த பு இந்திர 44)

கரிகாலன் — கரிகாற் சோழன்; யானைக்கால் நோயுடையவன்; நாசகாரன்

கரிமுகவம்பி — யானைமுக ஓடம்

கருங்கால் — காலிற் காணும் ஒரு மாட்டு நோய்; மேகம், கரப்பான், குட்டம் இவைகளினுல் உண்டாகும் கருப்பு நிறக்கால்

கருங்காலன் — ஒருவகைக் கருப்பு எலி

கருங்காற்றலையன் — ஒருவகைக் கருப்பு எலி

கருங்கை — வேலையில் அடிபட்டுக் கருத்தகை, வலியகை, கொல்லுங் கை; கருப்புக் கை; மேக நிறங் கொண்ட கை

கருங்கையான் — கரிசலாங் கண்ணி

கலங்கிக் கையற்றிருத்தல் (குறிஞ்சிப் 24)

கவவுக்கை — அகத்திட்ட கை, அணைத்த கை

கவிகை — வண்மையை உடைய கை (கோவை 27)

கவிகை வள்ளல் — கவிந்த கையுடைய வள்ளல் (அக 142)

கள்ளக்கையெழுத்து — மாருட்டமான கைச்சாத்து

களவுங்கையுமாய் அகப்படல் — திருடப்பட்ட பொருளுடன் திருடன் அகப்படல்

கற்கடகக்கை — நண்டுக்கை; நடுவிரலும் ஆழிவிரலும் முன்னே மடக்கி மற்றை இரண்டு விரலும் கோத்தல் சி 17-17)

கற்கரம் — மத்து, கவன் (கதி வெ 25)

கற்றது கைமண்ணளவு — கற்றது மிகச் சிறிதளவு

கன்னத்தில் கையூன்றல் — கவலையால் கன்னத்தில் கை வைத்திருத்தல்

கன்னத்தில் கை வைத்தல் — கன்னத்தில் கையூன்றல்

காந்தட் செங்கை — காந்தள் போன்ற அழகிய கை

காந்தளங்கை — காந்தள் போன்ற அழகிய கை (குலாம் 249)

கீழ்க் கை — முன்னங் கை

குச்சிக்கை — ஒல்லியான கை

குட்டங் கை — குட்ட நோய்பிடித்த கை

குட்டக் கை — நீளங் குறைந்த கை

குடங்கரய் — உள்ளங்கை (வள்ளி 7 - 10)

குடங் கை — எல்லாவிரலுங் கூட்டி உட் குழிப்பது அபிநயம் (சி 3 அடி); உள்ளங்கை (தணிகா பு. 370; கூர்ம 1-15 29 சிந் 529)

குருடன் கைக்கோல் — இன்றியமையாத உதவி -

குவிகை — குவிந்த கை; கூப்பிய கை (பிரபு 4-40; சிவ 2-13-22; பெரிய 2130)

குவிகைத்தலம் — குவித்த கைகள் (அரி 4-55)

குழிங்கை — அகங்கை; உள்ளங் கை,

குறுங்கை — சிறிய கை (திருவிளை 8-24)

கூங்கைம்மா — யானை

கூம்புறு கரம் — குவித்த கை (சோண 58)

கூப்பிய கை — அஞ்சலி செய்யும் கை

கை அமைத்தல் — கையால் அமர்த்துதல் (அரி 4-276)

கை அழுத்தமானவன் -- உலோபி

கை அறைதல் — கையைத் தட்டுதல்; தட்டிச் சிரித்தல் (அரி 4-240)

கை இ -- அழகு செய்து, கோலம் செய்து

கை இல்லாதவன் — கை யூனமுடையவன்

கை இழத்தல் -- கையை இழத்தல், அதிகாரம் இழத்தல்

கை இளைத்தல் — கை சோர்தல்

கை உடைந்து போதல் -- அதிகாரம் குறைந்து போதல்

(ஒருவர்) கை உயர்ந்திருத்தல் -- செல்வாக்கு மிக்கிருத்தல்; பணம் மிகப் பெற்றிருத்தல்

கை ஊறுதல் -- கையில் தினவெடுத்தல்

கை ஏந்துதல் — கை நீட்டுதல்

கை ஓடிய வேலை செய்தல் -- கையால் மிகுதியாக வேலை செய்தல்

கை ஓங்குதல் — அடித்தல்; செல்வாக்கு மிகுதல்

(உழைத்துக்) கை ஓடாய்ப் போதல் -- கையில் காய்ப்பு ஏற்படுதல் (குடும்ப 33)

கை ஓய்தல் — வேலை மிகுதியால் கை தளர்தல்

கை ஓய்ந்துபோதல் -- கை சலித்துப் போதல்

கைக்கட்டி — போர் வீரரின் கைக்கவசம், அக்குளில் ஏற்படும் கட்டி; கையிலுள்ள கட்டி நோய்

கைக்கட்டு -- ஓராபரணம்; கைக்கு இடும் கட்டு

கைக்கட்டுதல் — கையை மடக்கிக்கொண்டு வணக்கங் காட்டுதல், மரியாதை செய்தல்

கைக்கட்டுப் பவளம் — பவளத்தாலான ஒருவகைக் கையணி

கைக்கடகம் — கைவளை

கைக்கடன் -- கைமாற்றுக்கடன், சிறுகடன், கடப்பாடு; ஈடுறுதியற்ற கடன்

கைக்கடனுற்றல் — உறுதியின்றி நம்பிக்கைக்குக் கொடுத்தல்; பணஉதவி புரிதல்

கைக்கடாசலம் -- யானை (பாக 1508)

கைக்கடிகாரம் — கையிற்கட்டும் சிறு கடிகாரம்

கைக்கடுப்பு — கைவிசை (க 6-3740)

கைக்கடுமை -- கைவேகம் (க 6-3801)

கைக்கடுதாசி -- சிறு கடுதாசி

கைக்கண் நெல்லி -- உள்ளங்கை நெல்லிக்கனி (தணி பு 9-40)

கைக்கணக்கு — கணக்குக் குறிப்புப் புத்தகம்; ரசீது

கைக்கணிசம் -- கையால் பதித்தல்; கை மதிப்பு

கைக்கத்தி -- ஓராயுதம், சிற்றரிவாள்

கைக்கத்திரிகை — மயிர்வெட்டும் சிறு கத்திரிக்கோல்

கைக்கதவு -- சிறு நுழைகதவு

கைக்கபோலக்கிரி — யானை (தி 777)

கைக்கமலம் — கையாகிய தாமரை (சுந்த சு 3; சுவாமி பிதி 7-3; திவ் 3054)

கைக்கயம் -- துதிக்கையுடைய யானை அரி 2-16 விரிஞ் பித 81; குமர 765

கைக்கரடு — மணிக்கட்டு; மணிக்கை

கைக்கரண்டி -- சிறுகரண்டி, சிற்றகப்பை

கைக்கரணம் — கைச்சாடை

கைக்கரணை -- ஒரு சிலந்தி, கைக்கட்டி நோய்

கைக்கருவிகள் — கையால் பயன்படுத்தற்குரிய கருவிகள்

கைக்கவசம் — கைச்சட்டை, கையுறை, கையுடை

கைக்கழுத்து -- முன் கை; மணிக்கட்டு

கைக்கறுப்பு -- உள்ளங்கை கறுக்கும் மேக நோய்

கைக்கன்று — கைவளை (நாகை பு 1-55; தஞ் உலா 99)

கைக்கனலார் — கையில் கனலை ஏந்திய சிவ பெருமான் (பெரிய 2383)

கைக்காசு — கையிலுள்ள காசு

கைக்காணம் — இலஞ்சம்

கைக்காணி — கைக்காணிக்கை; கையுறை (கலி 82-12 நச்)

கைக்காணிக்கை — சிறு காணிக்கை; தட்சிணை (சிவ 1-4-8)

கைக்காப்பு — கையில் அணியுங் காப்பு

கைக்காய்ச்சல் — கைக்காந்தி, கைச்சூடு காட்டல்

கைக்காய்ப்பு — கையிலுள்ள வடு (குமர 352)

கைக்கார் — யானை (சங்கர 14-12)

கைக்காரன் — உதவியாள், சமர்த்தன், பணக்காரன்

கைக்காரியம் — கைவேலை, கைக்கருமம்; மேற்கொண்டிருக்கும் வேலை

கைக்காரியமாக இருத்தல் — கைவேலையாக இருத்தல் (புதுமைப் 179)

கைக்கால் — சிறுகால்வாய் (செந்தூர்ப். பி. த. 20) கையின்கண் (தணி பு 10-45)

கைக்காளில்லை — உதவிசெய்ய ஆளில்லை

கைக்காறை — ஒருவகைக் கையணி (சாச); வளையல்

கைக்கிட்டி — இரண்டு தடிகளுக்கிடையே கையை வைத்து நசுக்கும் தண்டனை; கைகளில் இட்டு இறுக்குங்கோல்

கைக்கிரி — யானை (பாக 116; பா க பு 1-4-10)

கைக்கிரியை — கையினுற் செய்யுங் கிரியை

கைக்கிளவர் — கைக் கோளர், செங்குந்தர்

கைக்கிளை — ஏழிசையினென்று, ஒருதலைக்காமம், யாழின் நரம்பு

கைக்கீறல் — ஒருவகைத் திருமணம்

கைக்கீறு — கைரேகை, கையெழுத்தின் குறிப்பு

கைக்கு அகப்பட்டதைச் சுருட்டுதல் — கையிற் கிடைத்ததைத் திருட்டுத்தனமாக எடுத்துக் கொள்ளல்

கைக்கு அகப்படுதல் — கையில் சிக்குதல்

கைக்கு அடக்கமான — கையில் அடங்கக்கூடிய

கைக்கு எட்டாத உயரம் — கைகளைத் தலைக்குமேல் தூக்கினாலும் பிடிக்கமுடியாத உயரம்

கைக்கு எட்டினது வாய்க்கு எட்டாமற் போதல் — வந்த வாய்ப்பு முழுப்பயன் அளியாது நழுவிவிடல்

கைக்கு எட்டும் தூரத்தில் — மிக அருகில்

கைக்குக் கிட்டுதல் — கைக்கு அகப்படுதல்

கைக்குக் கிடைத்தல் — கையிற்கிடைத்தல், கைக்கு அகப்படல்

கைக்குக் கை மாறுதல் — இடம் விட்டு இடம் பெயர்தல் ; கை மாறுதல்

கைக்குச் சரியாக இருத்தல் — மோதிரம் முதலியன கையில் அணிவதற்கு அளவு சரியாக இருத்தல்

கைக்குஞ்சரமுகத்தான் — விநாயகன்

கைக்குட்டை — கையில் பிடிக்கும் சிறு துணி ; கை விலங்கு

கைக்குடை — சிறு குடை, கைக் கவிகை ; குடை

கைக்குத் தட்டுப்படல் — கையில் சிக்குதல்

கைக்குத்தலரிசி — கையினால் உலக்கை பிடித்துக் குத்தித் தீட்டிய அரிசி

கைக்குத்திடல் — (பேசும்போது) கையால் குத்திட்டுப் பேசுதல் (திருப்பு 456)

கைக்குத்து — கைபொத்திக் குத்தல், கை முஷ்டி, கையாற் குத்திய அரிசி

கைக்குத்துக்கு நிற்றல் — மல்லுக்கு நிற்றல்

கைக்குதவாது — கவைக்குதவாது

கைக்குதவல் — சமயத்துக்குதவுதல்

கைக்குதவி — சமயத்துக் குதவி

கைக்கு நீர் கொள்ளுதல் — சிறு நீர் விடுதல்

(பிறர்) கைக்கு மாறுதல் — (பிறர்) கையை அடைதல்

கைக்கு மீறுதல் — சக்திக்கு மீறுதல்

கைக்குலவரை — யானை (பெரிய 1378)

கைக்குவடு — யானை (தி 1062)

கைக்கு வந்து சேர்தல், கைக்கு வந்து விடல் — கைக்குக் கிடைத்துவிடல்

கைக்கு வருதல் — கையிற்கிட்டுதல், கை கூடுதல், கையிற் கிடைத்தல்

கைக்கு வேலைகொடு — ஏதாவது வேலை செய்யச் சொல், வேலை செய்யச் செய்

கைக்குழந்தை — இடுக்குப்பிள்ளை, கைப்பிள்ளை

கைக்குழலூதல் — கையிலே குழலூதல்

கைக்குழவி — கைக்குழந்தை

கைக்குழி -- கமுக்கட்டி, அக்குள், கைம்மூலம்

கைக்குழித்தாமரை -- அக்குளில் வரும் புண்

கைக்குழைச்சு, கைக்குளசு -- மணிக்கட்டு

கைக்குள் போட்டுக் கொள்ளல் -- தன்வசப்படுத்திக் கொள்ளல் [உலகம் 184]

கைக்குள் வைத்துக் கொள்ளல் — கைக்குள் போட்டுக் கொள்ளல்

கைக்குற்றம் — கைமோசம், கைப்பிழை, கைத்தவறு

கைக்குறி — கைபார்த்துச் சொல்லுங்குறி [புகழே 1-3-8] கைரேகை [கதி வெ 11; சர நாட 36; தஞ் உலா 192] கைவரை பார்க்கும் சாத்திரம், கைச் சாடை, சைகை

கைக்குறிப்பு — ஞாபகக் குறிப்பு, கைக்குறி

கைக்குறி பார்த்தல் — கைரேகை பார்த்தல்

கைக்குறையாளன் — கைமுடமானவன்

கைக்குன்று — யானை, கைம்மலை, களிறு, தும்பி

கைக்கூச்சம் — கைகூசுதல், பிசுனித்தனம்

கைக்கூட்டம் — அணிவகுப்புக் கூட்டம், கைக்குவியல்

கைக்கூட்டன் — காவற்காரன், சேவகன்

கைக்கூலி — பரிதானம், லஞ்சம், [சாச] அற்றைக் கூலி [தேசிகர் ரகஸ்]; கையில் கொடுக்கும் விலைப் பொருள்

கைக்கூலிகள் — கைக் கூலி பெற்று ஒருவனுக்காகத் தீயசெயல் புரிபவர்கள்

கைக்கெட்டுதல் — கைக்கு அகப்படல்

கைக் கெளியது — இலேசானது, கைப்பழக்கமானது

கைக் கொடுத்தல் — கையில் கொடுத்தல் (பு)

கைக்கொண்டு — கையிற்கொண்டு

கைக்கொண்டு ஒழுகல் — கடைப்பிடித்து ஒழுகல்

கைக்கொண்டு போதல் — எடுத்துக்கொண்டு போதல்

கைக்கொள்ளல் — கையிற்கொள்ளல், மேற்கொள்ளல் (கோவை 76) கையில் ஏற்றுக்கொள்ளல் பெரிய 3313)

கைக்கொள்ளுதல் — அங்கீகரித்தல், ஒப்புக்கொள்ளல் பேணிக் கொள்ளல் ; ஆதரித்தல், கையில் தரித்தல், ஏற்று நிர்வகித்தல், (சாச) வசமாக்குதல், பற்றுதல் (பெரிய 1320 ; 1825)

கைக்கோடரி, கைக்கோடலி, கைக்கோடாலி — சிறு கோடாலி

கைக்கோப்பு — கையில் கோத்து ஆடுதல் ; வழியுணவாகிய பொதி சோறு (கதி வெ 77)

கைக்கோரணி — கைச்சித்திரம், கைச்சாடை

கைக்கோரணி காட்டுதல் — இறக்குந் தறுவாயிலிருத்தல்

கைக்கோல் — பற்றுக்கொடிறு (சி 16-108) ; ஊன்றுகோல், கைப்பிடிக்கோல், கைத்தடி, செங்கோல்

கைக்கோலிளையர் — கையில் தண்டம் பிடித்துக் காவற்றொழில் புரியும் வீரர்

கைக்கோள் — கைக்கொண்டது, கைக்கொள்ளல், மேற்கொள்ளல்

கைக்கோளமுதலி — கைக்கோளரின் தலைவர் (சாச)

கைக்கோளர் — தோள் வலி மிகுந்த காலாட்படையினர் ; சோயில் ஊழியர்களுள் ஒருவகையினர் ; நெய்வோர் (சாச)

கைக்கோள வேலை — நெசவு வேலை (தனி 2-32)

கைக்கோளன் — செங்குந்த மரபினன்

கைகட்டல் — இரு கைகளையுங் குறுக்காக மடித்தல் ; முறிந்த கைக்குக் கட்டுப் போடல்

கைகட்டிக் கொண்டிருத்தல் — ஒன்றும் செய்யாமல் இருத்தல்

கை கட்டிக்கொண்டு நிற்றல் — பயபக்தியுடன் கை கட்டி நிற்றல்

கை கட்டிக் கொள்ளல்— கை கட்டிக்கொண்டு நிற்றல்

கை கட்டி வாய் புதைத்து நிற்றல் — அடக்க ஒடுக்கத் துடன் நிற்றல்

கை கட்டி வாய்பொத்தி நிற்றல் — அடக்க ஒடுக்கத் துடன் நிற்றல்

கை கட்டி வாழ்தல் — அடிமை வாழ்வு வாழ்தல்

கை கட்டுதல் — மரியாதையாகக் கைகட்டி நிற்றல்

கை கடத்தல் — கையை விட்டுப் போகுதல்; வசப் படாது மீறுதல், கைக்கு அகப்படாது போதல், எல்லை கடத்தல்

கை கடந்த — அதிகமான

கை கடுக்க உழைத்தல் — கை நோகுமாறு பாடுபடல் (நாகரிகப் 59)

கைகண்ட — அனுபவசித்தமான; கைதேர்ந்த

கைகண்டகாரியம் — கைகண்ட மருந்து

கைகண்டசாரம் — கைகண்ட பலன்; நவச்சாரம்

கைகண்டது — அனுபவத்தினுல் சிறந்ததெனக் கொள்ளப்பட்டது

கைகண்ட பரிகாரி — அனுபவ வைத்தியர்

கைகண்ட பலன் — தவருன பலன்

கைகண்ட மருந்து — சிறந்த மருந்து

கைகண்ட முறை — அனுபவத்தினுல் தெளிந்த முறை

கைகண்ட யோகம் — அனுபவசித்தமான மருந்து; கைகண்ட உபாயம்; பிரயோகம் (திவ் 62)

கைகண்டவள் — பரபுருடனைச் சேர்ந்தவள்

கைகண்டவன் — கைதேர்ந்தவன்

கைகண்டவேலை — பழக்கப்பட்ட வேலை

(நன்றாகக்) கைகண்டுக் கொள்ளல் — தெரிந்துக் கொள்ளல்

கைகரத்தல் — ஒளித்தல்; மறைத்தல்

கைகலத்தில் — சேர்ந்து கொள்ளுதல் (இரட்ச 21-268; கூடுதல் (திருமந் 2604); புணர்ச்சி (அருட் 6ம் 13-53); சண்டையிடல்

கைகலப்பு — கைச்சண்டை

கைகவர் — உலைத்துருந்தி (பு 345-8)

கைகவர்முயக்கு — கையணைத்துக் கலத்தல்(அக 379)

கைகவித்தல் — கையமர்த்துதல்; (பு 150); விலக்கல்; கையை நெற்றிமேல் வைத்துப் பார்த்தல்; அபய மளித்தல்; போதும் என்பதைக் காட்டுங்குறி

கைகவி பருகல் — கையை மறித்துக்கொண்டு உண்ணல் (பொருந 258)

கைகழிதல் — எல்லைக்கடத்தல்; மிவமிஞ்சுதல்; கையை விட்டு நீங்குதல்; நீங்குதல் (இனிய 40-29)

(கயவரைக்) கைகழிந்து வாழ்தல் — கைவிட்டு வாழ்தல்

கைகழுவிக் கொள்ளுதல் — கையலம்பிக் கொள்ளல்

கைகழுவிவிடுதல் — பாதியில் விட்டுவிடுதல்; ஒரு வேலையிலிருந்து நடுவிவிடுதல்

கைகழுவுதல் — குற்றத்துக்கு விலகும் ஒரு குறிப்பு; தீர்த்துத் தள்ளல்; விட்டுவிடல்; கையை நீரால் சுத்தஞ் செய்தல்; கையலம்புதல்; விட்டுவிடுதல்

கைகள் சிவத்தல் — கைகள் சிவப்புநிற மடைதல்

கைகள் துவண்டு போதல் — கைகள் சோர்ந்து போதல்

கைகள் தொழல் — கையால் தொழல்

கைகள் மொட்டித்தல் — கை குவித்துக் கும்பிடல் (திருவிசை 136)

கைகள் மொட்டையாயிருத்தல் — கைகள் வளையலின்றி யிருத்தல் (படிக்க 24)

கைகளாரத் தொழல் — கையார வணங்குதல் (திவ் 3695)

கைகளால் பற்றித் தூக்குதல் — கைகளால் பிடித்துத் தூக்குதல்

கைகளால் மெய் தழுவல் — கையால் அணைத்து உடலைத் தழுவுதல்

கைகளால் வாங்குதல் — கைகளை நீட்டி வாங்குதல்

கைகளை எடுத்துக் கண்ணில் ஒற்றிக்கொள்ளல் — அன்பின் மிகுதியால் ஒருவர் கைகளைப் பற்றித் தம் கண்களில் வைத்துக்கொள்ளல்

கைகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளல் — பிறர் கைகளை இறுகப் பற்றிக்கொள்ளல்

கைகளைச் சுடக்கு விடுதல் — கைவிரல்களில் சொடக்குப் போடுதல்

கைகளைத் தொங்கப் போடல் — கைகளைத் தொங்க விடல்

கைகளைப் பின்கட்டாகக் கட்டிக்கொண்டிருத்தல் — கைகளைப் பின்னுல் கட்டிக்கொண்டிருத்தல்

கைகளை மார்பில் கட்டிக்கொண்டிருத்தல் — கைகளை நெஞ்சில் ஒன்றன்மேல் ஒன்ருக வைத்துக்கொண்டிருத்தல்

கைகாட்டல் — சைகை காட்டல் (நாலடி 328) ; நாடி பார்க்கக் கையை நீட்டுதல் ; இரேகை பார்க்கக் கையைக் கொடுத்தல்

கைகாட்டி நிறுத்துதல் — கையால் சைகை செய்து நிற்கச் செய்தல்

கைகாட்டி மரம் — அடையாளங்குறிக்குமரம்

கைகாட்டு — கையினுல் அபிநயங்காட்டு, கையாற் குறிப்புக்காட்டு ; போக்குவரத்தை ஒழுங்கு படுத்தக் கைகாட்டு

கைகாட்டுதல் — திறமை காட்டுதல்

கை காண்பித்தல் — (பஸ்ஸில் இடமில்லையென்று) கையைக் காட்டுதல்

கைகாணுதல் — அத்தாட்சிப் படுதல் ; நம்பிக்கையாய் அறிதல்; நிறைவேறுதல்; அனுபவத்தில் அறிதல்; புலப்படப்பெறல்

கைகாய்தல் — (குளிர் காயும்போது) நெருப்பில் கைகளைக் காய்ச்சுதல் (திணைமொழி 50)

கைகாய்த்துப் போதல் — தழும்பேறப்பெறல்

கைகாரன் — கெட்டிக்காரன், சமர்த்தன் ; செல்வன் ; நுண்ணிய வேலைப்பாடு செய்வதில் கைதேர்ந்தவன் (குறிஞ் ,தி 40)

கைகாரி — கெட்டிக்காரி

கைகால் அசதி — கைகால் ஓய்ச்சல்

கைகால் அசைத்தல் — கைகால்களை ஆட்டுதல்

கைகால் அடித்தல் — பாரிசவாயுவினுல் கைகள் உணர்ச்சியறல்

கைகால் இழுத்தல் — வலிப்பு வருதல்

கைகால் இற்றுவிழல் — குட்டநோயால் கைகால் றைந்துபோதல்

கைகால் உதறி நடத்தல் — கைகால் தடங்கற்படாமல் வீசி நடத்தல்

கைகால் உதறுதல் — குளிர் காய்ச்சலில் கைகால்கள் உதறுதல்

கைகால் உதைத்தல் — குழந்தை கைகால்களை உதைத்துக் கொள்ளல்

கைகால் உதைத்துக்கொள்ளல் — காக்கை வலிப்பால் கைகால்கள் உதறுதல்

கைகால் உளைச்சல் — கைகால் குடைச்சல்

கைகால் உளைதல் — கைகால் வலித்தல்

கைகால் ஊதல் — கைகால் பருத்தல்

கைகால் கழுவிக்கொள்ளல் — உணவு உண்பதற்கு முன்பு கைகால்களைத் தூய்மை செய்துகொள்ளல்

கைகால்கள் எல்லாம் விட்டுப்போவதுபோல் வலித்தல் — கைகால்கள் மிகுதியாக வலித்தல்

கைகால்கள் 'கிடுகிடு' என நடுங்குதல் — கைகால்கள் மிக நடுங்குதல்

கைகால்கள் சில்லிட்டுப் போதல் — கைகால்கள் குளிர்ந்துபோதல்

கைகால்கள் விட்டுப்போதல் — சோர்ந்துபோதல் (பே)

கைகால்களை ஆட்டுதல் — கைகால்களை அசைத்தல்

கைகால்களை உதைத்துக்கொண்டிருத்தல் — கைகால்களை உதைத்துக்கொண்டிருத்தல்

கைகால்களைச் சுண்டி உதறுதல் — குழந்தை கைகால்களை விரைந்து மடக்கி நீட்டுதல் (புதுமைப்)

கைகால்களைப் பரப்புதல் — கைகால்களை விரித்துக் கொண்டு படுத்தல்

கைகால்களைப்போல் உதவுதல் — வேண்டியபோது மிக விரைவாக உதவுதல்

கைகால்களை வெட்டுதல் — கைகால்களைத் துண்டித்தல்

கைகால் கரணைவிழல் — கைகால் பருத்தலினால் மடிப்பு விழுதல்

கைகால் குடைச்சல் — கைகால் வலி

கைகால் குறைபட்டவன் — கைகால் முடமானவன்

கைகால் சில்லிடல் — கைகால் குளிர்ந்துவிடல்

கைகால் செத்துப்போதல் — கைகால் ஓய்தல் (பே)

கைகால் நடுக்கம் — கைகால் நடுங்குதல்

கைகால் நடுங்குதல் — பயம் அல்லது குளிரால் கைகால் நடுங்குதல்

கைகால் பிடித்தல் — நெட்டி முறித்தல்; மூளி முறித்தல்

கைகால் பிடித்துவிடுதல் — கைகால்களை அமுக்குதல்

கைகால் பிடிப்பு — கைகால் பிடித்துக்கொள்ளல்

கைகால் முடக்குதல் — கைகால்களைக் குறுக்குதல்

கைகால் முடங்குதல் — வாத நோயால் கைகால் முடங்கிப்போதல்

கைகால் முரடு கட்டல் — திருப்பமுடியாமல் கைகால் கரடுகட்டல்

கைகால் முறிதல் — கைகால் ஒடிந்துபோதல்

கைகால் முறுக்கல் — இரத்த ஓட்டங்களைப் பல விதத்திலும் திருப்பல்

கைகால் வழங்காதவன் — கைகால் பயன்படுத்த முடியாதவன் ; முடமானவன்

கைகால் வற்றல் — கைகால்கள் சூம்பிப்போதல்

கைகால் வாங்கல் — கைகால்களை வெட்டுதல்

கைகால் விலவிலக்கல் — கைகால் நடுநடுங்கல்

கைகால் விழல் — உணர்ச்சியில்லாமற் போதல்

கைகால் விங்கல் — கைகால் பருத்தல்

கைகால் வெடிப்பு — கைகால்களில் ஏற்படும் வெடிப்பு

கைகாலதிர்ச்சி — கை, கால்களில் ஏற்படும் அதிர்ச்சி

கைகாலயர்தல் — கை, கால் ஓய்தல்

கைகாலழற்சி — கை கால் எரிவு

கை காலாட்டல் — கைகால் அசைத்தல்

கைகாலூனம் — உடற்குறை

கைகாலெரிச்சல் — கை கால் எரிதல்

கைகாலோய்ச்சல் — கைகால் ஒய்ந்து போதல்

கைகாலோய்தல் — கைகாலோய்ச்சல்

கைகாவல் — கையுதவி; சமயத்தில் உதவும் உதவி

கைகாற்கழுவல் — உண்ணப் போகுமுன் கைகால்களைச் சுத்தம் செய்து கொள்ளல்

கைகாற் குடைச்சல் — கைகால்கள் குடைதல்

கைகாற் குத்தல் — கைகால்களில் குத்தல் ஏற்படுதல்

கைகாற் குறண்டல் — வெலவெலத்தல்

கைகாற் சந்துளேவு — கைகாற் குடைச்சல்

கைகாற் சில்லிடல் — மரணக்குறி; கைகால் குளிர்ந்து போதல்

கைகாற் சுத்தி செய்தல் — கைகால்களேக் கழுவல்

கைகாற் சுரப்பு — வீக்கம்

கைகாற் சுரவை — வீக்கம்

கைகாற் பிடிப்பு — கை கால்கள் பிடித்துக் கொள்ளல்

கைகாற்றிமிர் — கை கால்களில் ஏற்படும் திமிர் உணர்ச்சி

கைகுலுக்கல் — கைகுலுக்குதல்;கைபற்றிக் குலுக்குதல்

கைகுலேத்தல் — கைதட்டல் (கூர்ம 1-27-20)

கைகுவித்தல் — கும்பிடல்; கொம்மை கொட்டல்; வணங்குதல்; கைகூப்புதல் (கதி வெ 4)

கைகுவித்து வணங்குதல் — கைகூப்பித் தொழுதல்

கைகுளிர்தல் — மனத்திருப்தி அடைதல்

கைகுளிரக்கொடு — தாராளமாய்க் கொடு

கைகுறண்டுதல் — கைமுடங்கல், உலோபஞ் செய்தல்; கைகுரக்கை இழுத்தல்

கைகுறைத்தல் — கையை வெட்டுதல் (அரி-8-59)

கைகூசுதல் — பயத்தால் அல்லது வெட்கத்தால் பின்னடைதல்; உலோபத்தனங் கொள்ளல்; கொடுக்க வெறுத்தல்

கைகூட்டுதல் — கைகூப்புதல், கும்பிடுதல், கைகூடச் செய்தல், நிறைவேற்றி வைத்தல்

கைகூடல் — வெற்றி பெறல் (திருமந் -1903)

கைகூடி — கண்ணூற்று (பு வெ 138)

கைகூடிவருதல் — செய்யமுடிதல்; ஒடிந்த கை கூடி வருதல்; பயன்பட்டு வருதல், வெற்றியுற்று வருதல்

கைகூடுதல் — சித்தியாதல், வெற்றியாதல், கூடுதல், நிறைவேறுதல்

கைகூடும் — சித்தியாகும்; நிறைவேறும்

கைகூப்பல் — கும்பிடல், கொம்மை கொட்டல்; வணங்கல் (அழகர் பி த 73)

கைகூப்பிக் கும்பிடல் — கைகுவித்து வணங்குதல்

கைகூப்பித் தொழுதல் — கைகுவித்து வணங்கல்

கைகூப்பி வணங்கல் — கைகுவித்துத் தொழுதல்

கைகூப்பி வரவேற்றல் — இருகரங்குவித்து வரவேற்றல்

கைகூப்பி விடைபெறல் — வணங்கி விடை பெறுதல்

கைகூப்பு — வணக்கம்

கைகூப்புதல் — கைகூப்பல்

கைகூம்புதல் — கைகுவித்தல், கையிணைதல்

கைகெட்டுப்போதல் — ஏழையாதல்

கைகெடுதல் — வறுமையடைதல்

கைகொட்டல், கைகொட்டுதல் — கைகளை ஒன்றுயக் கூட்டல் (சிந் 156); கொம்மை கொட்டுதல்

கைகொட்டி — ஆர்ப்பரித்தல் கைதட்டி ஆரவாரஞ் செய்தல்

கைகொட்டிக் குவித்தல் — குடந்தமாடுதல்

கைகொட்டிச் சிரித்தல் — கைதட்டி எள்ளனஞ் செய்தல் (பாரதி 1-26-6)

கைகொட்டுதல் — கைதட்டுதல்

கைகொடுத்த நாயகன் — திருமணம் செய்துகொண்ட கணவன்

கைகொடுத்தல் — உதவிசெய்தல், (குமர 254) எதிர் கொண்டுபோய்க் கைப்பிடித்தழைத்தல், இசைதல், வாக்குப் பண்ணல், கைலாகு கொடுத்தல், கைதூலுக்கக் கையை நீட்டுதல், கையடித்து உறுதி கூறுதல்

கைகொடுத்து உதவுதல் — ஆபத்தில் உதவி செய்தல்

கைகொடுப்பு — உதவி

கைகொண்டமட்டும் செலவழித்தல் — கையாலான வரை செலவழித்தல்

கைகொப்பளித்தல் — கைகளில் கொப்புளம் ஏற்படல்

கைகொளல் — அங்கீகரித்தல் (வில் 1-459)

கைகோத்தல் — கூடிக்கொள்ளுதல், கையோடு கைபிடித்தல், தோளோடு தோள் பின்னுதல், நட்புச் செய்தல்

கைகோத்தாடல் — குரவையாடல்

கைகோத்துக் கூத்தாடல் — கையோடு கை சேர்த்து நடனமாதல்

கைகோத்துக் கொண்டு போதல் — கையோடு கை பிணைத்துக்கொண்டு செல்லுதல்

கைகோத்து நடத்தல் — கையோடு கைசேர்த்து நடத்தல்

கைகோலுதல் — ஆரம்பஞ் செய்தல்; சங்கற்பித்தல்; கைகூப்புதல்; முயற்சி செய்தல்

கைகோவை — பொற்கொல்லர் தொழிலினொன்று

கைகோள் — ஒழுக்கத்தின் தன்மை, தலைவன் தலைவியரின் களவு கற்பொழுக்கங்கள்; செயல் (சூளா 1195); கோரப்புணர்ச்சி

கைங்கரியபரர் — கோயிலில் பணிவிடைசெய்வோர்; உபயகாரர் (சாச)

கைங்கரியம் — தொண்டு

கைச்சங்கம் — கையிலுள்ளசங்கு; நாகரவண்டு (க்தி வெ 33) கைவளை(யல்) (கோடீச்சோ 285) தனிப் 2-18

கைச்சங்கிலி — கைவிலங்கு; ஒரு கையணி

கைச்சட்டம் — கைவிட்டம், மரச்சட்டம்; கைம்மரம்

கைச்சட்டை — கையிலிடுங்கவசம்

கைச்சண்டை — கையாலிடும் சண்டை

கைச் சதி — கைத்தாளம் (வகுப் 6-63)

கைச்சரக்கு — கையிலுள்ளபொருள்; கற்பித்துக் கூறும் வார்த்தை; கைக்குக் கிடைக்கும் சரக்கு

கைச்சரசம்—கைச்சேட்டை; கையால் இயற்றும் லீலை; கரலீலை, கையால் செய்யும் இன்ப விளையாட்டு, (பணதூ 254; அண்ணு சிந்து 12)

கைச்சரடு — கையுடை, கைக்கவசம்

கைச்சரி — கைவளை, பரியகம்; கைக்கங்கணம் (தி 279, பெரிய 3691)

கைச்சரிவளை — முன் கைவளை (திவ் 47)

கைச்சாடை — கைச்சுட்டு, கைச்சைகை

கைச்சாடை காட்டுதல் — கையால் சாடை காட்டுதல்

கைச்சாத்து — கையெழுத்து, கைச்சாத்து; கையொப்பம்; (மாணிக் கும்மி; பெரிய 207); கையெழுத்திட்ட ரசீது (சாச)

கைச்சால் — நீரிறைக்கும் கைவாளி, கடகால்

கைச்சாலம் — கையால் செய்யுஞ் சாலம்

கைச்சாதனம் — கைப்பத்திரம்

கைச்சி — கையை உடையவள்

கைச்சிகிச்சை — கைக்குச் செய்யும் சிகிச்சை
கைச்சிசு — கைக்குழந்தை (சிரா கோ 415)
கைச்சிட்டா — தினசரிக் குறிப்புப் புத்தகம்
கைச்சித்தி — கைராசி, வைத்தியத் தொழில்
கைச்சித்திரம் — கைவிற்பன்னம், கைலாவகம், கைவன்மை
கைச்சிமிட்டு — கைச்சித்திரம், செப்படி வித்தை, தந்திரம், இரகசியமாகக் கைகாட்டுங் குறிப்பு, கைச்சாடை, கைலாகவம், கைந்நொடி
கைச்சிலை — கையிற்பிடிக்கும் வில் (கந்த 3-21-52)
கைச்சிறை — கைவசமானது, கைவசப்பட்டது
கைச்சீட்டு — கைநறுக்கு, கைமுறிச் சீட்டு
கைச்சீப்பு — தோட்பட்டை எலும்பு
கைச்சீர் — கையால் தட்டுந் தாளம் (கதிர் பித 29)
கைச் சுட்டு — கைச் செய்கை
கைச் சுண்டுவிரல் — கையின்கண் உள்ள கடைசி விரல்
கைச்சுத்தம் — திருடாமை, இலஞ்சம் வாங்காமை, திருத்தமான கைத்தொழில்
கைச்சுத்தி—கைச்சுத்தியல்; ஒரு தட்டார் கருவி
கைச்சுமை — கையிலுள்ள பாரம்
கைச்சுரிகை — ஒரு உடைவாள்
கைச்சுருக்கு — கைலாவகம் ; கையிறுக்கம்
கைசுருங்குதல் — வறுமையுறல் ; செல்வாக்கிழத்தல்
கைச்சுருள் — கல்யாணத்தில் மணமக்களுக்கு கொடுக்கும் வெற்றிலைச் சுருள் அல்லது பணம்
கைச்சுழி — விதைக்கிற விதை கூடிவிழுதல்

கைச்சுழி படுதல் } சரியாகவிதையாமையால் ஓரிடத்
கைச்சுழியாதல் } தில் குவிந்து வளர்தல்

கைச்சுறுக்கு — கைவிரைவு, கைவேகம்

கைச்சூடு — கை நிறைந்த அரிக்கட்டு ; கையைத் தேய்த்தல் முதலியவற்றால் உண்டாகும் காந்தல்; நெற்கதிர்கட்டு ; கையில் ஏறும் சூடு ; அறுப்பவர்க்குக் கொடுக்கும் நெற்கதிர் ; கைபொறுக்கும் சூடு

கைச்சூலம் — சிவபெருமான் கையிலுள்ள சூலம்

கைச்செட்டு — சிக்கனம்

கைச்செட்டை — கைமூட்டு, தோள்பட்டை

கைச்செய்கை — வயல் முதலியவற்றில் செய்யுங் கைவேலை; கைத்தொழில்

கைச்செல்வம் — கையில் பெறும் செல்வம் ; (11தி. 32–70)

கைச்செலவு — சொந்தச் சில்லரைச் செலவு

கைச்செறி — தோலினாற் செய்த கையுறை (பெரியபு கண்ணப் 60)

கைச்சேட்டை—கைச்சரசம், கையால் இயற்றும் லீலை

கைச்சேலம் — ஒருவகைச் சிறிய பாத்திரம்

கைச்சேஷ்டை — முரட்டுத்தனமான விளையாட்டு ; கரலீலை

கைச்சைகை—கையால் செய்யப்படும் செய்கை, கைச்சாட்டை, கைச்சுட்டு

கைச்சொடக்கல் — கையைச் சொடுக்குதல் (புருஷர்களுக்கு 114)

கைச்சோர்வு — கையசதி

கைச்சோரம் — கைக்களவு, கைலஞ்சம்

கைசருவுதல் — எதிர்த்தல். கைகலத்தல்

| | |
|---|---|
| கைசரித்தல்<br>கைசளைத்தல் | கை தளர்தல், தொய்ந்து போதல்; கை சலித்துப்போதல்; கை சலிப்புறுதல்; கை வலித்தல்; கொடை ஓய்தல்; உபகாரம் ஒழிதல் |

கை சிரந்துணித்தல் — தலையை வெட்டுதல் (திவ் பெரியதி 8-6-5)

கைசிவத்தல் — (அடிபட்டதால்) கைசிவந்து போதல்

கை சுட்டிக்காட்டல் — கையால் சுட்டிக்காட்டுதல்

கை சுவைத்தல் — குழந்தை கைவிரலை வாயில் வைத்துச் சப்புதல்

கை சுழற்றல் — கையைச் சுழற்றல்; கை சூம்புதல்

கை சுளுக்குதல் — கை நரம்பு பிசகிக் கொள்ளல்

கை செய்குன்று — கட்டுமலை( பெ 1-46-285)

கை செய்த (கண்ணி) — கையாலே கட்டினமாலை (திவ் 50)

கை செய்தல் — அலங்கரித்தல், (கூர்ம 1-30-54) கை வேலை செய்தல். பயிர்வேலை செய்தல்; ஒப்பனை செய்தல், அழகு படுத்தல் (ரவீச 1-178) தொழில் செய்தல், வினை புரிதல்; பதித்தல் (ஆனந்தருத்திவ தூது 141); உதவி செய்தல்; யுத்தம் பண்ணுதல் (திவ் 3583)

கை செய்யா — கையால் செய்யப்படாத (கூர்ம 1-42-79; குமர 543)

கை செறி வாதம்—நமைச்சல் கண்டு கடுத்து நோகும் ஒரு வாதம்

கை சென்னி ஏறல் — வணங்குவதற்காகக் கையைத் தலைமீது உயர்த்தல் (காஞ் 10-39)

கை சென்னி வைத்தல் — கைகளைத் தலைமேல் வைத்துக் கூப்புதல் (க-3-1084)

கை சொடுக்குதல் — கையில் நெட்டி எடுத்தல்

கை சோம்பிக் கிடத்தல் - வேலையில்லாதிருத்தல் (கண்கொள்)

கைசோர்தல் — மிகுதியான வேலையினால் கைத் தளர்ச்சியடைத்தல், கைசலித்தல், கை ஓய்தல், கை விட்டுப் போதல், வறுமையடைதல்

கை சோர்ந்து போதல் — கைவிட்டுப் போதல் ; கை தவறிவிடல் ; வறுமைநிலை யடைதல் ; கை சலிப்படைதல்

கை சோரல் — கை சோர்தல்

கை சோரவிடல் — கை நழுவவிடல்

கைஞ்ஞானம் — சிற்றறிவு (நாலடி 311)

கைத்தட்டல் பெறுதல் — 'சபாஷ்' பெறுதல்

கைத்தடி — ஒப்பம் இடுவதற்குக் கையெழுத்துப் போடாமல் இடும் குறி ; தற்குறி (சாச) ஊன்றுகோல், சிறுதடி. கைப்பிரம்பு, கைக்கழி, சிறுகோல் (சேயூர்பி. த. 25)

கைத்தண்டம் — கை நஷ்டம், கைப் பொருள் இழப்பு, ஊன்றுகோல்

கைத்தண்டு—கையில் ஏந்தும் ஆயுதம் (திவ் 1935)

கைத்தந்தி — யானை (சர நாட 9-16)

கைத்தந்தை — வளர்ப்புத் தந்தை (திருவருள் 58)

கைத்தப்பு — கைக்குற்றம், கைப்பிழை

கைத்தரல் — கையில் கொடுத்தல், ஒப்படைத்தல்

கைத்தராசு — சிறுதராசு

கைத்தலங்கள் கூப்புதல் — கைகூப்புதல்

கைத்தலங் கொடு கைத்தலம் புடைத்தல்—கையொடு கையினைத் தட்டுதல் (கந் 2-5-127)

கைத்தலத்தது — கையிலுள்ளது (திவ் 1649)

கைத்தலம் — கையகம் (வி பித 26)

கைத்தலம் கூப்புதல் — கைகூப்பி வணங்குதல் (அரி 4-195)

கைத்தலை — கைத்தலம் (திரிசி அ 19)

கைத்தலையணை — தலையணை

கைத்தவறு — கைப்பிழை

கைத்தழும்பு — கையின்கண் உள்ள தழும்பு

கைத்தளம் — ஒருவகைக் கேடயம்

கைத்தளிர்விரல் — (மகளிரின்) தளிர்போன்ற கைவிரல் (பிரபு 7-40)

கைத்தளை — கைவிலங்கு (தி 486; திவ் 995: பட்டினத் பொது 42) கைக்குட்டை

கைத்தளை மாட்டுதல் — கைவிலங்கு போடுதல்

கைத்தனு — கைவில் (கந்த சு 336; தனி 4-18)

கைத்தா — கையிற்கொடு, கையில் ஒப்பி

கைத்தாக்கு — கைக்குக்கனம், கைக்குத்து, கைவேகம்

கைத்தாங்கல் — கையால் தாங்கி நிற்றல், கையால் ஏந்தல், கையாதரவு

கைத்தாது — கைந்நாடி (தனி 1-1089)

கைத்தாமரை — தாமரை போன்ற கை (குமர 38; தி 489; திவ் 1977)

கைத்தாய் — வளர்க்குந்தாய், தாதி, செவிலி

கைத்தாயர் — வ்ளர்க்குந்தாயர், (வேங் உலா 262; திருமந் 475)

கைத்தாராளம் — பெருங்கொடை

கைத்தாழ் — திறவுகோல், ஒரு தாழ்ப்பாள்

கைத்தாளம் — கைம்மணி, கையாற்போடுந்தாளம், கையில் வைத்து ஒத்தப்படுந் தாளம் (வைண 2-43)

கைத்தாளம் போடுதல் — கையால் தாளம் போடுதல்

கைத்திட்டம் — கையிருப்பு; கைமதிப்பு; கைந்நிதானம்

கைத்திறத் தொழில் — கைநுட்பத் தொழில்

கைத்திறம் — கைவன்மை (இராமப் அம் ப 19)

கைத்திறமை — கைவன்மை

கைத்திறன் — கைத்திறம்

கைத்திறன் வல்லவன் — கம்மியன்

கைத்தீட்டு — கையெழுத்திட்ட உடன்படிக்கை; சிறு குறிப்பு (சாச) பத்திரம், சாசனம்; கடிதம் (பெ தொகை 1888); கையெழுத்து (தியா லீ 14-2)

கைத்திவர்த்தி — கையில் பிடிக்குந் தீவட்டி

கைத்து — கையது, கையிலுள்ளது (கு 758 ; தணி பு 9-212)

கைத்துடி — சிறுதுடி (தி 154)

கைத்துடிப்(பு) — நைந்நாடித் துடிப்பு

கைத்துடுக்கு — கையால் அடித்தல், குத்தல், தள்ளல் முதலியன செய்யும் தீய குணம்; குறும்புத்தனம்

கைத்துடுப்பு — கூழ், தைலம் முதலியன துழாவுங் கருவி ; படகு வலிக்கும் சிறிய தண்டு, சிறுதுடுப்பு

கைத்துடையான் — கைப்பொருளுடையான் (நான் மணிக் 67)

கைத்துண்டாம் போழ்து — கையிலிருக்கும் பொழுது (நாலடி 92)

கைத்துண்டு—கையிலுள்ள சிறிய துணி (தனி 3-500)

கைத்துணிகரம் — கைத்துணிச்சல்

கைத்துணிச்சல் — துணிகரமான செயல்

கைத்துணை — இரு கைகள் (பி த கொத் 1-31 க 3-1084)

கைத்துப்பாக்கி — சிறு துப்பாக்கி

கைத்துருவுமணை — சிறு துருவு மணை

கைத்தூக்கு — கையால் தூக்குமளவுள்ள எடை

கைத்தூண் — சிறுதூண்; பிறர் கையால் உண்ணல்

கைத்தூண்டில் — சிறிய தூண்டில் (நீல 129)

கைத்தூண் வாழ்க்கை — கையிற்பெற்ற உணவை உண்ணும் வாழ்க்கை (குமர 458-5)

கைத்தேங்காய் — உருட்டுத் தேங்காய்

கைத்தையல் — கையால் தைக்கும் தையல்

கைத் தொண்டு — கையால் செய்யும் தொண்டு (பெரிய 1342) ; குற்றேவல் (பெரிய 1525)

கைத் தொண்டு இயற்றல் — கைப்பணி செய்தல் (பழனி ம தூது 71)

கைத்தொழில் — கைவேலை, காற்ரொழில், சிறுதொழில் கம்மியம், கையால் இயற்றுந் தொழில்

கைத்தொழு — விலங்கு (திருப்பு)

கைத்தொழும்பு — கைத்தொண்டு; குற்றேவல்

கைத்தோணி — கைப்பணம் (பெருந் பு 32-15) சிறு படகு (குசே 209)

கைதட்டல் — கையொடு கைதட்டுதல், கைவிடுதல், கைதப்புதல்; ஏகக் கூச்சலிடுதல்

கைதட்டி அழைத்தல் — கைதட்டிக் கூப்பிடல்

கைதட்டி ஆரவாரித்தல்—கைகொட்டி ஆர்ப்பரித்தல்

கைதட்டிக் கூப்பிடல் — கைதட்டி அழைத்தல்

கைதட்டிச் சிரித்தல் — கைதட்டி நகைத்தல்

கைதட்டி நகைத்தல் — கைதட்டிச் சிரித்தல்

கைதட்டிப் பண்டாரம் — வாய் திறவாது கைதட்டிப் பிச்சை வாங்கும் பண்டாரம்

கைதட்டிப் போடுதல் — வியாபாரத்தில்ஏனோதானோ வென்றிருந்து நட்டமடைதல்; காரியத்திலீடுபடு வதைத் தவிர்த்தல்; நீக்கி விடுதல், தப்பல்

கைதட்டிப் போதல் — ஏமாற்றமுறுதல்

கைதட்டி வைத்தல் — ருதுவாகாத பெண்ணை ருது ஆனவளாகக் கொள்ளுஞ் சடங்கு

கைதட்டு — கைகொட்டு

கை தட்டுதல் — வியப்பு, வெறுப்பு, நகைப்பு முதலிய வற்றின் குறியாகக் கைகொட்டுதல்

கைதப்பு — கையினின்று தவறு (குற் குற 95)

கைதப்புதல் — கையினின்று தவறுதல்; நீங்குதல்

கைதரல் — உதவல் (திருவா 4-89; க–124; காப் பாற்றல்; மணஞ்செய்தல் (வில் 1–52)

கைதருதல் — உதவி செய்தல் (இரட்ச 19–17); கை கூட்டுதல், இடங்கொடுத்தல்

கைதலை வைத்தல் — கையைத் தலைமீது வைத்து அழுதல் (அக 129); பெருந்துக்கமடைதல்

கைதவறிப்போதல் — கையிலிருந்து நழுவித் தவறிப் போதல்

கைதவறிவிடல் — பொருள் கைநழுவிவிடல்

கைதவறுதல்—கைப்பிழையாதல், தொலைந்துபோதல்; இறத்தல்; தப்பிப் போதல்

கைதவிர்ப்பு — கைவிடுதல்

கைதழுவுதல் — கைகோத்தல்

கைதளர்தல்—கைநெகிழ்தல், சோர்தல், வறுமையுறல்

கைதளர்தல் — வறுமையடைதல்

கைதாங்கி — கைப்பிடி, நாற்காலியின் ஒருறுப்பு

கை தாங்கியடித்தல் — மெதுவாயடித்தல், ஓங்கிப் பலமாக அடித்தல், கைப்பிடியமைத்தல்

கைதாங்கியுழுதல் — மேலாகஉழுது போதல்

கைதாங்குதல் — கைலாகு கொடுத்தல் (அரி 4-290) உதவி செய்தல்; அழிவு எய்தாமற் காத்தல்

கைதாழ்தல் — செல்வ நிலை தளர்தல்

கைதிருந்துதல் — கையெழுத்து முதலியன நேர்மையாதல்; சித்திர வேலை பழகுதல்

கைதீண்டுதல் — அடித்தல், தொடுதல்; தூர்த்தத்தனமாய்ப் பெண்டிரைத் தொடுதல்

கைதுடைக்கும் துணி — (சமையல் அறையில்) அழுக்கைத் துடைக்கும் துணி

கைதுடைத்தல் — விட்டொழிதல், கைகழுவுதல்

கை துற — விட்டுவிடு

கை துறுதுறுத்தல் — கை "பரபர" என்று வேலை செய்யத் துடித்தல்

கைதூக்கல் — இரட்சித்தல், விடுதலையாக்கல்

கைதூக்கிக் கரை சேர்த்தல் — கைதூக்கி நல்லவழி காட்டுதல் (கல்கி)

கைதூக்கி விடல் — முன்னேறச் செய்தல்

கைதூக்கி விடுதல் — நீரில் அழுந்துவோரை எடுத்துக் காத்தல், வறுமையில் அல்லது துன்பத்திற் காத்தல்

கைதூக்குதல் — வறுமையால் வருந்துவோரைக் காத்தல்

கைதூவல் — கையொழிந்திருத்தல் (கலி 50-17)

கைதூவாது — இடைவிடாயல்; கைவிடாமல்

கைதூவாமை — ஒழியாவொழுக்கம்

கைதூவுதல் — கையொழிதல், செயலற்றிருத்தல்

கைதேர்தல் — திறமையடைதல்

கைதேர்ந்தவர் — கைவல்லார்

கைதேர்ந்த வேலைப்பாடு — நுண்ணிய வேலைப்பாடு

கைதேறுதல் — கையில் பணம் சேர்தல்

கைதொடல் — உண்ணல் (காளத் பு 28 18); தொடங்கல், திருமணம் செய்துகொள்ளல்

கைதொடு — மணஞ்செய், தொடங்கு, உண்

கைதொடுத்தல் — திருமணஞ்செய்து வைத்தல்

கைகொடுதல் — பரிசித்தல், சபதஞ் செய்தல், உண்ணுதல், தொடங்குதல்; மணத்தல்

கைதொடுமானம் — உதவி, உபகாரம், ஆதரவு

கைதொழல் — கையினால் கும்பிடல், கை கூப்புதல்

கைதொழுதல் — கையினால் வணங்கல், கைகூப்பி வணங்கல் (அரி 4-259); பெரிய 2245

கைதொழு தேத்தல் — கைகூப்பிப் பரவுதல் (ச 32-10)

கைந்நகம் — கையிலுள்ள நகம்

கைந்நலம் — கைவண்மை (பெ 1-5-169)

கைந்நவிலாளர் — கையால் தொழில் செய்யப் பழகியவர், ஊமையர்

கைந்நறுக்கு — கைச்சீட்டு, கைம்முறி

கைந்நாகம் — யானை (நாமகள் 22-15; காளத் உலா 45; திவ் 422)

கைந்நாடி பார்த்தல் — நாடியோட்டம் அறிதல்

கைந்நாளம் — கையில் ஓடும் நாளம்

கைந்நிதானம் — கையால் நிறை முதலியவற்றை மதிப்பிடுதல்; கைத்திட்டம்; கைந்நிர்ணயம்

கைந்நிறையக் கொடுத்தல் — பணம் முதலியன மிகுதியாகக் கொடுத்தல்

கைந்நிறைந்தபொன் — கையில் நிறைந்த மிக்க பொன்

கைந்நிறையப் பலன் — எதிர்பார்த்த அளவு நிறைந்த பலன்

கைந்நிறை பிழிதல் — கையில் நிறையப் பிழிதல் (நற் 56)

கைந்நிறுத்துதல் — நிலைநிறுத்துதல்; அடக்குதல்

கைந்நீட்டம் — அன்றன்று கடை திறந்தவுடன் முதன் முதலாக விற்கும் பண்டத்திற்கு வாங்கும் ரொக்கத் தொகை; கைநீட்சி; கொடை, வேலைக் காரர்க்கு விழா நாளிற் கொடுக்குங் கொடை

கைந்நீவல் — அவமதித்துக் கடத்தல், கைக்கடங்காது நிமிர்தல், தடவல்

கைந்நீவி — கைகடந்து (பரி 10-49)

கைந்நீவுதல் — கைந்நீவல்

கைந்நீளுதல் — அதிகமாய்க்கொடுத்தல், ஒன்றைச் செய்ய முந்துதல், திருடப் பழகுதல்

கைந்நூல் — கையிற்கட்டுங் காப்பு; கங்கண நூல்

கைந்நெகிழ்தல் — விட்டுவிடுதல், கைவிடுதல்

கைந்நொடி—ஒரு மாத்திரைப் பொழுது, கைச்சிமிட்டு

கைந்நொடித்தல் — கையை நொடித்தல் (-அக 337)

கைநொடித்துக் கெஞ்சிக் கேட்டல் — கைமடித்துக் கெஞ்சிக் கேட்டல்

கைந்நொடிப்பொழுது — மிகச்சிறிய நேரம்

கைந்நொடு நொடுத்தல் — கண்டதெல்லாந் தொடுதல்

கைந்நோட்டம் — கையினுற் குறிப்பிக்குஞ் சாடை, கைவேலைத்திறம், கையால் நிர்ணயிக்கும் மதிப்பு, கைமதிப்பு, கைத்திட்டம்

கைநகம் — விரலின் நகம்

கைநட்டப் படுதல் — முதலிழத்தல்

கைநட்டம் — முதலுங்கூட நட்டப்படுதல், கைப்பண நட்டம்

கைநடுக்கம் — மூப்பு, அச்சம் வலியின்மை முதலிய வற்ருல் கை நடுக்குதல்; கையாட்டம், கையிறுங் காமை

கைநம்பிக்கை — கையடிக்கும் உறுதி வழி

கைநரம்பு — கையிலுள்ள வீணை - (சுந் - 225; யாழ் (அப் - 1 - 283)

கைநருங்குதல் — கை நசுக்கப்படுதல்

கை நல்குபால் — கன்றின் உதவியின்றிக் கறக்கும் பால்

கை நலம் — கை நலப்பால் ; கைராசி

கை நழுவவிடல் — வாய்ப்பை நழுவவிடல்; பொருளைத் தெரியாமல் கையிலிருந்து விட்டுவிடல்

கை நாற்காலி — கைவைத்து உட்கார வசதிபடைத்த நாற்காலி

கை நாற்றுதல் — கையைத் தொங்கவிடுதல் (பெரிய 2535)

கை நிதானம் — கைந்நிதானம்

கை நிமிர்தல் — வயதாகி வளர்தல்; கை நிமிர்ந்த பிள்ளை

கை நிர்ணயம் — கைத்திட்டம், கை நிதானம்

கைநிலை — வீரர்கள் தங்குவதற்குப் பாசறையில் தனித் தனியே அமைக்கப்பட்ட குடிசை

கைநிறக்காது — சுவையாயிருக்காது (நாடகமே 42)

கைநிறுத்துதல் — நிலை நிறுத்துதல், அடக்கல்

கைநிறை — கையால் தூக்கி மதிக்கும் நிறை

கைநிறைய — ஒரு கை நிரம்ப (அள்ளுதல்)

கை நிறையச் சம்பாதித்தல் — நிறையச் சம்பாதித்தல்

கை நிறைய மோதிரம் போடுதல் — கட்டைவிரல் தவிர எல்லா விரல்களிலும் மோதிரம் போட்டுக் கொள்ளல்

கைநீச்சாக நீஞ்சல் — கையினால் நீந்திச் செல்லல் (அவை சத 34)

கைநீட்டி வாங்குதல் — கையேந்தி வாங்குதல்

கைநீட்டி நிற்றல் — கையேந்தி இரத்தல்

கைநீட்டியடித்தல் — கையோங்கி அடித்தல்

கை நீட்டுதல் — அடிக்க முந்துதல், இழவு வினவுதல், களவு செய்தல், கையோங்கல், நீட்டல், எடுத்துக் கொடுத்தல், கையில் தருதல், இரத்தல், திருடுதல்

கைநீண்டுபோதல் — அவசரப்பட்டு அடித்துவிடல்

கைநீவுதல் — கை கழுவுதல் (பெரிய 1822)

கைநீள்வதற்கு முற்பட்டது — சண்டை தொடங்க முற்பட்டது

கைநீளம் — தாராளம், திருடுங்குணம், அடிக்குங் குணம், உதாரகுணம்

கைநீளமாக (எதையாவது) செய்தல் — குறும்புத்தனமாகச் செய்தல்

கைநீளமானவன் — போக்கிரி, அடிக்குங் குணமிக்கவன்

கைநுட்பத்தொழில் — கையினால் நுட்பமாகச் செய்ய வேண்டிய தொழில்

கைநுட்பவேலை — கைத்திறனுள்ள வேலை

கைநுண்வேலை — கைத்திறன் பொருந்திய வேலை

கைநுணுக்கம் — அழகான வேலைப்பாடு, உலோபத்தனம்

கைநெகிழ்த்தல் — கைவிட்டுவிடல் (பாரதி 3-36-39)

கைநெகிழுதல் — கைத்தவறவிடல் (தாயு பராபர 334)

கைநெகழவிடல் — விட்டுவிடல்

கைநெரித்தல் — துக்கம், அச்சம் முதலியவற்றால் கையை நொடித்தல், கை நெளித்தல் - (பிரபு 8 – 19)

கைநெல்லி — உள்ளங்கை நெல்லிக்கனி

கைநொடித்தல் - கைவிரலால் ஒலியுண்டாக்கல் (ஆசாரக் – 77) செல்வநிலைமை கெட்டுப்போதல்

கைநொடித்துப்போதல் — வறுமையுறுதல்

கைநொடு நொடுத்தல் — கண்டதெல்லாவற்றையும் தொடுதல்

கை நோக்குதல் — கையில் வைத்துப் பாதுகாத்தல் (திவ் 3870)

கை நோட்டம் — நாடியின் குணம், கைநாடி பார்த்தல்

கைநோவ வேலை செய்தல் — கைவலிக்க வேலை செய்தல்

கைப்பக்கம் — அருகு, சமீபம்

கைப்பக்குவம் — கைப்பாகம்

கைப்பக்குவம் செய்தல் — கையால் பக்ருவமாகச் சமைத்தல்

கைப்பக்குவ மருந்துகள் — பக்குவமாகத் தயாரித்த மருந்துகள்

கைப்பக்குவமாய் (மருந்துசெய்தல்) -கையால் பக்குவமாய் (மருந்துசெய்தல்)

கைப்பகற்பு — அனுமதியின்றிப் பற்றிக்கொள்ளும் நகல்

கைப்பட்டவர்கள் — கைவந்தவர்கள் (திவ் 809)

கைப்பட்டை — தோள்பட்டை

கைப்பட எழுது — சொந்தக் கையெழுத்தில் எழுது

கைப்படக்கொடு — கையில் நேரடியாகக் கொடு

கைபடச் செய்தல் — (ஒருவர் தம்) கையாலேயே செய்தல்

கைப்படல் — கிட்டுதல், அகப்படல், கையிற்படுதல், காணுதல் கையில் சிக்குதல்

கைப்படி — கையெழுத்துப் பிரதி

கைப்படிகனி — கையிலுள்ள கனி (ம. பாரதம் 1 - 7)

கைப்படுத்தல் — பிடித்துக் கொள்ளல் (இரட்ச 21-235) தன்னதாக்கிக் கொள்ளல் (திவ் 1349) கைப்பற்றுதல், மனந்தெளிதல்

கைப்படுத்துதல் — கையில் கொண்டுவந்து தரல் (வில்லி 1-84 ; கூர்ம 1-30-31)

கைப்படுதல் — கைவசமாதல், அகப்படுதல் (கீதை 8-13 பெ 1-55-95) அனுபவமாய் வருதல் தேவிகா 42) கையிலே பெறுதல் (சிந் 1600 ;) பார்த்தல்

கைப்படை — கை ஆயுதம் (கலிங் 346)

கைப்பண்டம் — கையிலுள்ள பொருள்

கைப்பணம் — கைமேலுள்ள பணம்; கையில் இருக்கும் பணம் ; மூலதனம்

கைப்பணி — கைத்தொண்டு (திரிசி அ 3) குற்றேவல்; ஈனத்தொழில் (சாமுத்ல. 33)

கைப்பணிலம் — கைவளை (ஆகுபெயர்) (சொக்க உலா 171)

கைப்பத்மம் — (மகளிரின்) கையாகிய தாமரை (தி 1170)

கைப்பதட்டம் — அவசரம்; திருட்டி ; திருடுங்குணம், பதறல்

கைப்பதிகம் — கைம்முத்திரை (கதி வெ 35)

கைப்பதுமம் — கையாகிய தாமரைமலர் (தனி பு 16-148; பரங் பு 3-7)

கைப்பந்தகம் — கையிற் பிடிக்கும் தீப்பந்தம்

கைப்பந்து — விளையாட்டில் கையால் தூக்கி எறியும் பந்து

கைப்பயிர்—இளம்பயிர், சிறுபருவப்பயிர்

கைப்பயில் — கைச்சாடை

கைப்பரிசு — இலஞ்சம், கையூட்டு

கைப்பரீட்சை — நாடிபார்த்தல்

கைப்பழக்கம் — கைப்பரீட்சை, கைப்பாகம், கையால் செய்துவரும் பழக்கம்

கைப்பள்ளம் — உள்ளங்கைக் குழி

கைப்பற்றம் — கைப்பிடி, கைப்பழக்கம்

கைப்பற்றல் — திருமணம் செய்து கொள்ளல், கை வசத்தில் ஒடுக்கல், வாங்குதல், கைக் கொள்ளு தல், கையால் பிடித்துக் கொள்ளல்

கைப்பற்று — கையகப்படுத்து, கைத்தூக்கு; சாதனம், கருவி (திவ் 3872)

கைப்பற்றுச் சீட்டு — பற்றுச் சீட்டு

கைப்பற்றுதல் — கையால் பற்றுதல்

கைப்பற்று நிலம் — நீண்டகாலம் அனுபவத்திலிருக்கும் நிலம், பாரம்பரியமான நிலம், சொந்த நிலம்.

கைப்பற்றுப் பாத்தியம் — நிலத்தில் சாகுபடி செய்து வரும் உரிமை

கைப்பறம்பு — கைம்மலை, யானை (கம்பர் 170)

கைப்பறை — கையால் முழக்கும் சிறு பறை

கைப்பாகம் — பதமறிந்து மருந்தைப் பக்குவஞ் செய்யுந்திறம். கைந்நன்மை; கைப்பக்குவம்

கைப்பாட்டுச் சாகுபடி — கையால் விதைத்து வேளாண்மை செய்தல்

கைப்பாடு — கைவசம்; கைவேலை; கைநஷ்டம்; கைத்திறன்; கையால் உழைக்கும் உழைப்பு

கைப்பாடுபட்டுப் பிழைத்தல் — கைவேலை செய்து பிழைத்தல்

கைப்பாடு படுதல் — அநம்பாடு பட்டுப் பிழைத்தல்; கையால் பாடு படுதல்

கைப்பாணி — முடவன் தவழ்வதற்குக் கொள்ளும் கைப்பிடிக்கோல்; கைத்தாளம் (11தி 37-82) இலஞ்சம் (தஞ்: சரசு 2-106); மணியாசிப் பலகை (திவ் 3345)

கைப்பாணிப்பு — கைமதிப்பு

கைப்பாடுபடுதல் — கையால் உழைத்தல்

கைப்பாடுபடுவோர் — உழைப்பாளிகள்

கைப்பாத்திரம் — கரபாத்திரம், கமண்டலம்

கைப்பாதி — இரண்டாய்ப் பிளப்பதில் சிறுபாதி

கைப்பால் — முன் நின்று கறந்து கொண்டு வந்த பால் (அறப்.சத. 65)

கைப்பாவை — கையின்கண் உள்ள பாவை (புகழே-4-1-19)

கைப்பாஷை — சைகை, கைச்சைகை

கைப்பிச்சை எடுத்தல் — கையால் பிச்சை எடுத்தல்.

கைப்பிசகு — கைம்மோசம், கைக்குற்றம், கைத்தவறு

கைப்பிடி—உறுதி, கைப்பிடிக்க வைத்திருப்பது, கைப் பொருள், கைவிடாமை, நம்பிக்கை, நாடியோட்ட மறிதல்,கையில் அடங்கியகவளம் (காஞ்சிப் 10-18) உலக்கை, திருமணம், கைபிடித்தபிடி, கையின் ஒரு பிடியளவு (கதிவெ. 20)

கைப்பிடிக் கிராதி — கை பிடித்துச் செல்ல உதவும் இரும்புச் சட்டம்

கைப்பிடிச்சட்டம்—படிக்கட்டில் கைப்பிடியாய் இணைக் கப்பட்ட சட்டம்

கைப்பிடிச் சுவர் — படிக்கட்டு முதலியவற்றின் பக்கங் களில் கையாற் பிடித்துக் கொண்டு செல்லுமாறு அமைக்கப்பட்ட சுவர்

கைப்பிடித்த கணவன்—திருமணஞ் செய்து கொண்ட கணவன்

கைப்பிடித்தல் — திருமணம் முடித்தல், (கலிங் 255, வில் 1-508) கைப்பற்றல்

கைப்பிடித்தவன் — கணவன்

கைப்பிடித்துத் தூக்குதல் —கையால் தூக்குதல்

கைப்பிடித்துப் பார்த்தல் — நாடி பார்த்தல்

கைப்பிடி மோதிரம் — திருமணத்தில் மாப்பிள்ளைக்குப் பெண்வீட்டார் கொடுக்கும் பரிசு மோதிரம்

கைப்பிடியாக அழைத்துச் செல்லல் — கையோடு அழைத்துச் செல்லல்

கைப்பிடியாகக் கிடைத்தல் — அகப்படல்

கைப்பிடியாய்ப் பிடித்தல் — கையுங்களவுமாய்ப் பிடித்தல், கையோடு பிடித்தல்

கைப்பிடியில் அடங்குதல் — கைக்குள் அடங்குதல்

கைப்பிடிவாள் — கைவாள், கைரம்பம், கைக்கத்தி, சுரிகை

கைப்பிணை — பாதுகாக்கும்படி கையில் ஒப்படைக்கப் பட்ட பொருள் (பரி 7-57)

கைப்பிச்சை — களத்தில் தருமமாகக் கொடுக்கும் பிச்சை

கைப்பிரதி — கையெழுத்துப் படி

கைப்பிரம்பு — கையிற் பிடிக்கும் பிரம்பு (தனி 3-575)

கைப்பிழை — கைப்பிசகு

கைப்பிழைபாடு — கைப்பிழை; கைக்குற்றம்

கைப்பிள்ளை — கைக்குழந்தை: இடுக்குப் பிள்ளை, விநாயகர் (வைண 2-288)

கைப்பிள்ளைக்காரி — கைக்குழந்தையை உடையவள் (சேற்றில்)

கைப்புட்டில் — கைக்கவசம், கைவிரலுறை

கைப்புடை — கைக்கவசம், கையுறை, கைத்தாளம், பக்கம் (பெ. 2-9-10), கைக்கட்டி, யானை

கைப்புண் — கையிலுள்ள புண்

கைப்புண்ணியம் — கைராசி

கைப்புத்தகம் — கையிலுள்ள புத்தகம்

கைப்புரட்டு — சாலவித்தை (யாழ். அக) கைமாற்று (பே)

கைப்புலி — யானை

கைபூசல் — கைகழுவல் (அருட் 6-1-2-42)

கைப்பூட்டு — கைப்பொருத்து, கையினுற் பூட்டும் பூட்டு, விலங்கு, தோட்பொருத்து எலும்பு

கைப்பெட்டகம் — சிறுபெட்டகம்

கைப்பெட்டி — சிறுபெட்டி

கைப்பை — கையின்கண்ணுள்ள பை

கைப்பொட்டு—கையில்அணியும் ஓர் ஆபரணம் (சாச); அலங்காரப் பொட்டு

கைப்பொடி சாந்தம் — கைவசத்திலிருக்கு'ச் பொருள்

கைப்பொம்மை — கையிலுள்ள பொம்மை

கைப்பொருள் — கைவசத்திலிருக்கும் பொருள் (பாண் 40), கைம்முதல் (திவ் 61)

கைப்பொல்லம் — சிறுதுண்டு, கைத்தையல்

கைப்பொலி — கையால் அள்ளும் நெற்பொலி

கைப்பொழுது — சூரியன் தோன்றும் அல்லது மறையும் காலத்தில் கைமுழவுயரத்திலிருப்பதாகத் தோன்றுஞ்சிறுநேரம், கொஞ்ச நேரம்.

கைப்பொறுப்பு — தன்பொறுப்பு, நட்டம்

கைப்போதகம் — துதிக்கையுடைய யானை (குமர 309)

கைப்போது — கையாகிய மலர், அஞ்சலி (திவ் 1565)

கைபடிதல் — கைதிருந்துதல்,கைபழகுதல்

கைபடிய எழுதுதல் — கையெழுத்துப் படிய எழுதிப் பழகுதல்

கைபடியப் பழகுதல் — ஒரு காரியத்தில் கையைப் பழக்கப் படுத்துதல்

கைபடுதல் — தற்செயலாகக் கைமேலே படுதல்

கைபதறுதல் — அச்சத்தால் கைநடுங்குதல், அவசரப் படுதல்

கைபரிதல் — ஒழுங்கு குலைதல், சீர் கெடுதல்

கை பரிமாறுதல் — அசுத்தமாகும் படிசெய்தல், அப கரித்தல், அடி பிடி சண்டை செய்தல், சிறிது சிறி தாகத் திருடுதல்

கை பழகியிருத்தல் — வேலையில் பழகியிருத்தல் (பிரதாப 32)

கைபழகுதல் — கைதிருந்துதல், பழகுதல்

கைபற்றிக் குலுக்கல் — கைபிடித்துக் குலுக்கல்

கைபறிதல் — கைவிட்டுப் போதல், கைதவறல்

கைபாகம் — கைப்பழக்கம், கைத் தேர்ச்சி

கைபாட்டுக்கு வேலை செய்தல் — தன்னிச்சையாகக் கைவேலை செய்தல்

கைபார்த்தல் — கைக்குறிபார்த்தல், சோதித்தல், கை ரேகை பார்த்தல், நாடிபார்த்தல், ஆராய்தல், உதவி எதிர்பார்த்திருத்தல், பழுதுபார்த்தல், வியாபாரச் சரக்குகளைச் சோதித்தல்

கைபிசகிக் கொளல் — கையில் சுளுக்கு ஏற்படல்

கைபிசைதல் — செய்வதறியாது திகைத்தல்

கைபிடி — நாடியறி, கைபெற்றுக் கொண்ட பொருள் (சாச); கைப்பிடி

கைபிடித்த நாயகன் — கணவன்

கைபிடித்தமனையாள் — மனைவி

கைபிடித்தல் — பெண்ணைத் திருமணம் செய்துகொள் ளல்; நாடியறிதல்; கையைப் பிடித்தல்

கைபிடித்தவன் — கணவன்

கைபிடித்துப் பார்த்தல் — நாடி பார்த்தல்

கைபிடி பத்திரம் — உற்றசினேகம், கைவிடாமற் பத் திரமாகயிருத்தல்

கைபிணித்தல் — கைகோத்தல்

கைபிணி விடுதல் — கைவிடுதல்

கைபுகுதல் — தன்வசப் படுத்துதல், ஒருவன் பேரிலிருந்த பத்திரம் பிறனொருவனுக்கு மாறுதல்

கைபுடைத்தல் — கைதட்டுதல், கைதட்டிக் கூச்சலிடுதல், கைகொட்டுதல்

கைபுணர்தல் — கைசேரக் கோத்தல் (நற் 163)

கைபுரைதல் -- கைசேரக் கோத்தல் (நற் 163)

கைபுனை சகடம் — கொல்லாப் பண்டி (சி.26-136)

கைபுனைதல் — அலங்கரித்தல், பூத்தொடுத்தல், கைகூப்புதல் (திவ்-2366)

கைபுனைந்தியற்றுக் கவின் பெறு வனப்பு — கையால் செய்யப் படாத இயற்கையழகு (முருகு 17)

கைபூசுதல் — கைகழுவல். உண்டகையை அலம்புதல் (ஆனந்தருத்தி கோ.169.காசிகண் 35-42)

கைபெயர்தல் — பெயர்தல், இடம் பெயர்தல், கைம்மாறுதல்.

கைபெயரூசி — கையின் கண் துளைக்கும் ஊசி (சி 15-213)

கைபொறுக்கும் சூடு — வெதுவெதுப்பு

கைபோட்டு இழுத்தல் — கைபற்றி இழுத்தல்

கைபோட்டுக் கொடுத்தல் — கைபோட்டு ஒப்பந்தத்தை உறுதிப் படுத்தல்

கைபோடுதல் — பிறருக்கு உதவ வாக்களிப்பதற்கு அறிகுறியாகக் கையில் அடித்தல், கையிடுதல், தீய காரியஞ் செய்ய முற்படுதல், காம இச்சையோடு தொடுதல்

கைபோதல் — முற்றும் வல்லவனுதல், கடந்து செல்லுதல், மேம்படல், மிக்குச் செல்லல் (சூளா-1528)

கைபோன — பழகிய

கைபோனபடி காரை விடுதல் — விருப்பப்படி கார் ஓட்டுதல்

(துறை) கைபோனவன் — (துறையில்) வல்லவன்
கைம்பெண் — விதவை, அமங்கிலி
கைம் பெண்டாட்டி — விதவை (சந்திரிகா.ப.12)
கைம்மகவு — குழவி, கைக் குழந்தை (பரிபா 15-47; ரமணமா-104)
கைம்மணி — கைத்தாளம், கையால் அசைக்கும் சிறு மணி, சேமக்கலம், சேகண்டி, தூபமணி
கைம்மதம் — யானையின் மும் மதத்துள் ஒன்று
கைம்மயக்கு — ஒரு வசிய மருந்து
கைம்மரம் — வீட்டுப் பாய்ச்சு மரம் (பித கொத் 378)
கைம்மருந்து — மருத்துவர் உதவியின்றித் தாமே சொந்தமாகச் செய்து கொடுக்கும் மருந்து
கைம்மலர் — மலர்க்கை
கைம்மலை — யானை
கைம்மறத்தல் — மறந்து விடல்
கைம்மறித்தல் — (மகிழ்வால்) கைதட்டல் (ச 332-1) கைகவித்தல் (ச 207-10) கையால் தடுத்தல்
கைம்மறுத்தல் — கொடாதுவிடல்
கைம்மறை — விதைத்தபின் விதை ..ள்ளடங்க உழும் மேலுழவு
கைம்மா — யானை (திவ் 735)
கைம்மாட்டாங்கு — தற்குறி (சாச)
கைம்மாய்ச்சி — கைவிலங்கு -(யாழ் அக)
கைம்மயம் — கைமயக்கு வசீகரண மருந்து
கைம்மாத்து — கைம்மாற்று (பே)
கைம்மாலை — கையின்கணுள்ள மா[illegible]
கைம்மாற்று, கைம்மாற்றுக் கடன்— கைக்கடன்
கைம்மாறல் — ஒழுக்கங்கெடல,ஒழுக்கந்திரிதல்

கைம்மாருட்டம் — கைத்தவறு, கைவன்மையாற் செய்யுஞ்சேமாற்றம்; மோசம்

கைம்மாறு — உடன்மாற்று; கைம்மாற்றுக்கடன், பிரதி உபகாரம்; மாற்றுதவி (அரி-9-15)

கைம்மாறுதல் — விற்றல், ஒருவர் கையினின்று மற்றொருவர் கைக்குச் செல்லல். வேலையாட்கள் முறை மாறல். ஒழுக்கத்தைக்கைவிடல், கட்சி மாறுதல்; பண்டமாற்று.

கைம்மான் — யானை (திருவி - நக - 45 - பரி- 6-33 4.96); சந் நான் 35

கைம்மிகல் — அதிகப்படல், கைகடத்தல், கையோங்கல், அளவுசிறத்தல்

கைம்மிகுதல் — பெருகுதல், (க. 6-1727 குறுந் - 63) அளவுகடத்தல்; அதிகரித்தல் (தண்பு 10 - 207)

கைம்மிடிப்பு — கையில் ஒன்றுமில்லாத தன்மை

கைம்மீன் — அத்த நட்சத்திரம்

கைம்முகத்தில் — கையில் (காஞ் 40-88)

கைம்முகத்துக் கணபதி — விநர்யகர்

கைமுகன் — விநர்யகர் (ஒண்பதியந் 12)

கைம்முகிழ்த்தல் — [illegible]குவித்தல் (தனி 3-279)

கைம்முட்டி — [illegible]

கைம்முதல் — [illegible] செய்யக்கையிலுள்ள பணம்

கைம்முதற் [illegible] — பாணிக்கிரகணம் (பெ 1-3-133)

கைம்முழி — மணிக்கட்டெலும்பு

கைம்முறம் — கையால் எடுத்துப் புடைக்கும் முறம், முற்றில் (வேங் உலா 250)

கைம்மூலம் — அக்குள்

கைம்மை — விதவைத்தன்மை

கைமகவு — கைக்குழந்தை
கைமட்டம் — கைத்திட்டம், நிதானம்
கைமடங்கியிருத்தல் — வேலையின்றியிருத்தல்
கைமடல் — கைச்சீப்பு, தோட்பட்டை எலும்பு
கைமடித்தல் — கையை மடித்தல்
கைமடிப்பு — ஏமாற்று, மோசம், வஞ்சகச் செயல்
கைமண்டை — கையிலுள்ள பாத்திரம்; குவித்த உள்ளங்கை
கைமணி — கையால் பிடித்து அடிக்கும் சிறுமணி
கைமதிப்பு — கையால் மதிக்கப்படுவது
கைமயக்கு — வசிய மருந்து
கைமரத்துப்போதல் — கை உணர்ச்சியற்று விடல்
கைமரம் — பார்கோக்கும் சட்டம் (பெரும் 73)
கைமருந்து — கைகண்ட மருந்து (சோடச 2-53); கையால் தயாரித்த மருந்து; கைக்கிடு மருந்து; கைமுறை பார்த்துத் தயாரித்த மருந்து
கைமலர் — மலர் போன்றகை (அரி 12-26)
கைமறதி — ஞாபகக் குறைவு
கைமறதியாய் வைத்து விடல் — கை தவறுதலாக வேறிடத்தில் வைத்துவிடல்
கைமறித்தல் — தடுத்தல்
கைமறைப்பு — மருந்து தயாரிப்பதில் ஏற்பட்ட ரகசியம்
கைமாத்து — கைமாற்று
கைமாயம் — கைமாய வித்தை
கைமாய வித்தை — கைச்சாலம்
கைமாராப்பு — கைகளை மார்போடு சேர்த்து மாறித் தோள்மேல் வைத்துக் கொள்ளல்

கைமாற்றலாக வாங்கல் — கைக் கடனுக வாங்குதல்

கைமாற்று — கைமாத்து

கைமாறல் — கைவிட்டுக்கை மாறுதல்

கைமாறுதல் — ஒருவர் கையினின்று மற்ருெருவர் கைக்குச் செல்லுதல், வேலையாள் மாறுதல், கட்சி மாறுதல், ஒழுக்கம் மாறுதல்

கைமிகல் — கைகடத்தல் (அக-128)

கைமிகுதல் — அளவு கடத்தல்

கைமிஞ்சுதல் — வரம்பு மீறுதல், பிறரோடு சண்டை செய்ய முற்படல்

கைமிடுக்கு — கைத்திறல்

கைமின் விளக்கு — கையில் எடுத்துச் செல்லும் டார்ச் விளக்கு (torchlight)

கைமீறல் — (மகிழ்ச்சி) அளவு மீறல் (பண.தூ 96)

கைமீறுதல், கைமீறிப்போதல் — கட்டுக்கு மீறுதல், நிலைமை கட்டுக் கடங்காமல் போதல்

கைமின் — அஸ்தநாள், அஸ்தநட்சத்திரம்

கைமுகநியாயம்– அதுவே அப்படியானுல் மற்றதனைப் பற்றிக்கூறுவதேன் (என்னும்வாதம்)

கைமுகிழ்த்தல் — அஞ்சலி செய்தல், கையெடுத்தல், கைகூப்புதல்

கைமுட்டி — விரல் மடக்கியுள்ளகை

கைமுட்டியடித்தல் — ஆண் குறியைக்கையால் பிடித்தசைத்தல்

கைமுட்டியால் தாக்கு — கையை மடக்கித் தாக்கு

கைமுட்டு — கைமுடக்கம், விரற்கணு, கைப்பொருத்து

கைமுடக்கம் — கைமுடங்கியிருத்தல், வறுமை, தொழில் மந்தம், பணமின்மை

கைமுடங்குதல் — கைவழங்காமல் போதல்.

கைமுடமாதல் — கை நொண்டியாதல், கை ஒடிந்து போதல்

கைமுடிப்பு — கைப்பொருள், கட்டுச் சோறு

கைமுடை — கை முடக்கம், பணமுட்டுப்பாடு

கைமுடைஞ்சல் — கைமுடக்கம், பணமுடை; கை சூம்பல்

கைமுதல் — வியாபாரம் முதலியவற்றிற்கு வைத்த பொருள், சாதனம், 'மூலதனம்

கைமுதிர்தல் — இளமைப் பருவம் நிரம்புதல்

கைமுந்துதல் — கைம் மிஞ்சுதல், திருடுதல், கைநீட்டுதல்

கைமுயல்தல் — கையால் முயல்தல் (11 தி 26 — 40 பெரும் 177)

கைமுழம் — முழங்கை நீளமுள்ள அளவு

கைமுளி — மணிக்கட்டிலுள்ள எலும்பு

கைமுளுத்தம் — நல்ல முழுத்தத்தில், 'கொடுக்கல் வாங்கல்' பண்ணுதல்

கைமுறி — ஓலைத்துண்டு, ஓலைச்சீட்டு

கைமுறித்தல் — கையை முறித்தல், கையைச் சொடுக்குதல்

கைமுறை — விளையாட்டு முதலியவற்றில் மாறி வருமுறை, மருந்து செய்யும் அனுபான முறை, கூத்து (சரவண. பண. தூது. 417)

கைமுஷ்டித்தல் — கை மடங்கிக் கொள்ளல் (அஞ்சலி 177)

கைமூட்டு — தோட்பொருந்து. கைத்தைபல்

கைமூலம் — கமுக்கட்டு, அக்குள்.

கைமெய்காட்டுதல் — அபிநயங்காட்டுதல், அங்க சேட்டை செய்தல்.

கைமெய்யாய்ப்பிடி —கையுங்களவுமாய்ப் பிடி

கைமேகம் — யானை (ஒருதுறை நாணிக். 13)

கைமேல்பணம் — கைக்காசு

கைமேல் பலன் கிடைத்தல் — உடனே பலன் கிடைத்தல்

கைமேலுயர்த்தல் — கையைத்தலை மேலுயர்த்தல் வணங்கல் (அ. மயிலை)

கைமேலே — கைமேல், உடனே, கையில், கையோடே

கைமேலோங்கியிருத்தல் — கை உயர்ந்திருத்தல்

கைமேற்பணம் — விலைப்பொருள் முதலியவற்றுக்காக உடன் கையிற கொடுக்கும் பணம்.

கை மோசம் — சதி. எதிர்பாராது நேர்ந்த கேடு

கை மோசம் போதல் — நம்பிக்கை மோசமடைதல், பிறர் வஞ்சகத்துக்கு உட்பட்டுக கேடடைதல்

கை மோதிரம் — கை விரலில் இடும் மோதிரம் (திவ் 325)

கைய — கையிலுள்ள (முல்லைப் 14)

கையக நெல்லிக்கனி — உள்ளங்கை நெல்லிக்கனி (தொண் சத 21)

கையகப் படல் — கைக்குட்படல்

கையகப் படுத்தல் — ஒப்புக்கொடுத்தல், பிடித்தல்

கையகப்படுதல் — கைக்குட்சேருதல்

கையகம் நீண்டார் — கையினை நீட்டித்தருபவர் (திருமந் 1891)

கையகம் புகுதல் — கையில் வருதல்

கையகராதி — கைக்கு அடக்கமாயுள்ள, அளவில் சிறிய அகராதி நூல்

கையகல்தல் — நீங்குதல் (தணி பு 10—19), புடை பெயர்தல் (பு வெ 9)

கையகலநிலம் — சிறிதுநிலம் (காவேரித் 24)

கையகலம் – கையின் அகல அளவு

கையகலமான இடம் — குறுகிய இடம்

கையகலல் — இடம் விட்டு நீங்கல் (பு வெ 35)

கையகலுதல் — விட்டு நீங்குதல், கடத்தல்

கையகன்றோடுதல் — கைக்குத்தப்பி ஓடுதல் (காஞ் 58 22)

கையச்சுப்பொறி — கையால் அச்சிட உதவும் பொறி

கையசதி—கைசலித்தல்

கையஞ்சலி — கையால் வணங்கல் (ஓற்மும்)

கையடக்கம் — கைக்குள் அடங்கக்கூடிய பொருள் கைக்கு இலேசானது

கையடி — களத்தில் கையாலடித்த தானியம்

கையடித்தல் — கையில் அடித்து உறுதி கூறுதல், விலைக்கு விற்றல், கைக்கூட்டித் தட்டுதல்

கையடித்துக் கொடுத்தல் — சத்தியம் செய்வதற்காகக் கையால் அடித்தல் (நெஞ்சின்)

கையடித்துச் சத்தியம் செய்தல் — கையடித்துக் கொடுத்தல்

கையடிப் படுத்துதல் — ஆட்சிக்குட்படுத்துதல்

கையடிப் படுதல் — கைக்குள் அகப்படுதல், வசப்படுதல், ஒரு பொருள் பல கை கடந்து செல்லுதல்

கையடியுண்ணல் பிறர் கையால் அடிபடல்

கையடுப்பு — கையால் எடுத்துச் செல்லத்தகும் சிற்றடுப்பு

கையடை — அடைக்கலம், அபயம், ஆதரவு; அடைக்கலமாகத் தரும் பொருள் (க 2-1-84)

கையடைக்காய் — வெற்றிலை பாக்கு

கையடை கொடுத்தல் — அடைக்கலங் கொடுத்தல்
கையடைத்தல் — பிறர்கையில் ஒப்புவித்தல்; கடனைத் தீர்த்தல்; குத்தகைக்கு விடல்.
கையடைப்பாக்கல் — வசமாக்கல் (திவ் 3565)
கையடைப்பு — கைவசமான பொருள், ஒப்படைத்தல், ஒப்பித்த பொருள்
கையணி — வளையல் (வண்டு தூ 375)
கையதாயது — கிட்டியது (இரட்ச 20-78)
கையது — கையகத்தது (பு 69-1)
கையம்பு — அம்பு
கையம்புயம் — கையாகிய தாமரை (வில் 1-196)
கையமர்த்துதல் — உட்காருமாறு கையால் குறிப்புக் காட்டல், அமைதியுண்டாக்குதல்
கையமுது — அர்ச்சனை, சோறு (இங்கி 9)
கையசைத்தல் — கையமர்த்தல் (சௌமியன் 5)
கையயர்தல் — கைசோர்தல் (இரட்ச2 1-314), களைத்தல்; நிலைமையில் தாழ்தல்
கையயர்ந்து போதல் — சலித்தல்
கையரிக்கொண்டு — தேடி (நள 2-112)
கையரிக் கொள்ளல் — கேடுதல், சேர்த்திக் கொள்ளுதல், வாரி அரித்துக்கொள்ளுதல் (புடை மும்4; சிந் 38)
கையரித்தல் — அள்ளிக் கொள்ளல், கூடச் சேர்த்துக் கொள்ளல் (நைட 6)
கையரியம் — இரும்பு
கையரிவாள் — சிற்றரிவாள்
கையரையன் — அரைக்கையன், வஞ்சகன்
கையலகு — வீட்டுக் கூரையின் கைமரம்

கையலப்புதல் — உணவு உண்ணும் முன்னும் உண்ட பின்னும் கையை நீரால் கழுவுதல்

கையலுத்தல் — கைசலித்தல், கையயர்தல், களைத்தல்; மறுத்தல்

கையலைச்சு (ப்போரான்) - கைவீசிப்போகிறான், (கிரா 211

கையலைத்தல் — துன்புறுத்தல், வருத்துதல்

கையழிதல் — செயலறுதல் (பு240)

கையருகல் — குட்ட நோயால் கை குறைந்து வரல் (உபதே 5-83

கையழுத்தக்காரன் — உலோபி

கையழுத்தம் — உலோபம், கஞ்சத்தனம்

கையளவு (இடம்) — சிறிதளவு (இடம்), கைப்பிடி அளவு

கையளித்தல் — கையிற் கொடுத்தல் (இரட்ச 22-6), ஒப்புக் கொடுத்தல், அளித்தல்

கையளிப்பு — பிறரிடம் ஒப்புவித்தல்

கையற்றார் — கையில்லாதவர்

கையறம் — வசைக்கவி

கையறல் — செயலறல், கைசோர்தல்; ஒழுக்கமின்மை

கையறவு — செயலறவு (பு 36) உதவியின்மை, சாவு, ஊடல், வறுமை (திருவி 14-2), துன்பம் (பெரி 1489, க ்ஃ-325

கையறிதல் — பழகுதல், செய்யும் முறையறிதல்

கையறிந்தவன் — தொழிலில் அனுபவமுள்ளவன்

கையறி மடமையின் — தன்கைகவல்ல அளவாலே (சி 16-34)

கையறியாப் பேதை — விதி விலக்குகளை அறியாத அறிவிலி (தஞ் உலா 105)

கையறு — கலங்கு, திகை; கையைத் துண்டி செயலறு

கையறு கவலை — கையறும்படி நேர்வதாலுண்டாகும் கவலை (பெரி 2536)

கையறு கிளவி — தலைவியைக் காணச் செல்லும் தலைவனுக்கு ஏற்படும் இன்னல்கள் பற்றிய உரை

கையறுத்தல் — கையைத் துணித்தல்

கையறுத்துக் கொள்ளல் — கையை அறுத்துக் கொள்ளல், பொருள் நட்டமடைதல்

கையறுதல் — கையறுபடல், செயலறல்; மனமழிதல், ஒழுக்கம் நீங்குதல், இறத்தல், தளர்வுறல். வற்று தல் (நாலடி 371)

கையறுதாள் — கையால் அறுக்கும்படியான நெல் வைக்கோல்

கையறுதி — கையறுதியில் விற்கப் பட்ட பொருள், அறுதியாக விற்றல், முற்றும் கைவிட்டு நீங்குதல்

கையறுதியாய் விடுதல் — எல்லா நம்பிக்கையையும் விட்டு விடல், மருத்துவர் கைவிட்டு விடல்

கையறு நிலை — பிறர் பிரிவுக்காக இரங்கி வருந்திப் பாடும் பாடல், செயலற்ற நிலை

கையறு நெஞ்சம் — செயலறவினையுடைய நினைவு (சி 4-57)

கையறுப் புண்ணல் — கையறு நிலை யடைதல் (திரி புர ஸ்தோ 6-10)

கையறை — ஒழுக்கமின்மை, செயலின்மை; வருத்தம் (தணி புகளவுப்)

கையறைதல் — கைதட்டுதல் (அரி 9-45)

கையறையன் — ஒழுக்கமில்லாதவன்

கையாக்கம் — கைராசி, கைநன்மை, கைலயம்

கையாட்சி — கைப்பழக்கம், தொழில், ஒருவன் வச மானது, அனுபவத்தால் நன்மையெனத் தெளிந்தது, கையாளும் உரிமை

கையாட்டல் — விடைபெறுதற் கடையாளமாகக் கையை ஆட்டுதல்; போது மென்ற குறிப்புக்காட்டல்

கையாட்டுதல் — கையை அசைத்தல்; கையாட்டல்

கையாடு — களவாடு; பறி; கற்பழி; பெண்டாள்

கையாடுதல் — திருடுதல்: நம்பிக்கைக்கு மாருய்ப் பிற பொருளை அபகரித்தல்; எடுத்து வழங்குதல்; வழக்கப் படுத்தி வருதல்.

கையாண்ட நடை — கைக் கொண்ட நடை

கையாணி — சட்டத்தில் அடிக்க உதவும் ஆணி

கையாப்பு — கைக்கட்டை (பெ1-56-134)

கையாப்புண்ணல் — கைகள் கட்டப்பட்டிருத்தல்(நீல 196)

கையாமலகம் — உள்ளங்கை நெல்லிக்கனி (தத் மு 1-25)

கையாயிரத்தன் — ஆயிரங் கைகளையுடைய வாணாசுரன்

கையார — கைப்பிடியாய் (வையா பள்)

கையாரக்கொடு — கைக்குத் திருப்தியாகக் கொடு; கைநிறையக்கொடு

கையால் அழுத்தல் — கையால் அமுக்குதல்

கையால் அள்ளுதல் — கையால் முகத்தல்

கையால் ஆக்குதல் — கையால் செய்தல்

கையால் ஆனமட்டும் பார்த்தல் — முடிந்தவரை முயன்று பார்த்தல்

கையால் இறைத்துப் போடல் — கைகளால் வாரி இறைத்து விடல்

கையால் உழைத்து உண்ணல் — கைப்பாடுபட்டுத் தின்னல்

கையால் எடுத்தல் — கைகளில் எடுத்துக் கொள்ளல்; கைகளால் அணைத்துக் கொள்ளல்

கையால் எழுதுதல் — கையால் வரைதல்

கையால் எற்றுதல் — கையால் அடித்தல்

கையால் எறிதல் — கையால் எடுத்து வீசியெறிதல்

கையால் ஏந்துதல் — கையில் வாங்கி வைத்துக் கொள்ளல்

கையால் சேர்த்துப் பிடித்தல் — கைகளால் பற்றிக் கொள்ளல்

கையால் சைகை செய்தல் — கையால் குறிப்புக் காட்டுதல்

கையால் தீண்டுதல் — கையால் தொடுதல்

கையால் தேய்த்தல் — கைகளால் உரைசல்

கையால் தொடுதல் — கையால் தீண்டுதல்

கையால் தொழுதல் — கைகூப்பித் தொழுதல்

கையால் பிடித்துத் தடுத்தல் — கைமறித்துத் தடுத்தல்

கையால் மருவுறல் — கையால் தொடல் (வில் 1-228)

கையால் மொள்ளுதல் — கைகளில் நீர் முதலியன அள்ளுதல்

கையால் வேலை செய்தல் — கைகளினால் வேலை செய்தல்

கையாலாகாத்தனம் — கையாலாகாத் தன்மை (இரு நண்பர்கள் 24)

கையாலாகாதவன் — ஒன்றுக்கும் பயன் படாதவன்; எதையும் செய்யத்திறமையற்றவன்; செயலற்றவன்

கையாலேயே செய்தல் — எந்திர உதவியின்றிக் கையினுலேயே வேலே செய்தல்

கையாள் — குற்றேவலாள்; தொண்டு செய்வோன்; உடந்தையானவன்; உதவிசெய்வோன்; கூலியாள்

கையாளி — துட்டன்; மாய் மாலன், சமர்த்தன்

கையாளித்தல் — ஒப்படைத்தல் (சாச); வசமாக்கல்

கையாளுதல் — எடுத்து வழங்குதல், கையால் பயிலுதல், வழக்கதிதுக்குக் கொண்டு வருதல்

கையாளும்முறை — பயன் படுத்தும் முறை

கையாற் சாதல் — ஒருவரால் கொல்லப்படல்

கையாற் பிலைசதல் — கையினுற் பிசைதல்

கையாற்றுதல் — உதவி செய்து இளேப்பாறச் செய்தல்

கையாருக் கொள்ளல் — செயல் முறையாக மேற் கொள்ளல் (நாலடி 382)

கையாறு — ஒழுக்கம், துன்பம், திகைப்பு, கண்ணி வாய்க்கால் (சாச)

கையாறுதல் — இளேப்பாறுதல்; விடாய் தீர்த்தல்

கையகத்தல் — அகன்று நிற்றல்; இழத்தல்; ஒழுங்கு தப்புதல்; அளவு கடத்தல்; மீறுதல்; கையின் நீங்குதல்; கைகடத்தல்

கையிசைதல் — மனம் இணங்குதல்

கையிடல் — தலேயிடல்; செய்ய ஏற்றுக்கொள்ளல்

கையிடுதல் — நேர்படுதல்; தலேயிடல்;

கையிடுப் பயிர்தல் — கையால் குறிசெய்து அழைத்தல் (பு 158)

கையிடை — இலஞ்சம், பரிதானம்

கையிணக்கம் — (மற்போரில்) கையால் குத்துதல்; போர் செய்தல்

கையிணக்கு — கூட்டுறவு (திருமந் 1678)

கையிணை — இரு கைகள் (காஞ் 7-12)

கையிருப்பு — கைரொக்கம்; கையிலுள்ள மொத்தத் தொகை

கையில் அகப்படுதல் — கையில் சிக்குதல்

கையில் அணிதல் — மோதிரம் முதலியவற்றைக் கையில் போட்டுக் கொள்ளல்

கையில் அரைக்காசில்லாதவன் — வறிஞன்

கையில் ஆகாதவன் — கையாலாகாதவன் (ராம நாட 123)

கையில் எடுத்தல் — கையில் தூக்குதல்

கையில் ஒப்படைத்தல் — கையில் ஒப்புவித்தல்; அடைக்கலமாகக் கொடுத்தல்

கையில் கொடுத்தல் — பிறர் கைகளில் வைத்தல்

கையில் சிக்குதல் — கையில் அகப்படுதல்

கையில் தட்டுப்படல் — கையால் உணரப்படுதல்

கையில் தலையை வைத்துக்கொண்டு அழல் — தலை மீது கைவைத்து அழுதல்

கையில் பிடித்திரு — கையில் வைத்துக் கொண்டிரு

கையில் போட்டுக் கொள்ளல் — (பிறரை அல்லது பிற பொருளைத்) தன் வசப்படுத்திக் கொள்ளல்; வசீகரித்துக் கொள்ளல்

கையில் வலுவிருக்கும் வரை — கையில் பலமுள்ள வரை

கையில்லாத சட்டை — கைக்குரிய துணி வைத்துத் தைக்காத சட்டை:

கையில்லாத முடவன் — முடவன்

கையில்டித்துக் கொடுத்தல் — கையில் அடித்துச் சத்தியம் செய்தல்

கையிலடித்துச் சத்தியம் செய்தல் — கையிலடித்துக் கொடுத்தல்

கையிலான் — கைமுதல் இல்லாதவன்; அசக்தன்(திவ் 1095)

கையிலி — கையில்லாதவன்

கையிலிருக்கும் பணம் — கையிருப்புப் பணம்

கையிலெடுத்துக் கொண்ட காரியம் — செய்யத் தொடங்கிய வேலை

கையிலேந்தல் — கையில் தாங்குதல்

கையிழத்தல் — கையை இழந்து விடல், காணாமற் போதல்; கைதவறல்

கையிளக்கமில்லாதவன் — உலோபி; கஞ்சன்

கையிளகுதல் — கொடுக்கச் சம்மதித்தல்

கையிளைத்தல் — கைசலித்தல்; செல்வநிலை தளர்தல்

கையிளைத்தவன் — வறுமையுற்றவன்

கையிளைத்துப் போதல் — வறுமையடைந்து விடல் (மங் காதல் 46)

கையிற் சாதல் — பிறர் கையாற் சாதல்

கையிறக்கம் — கையை விட்டிறங்குதல்; கொடை

கையிறங்காமை — உலோபத்தனம், பிசுனம்

கையிறங்குதல் — கொடுக்க இணங்குதல்; குறிகாட்டல்

கையிறுக்கம் — உலோபம்

கையிறுகுதல் — கையிறுக்கம் செய்தல்

கையிறை — கைரேகை, கைவரை

கையின் நாகம் — யானை (க 6—1279)

கையின் மாட்சி — கைத்திற மாண்பு; வேலைப்பாடு (கோமதி பி த 100

கையினால் — முயற்சியினால் (நாலடி 193)

கையீடு — பணம் செலுத்திய ரசீது (சாச

கையுங்களவுமாய்ப் பிடித்தல் — திருடனையும், திருடிய பொருளையும் பற்றுதல்

கையுங் காலும் அசந்து போதல் — கையுங் காலுஞ் சோர்ந்து போதல்

கையுங் காலும் சும்மாயிராதவன் — குறும்புக்காரன்; போக்கிரி

கையுங் காலும் நடுங்குதல் — அச்சத்தால் கையுங் காலும் நடுக்கம் எய்துதல்

கையுடன் கூட்டி வரல் -- (தன்னோடு) கூடக் கூட்டி வருதல்

கையுடனே — உடனே; கையோடு

கையுடை — கையுறை; லகக் கவசம்

கையுடைந்து நிற்றல் — ஆதரவின்றி நிற்றல்

கையுண்ணுதல் — பிறர் கைபார்த்து உண்ணுதல்

கையுதயம் — பிரசவத்தில் குழந்தையின் கை வெளிப்படல்

கையுதவி — ஆளுதவி, துணையான உதவிப் பொருள், லஞ்சம், சிற்றுதவி

கையுதிர்க் கொள்ளுதல் — விட்டு விலகும்படி கையசைத்துக் குறிப்புக்காட்டுதல்

கையுதிர்த்தல் — கையலைத்தல், உதவி மறுத்தல்

கையுபகாரம் — ஒத்தாசை, கைக்கூலி, உதவிப் பொருள்

கையும் பிடியுமாகப் பிடித்தல் — கையுங் களவுமாய்ப் பிடித்தல்

கையும் மெய்யுமாய்ப் பிடித்தல் — ஒருவனைத் தீய செயல் செய்யும் போது பிடித்து விடல்

கையுயர்த்துதல் — கையெடுத்தல்; கையோங்குதல்

கையுயர்தல் — கையோங்குதல்

கையுருவிச்சுவர் — கைப்பிடிச் சுவர் (சாச)
கையுலக்கை — சிற்றுலக்கை
கையுழற்சி — கைநடுக்கம்
கையுழற்றி — கைந்நடுக்க நோய்; கையாட்டம்
கையுழைப்பு — வேலை; கைம் முயற்சி
கையுள் — கையின் உட்பக்கம்; உள்ளங்கை
கையுறப் பெறல் — கையில் கிடைக்கப் பெறல்
கையுறல் — கைப்படுதல்
கையுருப் பொருள் — கைக்குக் கிடைக்காப் பொருள்
கையுறினும் — கையகப்படினும் (நாலடி 300)
கையுறுதல் — தீண்டுதல்; கைவசமாகக் கிடைத்தல்; புணர்தல்
கையுறுதி — கடனுக்கு வைக்கப்படும் ஈடு
கையுறை — கைக் காணிக்கை (விபு 40-3; பெரியோர்களைக் காணச் செல்லும் போது அவர்களுக்கு அளிக்கும் மானியம் (சாச), கைக்கவசம், கையுடை, கைக்காணி, இலஞ்சம்
கையுறைப் பொருள் — கையுறையாகக் கொடுக்கும் பொருள்
கையுறையெழுதல் — திருமணம் முதலியவற்றில் கொடுக்கின்ற மொய்க்கணக்கு எழுதுதல்
கையூக்கம் — கைம்முயற்சி; வல்லமை
கையூட்டு — இலஞ்சம்; கையுறை
கையூம்பல் — கையைச் சப்புதல் (சாசனச் 94)
கையூற்றம் — கையூக்கம், கைம்முயற்சி
கையூறுதல் — மேகத்தால் கைஊறுதல்
கையூன்றி எழுதல் — நிலத்தில் கையினை ஊன்றி எழுதல்

கையூனம் — கையில் ஏற்பட்ட குறை

கையெடுத்தல் — கும்பிடுதல் (பண தூ 88, மேல் மலை மக்கள் 31), சத்தியம் பண்ணுதல், சம்மதத்திற்கு அடையாளமாகக் கைஉயர்ததல்

கையெடுத்துக் கும்பிடல் — கைகூப்பி வணங்குதல் (பாஞ்சாலி 271-88), வேண்டா மென்று கூறுங் குறிப்பு

கையெரிதல் — கையில் எரிச்சல் உண்டாதல்

கையெரிவு — கையெரிச்சல்

கையெழுத்தாதல் — ஒப்பம் செய்து முடித்தல், உடன் பாடாதல்

கையெழுத்திடல் — கையெழுத்துப் போடல்

கையெழுத்து — கையால் எழுதும் எழுத்து, தன் பேரெழுத்து, கைரேகை, தீர்மானித்து எழுதிக் கொடுத்த பத்திரம் (சாச)

கையெழுத்துக் கலைகிற வேளை — மாலைப்பொழுது (அஞ்சலி 153)

கையெழுத்துக் கால் எழுத்து இல்லாத கடிதம் — மொட்டைக் கடிதம் (கல்கி)

கையெழுத்துப் படிதல் — கையெழுத்துத் திருந்தியமைதல்

கையெழுத்துப் பத்திரம் — கையெழுத்திட்ட பத்திரம்

கையெழுத்துப் பிரதி — கையால் எழுதிய நூல், ஓலைச் சுவடி

கையெழுத்துப் போடுதல் — கையெழுத்திடுதல், கையொப்பமிடுதல்.

கையெழுத்து வைத்தல் — கையெழுத்துப் போடுதல், கையொப்ப மிடுதல், கைச்சாத்திடல்

கையெழுத்தோலை — எழுதிக் கொடுத்த பத்திரம்; கடன் சீட்டு (சாச)

கையெறி காலெறி — வலிப்பினுல் கைகால்களை உதைத்துக் கொள்ளல்

கையெறிதல் — கைகொட்டுதல், உறுதி கூறிக் கை யடித்தல், கோபத்தால் கைவீசுதல், கைதட்டு தல் (மதுரைக் 419)

கையெறிந்து நகுதல் — கைகளை ஒன்ரேடொன்று தாக்கிப் பரிகாசமாகச் சிரித்தல் (க 3- 886, சிந் 582)

கையேடு — சிறிய ஏட்டுப் புத்தகம், நாள்வழிக் கணக்கு; பெருஞ் செலவிற்கு விவரங் காட்டுந் தனிக் கணக்குப் புத்தகம், சிற்றேடு

கையேந்தல் — இரந்து பெறல், ஏற்றல்

கையேந்தி — கையேந்தி இரப்பவன்

கையேந்திக் கொள்ளல் — கைகளில் வாங்குதல்

கையேந்தி நிற்றல் — பிச்சை பெறுதற்குக் கைவிரித்து நிற்றல்

கையேந்திவாழ்தல் — இரந்து வாழ்தல்

கையேந்துதல் — யாசித்தல், இரத்தல்

கையேற்பு — கையால் ஏற்றல், அறுவடை முடிந்த பின் வண்ணுன், நாவிதன் முதலியோர்க்குக் கொடுக்குங் கூலி, கைப்பிச்சை, பிச்சைக்காரர் வரி (சாச, அரங் சி 25)

கையேற்றம் — செல்வப்பெருக்கான நிலை

கையேற்றல் — கையேந்துதல் (திவ் 2072)

கையேறுதல் — கைக்குக் கிடைத்தல், ஏற்றுக் கொள் ளுதல்

கையை — தங்கை

கையை அகலவிரித்தல் — கையில்ஒன்றும் பணமில்லை என்று கூறுதல் (உலகம் 57)

கையை ஆட்டி ஆட்டிப் பேசுதல் — மேடையில் பேசும் போது பலமுறை கையை ஆட்டுதல்

கையை ஆட்டிக்கூப்பிடல் — கையால் சைகை செய்து அழைத்தல்

கையை இழுத்துக் கொள்ளல் — கையை எடுத்துக் கொள்ளல்

கையை இறுக்கிக் குத்தல் — கையை முட்டித்துக் குத்துதல்

கையை இறுக மூடிக் கொள்ளல் — கையைக் கெட்டி யாக மூடிக் கொள்ளல்

கையை உதறுதல் — கையை(வலிமிகுதியால்) உதறிக் கொண்டிருத்தல், கைநெட்டியெடுக்க உதறுதல்

கையை உயர்த்தல் — கையைத் தூக்குதல்

கையை ஊன்றி எழுதல் — நிலத்தில் கையை ஊன்றி எழுந்திருத்தல்

கையை ஊன்றுதல் — கையைப் படிய வைத்தல்

கையை எடுத்துக் கொள்ளல் — கையை இழுத்துக் கொள்ளல்

கையை ஓங்குதல் — அடிப்பதற்காகக் கையை உயர்த்தல்

கையைக் கட்டிக் கொண்டிருத்தல் — சும்மாயிருத்தல், வேலை செய்யாதிருத்தல்

கையைக் கட்டிக் கொண்டுநிற்றல் — அடக்கமாக நிற்றல்

கையைக் கட்டுதல் — ஒன்றும் செய்யாதபடி தடுத்தல்

கையைக் கடித்தல் — கையினைக் கடித்தல், எதிர் பார்த்ததற்கு மேல் செலவாதல், நட்டமாதல்

கையைக் கழுவி விடல் — விவகாரத்திலிருந்து நழுவி விடல்

கையைக்குறுக்குதல் — செலவைக் குறைத்தல்
உலோபஞ் செய்தல்
கையைக் கெட்டியாக மூடிக் கொள்ளல் — கையை
இறுக மூடிக் கொள்ளுதல்
கையைச் சுருக்குதல் — உலோபமாயிருத்தல்
கையைச் சொடுக்குதல் — கை விரல் நெட்டி முறித்தல்
கையைத் திமிறி விட்டு ஓடுதல் — பிடிப்பினின்று
கையை விடுவித்து ஓடுதல்
கையைத் திறத்தல் — கையை விரித்தல்
கையைத் துண்டித்தல் — கையை வெட்டுதல்
கையைத் துணித்தல் — கையை வெட்டுதல்
கையைத் தூக்குதல் — கையை உயர்த்துதல்
கையைத் தொடுதல் — கை தொடுதல்
கையை நசுக்குதல் — கையை அமுக்குதல்
கையை நறுக்குதல் — கையை வெட்டுதல்
கையைநீட்டுதல்— (மருத்துவரிடம்)
கையைக் காட்டுதல், அடிக்கச் கையை ஓங்குதல்
கையைப் பலப்படுத்துதல் — பிறர்க்கு ஊக்கமும்
உதவியும் அளித்தல்
கையைப் பற்றி இழுத்துக் கொண்டு வரல் — கையைப்
பிடித்து கொண்டு இழுத்து வரல்
கையைப் பார்த்தல் — கைரேகை பார்த்தல்,
கைநாடி பார்த்தல் (புருஷர்களுக்கு 78)
கையைப் பிசைதல் — தயங்குதல், கலக்கத்தினால்
கையோடு கை சேர்த்துக் கொண்டிருத்தல்
கையைப் பிடித்தல் — திருமணம் செய்தல், கையைப்
பிடித்து இழுத்தல், கையைக் கடித்தல், வேண்டா
மென்று தடுத்தல் (உலகம் 35)

கையைப் பிடித்து அழைத்துச் செல்லுதல் — கையைப் பற்றிக் கூட்டிச் செல்லுதல்

கையைப் பிடித்து இழுத்தல் — தீய நோக்கத்தோடு ஒருத்தியைக் கைப்பற்றி அழைத்தல்

கையை மடக்குதல் — கை விரல்களை மடக்குதல்

கையை மடித்தல் — முன்னங் கையைத் தோள் பக்கமாகச் சேர்த்தல்

கையை முகவாயில் ஊன்றுதல் — கவலையுடனிருத்தல்

கையை முகிழ் செய்தல் — கை குவித்தல் (சுந் பி 94)

கையை மூடிக் கொள்ளல் — கைவிரல்களை மூடிக் கொள்ளல்

கையை வாங்கிப் போடல் — கையை வெட்டி விடல்

கையை வாங்கி விடல் — பிடிப்பிலிருந்து கையை விடுவித்தல் (கன்னன் பாட்டு 17)

கையை வாங்குதல் — கையை வெட்டுதல்

கையை விட்டு ஒழித்தல் — கையிலிருந்து விடுவித்தல்

கையை விட்டு ஒழிதல் — கையிலிருந்து விடுபடல்

கையை விட்டுச் செலவழித்தல் — கையிலிருந்து செலவிடல்

கையை விட்டுத் தோண்டுதல் — கையை உள்ளே போக்கித் தோண்டுதல்

கையை விட்டுப் போதல் — கையிலிருந்து விலகிப் போதல்

கையை விரித்தல் — கையை விரித்துக் காட்டல், உதவி செய்ய முடியாது என்று மறுத்தல், இல்லை எனல், ஏமாற்றல்

கையை விரித்து விடல் — நம்பிக்கையுடனிருந்தவரிடம் இல்லை என்று சொல்லிவிடல், எதிர் பார்த்ததைக் கொடுக்காமல் விட்டுவிடுதல்

கையை விலக்கல்—கையை எடுத்து விடல்
கையை வீசிக் கொண்டு வரல் — கையை வீசி வீசி நடந்து வரல், ஒன்றும் கையில் கொண்டு வராது வரல்
கையை வைத்தல்—கைதொடுதல் (பாசம் 3)
கையொட்டி—கைக் குழந்தை, கைப்பிள்ளை
கையொடிதல்—கை ஒடிந்து போதல், ஆதரவு குறைதல், கையொடு கைபிணைத்தல், கையோடு கையைச் சேர்த்தல்
கையொத்துதல்—கைகூப்புதல், அஞ்சலி செய்தல்
கையொப்பம்—கையெழுத்து, கைச்சாத்து
கையொப்பமிடுதல்—கையெழுத்திடுதல்
கையொப்பனை—கையால் செய்யும் அலங்காரம்
கையொப்பு—கையொப்பம், கையெழுத்து [புகழே 5—2—54]
கையொலி—கைந்நொடி, கைதட்டி எழுப்பும் ஒலி
கையொழிதல் — கைதூவுதல், கைவேலை நீங்குதல், கைவிடுதல்
கையொழிந்த போது — தன் வேலை முடிந்த பிறகு (திவ் 3946 ப்ர)
கையொழியாமை — ஒழியாவொழுக்கம், முயற்சி நீங்காமை, ஓயா வேலை
கையொழுக்கம்—கைதூவாமை
கையொற்றி—கையுறுதியில் வைக்கப்பட்ட காணிஈடு, பதிவுறாத ஒற்றி (தனிப்பட்ட ஒத்தி)
கையொறுப்பு—குறைத்துச் செலவழித்தல்
கையோங்கல்—அடிப்பதற்குக் கையை உயர்த்தல்

கையோங்கி நிற்றல், கையோங்கியிருத்தல் — செல்வாக்கு மிக்கியிருத்தல்
கையோங்குதல்—அடிப்பதற்குக் கை நீட்டுதல், செழித்தோங்குதல்
கையோடு—தாமதமின்றி, உடனே
கையோடு அழைத்து வருதல்—உடன் கூட்டிவருதல்
கையோடு கை கலத்தல் — கையோடு கை சேர்தல் [பாரதிதா]
கையோடு கை கோத்தல் — கையோடு கையினைச் சேர்த்துக் கொள்ளல்
கையோடு செய்தல்—உடனே செய்தல்
கையோடு கொண்டுவரல்—கையில் எடுத்துவரல்
கையோடுதல்—வேகமாக எழுதுதல், ஒரு தொழிலில் மனஞ் செல்லுதல்; கைகடத்தல்
கையோடே — உடனுக்குடனே, கைவிடாமல் கையோடு
கையோய்ந்து போதல்-கைசோர்ந்து போதல் (குறிஞ்சி)
கையோலை—ஞாபகச் சீட்டு (திவ் 477 அவ)
கைரம்பம்—கையால் பிடித்து அறுக்கும் சிறு ரம்பம்
கைராசி—கைம்மாட்சி, கைலாபம், கைபடுவதனால் உண்டாவதாகக் கருதப்படும் நன்மை
கைராட்டினம்—கையால் நூற்க உதவும் இராட்டை
கைராட்டு—கையால் நூற்கும் இராட்டை
கைராட்டை—கைராட்டினம்
கைரொக்கம்—கைவசத்திலிருக்கும் பணம்
கைலஞ்சம் — கைக்கூலி, கைப்பரிதானம், கையூட்டு
கைலாகு — கைகொடுத்துத் தாங்குதல்

கைலாகு கொடுத்தல் — அரசர் முதலியவர் நடக்கும் பொழுது மரியாதையாக அவர் கைகளைத் தாங்குதல் உடல் வலியற்றவரைக் கைகொடுத்துத் தாங்கி நடத்தல்

கை வகுத்தல் — சிருட்டித்தல் (காதம் 68); கைகோத்தல்(குமர 364); கையும் அணியுமாக வகுத்தல்; வியூகம் பிரித்தல் (திவ் 3440)

கைவசஞ் செய்தல் — கைப்பற்றுதல்(பிரதாப 40)

கைவசத்தில் வைத்துக் கொண்டிருத்தல் — கையில் வைத்துக் கொண்டிருத்தல்

கைவசப் படல் - கைக்கு அகப்படுதல் (குற் பு 5 - 27)

கைவசப் படுதல் — கையகப் படுதல்

கைவசம் — கைக்குட்படல்; சுவாதீனம்; வசமான பொருள்

கைவசம் பண்ணிக் (செய்து)கொள்ளல் — தன் வசப் படுத்திக் கொள்ளல்

கைவசமாக்குதல் — கைக்கு வரச் செய்து கொள்ளல்

கைவசமாகுதல் — கைவசப்படல்

கைவசமில்லை — கையிலில்லை

கைவட்டகை — பாத்திரவகை(சாச)

கைவட்டணை — கையாற் செய்யும் அபிநயம்

கைவட்டி — சிறிய ஓலைப் பெட்டி

கைவண்டி — கையால் இழுக்கும் வண்டி

கைவண்டு — கைவளை(பதி 7-99; ஞான 299, ஆரு ருலா 447, சங்கரஉலா 20)

கை வண்ணத்தொழில் — கை நுட்பத் தொழில்

கைவண்ண நெல்லிக்கனி — உள்ளங்கை நெல்லிக்கனி ( அருட் 1-5-5)

கைவண்ணம் — திருமுகம், தூதோலை(உறை பு)
கைவண்மை — கொடைத்திறன் (454)
கைவணக்கம் — கவிகை, கொடை(கு 390 கா உரை)
கைவணம் — கைந்நொடிப்பொழுது (புனபு 18-43 கைவரிசை அ 15-4-60)
கைவந்த உண்மை — தெளியப்பட்ட உண்மை
கைவந்த கலை — எளிதாகப் பழக்கப்பட்ட கலை
கைவந்தவன் — நன்கு பழகினவன், தேர்ந்தவன்
கைவந்தி — தோளின் கீழே கையிலணியப்படும் ஓரணி கைவங்கி
கைவயிற் பயிர்தல் — கையினுல் அழைத்தல் (பெ 4-1 168)
கைவயின் நெல்லியங்கனி — உள்ளங்கை நெல்லிக்கனி (புல பு12-58)
கைவர்த்தன் — வலைஞன்
கைவர நுகர்தல் — கையார உண்ணல் (வில்1-278)
கைவரப்பு — தற்காலிகமாக இட்ட சிறு மண் அணை
கைவரப்பெறல் — கையில் கிடைக்கப் பெறல்
கைவரல் — பழக்கமுறல்
கைவரிசை — திறமை, கொடை, சீட்டாட்டத்தில் முதலில் சீட்டை இறக்கும் உரிமை
கைவரிசை(யைக்)காட்டுதல் — அதிகாரம் அல்லது பலத்தைக் காட்டுதல்
கைவருதல் — பழக்கமாதல், எளிதாதல், சாத்தியமாதல் (கற்ப சத 11), வல்லவனுதல்
கைவருந்தி உழைத்தல் — கைநோகப் பாடுபடல் (பாரதி 2-62-4)

கைவருந் தொண்டு — பழகி வந்துள்ள தொண்டு (க அலங் 84)
கைவரும்—வந்து சேரும் (இரட்ச 7-14)
கைவரை—கையிறை; கைரேகை; கைவரி; கையளவில்; கையில்; யானை (திருமலை வி வெ 23; வேங்கட பு 38-9; பாக பு 5-1-33)
கைவரைதல்—கையால் எழுதல் (வள்ளி கட 3)
கைவரை நூல்—இரேகை நூல்
கைவல்—கைத்தொழில் வல்ல [பு வெ 137]
கைவல்லபம்—சாமர்த்தியம்; கைச் சமர்த்து
கைவல்லான்—தேர்ச்சி பெற்றவன்; கைதேர்ந்தவன்; கைப்பழக்கமுள்ளவன்
கைவல்லார்—ஆற்றலுடையவர் (கூர்ம 1-29-133
கைவலம்—கைவன்மை (அம்பர் 113); கைந்நலம்; மோட்சம்; கைந்நன்மை
கைவலான்—கைத்தேர்ந்தவன் (பெரிய 162)
கைவலிக்க வேலைசெய்தல்—கடுமையாக வேலைசெய்தல்
கைவலித்தல்—கைந்நோதல்
கைவலிந்து—கைகடந்து (திவ் 3501)
கைவலிப்பு—கைக்கடிப்பு, ஒரு நோய், கைக்குக்காணும் குரக்கு வலி
கைவலுத்தல்—அதிகாரம் மிகப் பெறல்
கைவலை—சிறுவலை
கைவழக்கம்—கைவழங்குதல்; கைவிளக்கம், கையின் கொடைக்குணம், கைப்பழக்கம்
கைவழங்கல்—கையால் ஈதல்
கைவழங்காமலிருத்தல்—முடமாயிருத்தல்

கைவழங்குதல்—கையேவுதல், இழவுக்குக்கை கொடுத்
தல்
கைவழி—யாழ் (பு149),ஒருவன் கைவசமாக அனுப்பிய
பொருள், கைராசி
கைவழுவுதல்—கை நழுவுதல்
கைவளப்பம் –கொடை
கைவளம் — கைப் பொருள், கொடை, கைவண்மை
கைவளர் — பக்கத்தே வளரும் (கூர்ம 1-26-82)
கைவளர்க்கும் அழல் — கையால் வளர்க்கும் தீ
(திவ் 1654)
கைவளர்த்தல் — போற்றப்பட்டு வளர்த்தல்,
பழக்கமுறுதல், காரியங்கை கூடுவித்தல்
கைவளர்தல் — போற்றப்பட்டு வளர்தல், பழக்கமுறு
தல், பரவுதல் (பு வெ 6-5
கைவளர்ந்த — கைதேறின (திவ் 1128)
கைவளர — பரவ (சாச)
கைவளை — கையிலணியும் வளை (பரி 7-46,)
சாநதுக்காரை (ஒருவகை அணி) சி 6-92,
கடகம், சிறுவளை; கைத்தொடி (குறுந் 371)
கைவளையார் — கைவளையணிந்த மகளிர் (பு வெ 22)
கைவற்றுதல் —காசில்லாமல் போதல் [நீதி கும்மி 598]
கைவறளுதல் — பொருளின்றி நிலைமை தாழ்தல்,
கையிற் பொருளறுதல்
கைவன்மை — கைவல்லபம், கைச்சாமர்த்தியம்
கைவாக்கு — கைவழக்கம், கைராசி, கைவாகு
கைவாக்கும் குயம் — கைகளால் தாக்கப்படும் வாத்
தியம் [திருவி 4-26]

கைவாகு — கையால் ஆளுதற்குரிய நிலை, கைராசி, கைப்பழக்கம்
கைவாங்கல் — வெட்டல், உள்ளுக்கி மூத்தல்
கைவாங்கி உண்ணுதல் — நிறைய உண்ணுதல்; கை வாங்கிப் பேசுதல் (மண் பொம்மை 65)
கைவாங்குதல் — விட்டு நீங்குதல் (திரிகடு 4), கையை வெட்டுதல், கையை எடுத்துக்கொள்ளல்
கைவாசி — கைராசி, கைந்நன்மை, கைச்சித்தி, சந்தை விற்பனைக்கு வந்த நெல்போன்ற பண்டங்களில் ஒரு கையெனக்கொள்ளும் உரிமை
கைவாய்க்கால் — சிறுவாய்க்கால்
கைவாய்ச்சி — சிறிய ஒரு மரஞ்செதுக்குங் கருவி
கைவாய்ப்பு — கைம்மாற்றுக் கடன்
கைவாய்ப் பொருள் பெறல் — கையில் பொருள் பெறல்
கைவாய நாகம் — யானை (திணைமாலை 150 - 13)
கைவாரங் கொள்ளுதல் — அதிகார தோரணை கொள்ளு தல், ஒரு நிகழ்ச்சியை நிறுத்துமாறு ஓகோ என்று கத்திக் கையை உயர எடுத்து வீசுதல்
கைவாரணம் — கைவளை (சிறு உலா 177)
கைவாரம் — கரகோஷம், கையொலி (கலை சி வெ 100)
கைவாராப் பொருள் — கிடைக்காத பொருள் (சிறு பஞ் 82)
கைவாரிகள் — அரண்மனையில் நின்றேத்துவார்
கை வாழ்வளையார் — இளைய மகளிர் (ச 64-7)
கை வாள் — சிறுவாள், சிறு கத்தி
கைவாளப்பை — அடைப்பை, சிறு பை
கைவாளை, கைவாளைப்பை — அடைப்பைப்பை

கைவாறு — கைக்கு வாய்ப்பு, தக்கசமயம்

கைவிசேடம் — கைவாசி, கைராசி, கைவாகு (அறப் சத 33)

கைவிசை — கைம்முறை, கைவேகம்

கைவிஞ்சுதல் — அளவு கடத்தல், கைகடத்தல்

கைவிட்டம் — வீட்டின் மேல் குறுக்கு விட்டம்

கைவிட்டுச் சோதித்தல் — கைவிட்டுப் பார்த்தறிதல்

கைவிடப்பட்டவன் — கைதுறக்கப்பட்டவன், ஒதுக்கி வைக்கப் பட்டவன்

கைவிடல் — நீங்கல், விட்டொழிதல், தள்ளிவிடல், கையால் விடல், எறிதல், உதவி மறுத்தல்

கைவிடுதல் — கைவிட்டு விடுதல், தள்ளிப் போடுதல்; கையில் தருதல், கையால் விடுதல், ஒப்படைத்தல், கையை உள்ளே விடுதல்

கைவிடுபடை — எறிவேல்

கைவிடுமாற்றம் — பிரசவத்தில் பெண்குறிக்குள் விரலை விட்டுப் பிண்டத்தை மாறச் செய்தல்

கைவிதிர்த்தல் — மறுப்பு, அச்சம், புகழ்ச்சி, வியப்பு என்பவற்றின் குறியாகக் கையை அசைத்தல், கைந் நடுக்கமடைதல் (க 3-928, சிந் 1115, கலிங் 173)

கைவிதிர்ப்பு — கைநடுங்கல் (பாக பு 11-18-36)

கை வானம் பார்த்து விளையும் புழுதி விதை (ப்பு

கைவிதையூன்றல் — கையால் விதையை ஊன்றுதல்

கைவியர்வை — கையில் அடிக்கடி உண்டாகும் வியர் (வை

கைவிரசு — கைவேகம், கைவிசை

கைவிரட்டி — கையால் தட்டிய விராட்டி
கைவிரல் — கையின்கண் உள்ள விரல்
கைவிரல் பிசைதல் — கைகளைப் பிசைதல் (பெ 1-47)
கைவிரல் மோதிரம் — கையின்கண் உள்ள மோதிரம்
கைவிரலால் சைகை செய்தல் — கைவிரலை அசைத்துக் குறிப்புக் காட்டல்
கைவிரலைக் கடித்தல் — வியப்பு, வெறுப்பு இவற்றைக் காட்டக் கைவிரல்களைக் கடித்தல்
கைவிராய — கையிற் பொருந்திய
கைவிரித்தல் — கைகொடுத்தல், மறுத்தல்
கைவிரித்துவிடல் — இல்லை எனல், ஏமாற்றிவிடல், நம்பிக்கை இழக்கச் செய்தல், எதிர்பார்த்ததைத் தராது விடல்
கைவிரிப்பு — ஏமாற்றம் செய்தல்
கைவிரைவு — கையினுல் விரைந்து தொழில் செய்தல்
கைவிலக்கமாதல் — மாதத் தீட்டாதல்
கைவிலக்கு — சூரிய கிரகணம் கண் கூசாதபடி கையால் இடைப் புகுந்து விலக்குதல், கைவைத்துப் பார்த்தல்
கைவிலக்குதல்—கையை [மேற்படாமல்] விலக்குதல், [கண்ணன் பாட்டு 17]
கைவிலங்கு — கைக்கு இடும் விலங்கு; யானை
கைவிலை — ரொக்கவிலை, அப்போதைய விலை (சரச)
கைவிழல் — பாரிசவாயுவினுல் கையற்றுப் போதல்
கைவிளக்கம் — கைராசி, தொழிலின் தன்மை
கைவிளக்கு—கையில் எடுத்துச் செல்லக்கூடிய விளக்கு, சிறிய விளக்கு (ச 98-7, அப் 2-908)
கைவிளா — ஒருவகைச் சுற்றுநூல்

கைவிளி — எகதட்டி அல்லது கையால் சைகைசெய்து அழைத்தல் (பெரி கண்ணப் 72)

கைவிளித்தல் — கையால் அழைத்தல் (திவ் 702)

கைவினை — கைத்தொழில், கைவேலை (ஆத்திசூடி 40)

கைவினைக்குடி — கைத் தொழில் செய்து வாழ்வோர் (சாச)

கைவினைஞர் — கம்மாளர், செய்கை வல்லோர்

கைவினைத் தொழில் — கைநுட்பத்தொழில்

கைவினையாளன் - தச்சன் (பெ 5-5-3)

கைவிஸ்தாரம் — கைவிற் பன்னம், தாராளம்

கைவிக்கம் — கையின்கண் ஏற்பட்ட வீக்கம்

கைவிச்சன் — பெரும்புளுகன்

கைவிச்சு — அடி, கையின் வீச்சு, மிகுகொடை, கைத்திறம், கையிருப்புத் தொகை, கைவரிசை, கைவீசுதல் (சர நாட 36)

கைவிசி நடத்தல் — கையை விசிக்கொண்டு நடத்தல்

கைவிடு — வட்டு நீங்குதல் (கு 799 உரை)

கைவீணை—ஒருவகை நரம்புக் கருவி, தம்பூரா

கைவெள்ளை — கையின் சதையை வெளுக்கச் செய்யும் ஒரு மேகநோய்

கைவேகம் — கைவிசை, கைவிரசு, கைவிரைவு

கைவேல் - சூலம், கைவிடா வேல்

கைவேலை — கையால் செய்யப்படும் சிறு வேலை, கைத்தொழில், கைச் செய்கை, கையிலிருக்கும் வேலை

கைவேலைப்பாடு — கைவினைத்திறம்

கைவேலையாக இருத்தல் — கையால் வேலை செய்து கொண்டிருத்தல்

கைவேலையைக் காட்டுதல்—கைத்திறமையைக்காட்டு தல்

கைவைத்தல் — ஏற்படுதல், தொடுதல், தொடங்குதல், பிரவேசித்தல், கையை வைத்தல், கைகொடுத்தல், அடித்தல் (உலகம் 112), கற்பழித்தல்

கைவைத்தியம்-அனுபவவைத்தியம், வீட்டு வைத்தியம், கைப்பாகம்

கைவைத்து அழைத்தல் — கைப்பிடித்து அழைத்தல் (ஆய் பித)

கொடிக்கை — வளைந்த கை

கொடுங்கை — வளைந்தகை (நள 174), கபோதகத் தலை, மதலை, கட்டிடத்தின் உறுப்பு (எருக் பு 5-7, நெடு நல்)

கொடைக்கை — ஈகைக் கை

கொடைத்தடக்கை — கொடையுடைய பெரியகை (அப் 3-758)

கோகனத மலர்க்கை — தாமரைக் கை (கலிங் 236)

சிறங்கை — உள்ளங்கையளவு (சர நாட 50-1, குமர 755), கைந்நிறையளவு, கைகொண்ட அளவு

சுந்தரக்கை — அழகிய கை(அரி 12-12)

சூகைக்கை — சூம்பிய கை, சொத்தைக் கை

சூடகக்கை — சூடகம் அணிந்த கை (திருவிசை 192)

சூப்பியகை — சூம்பிப்போன கை

செங்கரம் — சிவந்த கை (மீனு கலி 49, நள 281)

செங்கை — கொடுக்குந் தன்மையுள்ள கை (க சூர்ப்ப 39), அழகிய கை, சிவந்த கை, திருவாதிரை நட்சத்திரம் (சோதிட அ), செம்மையுடைய கை(திவ் 1748)

செங்கைப் பங்கயம் — தாமரைச் செங்கை

செங்கைமலர் கூப்புதல் — தாமரை மலர் போன்று சிவந்த கைகளைக் கோத்துக் கூப்புதல் (ஈட்டி 56)

செங்கையாளன் — அழகான கையை உடையவன் (திவ் 1017)

செம்மலர்க்கை — செந்தாமரை மலர் போன்ற கை (அரி 5-41)

சேரங்கை — உள்ளங்கை

சோராக்கை — ஈயாக் கையன் (முதுமொழி 44)

சோற்றுங்கை—வலக்கை

சோற்றுக்கை — சோற்றுங்கை

ஞானக்கை — ஞானமாகிற கை (திவ் 3100)

தடக்கை — பெரியகை, அகன்ற கை (க 4-97) பெருமையுடைய கை (முருகு 54), வளைந்த கை பெ 3-27-11)

தடக்கைமா — பெரிய கையை உடைய யானை (திவ் 1291)

தடங்கை — பெரிய கை (சுந் 584)

(பிறர்) தலையிலே கைவைத்தல் — அழித்துவிடல், கெடுத்துவிடல்

தளிர் உளங்கை—தளிர் போன்ற கை (பாகபு 10.28.3

தன் கையால் தன் கண்ணைக் குத்திக் கொள்ளல் — தனக்குத் தானே தீங்கு செய்து கொள்ளல்

தன் கையே தனக்குதவி — பிறரை நம்பாமல் தன்னையே நம்பியிருப்பதே நல்லுதவி (பழ)

தாமரைக் கை — தாமரை போன்ற கை (தீவ் 715)

தாமரையங்கை — தாமரை போன்ற அழகிய கை (பெ 3-6-17)

தாராளக்கை — தாராளமாகக் கொடுக்குங்கை

திடக்கை — வலிய கை (காதம் 111)

திருக்கை — அழகிய கை (பண தூ 95)

திருக்கைக் காறை — கடவுளர்க்குச் சாத்தும் கையாபரண வகை

திருக்கை கொட்டி — திருக்கை கொட்டி யோதுவார், திருமுறை யோதுவார்

திருக்கைச் சிறப்பு — ஏனுதிப் பட்டத்திற்கு அறிகுறியாய் அளிக்கும் மோதிரம்

திருக்கை வழக்கம் — கோவிலில் விசேட காலங்களில் தெய்வப் பிரசாதம் வழங்குதல் [சாச], வேளாளத் தலைவர்களின் கொடையைச் சிறப்பித்துக் கூறும் நூல்

திருட்டுக் கை — திருடிப்பழகிய கை

துணைக்கை — ஒன்று கூடின கை, அஞ்சலி பண்ணுங் கை (திவ் 1587)

துதிக்கரம் — தும்பிக்கை (செவ்வந் பு உறை 92)

துதிக்கை — தும்பிக்கை (கலிங் 560)

தும்பிக்கை — யானையின் கை

தும்பிச்சங்கை — துதிக்கை (பே)

துருதுருத்த கைகள் — துருதுருவென்றிருக்குங் கைகள்

துளைக்கை — துதிக்கை

துளைக்கை மா — யானை (வேங்கட பு 41-9, க 6-3581)
தொடிக்கை — வளைக்கை, பேய்க்கை (சி 26-235)
தொடியுலாம் முன் கை — வளை உலவும் (மகளிரின்) முன்கை
தொழிற்கை — தொழில் பெறக் காட்டும் கை (அபிநயம்) (சி 3-18)
தொழுதகை — வணங்குங்கை
தொளைக்கரம் — துதிக்கை (போரூர் சந் 76)
தொளைக்கை — துதிக்கை (அ 8-4-58)
தோளில் கைபோடுதல் — நட்புரிமையினால் நண்பன் தோளில் கை வைத்தல்
தோற்கைத்தளம் — முன்கையிலணியும் தோற்கவசம் (சி 14-170 அரும்)
நட்டாற்றில் கைவிடுதல் — நம்பியவரை நடுவில் கை விட்டுவிடுதல்
நீள்கை — துதிக்கை
நீள்புழைக்கை — நீண்ட துவாரம் பொருந்திய துதிக்கை (காஞ்சிப் 2-13)
நுனிக்கை — விரல் நுனி
நெடுங்கை — நீண்ட கரத்தையுடைய யானை (பு வெ 7-13), துதிக்கை (சிந் 232)
நெடுங்கை நீட்டு — அதிக தூரம் (ஈடு 5-7-1)
நொட்டாங்கை — இடக்கை
நொண்டிக்கை(யன்) — ஒடிந்த கை(யை உடையவன்)
நோன்கை — வலிமையுடைய கை
பக்கக்கை — கைம்மரம்

பங்கய அங்கை —(மகளிரின்) தாமரை போன்ற அழகிய கை

பஞ்சகரன் — ஐங்கரன் (சுப் தோ ம 20)

பதுமக்கை — தாமரை மலர்போன்ற கை (தணிகா பு 61)

பணைக்கை — பருத்த தும்பிக்கை (பித கொத் 2-417)

பணைக்கைமா — யானை (வர பாக 110-58)

பரிதிகரம் — சூரிய கிரணம் [திருவி 1-82]

பருக்கைக்களிறு — யானை (பெரி 1594)

பருஉக்கை — வண்டியச்சின் மேலிருக்குமரம்

பல்வளைக்கை — பலவளைகள் பூண்ட கை

பலத்த கைதட்டல் — பலமான கையார வாரம்

பறிதலைக்கையர் — பறிதலையர், தலையைப் பறிப்பவ (திருவாலவா 37-74)

பணைக்கை — பணைந்துண்டை ஒத்த துதிக்கை (காஞ் 2-11)

பணைக்கைம்மா — யானை (க 6-2030)

பர்ணிக் கிரகணம் — திருமணம் (பிரதாப 16)

பாணி கூப்புதல் — கை கூப்புதல் (வி பு 71-112)

பிஞ்சுக்கரம் — குழந்தையின் கை

பிள்ளைக் கைவளை — குழந்தைகள் அணியும் வளையல் வகை

பிறர்கையை எதிர்பார்த்தல் — பிறர் உதவியை எதிர் பார்த்தல்

பின்கை — பின்னங்கை

பிநாக பாணி — 'பிநாகம்' என்னும் வில்லை ஏந்திய சிவ பிரான்

பிச்சக்கை, பிச்சாங்கை — இடக்கை
புயல்கை — மேகம்போல் குறைவறக் கொடுக்குங்கை
(திவ் 1707)
புழைக்கரம் — துதிக்கை (வளைபித 6)
புழைக்கை — தும்பிக்கை (கருவூர்ப் பு)
புறக்கை — புறங்கை
புறங்கை — கையின் பின்புறம்
புறங்கை நக்கல் —தரித்திரத்தால் வருந்துதல், கையில்
உள்ள தேன் முதலியன நக்கல்
புறங்கை நக்குதல் — தரித்திரம் மிகுதல்
பூங்கரம் — பூப்போலுங்கை (கதி வெ 3)
பூங்கை — அழகிய கை (நன்னெறி 1)
பூட்கை — துளையுடைய கை (பிரபு 22—28);
யானை (க 3 –1028)
பூட்டிய கைகள் — ஒன்றோடு ஒன்று சேர்த்த
கைகள் (க 3—1028)
பூழ்க்கை — புழைக்கை ; யானை
பெண்கை — பெண்பாற் செயல் குறிக்கும்
அபிநயக் கை (சி 3—18 உரை)
பெரிய கை — தாராளமான கை ; பணக்காரன்;
செல்வாக்குள்ள கட்சி
பெருங்கரம் — கோவேறு கழுதை
பெருங்கை — யானை (ச 284–1); பெரிய கை
துதிக்கை (தி 1222)
பெருங்கை மத வேழம் — பெரிய துதிக்கையை யுடைய
மதயானை (ச 69 –4)
பெருங்கை யானை — பெரிய துதிக்கையுடைய யானை

மைந்தளிர்க் கை — மகளிரின் பசிய தளிர் போன்ற
கை (சங்கர 1—130)
பொதுக்கை — பல கூத்துக்கும் பொதுவான அபிநயக்
கைவகை
பொய் பொருந்து கை — துதிக்கை (சி 15—50)
பொற்கை — அழகிய கை (பரிபூர 2—85)
மலர்க்கரம் — பூப் போன்ற கை (கூர்ம 46—16;
அரி 12—23)
புலர்க்கை — பூப் போன்ற கை (க 6—2563)
மழைக்கை — மழை போலக் கொடை
கொடுக்குங் கை
மாரியனையகை — கொடைக்கு மேகத்தை ஒக்குங்கை
(திவ் 3215)
முகிழ்த்த கை—கூப்பிய கை (திருவி 42-21; சிறு 231)
முட்டிக்கை — விரல் மடக்கிய கை
முதற்கை கொடுத்தல் — தலைக் கை தரல்
முரட்டுக்கை — வலிமை வாய்ந்த கை
முழங்கை — மணிக்கட்டுக்கும் தோளுக்கும்
இடையிலுள்ள பாகம்; கையின் மேற்பாகமும்
அதன் கீழ்ப்பாகமும் கூடுமிடம்
முழுக்கைச் சட்டை — கைமுழுதும் மறைக்கும்
சட்டை வகை
முளரிக்கரம் — தாமரைக் கை (போரூர் பித 9—8)
முற்றுக்கை — முதிர்ந்த உடல் (தனி 3-369)
முன்கை — முன்னங்கை (கு 1157, க 6-3797) கைத்
தலம் (வெங் க 16)
முன்கைமுதாரி — முன்கையில் அணியும் வகை (ராமப்
அம் 13)

முன்னங்கை — கையின் முன்பாகமான உறுப்பு, முன்கை
மூளிக்கை — குறையுள்ள கை, அறுபட்டகை
மொண்ணைக்கை — மோதிரம் முதலியன இல்லாத கை (படிந்த 38)
மோதிரக்கை — மோதிரமணிந்த கை
யானைக்கை — தும்பிக்கை
வச்சிரபாணி — வச்சிராயுதத்தைக் கையிலுடையவன், இந்திரன்
வரிமுன்கை — அழகிய கை
வரிவளை முன்கை — அழகிய வளையலணிந்த முன்கை
வலக்கை — வலது கை
வலக்கை கொடுத்தல் — உதவியளித்தல்
வலக்கைப் பக்கம் — வலப்பக்கம்
வலக்கையடித்தல் — உறுதி கூறல்
வலங்கை — வலக்கை
வல்துகை — வலக்கை, உதவியாள்
வளைஒலி முன்கை — வளை ஒலிக்கும் முன்கை
வளைக்கை — வளை பூண்ட கை, வளையுடைய கை
வளைகட்டுங்கை — வளைபூண்டகை
வளைகொள்கரம் — வளைகொண்ட கை, வளைபூண்ட கை
வளைமுன்கை — வளைபோட்ட முன்கை
வளையாடிய கை — வளைபோட்ட கை
வளையாடு(ங்)கை — வளைபோட்ட கை
வளையார் முன்கை — வளை நிறைந்த முன்கை
வன்கை — வலியகை (க 6-3797)

வாங்கு வளைக்கை — வளைந்த வளைபூண்ட கை
வாதக்கையன் — கையில்லாத நோயுடையவன்
விறைத்தகை — விறைப்புக் கொண்ட கை
வெங்கையன் — வஞ்சகன் (திருமந் 1520)
வெட்டுக்கை — வெட்டுப்பட்ட கை, செதுக்கப்பட்ட கைம்மரம்

வெண்கை — தொழில் செய்து பழகாத கை (பதிற் 29 6), சங்குவளையணிந்த கை (பதிற் 29 உரை) அபிநயஞ் செய்யாது தாளத்திற்கு இசைவிற்கும்கை (பதிற் 61-7, வெள்ளிய கைப்பிடி (பெரும்பாண் 71), யானைக் கொம்பு (மலைபடு 28)

வெறுங்கை — பணமில்லாத கை, ஒன்றுமில்லாத கை, வறுமை (சேது பு இலக்குமி 31)

வெறுங்கை முழம் போடுமா — வெறும் கையால் ஒரு காரியமும் செய்ய முடியாது, பணமின்றி எதுவும் நடவாது [பழ]

வெறுங்கையர் — பொருளிலார் (திவா லீ 5-110)
வெறுங்கையால்(கையில்) முழம் போடுதல்-வீண்வேலை செய்தல், பயனில் செய்யல் புரிதல்
வெறுங்கையுடன் திரும்புதல்— ஒன்றும் வாங்கிவராமல் திரும்வரல்
வெறுங்கையை—வீசிக்கொண்டு வருதல் — வெறுங்கையுடன் கவலையின்றி வருதல்
வெறுங்கையோடு திரும்புதல் — வெறுங்கையுடன் திரும்புதல்

# 10 கால்

அக்கினி பதச் சிலந்தி — கால்கள் தோறும் விடமுள்ள ஒரு சிலந்தி (சீவரட் 337)

அகலக் கால்வைத்தல் — செலவு அளவு கடந்து போதல்

அகலக்கால் வைத்தல் — அளவு கடந்து போதல்; அளவுக்கு மிஞ்சி இடத்தைக் கைப்பற்றுதல் அல்லது கொள்ளுதல்

அகவடி — உள்ளங்கால் (திருவி 11 - 41)

அஞ்சரண் — அழகிய திருவடி (தனி 3 - 572)

அஞ்சிதபதம் — குதிக்காலை ஊன்றிப் படத்தை மேனோக்கி வைத்துநிற்றல் (பரத பாவ 83)

அட்டங்கால் — குறுக்காக மடக்கி வைக்குங்கால்

அட்டணைக்கால் — அட்டங்கால் (ரத் மா 80)

அட்டணைக்கால் போடுதல்-உட்காரும்போது கால்களைக் குறுக்காக மடக்கிவைத்தல்

அடி ஏத்தல் — (இறைவனின்) அடிபணிதல்

அடி ஒதுங்கல் — பின்வாங்கல் (மதுரைக் 37)

அடி ஒற்றி நடத்தல் — பிறரது வழியைப் பின்பற்றி நடத்தல்

அடிக்கட்டை — அடிமரம்

அடிக்கணை — கணைக்கால் (சேதுபு விதூம 80)

அடிக்கமலம் — திருவடித்தாமரை (குமர-469, திருவா-172)

அடிக்கமலம் — பாதத்தில் அணியும் அணி. சிலம்பு, (சி 16 - 113 அடி, சிந் 2041) திருவடித் தாமரை (குமர-459, திருவா-172)

அடிக்கயில் — தேங்காயின் அடிப்பாகம்

அடிக்கரும்பு — வேர்க்கரும்பு

அடிக்கணை — கணைக்கால்

அடிக்களம் — அடிநெஞ்சு (திருப்பு 4)

அடிக்களவு — அடிக்கு அளவு, செருப்பு (திவ் 2165)

அடிக்கீழ்ப் படுத்துதல் — வசப்படுத்துதல்; ஆண்டு கொள்ளல்; தாழ்த்துதல்; வென்று தன் ஆணைக்குள்ளாக்கல்

அடிக்கீழ்ப்படுதல் — ஒருவன் இன்னொருவனுடைய ஆணைக்குள்ளாதல்

அடிக்குடல் — சிறுகுடலின் கீழ்ப்பாகம்

அடிக்குழம்பு அடிவண்டல்

அடிக்குறிப்பு — ஒரு நூலின் பக்கங்களில் கொடுக்கப் படுங் குறிப்பு

அடிக்கொள் — தொடங்கு (சொக்க உலா 179)

அடிகோலுதல் — அஸ்திவாரமிடுதல், ஆரம்பித்தல்

அடிகுளிர்ந்திடல் — கால்சில்லிட்டுப் போதல்

அடிகெடுதல் — அற்றடிப்படுதல்

அடி கொதித்தல் — வெப்பமிகுதியால் கால் கொதித்தல்: வருந்தல்

அடிச்சட்டம் — கதவு பலகணி முதலியவற்றினடியில் இடும்மரம்

அடிச்சரக்கு — மட்டமான சரக்கு. குப்பைச்சரக்கு

அடிசறுக்குதல் — கால் வழுக்குதல்

அடிசசால் — முதற்கால்
அடிச்சி — வேலைக்காரி (குசே 489)
அடிச்சுமை — கப்பலின் அடிச்சுமை
அடிச்சுவடு — சாற்சுவடு; அடித்தடம்
அடிச்சுவர் — சுவரடி
அடிச்சூடு — அடிக்கொதிப்பு
அடிச்சூத்திரன் — அடிமைசெய்யுஞ் சூத்திரன்
அடிச்சேரி — நகரை யடுத்தவூர்
அடிச்சொல் — வேர்ச்சொல்
அடிசாய்தல் — காலடியின் நிழல் சாய்தல்
அடிசார்ந்திருத்தல் — (பிறர்) பாதமே
கதியென்றிருத்தல்
அடிசூடல் — அடியை வணங்குதல் (கலிங் ,71)
அடிசேர்தல் — அடியையச் சேர்தல் (கலி 73)
வணக்கஞ்செய்தல் (கலி - 89);
அடித்தட்டு — கீழ்த்தட்டு
அடித்தண்டு — வேரினிடமாயுள்ள தண்டு
அடித்தலத்தில் விழ்தல் — அடிக்கீழ்விழுந்து
வணங்குதல்
அடித்தலம் — பாதம் (கந்த 3-4-5; ச 120-8; க
6 - 4199) கீழிடம்; அஸ்திவாரம்; அடிப்பாகம்
(சங் நா பு 3-10)
அடித்தலம்பணிதல் — அடிபணிதல் (கந் 4-1-32)
அடித்தவம் — இறைவனின் திருவடியை வழிபடும்
தொண்டு (சுந் - 139)
அடித்தழும்பு — அடிச்சுவடு
அடித்தளம் — கட்டடத்தின் நிலப்பரப்பு; அஸ்திவாரம்

அடித்தளிர் — தளிர் போன்ற பாதம்

அடித்தாமரை — திருவடியாகிற தாமரை (திவ் 2377

அடித்தாறு — அடிச்சுவடு, பாதரேகை (திவ். இயற். பெரிய திருவந். 31)

அடித்துகள் — பாததூசி.

அடித்துணை தாழ்தல் — திருவடி பணிதல் (அரி. 6-19)

அடித்தூரு — பாண்டத்தின் அடிப்பாகம்

அடித்தூறு — மரத்தின் அடிக்கட்டை.

அடித்தொண்டன் — தாழ்ந்த தொண்டன் (திருவிளை 1-93)

அடித்தொண்டு — சேவை (காஞ்சிப் 20-7)

அடித்தொழிலாட்டி — வேலைக்காரி (சி 16-12)

அடித்தொழும்பர் — அடித்தொண்டர் (குற்.பு.13-55)

அடித்தொழும்பு — (இறைவன்) திருவடித்தொண்டு (காஞ்சிப் 5-29)

அடித்தொழும்புபுரி—பணிவிடைசெய் (இரட்ச 21-329)

அடிதலை — கீழ்மேல்; ஆதியந்தம்.

அடிதலை தடுமாற்றம் — முன்பின்னறியாது விரித்தல்.

அடிதாழ்தல் — அடிபணிதல், அடிவணங்கல் (க. 6-3903)

அடிதாறு — பாதரேகை, பாதுகை (திவ். 2615)

அடிதீயப் போனவன் — அடிதெரியாதபடி போனவன் (திவ். 1093 அரு)

அடிதொடுகடன் — சூளுற்ற கடன் (சி. 12-18)

அடிதொடுதல் — பிறர்பாதம் தொட்டுச் சபதம் செய்தல் (மணி 18-171); சி. 12-20.

அடிதொழல் — இறைவனது அடிவணங்கல் (சுந். 145)

அடிநகர்தல் — இடம் விட்டுப் பெயர்தல்.
அடிநா — நாக்கின் கீழ்ப்புறம், அடிநாக்கு,
அடிநாச்சூலை — வாதத்தினால் நாவினடியில் ஏற்படும் குத்தல் நோய்
அடிநாள் — முன்னாள் (தி 321)
அடிநாள் முதல் — தொடக்கத்திலிருந்து, ஆரம்பத்திலிருந்து.
அடிநிலை — மரத்தால் செய்த பாதுகை; (பதி. 8-21; பாதுக 568; திவ் 560)
அடிநிலைச்சாத்து — அங்கவடி (பெ. 2-18-22)
அடிநிழல் — பாதநிழல் (திவ் 3392)
அடிநீறு — பாததூளி, அடிப்பொடி (திவ் 329)
அடிப்பக்கம் — கீழ்ப்பக்கம்
அடிப்பகுதி — கீழ்ப்பகுதி
அடிப்படல் — (காவலில்) நீண்டநாள் பழகியிருத்தல் (சி. பதி 29. அடி), கீழ்ப்படல், தாழ்தல், பணிதல்
அடிப்படுத்தல், அடிப்படுத்துதல் — கீழ்ப்படிதல்
அடிப்படுதல் — அடிச்சுவடு படுதல் (நாலடி 154) கீழ்ப்படுதல் (பு. வெ. 6-31)
அடிப்படை — சுவரின் அடித்தளம், ஆதாரம்
அடிப்பணி — குற்றேவல், திருவடிதாண்டு (சிந் 552)
அடிப்பதறுதல் — கால் நடுங்குதல்
அடிப்பர்த்தி — தலைகட்டந்தி
அடிப்பல் — கீழ்வரிசைப் பல்
அடிப்பற்று — பாண்டத்தின் அடியில் தீய்ந்து பற்றிய வஸ்து

அடிப்பாடு — கால்மிதித்து நடத்தலால் காடு முதலிய வற்றில் தோன்றும் வழி, அடிப்பக்கம் (காசிகண் 73-61), அடிச்சுவடு]

அடிப்பாரம் — அஸ்திவாரம், அடியிலுள்ள கனம்

அடிப்பிடித்தல் — அடிச்சுவட்டைக் கண்டு பிடித்தல், காலைப்பிடித்து வேண்டுதல்

அடிப்பிணிப்பு — கால்விலங்கு (பெருந் பு. 1-7)

அடிப்பொடி — பாததூளி (திவ் 1160)

அடிப்போடுதல் — அஸ்திவாரமிடுதல்

அடிப்போது — மலரடி (கோவை 181)

அடிபணிதல் — தண்டனிடுதல், திருவடிகளில் வணங்குதல்

அடிபணிந்து வாழ்தல் — பிறர் பாதம் பணிந்து அடிமையாக வாழ்தல்

அடிபணியச் செய்தல் — கீழ்ப்படியச் செய்தல்

அடிபதறல் — கால் நடுங்குதல், பாதம் உதறுதல்

அடிபார்த்தல் — நிழலளந்து பொழுதறிதல்

அடிபிடித்தல் — அடிச்சுவடு பற்றிப் போதல், தொடருதல், துப்பறிதல், அடுப்பிலுள்ள பாத்திரத்தின் அடிப்பாகத்திலுள்ள பொருள் மிகவும் வெந்து போதல்

அடிபிழைத்தல் — நெறிதவறி நடத்தல்

அடிபிறக்கிடுதல் — பின்வாங்குதல் (தொல் பொ. 65 உரை), தோற்றோடுதல்

அடிபெயர்த்தல் — காலெடுத்து வைத்தல்

அடிபெயர்த்தாடுதல் — கால் பெயர்த்து ஆடுதல் (சி. 12-11)

அடிபெயர்தல் — நிலைபெயர்தல்
அடிபேணல் -- இறைவனடி தொழுதல்
அடிபேரும் — கால் சாயும் (குலோத் கோ. 303)
அடிபோற்றல் — திருவடிகளை வணங்குதல் (அரி 10-42, திவ் 497)
அடிமண் — கீழ்மண்
அடிமண்டி — வண்டல்
அடிமரம் — மரத்தின் அடிப்பாகம்
அடிமனை — அடிப்படை (சி 3-63 அடி)
அடிமிசை தாழ்தல் — பாதத்தின்மீது வீழ்தல் (கந் 2-3-3)
அடிமாண்டுபோதல் — வேரோடு நாசமாதல் (பளிங்குச்சிலை 52)
அடிமுட்டாள் — அடிமடையன்
அடிமுடி — காலுந்தலையும்
அடிமுதல் வீழ்தல் — அடியில் விழுதல் (சி 11-175)
அடிமூலம் — அடிவேர்
அடிமேல் — அடிமுடி (ச 156-10)
அடிமேல் அடி எடுத்து வைத்தல் — மெல்ல ஒவ்வோரடியாக வைத்து நடத்தல்
அடிமேல் அடிவைத்துச் செல்லல் — மெதுவாகச் செல்லல்
அடிமேல் உறவணங்கல் — பாதத்தில் தலை பொருந்தும்படி கீழே வீழ்ந்து வணங்கல் (பெரிய 1328)
அடிமைத்திரன் — உரிமைச்சுற்றம் (சி. 2-88 அடி)
அடியர் — வேலைக்காரர் (புண பு 8-62)
அடியமுந்த வாரிக் கொள்ளல் — முற்றிலும் வாரி எடுத்தல்

அடியற்ற மரம்போல் விழ்தல் — வேரற்ற மரம்போல்
முற்றிலும் வீழ்ச்சியுறல்
அடியறுத்தல் — (நோய்களை) வேரோடு களைதல்,
அடியோடழித்தல், பூண்டறுத்தல், நிர்மூலமாக்கல்
அடியறுதல் — மூலமறுதல்
அடியாட்டி — பணியாட்டி
அடியாள் — பணியாள். கூலியாள்
அடியிடல் — வருதல் (அவி தோத் 3-8)
அடியிடுதல் — அடிவைத்து நடத்தல், தொடங்குதல்
கால்கோள்செய்தல் (குண்டல 10) காலடி
யெடுத்து வைத்துச் செல்லல்
அடியிணை — இரண்டு பாதங்கள் (ச. 125-4,
திவ். 984)
அடியிரட்டல் — அடியின்மேல் அடி வைத்தல் (வைத்து
ஆடுதல்) (பு. வெ. 29)
அடியிரட்டித்தல் — முன் செல்லாமல் நின்ற இடத்
திலேயே காலைத் தூக்கி வைத்தல்
அடியில் — அடியால் (சி. 11-17)
அடியிலிருந்துஆரம்பித்தல்—முதலிலிருந்து தொடங்கல்
அடியிறங்கல் — கர்ப்பிணிக்குப் பிரசவ சமயத்தில்
வயிறு தளர்தல்
அடியிறை — பாதகாணிக்கை (திவ் 357)
அடியிறைஞ்சுதல் — அடிபணிதல் (விஷ் 1-12-53)
அடியினில் வீழ்தல் — பாதத்தில் வீழ்தல், பணிதல்
அடியீடு — அடியிட்டு நடத்தல் (சி 26-90)
அடியீடு பரசி ஏத்தல் — அடி பரவி ஏத்தல் (சி 20-20)
அடியீரல் — மண்ணீரல்

அடியுறை — பாதகாணிக்கை, (க. 6-4231, சாச) அடியிலே உறைதல் (கலி 54), வழிபட்டு உறைதல் (கலி 140) பாத அணி, செருப்பு (காதம் 770)
அடியுறைவோர் — அடிக்கீழ் உறைவோர், அடியோர்
அடியூற்று — கீழூற்று
அடியெடுத்தல் — அடிவைத்தல்
அடியெடுத்துவை — நடந்து செல்
அடியெண் — முதலெண்
அடியே பிடித்து — ஆதியிலிருந்து, முதலிலிருந்து, ஆரம்பத்திலிருந்து, தொடக்கத்திலிருந்து
அடியேன் — அடிமையாகிய நான்
அடியொட்டி — காலில் தைக்கும்படி நட்டுவைக்கும் ஒரு கருவி (சிந் 2768 உரை, நெருஞ்சில்)
அடியொட்டிக் கொள்ளுதல் — பாதத்தில் பற்றிக் கொள்ளல்
அடியொத்த காலம் — நடுப்பகல் (பட்டினப் 263 உரை), மத்தியானம்
அடியொதுக்கம் — அடியிட்டு நடக்கும் நடை சீ. 1092)
அடியொற்றிச் செல்லல் — அடிபிடித்துக்கொண்டு பின்னே செல்லல்
அடியொற்றி நட — அடியொட்டி நடத்தல்
அடியொற்றுதல் — பின்பற்றுதல்
அடியோட்டி — நெரிஞ்சில்
அடியோடு — முழுதும், வேருடன்
அடியோடு ஒழித்தல் — வேருடன் ஒழித்தல்
அடியோடு கெடுதல் — முற்றிலும் கெடுதல்

அடிவட்டம் — பாத அளவு
அடிவண்டல்—கஷாயம், தைலம் முதலியன காய்ச்சும் பொழுது அடியில் தங்கி நிற்கும் கசடு
அடிவணங்கல் — பணிதல்
அடிவயிறு — கீழ்வயிறு, வயிற்றின் கீழ்ப்பகுதி
அடிவருடல் — பாதத்தை வருடுதல், பாதம் பிடித்தல்
அடிவருடி — பாதத்தை வருடுபவன் (ள்)
அடிவாரம் — மலையினடி
அடிவானம் — கீழ்வானம், தொடுவானம்
அடிவிடுதல் — பாத்திரத்தின் அடி பழுதாதல்
அடிவிரிதல், அடிதள்ளுதல் — பாத்திரத்தின் அடிப்பாகம் வெடித்துப் போதல்
அடிவிளக்குதல் — (உயர்ந்த விருந்தினரின்) கால் கழுவி உபசரித்தல் (மணி 24-95)
அடிவீக்கம் — உள்வீக்கம், ஆழ்ந்த வீக்கம்
அடி வீழ்ச்சி — வணக்கம் (சிந் 2587)
அடிவீழ்ச்சி விண்ணப்பம் — திருவடிகளிலே வீழ்ந்து செய்யும் விண்ணப்பம்
அடிவீழ்தல் — தண்டனிடுதல் (சிலப் 13-87), கால்களில் விழுதல் (திவ் 602)
அடிவெண் குருத்து — மரத்தின் முருந்து
அடிவெயிற் காய்தல் — மாலை வெய்யிற் காய்தல்
அடிவைத்தல் — காலடி வைத்தல், நடக்கப் பயிலுதல், தொடங்குதல், நுழைதல்
அடிவைத்துச் செல்லல் — அடிபெயர்த்து வைத்துச் செல்லல் (அரி 9-43)
அடிவைப்பு — அடிச்சுவடு (பாக பு 10-12-60)

அணியார் பாதம் — அழகிய பாதம் (திருவா 93)
அம் சரோருக மலரடி — அழகிய மலர்போன்ற பாதம் (வி பதிற் 13)
அம்புயப் பாதம் — தாமரை போன்ற திருவடி (கற்ப அந் 47)
அரசாணிக்கால் — திருமண மண்டபத்தில் நடப்படும் அரசங் கொம்பு
அரத்த வடியிணை — சிவந்த திருவடிகள் (திவ் 1654)
அரிதாள் — கதிர் அறுத்ததாள்
அலத்தகவடி — சிவந்த பாதம், மகளிரின் செம்பஞ் சூட்டிய பாதம் (பித கொத்து 2-202)
அறுகால் — ஆறுகாலை உடைய வண்டு (சி 4-17), பாம்பு (கதி வெ 34)
அறுகால் வண்டு — ஆறுகால்களையுடைய வண்டு (சுந் 727)
அறுகாற் பறவை — வண்டு (பு 70, பதி 6-64)
அறுகாற்பீடம் — ஆறுகால்களமைந்த பீடம்
ஆயக்கால் — குத்துக்கால், தாங்குகால்
ஆயிரக்கால் மண்டபம் — ஆயிரந்தூண் அமைந்த மண்டபம் (திருவி புராண 2)
ஆரக்கால் — சக்கரத்தின் ஆரம்
ஆழம் தெரியாமல் காலைவிடல் — இடமறியாமல் அகப் பட்டுக்கொள்ளல்
ஆறடிப்பறவை — வண்டு (வளை பித 97)
ஆறடிப்புள் — வண்டு (காஞ்சிப் 20-1)
ஆறுகால் — வண்டு (வீர பு 10-61)
ஆறுகால்கள் — வண்டுகள் (தி 910)

ஆறுகாலி — சிலந்தி, அறுகால் வண்டு
ஆனைக்கால் — ஒருநோய், பெருங்கால்
இட்டடி எடுத்து வைத்தல் — மெல்ல அடிஎடுத்து வைத்தல்
இடது கால் — இடப்பாதம்
இடப்புக்கால் — அகல வைத்த கால்
இணையடி — இரு பாதங்கள் (ச 187-4)
இணையடித்தலம் — இரு பாதங்கள் (ச 242-3)
இருகால் — இரண்டு கால்கள், அரை, இரண்டுமுறை
இருகால் எருது — (சிறப்பில்) மனிதன் (சிறுபஞ்ச 20
இருகால்மாடு — இருகால் மனிதன்
இருகால் விலங்கு — அறிவில்லாத மனிதன் (கம்பன் கலை 25)
இருதோணியிற் கால் வைத்தல் — ஆற்றில் ஒருகால் சேற்றில் ஒருகால் வைத்தல்
இருபாத தாமரை — இணையடித் தாமரை (தி 714)
இளங்கால் — சிறு குழந்தையின் கால், வெற்றிலை இளங் கொடி
இற்றகால் — முறிந்த கால் (திவ் 968)
ஈரடி — இரண்டு அடி, பாதம் (ச 331-9)
உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை — முடிமுதல் அடிவரை
உச்சி முதல் உள்ளங்கால் வரை — முடி முதல் அடிவரை
உட்கால் — உள்ளங்கால்
உட்பாதம் — உள்ளங்கால்
உதறுகாலி — உதைகாற்பசு, காலை இழுத்து நடப்பவள்

உதைகால் — தாங்கு முட்டுக்கால், முட்டுக்கால்; உதைக் குங்கால்
உதைகாலி — உதைக்குங் குணமுள்ள மாடு
உரோமக்கால் — மயிர்க்கால், மயிர்த்துளை
உரலடி — யானை; உரல் போன்ற கால்களை உடையது
உள்ளங்கால் — உள்ளடி, உள்ளந்தாள்
உள்ளங்காலிருந்து உச்சந்தலைவரை — அடிமுதல் முடி வரை
உள்ளடி — உள்ளங்கால் (காசிகண் 37-4, தனி 2-54)
உள்ளந்தாள் — உள்ளங்கால்
உளைக்கால் — மயிர்க்கால்
ஊசிக்கால் — சயம், எலும்புருக்கி முதலிய நோய்களினால் இளைத்த மெல்லிய கால், நடுக்குத்துக்கால்
ஊர்த்துவ பாதம் — மேனோக்கிய பாதத்தையுடைய எட்டுக்கால் பூச்சி
ஊன்றுகால்—நடுகல், தாங்கும் முட்டுக்கால், உதைகால் குத்துக்கால்
ஊனக்கால் — குறைந்தகால், பிறவி நொண்டி
எட்டுக்காற் பூச்சி — சிலந்திப் பூச்சி, எட்டுக்கால்களையுடையது
எண்காற்குருகு — சரபம் [தணி பு 10-324]
எண்காற்புள் — சரபம் (கந்த 3-2-11)
எறிகாலி — உதைகாற் பசு
ஏகபாதம் — ஒற்றைக்கால், ஒற்றைக்காற் பிராணி (தொ பொ 249 உரை)
ஏகபாதர் — ஒற்றைத்தாளர் ஆகிய சிவமூர்த்தம்
ஏர்க்கால் — கலப்பை, வண்டி இவற்றின் நுகங்கொளுவும் உறுப்பு

ஒட்டுக்கால் — ஒடிந்து அல்லது முறிந்துபோய்ப் பிறகு ஒட்டிய அல்லது பொருந்திய கால், பொய்க்கால்

ஒட்டுக்கால் விரல் — ஒன்றேடொன்று ஒட்டிக் கொண்டிருக்கும் விரல்கள்

ஒத்தடிப் பாதை — ஒற்றையடிப் பாதை

ஒத்தைக்காலில் நிற்றல் — ஒருகாலில் நிற்றல்

ஒருகால் — ஒற்றைக்கால்

ஒருகாலில் நிற்றல் — உறுதியாய் இருத்தல்

ஒற்றைக்கால் — ஒருகால்

ஒற்றைக்கால் முடவன் — ஒருகால் நொண்டி

ஒற்றைக்கால் வாதம் — வாதத்தால் ஒருகால் வீக்கம்

ஒற்றைக்காலில் நிற்றல் — பிடிவாதமாக இருத்தல், விடாது முயல்தல், தவம் செய்யும்போது ஒரு காலில் நிற்றல், விடாப்பிடியாக இருத்தல்

ஒற்றையடிப்பாதை — நடந்த கால் தடம்பட்டு அமைத்த சிறுவழி

ஓசைப்படாமல் காலடி எடுத்து வைத்தல் — சத்தமின்றி நடந்து செல்லல்

ஓடுகாலி — வீட்டில்தங்காத பெண்; ஒழுக்கம் கெட்டவள்

ஓடுகால் — நீரோடுங் கால்வாய்

ஓடுகாலன் — ஓரிடத்தில் நிலையாக நிற்காதவன்

கஞ்சத் திருவடி — தாமரைப்பாதம் (விஷ் 1-14-22)

கஞ்சமலர்த்தாள் — தாமரை மலர்போன்ற பாதம் (ஜகத் ச மு 14, சிவ நாமாத் கீ. 1)

கஞ்சமலரடி — கஞ்சமலர்த்தாள் (சி நாதர் பதி 8)

கட்டுவிட்டுக் கால் கை கடுக்குதல் — கட்டு விடுவது போல் கை கால் வலித்தல்

கட்டைக்கால் — குறுகிய தடித்த கால்
கட்டைக்காலி — குறுகிய கால் உள்ளவன், உள்ளவள்
கடகால் - அஸ்திவாரம், நீர்ச்சால் (பே)
கடப்புக்கால் — தொழுவம் முதலியவற்றில் மாடுகள் புகாமல் தடுப்பதற்கு உழலை இழுத்துப் போடும்படி துளையிட்டு நிறுத்தியிருக்கும் மரம், வளைந்தகால், வளைமுள்ளகால், மடக்குக்கால், முடக்குக் கால்
கடுங்கால் — வீங்கிய கால். யானைக்கால், உழைப்பால் கடினமடைந்த கால்.
கடை(க்)கால் — அஸ்திவாரம்
கடைகால் இடுதல் — அடிக்கல் நாட்டுதல்
கண்டவனுக்குக் காலெடுத்தவள் — பரத்தை
கண்ணிக்கால் — கிளை வாய்க்கால்
கணைக்கால் — முழந்தாளுக்கும் பரட்டுக்கும் இடையிலுள்ள உறுப்பு, திரண்டகால், (முருகு)
கணுக்கால் — காற்பரடு, கணைக்கால்
கதைக்குக் கால் இல்லை — கதை நிகழ்ச்சிகள் வெறுங் கற்பனையே
கப்புக்கால் — முட்டுக்கால், வளைகால், குறுங்கால்
கப்புக்காலன் — வளைந்த காலையுடையவன், குறுகிய காலை உடையவன்
கப்புக்காலி — வளைந்த காலையுடையவள்
கப்பைக்காலன் — தொட்டிக்காலன்
கமல இணையடி — தாமரைபோன்ற இரு பாதங்கள் (விஷ் 1-1-1)
கமலச்சேவடி — தாமரை மலர் போன்ற பாதம் (சிவநெறி 1, திருவா 22-6)

கமலத்தாள் — தாமரைப்பாதம்
கமலபதம் — தாமரையன்ன திருவடி (பழனி பு 99)
கமலபாதம் — தாமரைப் பாதம் (சிதம் பு 2-20,
திருவா 48-3, திவ் 927)
கரட்டுக்கால் — முரட்டுக்கால்
கரண்டைக்கால் — பாதத்திற்கு மேல்பூட்டு எலும்பாக அமைந்திருக்கும் இருகுமிழ் போன்றிருக்கும் உறுப்பு
கரிக்கால் — நாசகாரன், நாசகாரி
கரிக்காலன் - நாசகாரன்
கரிக்காலி — துடைகாலி
கருங்கால் — காலீற் காணும் மாட்டு வியாதி வகை
கருங்காற்சம்பான் — கருநிறக் காலுள்ள குதிரை வகை (அசுவ சா 152)
கருந்தாள் — வலிய கால் (திருமந் 2513) அறுபட்ட (கதிரின்) தாளடி
கல்யாணக்கால் — கல்யாணப் பந்தலுக்காக நிறுத்தும் மரக்கொம்பு
கவர்க்கால் — கப்புள்ள மரம், பிரிவுகால், கவைக்கம்பு
கவட்டுக்கால் — கப்பைக்கால், வளைந்த பாதம்
கவைக்கால் — பிளவுபட்டுத் தோன்றும் கால்
கவைத்தாள் — பிளவுபட்ட கால் (பெரும்பாண் 208); நண்டு
கவையடி — பிளவுள்ள அடி, (மணி 6-125)
கழலடி — சிலம்பணிந்த பாதம் (ச 114-1), வீரக் கழலணிந்த கால் (திவ் 234)
கழற்பூ — திருவடி மலர் (அம்பர் 853)

கழற்பொடி — பாதரேணி, திருவடித்துகள் (ஜகத் சமு 31)
கழாக்கால் — கழுவாத கால்
கறையடி — உரல் போன்ற அடி, யானை (குமர 84, செங்கு பு 2-4, பெருந் பு 23-41, வீர பு 4-22)
கனதாள் — உள்ளங்கால் (சிவதரு 8-16)
காக்காய்க்கால் — காக்கையின் கால் போற் காணும் வயிரக்குற்றவகை, காய்ந்த வயலிற் காணும் வெடிப்பு
காந்தப்பதம் — அழகிய பாதம் (திருப்பு 498)
காமர்சீறடி — அழகிய சிறிய அடி (கல்லா 90-2)
காரியம் ஆகும் வரை காலைப் பிடித்தல் — காரியம் முடியும்வரை பிறரைக் கெஞ்சிக் கொண்டிருத்தல்
கால்அதைந்திருத்தல் — கால் வீங்கியிருத்தல்
கால் ஆர்கழல — காலில் கட்டிய வீரக்கழல் (பு வெ 23)
கால் இடறல், கால் இடறுதல் — கால் தடுக்குதல்
கால் இடறி விழுதல் — கால் தடுக்கி விழுதல்
கால் இற்றல் — கால் ஒடிதல் (சுந் 501)
காலை எட்டி வைத்து நட — காலை நீண்ட தூரத்தில் வைத்து நட
கால் எடுத்து வைத்தல் — அடி எடுத்து வைத்தல்
கால் ஒடிதல் — கால் அறுபடல்
கால் ஓடிய நிற்றல் — கால் வலிக்க நிற்றல்
கால் ஓய்தல் — வேலை மிகுதியால் கால் தளர்தல்
கால்கட்டு — தடை, தளை, பந்தம், பிணிப்பு, திருமணம் (புருஷர்களுக்கு)
கால்கட்டுக்கட்டல் — திருமணம் செய்தல்

கால்கட்டுக் கைகட்டு — காலையும் கையையும் (சேர்த்துக்) கட்டியிருத்தல்

கால்கடியன் — வல்லவன், வேகமான நடையுடையவன், கடுங்காலன்

கால்கடுக்க நடத்தல் — கால் வலிக்க நடத்தல்

கால்கடுக்க நிற்றல் (நின்று கொண்டிருத்தல்)- கால் வலிக்க நிற்றல்

கால்கடுத்தல் - பாதம் நோதல், காலுளைதல்

கால் கடுப்பு — கால் குடைதல், பாதம் கடுத்தல்

கால் கடுவன் — குழந்தைகட்குக் கணைக் காலில் கருப்புப் புள்ளிகள் ஏற்பட்டுக் குருக்களாகத் திரண்டு துன்புறுத்தும் படைபோன்ற நோய்

கால் கரப்பன்—முழங்காலுக்குக் கீழ்க் காணும் கரப்பன்

கால்கரம் பூணுதல் — கால்களைக் கைகளால் பற்றிக்கொள்ளல் (அரி 8-93)

கால் கரமசதி — கால் கை ஒய்தல்

கால் கழி கட்டில் — பாடை, பிணமேற்று கட்டில்

கால்கழுவுதல் — கால்களை நீரால் சுத்தம் செய்தல், கால் கழுவி உபசரித்தல், காலை அல்லது (இடக்கரடக்கலாக) மாலைக்கடன் முடித்துச் சுத்தஞ் செய்துகொள்ளல்

கால்கள் கீழே பதிதல் — கால்கள் நிலத்தில் பதிதல்

கால்கள் தயங்கித்தயங்கி நடத்தல் — தயக்கத்துடன் நடத்தல்

கால்கள் தள்ளாடல் – (குடிமயக்கத்தால்) கால்கள் தடுமாறல்

கால்கள் தாமாக நகர்தல் — கால்கள் உணர்ச்சியற்ற நிலையிலும் தாமாக நகர்ந்து செல்லல்

கால்கள் தேய நடத்தல் — கால்கள் தேயுமாறு நீண்ட தூரம் நடத்தல்

கால்கள் பின்னுதல் — கால்கள் தள்ளாடுதல்

கால்கள் வக்கரித்துக்கொள்ளல் — இளம்பிள்ளை வாதத்தில் கால்கள் கோணலுறுதல்

கால்கள் விரைதல் — கால்கள் ஓடுவதற்கு முயலுதல்

(கற்கள்) கால்களில் தடுங்கும் — கால்களில் படும் (பாரதிதா-காடு)

கால்களில் வணங்குதல் — கால்களில் வீழ்ந்து வணங்குதல்

கால்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளல் — கால்களை உறுதியாகப் பிடித்துக்கொள்ளல்

கால்களைத் தொங்க விடுதல் — உயரமான இடத்தில் உட்கார்ந்திருக்கும் போது கால்களைத் தொங்க விடுதல்

கால்களைத் தொட்டுக் கும்பிடுதல் — (பிறர்) கால்களைப் பிடித்துக் கும்பிடுதல்

கால்களைப் பிடித்து விடல் — கால்களை அமுக்கி விடல்

கால்காப்பு — காலில் அணிந்திருக்கும் காப்பு

கால் கிளர்தல் — ஓடுதல்; பகைவர் மேல் படை எடுத்துச் செல்லுதல்; ஆரம்பமாதல்

கால்கிளர்ந்து திரிதல் — ஓரிடத்தில் நில்லாமல் திரிதல் (பெரும் 21)

கால் குடைச்சல் — காலில் ஏற்படும் குத்தல் வலி

காலகளைக் குவித்தல் — கால்களை நெருங்க வைத்துக் கொள்ளல் (சிதம். பு 2-107)
கால்குழி — கைத்தறியில் காலைத் தொங்கவிட்டு நெய்வதற்காக உள்ள குழி
கால் குறைதல் — வெட்டுப்படல்
கால் கூசுதல் — வெறுப்பு, அச்சம் காரணமாகப் பிறரிடஞ்செல்ல மனங்கூசுதல்
கால் கெஞ்சுதல் — அடி வருந்துதல், கால் தளர்ந்து மேற்கொண்டு நடக்க முடியாமலிருத்தல்
கால் கை ஒய்ச்சல் — பலவீனத்தால் கால் கை சோர்வடைதல்
கால் கை கடுத்தல் — கால் கை வலித்தல்(பண தூது)
கால் கை குளிர்ந்திருத்தல் — நோய் காரணமாகக் கை கால் சில்லிட்டிருத்தல்
கால் கை குறண்டல் — கை கால் சுருட்டி இழுத்தல்
கால் கைப் பிடிப்பு — வாத நோய், பாரிச வாதம்
கால் கை போட்டுக் கிடத்தல் — கால் கை நீட்டிய படி மல்லாந்து கிடத்தல்
கால் கை முடக்கு — கால் கை எழாமற் செய்யும் படு சூலை நோய்
கால் கை முறிதல் — கை கால் முறிந்து போதல்
கால் கை விட்டுப்போதல் — கால் கை சோர்வடைதல்
கால் கை விழுதல் — பாரிசவாயுவினுல் கால் கை சோர்வடைதல்
கால் கொண்டு — இடங்கொண்டு (கொக்க உலா 232).
கால் கொப்புளித்தல் — வெய்யில் மிகுதியால் பாதம் கொப்புளித்தல்

கால் கொள்ளுதல் — திருவிழா முதலியவற்றிற்கு ஆரம்பஞ் செய்தல்

கால் கோத்தல் — சேர்த்தல் (பரி —10—51)

கால் கோள் — விழாவின் தொடக்கம்; போரிலிறந்த வீரனுருவைக் கல்லில் வகுக்கத் தொடங்குதலைக் கூறும் ஒரு புறத்துறை

கால் கோள் செய்தல் — அஸ்திவாரமிடுதல்; தொங்குதல்

கால் சட்டை — காலிலணியும் சட்டை

கால் சலித்தல்—வேலை மிகுதியால் கால் வலித்தல்

கால் சவரம் — கால் மயிரை மழித்தல்

கால் சறுக்குதல் — கால் வழுக்குதல்

கால் சாய்தல் — அடியோடழிதல்

கால் சிதைதல் — அடியோடழிதல்; கால் விழுந்து நிலை குலைதல் (திவ் 2484)

கால்சிராய் — கால்சட்டை

கால் சீத்தல் — காலை நிலத்திலே உரசி நடத்தல் துடைத்தல்; வேரோடு களைதல், அடியோடு போக்கல் (தணி பு 19-67); தள்ளுதல் (தணி ஆம் 151; கோழிபோற் காலாற் கிளைத்தல்

கால்சுளுக்குதல் — கால்நரம்பு பிசகிக்கொள்ளல்

கால்சோர்ந்துபோதல் — நீண்டதூரம் நடந்தால் கால் தளர்ச்சியுறுதல்

கால்தட்டல் — முட்டிக்கால்தட்டல்

கால்தட்டிக்கீழேவிழுதல் — கால்தடுக்கிக் கீழேவிழல்

கால் தடுக்கல் — கால்இடறுதல்

காலதடுக்கி இடறிவிழல்— காலில் கல் முதலியன
தடுக்கிக் கீழேவிழல்
கால்தடுக்கிவிழல் — காலிடறிவிழுதல்
கால்தடுக்குதல் — கால்இடறல்
கால் தடுமாறல்—கால் தள்ளாடுதல்
கால் தவறுதல்—கால் இடறுதல்
கால் தள்ளாடுதல்— கால் தடுமாறல் (குறிஞ்) தி 101
கால் தளரல்—கால் சலித்தல்
கால் தளிர்—பாதமாகிய தளிர்(க 6—3930.)
கால் தாங்குதல்—காலையிழுத்து நடத்தல்
கால் தாழ்தல்—மூழ்கிப்போதல்
கால்திண்டு—காலுக்கு வைத்துக்கொள்ளும் திண்டு
கால்தூசி—பாதத்தில் ஒட்டியிருக்கும் தூசு
கால்தூசி (கூடப்)பெருதவன்—ஒன்றுக்கும்
பயனற்றவன்
கால்தூசிக்குச் சமமாக மதித்தல்—அற்பமாக மதித்தல்
கால் தூய்மை—கால் சுத்தம்(திரிகடு—46)
கால் தேய்தல்—மிகுந்த தூரம் நடத்தலால் பாதம்
தேய்தல்
கால்தேய நடத்தல்—கால் தேய்ந்து போகுமாறு
நீண்டதூரம் நடத்தல்
கால் நடுக்கம்—முதுமை, பலவீனம்
கால் நடுக்கு வாதம்—கால் கை எப்பொழுதும் உதறும்
படி செய்து நடக்க முடியாமல் தள்ளாடச் செய்
யும் நரம்புபற்றிய வாத நோய்
கால் நடை—ஆடுமாடுகள் காலால் நடத்தல்
(அரி 9-5)

கால் நடைஏகுதல்—கால்நடையாக நடந்து செல்லல் (அரி 12-48)

கால் நடை தருவார்—நடக்குஞ்சக்தி யுள்ளவர்; ஆடு மாடு விற்பவர்.

கால் நடை தளர்தல்—நடை தள்ளாடுதல்

கால் நடைப் பயணம்—காலால் நடந்து செல்லும் பயணம்

கால் நடைப்பாதை—காலால்நடந்து செல்வோர்க்குரிய பாதை

கால் நடைப் பிரயாணிகள் — நடந்து செல்லும் வழிப் போக்கர்

கால் நடையாகச் செல்லல்—நடந்து செல்லல்

கால் நடையாய் நடத்தல் — காலால் நடந்து செல்லல்

கால் நடைப்பயணம்—கால் நடையாகச் செ லல்

கால் நடையாத்திரை—நடந்து செல்லும் பயணம்

கால் நனைத்தல்—காலை ஈரமாக்குதல்; காலைக் கழுவுதல்

கால்நிலத்தில்பாவாதிருத்தல்— மிகவேகமாகநடத்தல்; கர்வத்துடன் இருத்தல்

கால்நிலம் தேயாக்கடவுளர் — தேவர்

கால்நிலையிடல் — கால் கோள்செய்தல் (முக்கூடற் 14)

கால்நீட்டுதல் — காலைநீட்டுதல்

கால்நொண்டி —கால்முடம்;முடமானவன்; நொண்டிக் காலன்

காலைநொண்டுதல் — கால்சுளுக்கியதால் நொண்டுதல்

கால்நோக்கு — கீழ்ப்பார்வை

கால்நோதல் — கால்வலித்தல்

கால்நோய் — காலில்ஏற்படும்நோய்

கால்பந்து — காலால் உதைத்து விளையாடும் பந்து

கால்பரிதல்—கால் அறுபடுதல்

கால் பாவுதல்—கால் வைத்தல் ; நிலை கொள்ளுதல்

கால்பிடித்தல்—பாதத்தைவருடுதல்; காலைப்பற்றிக் கெஞ்சுதல்; தொண்டு புரிதல்; வாய்க்கால் வெட்டுதல்

கால் பின்னுதல்—கால்கள் முறுக்கிக் கொள்ளல்; முட்டிக்கால் தட்டுதல்

கால்போனபடி நடந்து கொண்டிருத்தல்—மனம் போனவாறு நடந்து செல்லுதல் (மாஜி மனைவி)

கால்மட்டம்—கண்பார்வையின்றிக் காலால் தடவி நடத்தல்

கால்மடக்கு—கடப்புக்கால்

கால்மாடு—கால்பக்கம்; பசு

கால்மிதி—அடிவைப்பு; அடிச்சுவடு; கால்தூசியைத் துடைத்துக் கொள்ள இடப்படும் தென்னை நார்த்தடுக்கு

கால்முளைத்தல்—குழந்தை நடைகற்கத் தொடங்குதல்

கால்முளைத்துச் சென்றுவிடல்—எப்படியோ இருந்த இடத்தில் இருந்து வேறிடம் சென்றுவிடல் (பே)

கால்மெட்டிடுதல்—திருமணத்தில் மணமகன் கால் விரலில் மோதிரமிடல்

கால்மேல்கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருத்தல்—ஒரு கால்மீது மற்றொருகாலைப் போட்டு அமர்ந்திருத்தல்

கால்யாத்தல்—நெருங்குதல் (பெரும் 399): மறைத்தல் (பெரும் 133); தேக்குதல் (கு 1038 உரை)

கால்வடம்—காலிலணியும் அணிவகை

கால்வழி—காற்சுவடு (பு 368); வமிசம் (அறப் சத 2); ஒற்றையடிப்பாதை

கால்வளைத்தல்—(வில்லை வளைக்கக்) காலைவளைத்தல்

கால்வாங்குதல்—காலைவெட்டுதல், கால்வழுக்குதல், பின் வாங்குதல்

கால்வாசி—காலடி எடுத்து வைத்ததன் பயன்

கால்வாய்—வாய்க்கால்
கால்வாய்க் கோமாரி—கால்நடையின் பாதம், வாய்களில் காணும் கோமாரி நோய்வகை
கால்வாயன்—தெரிந்து பேசும் வன்மையற்றவன்
கால்விசைத்து ஓடல்—காலால் உந்தி விரைந்து ஓடல் (திருவா 2-135)
கால்விடுதல்—கால்கள் செயலறுதல்; முட்டுக் கொடுத்தல்; தூர உறவாதல்; அறவே ஒழித்தல்
கால்விரல்—காலில் உள்ள விரல்
கால்விலங்கு—திருமணம்; காலில் போடப்படும் தளை
கால்விழுதல்—மழைக்கால் இறங்குதல்
கால்விழுந்து போதல்—பாரிச வாயு முதலியவற்றால் கால் அசைவற்றுப் போதல்
கால்வீச்சு—கால் வீசி நடத்தல்; கிரணம் வீசுதல்
கால்வெடிப்பு—காலிற் காணும் பித்த வெடிப்பு
கால்வைத்தல்—(வீட்டினுள்) நுழைதல்
காலடி—உள்ளங்கால்; கால்சுவடு
காலடிச் சத்தம்—காலடியோசை
காலடியில்—மிக அண்மையில்; ஒருவரது ஆதரவில்
காலடியோசை—காலால் நடந்து வரும் ஒலி (கஞ்சி 216)
காலணி—காலில் அணியப்படும் அணி (சி 16—127) செருப்பு
காலலம்புதல்—கால் கழுவுதல்
காலன்—காலை உடையவன்
காலாடி—முயற்சி உடையவன்; நீர் பாய்ச்சும் வேலையாள்; ஊர்சுற்றுபவன் (நெல்லிக்கனி 108)
காலாடை—காற்சட்டை
காலாணி—கல் முள் அழுத்தலால் உள்ளங்காலில் தோன்றும் தடிப்புத் தோல்
காலாயுதம்—கோழி

காலாற நடத்தல்—காலுக்கு நலம் ஏற்படும்வகையில் வெளியில் உலாவரல்

காலால் இட்ட வேலையைக் கையால் செய்தல்—பிறர் இட்ட ஆணைகளை மனமுவந்து பணிவுடன் செய்தல் (விநோத 364)

காலால் இட்ட வேலையைத் தலையால் செய்தல்— பிறர் இட்ட வேலை எதுவாயினும் பணிவாகவும் சிரத்தையுடனும் செய்தல்

காலாழி—கால்விரல் மோதிரம்

காலாள்—பதாதி : பாசனக்காலில் நீர்பாய்ச்சுவோன்

காலாறுதல்—நடை ஓய்ந்திருத்தல், காலில் இரத்த ஓட்டம் உண்டாக உலாவுதல்

காலாறு— வண்டு; சிற்றாறு

காலி— பசு, பசுக்கூட்டம்

காலிடுதல்—கால் வைத்தல்

காலிமாடு—காட்டில் வளர்க்கப்படும் கால்நடை

காலில் சக்கரம் கட்டியிழுத்தல்—நிலையாய் ஓரிடத்தில் இராமல் பல இடங்களையும் சுற்றிவருதல்

காலில் விழுதல் பாதத்தில் விழுந்து வணங்குதல், மன்னிப்பு வேண்டுதல், புகலடைதல்

காலிலி—முடவன், முடத்தி, அருணன், காற்று

காலிறங்குதல்—யானைக்கால் உண்டாதல், மழைக்கால் இறங்குதல்

காலுழற்றி—காலிற்காணும் வாத நோய்

காலுளைவு—கால் நோவு

காலூறுதல்—பயணக்குறியாகக் காலில் தினவுண்டாதல்

காலெடுத்தல்—வாய்க்கால் வெட்டுதல், தொடங்குதல்

காலேணி—குறுக்குப் படிகளைக் கொண்ட இருகால்களையுடைய ஏணி

காலைச்சுற்றுதல்— தொடர்ந்து பற்றுதல்
காலைத்தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொள்ளுதல்— பிறர்காலை அல்லது (சிறு குழந்தையின் காலை) அன்பின் மிகுதியால் தொட்டுக் கண்ணில் ஒற்றுதல்
காலைப்பிடித்துக் கெஞ்சுதல்—அருள் புரியுமாறு பிறர் காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு மன்றாடுதல்
காலைவாரிவிடல்— நம்பிக்கை மோசஞ்செய்தல், நம்பியவருக்குத் துணைசெய்வதாகச் சொல்லிப் பின் அவரைக் கை விட்டு விடல்
காலுறப் பணிதல் — பாதங்களில் சிரம் படுமாறு பணிதல் (க 6–4229)
காலெரிவு—காலில் காணும் எரிச்சல்
காலோடி கையோடி—தொழிலற்றுத் திரிபவன்
காலோடுதல் - வழுக்குதல்; எளிய முயற்சி உண்டாதல்
காலோர்—காலாட்கள் (மதுரைக் 441)
காற்கட்டு—தடை, திருமணம்
காற்கட்டுதல்—திருமணஞ் செய்தல்
காற்கடுப்பு—காலுளைச்சல்
காற்கணை—காற்கோமாரி
காற்கவசம்—காலணி
காற்காந்தல்—காற்புண்
காற்காப்பு—காலில் அணியும் காப்பு
காற்காறை—விக்கிரகங்களின் பாதங்களில் சாத்தும் அணி
காற்குடைச்சல்—காலுளைவு
காற்குப்பாயம்—காற்சட்டை
காற்கூலி—நடைக்கூலி
காற்கொட்டை—காலுக்கிடும்திண்டு
காற்கோமாரி—கால்நடைகளுக்கு வரும் கால் நோய்வகை
காற்சட்டை—காலாடை

காற்சப்பை—கால்நடைகட்கு வரும் தொத்துநோய் வகை
காற்சரி—பாதசரம்
காற்சவடி—பாதசாலம்
காற்சிராய்—காற்சட்டை
காற்சிலம்பு—காலணி வகை
காற்சுவடு—அடிவைப்பின் அடையாளம்
காற்சுற்று—மகளிர் கால்விரலில் அணியும் அணி
காற்படம்—விரலையடுத்துள்ள பாதத்தின் அடிப்பக்கம், புறவடி
காற்படுதல்—அழிதல்; கால் பிறர்மேல் படுதல்
காற்படை—கோழி (கல்லா 60-11); காலாட்படை
காற்பரடு—புறவடி
காற்பாதை—ஒற்றையடிப் பாதை
காற்பிடிப்பு—வாதத்தினல் காலில்காணும் பிடிப்பு நோய் (விநோத 64)
காற்பிணி—கால்நோய் (நெஞ்சறி 915)
காற்பித்த வெடிப்பு – காலில் உண்டாகும் பித்த விரி
காற்பெய்தல்—ஓடுதல் (சிந் 3102)
காற்றண்டை—காலணி
காற்றழும்பு—வலியோடுகூடிய கால்வீக்கம்
காற்றெழில்—அற்பவேலை (நாலடி 193)
கான்முளை—மகன்
குந்துகாலன்—கொந்தி நடப்பவன்
குத்துக்கால்—தாங்குகால்
குத்துக்காலிட்டு உட்கார்தல்—சப்பணம் போடாமல் நேரே உட்கார்தல்
குத்துக்காலிடுதல்—காலைக் குத்திட்டு உட்கார்தல்
குதிக்கால்—குதிங்கால், குதிகால் (குற் குற 14; காசி 37-10)
குதிகால்—குதிக்கால்
குதிங்கால்—குதிகால்

குதிங்கால் வெட்டி—மோசக்காரன்
குறுங்கால் வருடை—சிறிய அடிகளையுடைய வருடைமான் (ஐங் 287)
கேசாதி பாதம்—தலைமுதல் கால்வரை
கேசாதி பாதமாகப் பாடுதல்—தெய்வங்களைப் பற்றிய உலாக்களில் முடிமுதல் அடிவரை வருணித்துப் பாடுதல்
கொடிக்கால்—வெற்றிலை படருமிடம்
சரண்புகுதல்—அடைக்கலம் புகுதல்
சரண்வணங்கல்—திருவடிகளை வணங்குதல் (க 3-153)
சரணகமலம்—பாததாமரை
சரணம் சூடல்—பாதத்தில் தலைவைத்து வணங்கல் (க 1-210)
சரணாகதி—அடைக்கலம் புகுதல்
சரணாம்புயம்—சரணகமலம் (கும அந் 14)
சரணாயுதம்—காலாயுதம்
சரணாவிந்தம்—பாததாமரை
சிரமபாதத்தார்—மேலான பாதத்தினர் (சிங் சிவெ 72)
செம்பதம்—சிவந்த திருவடி (புலி வெ 64)
செவ்வடி—சிவந்த அடி (க 5-978)
சேர்வைக்கால்—ஏணியைத் தாங்குங்கால், தட்டைத் தாங்கி நிற்கும் பீடக்கால்
சேவடி—செம்மையான திருவடி (க 3-145)
சேவடிக்கமலம்—சிவந்தபாதத்தாமரை (க 3-1016)
நாடளை—கால்விலங்கு (திருவா 3-143)
தாமரைத்தாள்—தாமரைப்பாதம் (க 2-646)
தாள் பணிதல்—திருவடி பணிதல் (வெரி 3814)
தாள்முதல் வணங்கல்—திருவடிகளை வணங்குதல் (க 2-573)
தாள் வணங்கல்—அடி வணங்கல் (க 1-276)
தாள்வரை—மலையடிவாரம்
தாளில் விழல்—பாதத்தில் விழுதல் (அஷ் 4-93)

தாளுறத்தாழ்ந்து தொழல்—பாதங்களில் முடிபொருந்தப் பணிந்து தொழுதல் (க 6-2746)
திருப்பாதம்—திருவடி (பெரி 3770)
திருவடிசம்பந்தம்—சீடனுந்தன்மை
திருவடி சம்பந்தி—சீடன்
திருவடித்தலம்—பாதுகை (க 2-1210)
திருவடிதீட்சை சீடன் தலையில் குரு தன்பாதம் வைத்து அருள்புரிதல்
திருவடிநிலை—பாதுகை (க 6-451)
திருவடி தொடுதல்—கடவுள் முதலியோரை வணங்குதல்
திருவடிப்பாதுகை—கடவுள் முதலியோர்ன் பாதுகை
துடைகாலன்—தன் குடும்பத்திற்குக் கேடு விளைக்கும் ஆக்கங் கெட்டவன்
துடைகாலி—தன் பிறந்தகத்திற்கு அல்லது புகுந்தகத்திற்குக் கேடு விளைக்கும் ஆக்கங்கெட்டவள்
தெற்றுக்கால்—முட்டி தட்டுங்கால்
தெற்றுக்காலை—பின்கால் முட்டி தட்டுங்காலை
தெற்றுப்பல்—தென்னிக் கொண்டு அல்லது ஒன்றோடொன்று பின்னிக் கொண்டிருக்கும்பல்
தெற்றுவாய்—கொன்னைவாய்
நல்வழிக்காலன்—அதிர்ஷ்டக்காலன்
நளினமலரடி—தாமரைப்பாதம் (அருட் 5-10-2)
நாலுகால்பாய்ச்சலில் ஓடுதல்—வேகமாக ஓடுதல் (ஜீவப் பிரவாகம் 9)
நின்றகால்—ஊன்றிய திருவடி (க 1-459)
நொண்டிக்கால்—சண்டிக்கால்
(பீடுகெழு) நோன்றாள்— (பெருமை பொருந்திய) வலியதாள் (பு 39: 393)
பத கமலம்—பாததாமரை (இ கொத் 5)

பத சலசம்—பாததாமரை (மல் பதிற் 4)
பதம் பணிவுறல்—பாதங்களைப் பணிதல் (வில்க - 110)
பதயுகளம்—இணையடி (கலிங் 122)
பதாதி வேலை—காலாட் கடல் (க 2 - 976)
பற்றுக்கால்—தாங்குகட்டை, பொய்க்கால்
பாதக்காப்பு—செருப்பு
பாதக்குறடு—பாதகுறடு; குமிழ்கொண்ட பாதஅணி
பாதகமலம் - பாத தாமரை;
பாதகாணிக்கை—குருதட்சிணை
பாதசக்கரம்—பாதத்தில் வரும் ஒருவகை விரணம்
பாதசரம்—மகளிர் காலணி வகை
பாதசாகை—கால் விரல்
பாத சாயலம்—காலணிவகை
பாதசாரி—கால் நடையாகச் செல்பவன்; காலாள்
பாதசாலகம்—காலணிவகை
பாதசாலம்—காலணிவகை
பாதசுத்தி—கால்கழுவுதல்
பாதசேடம்—பாலதீர்த்தம்
பாதசேவை செய்தல்—தொண்டு புரிதல்
பாத தட்சணை—பாதகாணிக்கை
பாத தரிசனம்—பெரியோரைத் தரிசித்தல்
பாத தாடனம்—காலுதை
பாத தாமரை—பாதகமலம்
பாதத்திராணம்—பாத அணி
பாத தீட்சை—திருவடி தீட்சை
பாத தீர்த்தம்—குருவின் திருவடிகளைச் சுத்தி செய்த நீர்
பாததூளி—பெரியோரின் அடிப்பொடி (திவ் 365)
பாதப்படி—அடிவைக்கும் பீடம்
பாதப் பிரகாரம்—காலுதை

பாதப் பிரட்சாளனம்—கால்களை அலம்புதல்
பாதபங்கயம்—பாத கமலம்
பாதபதுமம்—பாத கமலம்
பாத பரிசம்—திருவடி படுதல்
பாதபற்பு—பாதகமலம்
பாதபன்மம்—பாத தாமரை
பாத பாசம்—காலணி வகை
பாத பீடம்—பாத பீடிகை
பாதபீடிகை—புத்தரது பாதப்படிமங்களுள்ள பீடம்
பாதபுஷ்பம்—பாதகாணிக்கை
பாத பூசை—குரு முதலியோரின் திருவடிகளை மலர் முதலியன
இட்டு வழிபடுதல்
பாத பேத ரோகம்—பாத வெடிப்பு
பாதப் பாலித்தல்—திருவடி தீட்சைசெய்தல்
பாதமயக்கு—அடிமடக்கு
பாதமலரைத்தொழுதல் திருவடியைவணங்கல் (க 1-1228)
பாதமுத்தி—பரகதி; திருவடி தீக்கை
பாதமுத்திரை- குழுவினது திருவடிச்சுவடு
பாதமூலம்—குதிகால்
பாதரட்சணம்—பாதரட்சை
பாதரட்சை—செருப்பு
பாதரோகம்—நோய்வகை
பாதவக்காணி—நோயில் பணியாளர்க்குக் கொடுக்கப்பெற்ற
படித்தர நிலம்
பாதவந்தனம்—பெரியோர் முதலியோரை வணங்குதல்
பாதவூழியன்—பாதத்தொண்டுபுரிபவன்
பாதவெடிப்பு—பித்தவெடிப்பு
பாதாக்கிராந்தன்—திருவடிதொழுபவன்
பாதாங்குட்டம்—காற்பெருவிரல்

பாதாசனம்—கால்வைக்கும் பலகை ; பாத ீறடு
பாதாதிகேசம்—அடிமுதல் முடிவரை
பாதாம்புயம்—பாதகமலம்
பாதாரவிந்தம்—பாததாமரை
புண்டரீக நல்தாள்—தாமரை போன்ற நல்லபாதம் (க 1-510
புலிக்காலன்—வியாக்கிரபாதர் (குமரா-1)
புறங்கால் புட்டத்தில் தாக்க ஓடுதல்—மிக வேகமாக ஓடுதல்
பூங்கழல்—பூப்போலும் மெல்லிய கழல்கள், பொலிவு பெற்ற பாதங்கள் (திருவா 1-8, க 1-214
பொத்தைக்கால்—யானைக்கால்; யானைக்கால் நோயாளரின் கால்
பொற்பாதம்—அழகியதிருவடி (க 6-127)
பொன்னடி—அழகியபாதம் (க 1-552: வில் 1-95, இரா 8-38)
பொன்னுடி—பொன்போன்றபாதம் (க 1-444)
மண்டுகால்—முட்டுக்கால்
மரைமலர்ப்பாதம்—தாமரைபோன்ற திருவடி (க 4-365)
மலர்க்கழல்—செந்தாமரை போன்ற பாதங்கள் (க6—328)
மலர்ச்சரன்—மலர்ப்பாதம் (க4-350)
மலர்த்தாள்—மலரடி (க3-152)
முட்டுக்கால்—வளைந்தகால்
மென்பதம்—மெல்லியபாதம் (மல் கோ 65)
விற்கால்—வளைந்தகால்
வெறுங்காலில் நடத்தல்—பாத அணியில்லாமல் நடத்தல்

—

# ஆசிரியரின் பிற நூல்கள்



| | | | |
|---|---|---|---|
| 1. | திருக்குறள் நொடி வினா-விடை | ரூ. 10 | 00 |
| 2. | வள்ளுவர் வழங்கும் அறிவுரைகள் | 2 | 00 |
| 3. | வள்ளுவர் வினவிய வினாக்கள் | 0 | 60 |
| 4. | திருக்குறளின் அழகுகள் | 5 | 00 |
| 5. | தமிழின் அழகுகள் | 5 | 00 |
| 6. | ஒலிக்குறிப்பகராதி | 4 | 00 |
| 7. | பெண்ணின் பெயர்கள் | 2 | 00 |
| 8. | கம்பர் காட்டும் பெண்ணோவியம் | 1 | 60 |
| 9. | இராமன் அருட்செல்வம் | 3 | 50 |
| 10. | விநாயகர் அருட்செல்வம் | 5 | 00 |
| 11. | திருமகள் அருட்செல்வம் | 2 | 25 |
| 12. | கலைமகள் அருட்செல்வம் | 1 | 00 |
| 13. | விநாயகர் அருட்பெருமை | 1 | 20 |
| 14. | விநாயகர் ஆயிரந்திருநாமங்கள் | 1 | 30 |

**மீரா நிலையம்**
**35, பாரிபாத்திகாரு**
**ஈரோடு-4**

அழகு அச்சகம், சிதம்பரம்.